ஸ்ரீ கிருஷ்ணாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித

# ஸ்ரீமத்கீதாபாஷ்யம்.

இஃது

முசுர்பாக்கம்-கிடாம்பி

## உ-வே-ரங்காசாரியரால்

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு,

திருவெள்காரணை

## பிரஸந்ந-விஜயராகவாசாரியரால்

சென்னை:

பத்தி-ராமாநுஜலு நாயுடவர்கள் குமாரர்

ப. வெங்கடநாராயணசுவாமிநாயுடவர்களது

ஸ்ரீநிகேதனமுத்திராக்ஷரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

ஜய ஸ்ரீ ஆவணி மீ



இதன் விலை ரூபா 1—8—0.

உ

## அறிவிப்பு.

இந்தக்கிரந்தம் வேண்டுமேவர்கள் சென்னபட்டணம் சைனுபஜார் வீதி 101-வது நெம்பருள்ள கிரகத்தில் **தி. பி. விஜயராகவாசாரியருக்கு** ரூபா 1-8-0-அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். பதவுரை அச்சிலிருக்கிறது; வெகு சீக்கிரத்தில் வெளிப்படும்.

ஸ்ரீ:

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# விஞ்ஞாபனம்.

காருணிகனான ஸர்வேசுவரன் இவ்விருள்தருமாஞாலத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானாய் வந்தவதரித்து, அர்ச்சுநனை யுத்தத்திற் புகச்செய்வதென்கிற வியாஜத்தாலே பரமரஹஸ்யார்த்தங்களைப் பிரதிபாதிக்கின்ற ஸ்ரீபகவத்கீதையென்னும் மோக்ஷசாஸ்திரத்தை லோகோஜ்ஜீவநார்த்தமாகப் பிரவர்த்திப்பித்தருளினான். உலகத்தில் அதன் உண்மைப் பொருளைக் கண்டறியமாட்டாத (ராஜஸ தாமஸப்பிரகிருதிகளான) பலபெயர்கள் தந்தாமுடைய இச்சைக்குத் தக்கபடி பலவிதமாகப் பொருள்செய்துகொண்டு அநர்த்தப்படுவதைக்கண்டு ஸஹிக்கமாட்டாமல் ஸாக்ஷாத் சேஷாவதாரமான ஸ்ரீபகவத்ராமாநுஜயதீந்திரர் தம்முடைய பரமகிருபையால் அதற்கொருபாஷ்யமிட்டருளினார். அந்த பாஷ்யமும் ஸம்ஸ்கிருதமாயிருப்பதுபற்றி, இக்காலத்தில் கீதார்த்தத்தை யுள்ளபடியே அறிய வாசைப்பட்ட வெகுபெயர்கள் தங்களுக்கு ஸம்ஸ்கிருதபாஷாக்ஞாநமில்லாமையாலே அதைக்கைவிட்டு, பாஷாந்தரங்களி லிருக்கும் ஏனைய வியாக்கியான மொழிபெயர்ப்புகளைப்படித்து தத்துவங்களையெல்லாம் மாறாக நினைத்து அநர்த்தப்படுகிறார்கள். ஆகையால் அவ்வித அநர்த்தத்தைப் பரிஹரிப்பதற்காக இந்த பாஷ்யத்தைத் தமிழில் மொழிபெயர்த்துப் பிரசுரஞ்செய்யவேண்டுமென்று அநேகம் ஆஸ்திகசிகாமணிகள் நியமிக்க, அந்த நியமனத்தைக் கைக்கொண்டு அல்பக்ஞனான வடியேன் அதை மொழிபெயர்க்கத் துணிந்தேன். ஸர்வக்ஞரான ஸ்ரீபாஷியகாரரின் திருவுள்ளத்தை யறிந்தெழுதும்படியான சக்திலேசமுமில்லாத நாயினே னிப்படி துணிந்ததைப்பார்க்க வடியேனுக்கே லஜ்ஜையும் பயமுமுண்டாகின்றன. ஆயினும் திண்ணை முதலிய உயர்ந்த ஸ்தாநங்களில் நிற்கவைத்த குழந்தைகள், திண்ணைக்கருகில் தம் தாய்தந்தையர்கள் நிற்கக் கண்டார்களாகில் ‘இவர்கள் நம்மைத்தாங்குவர்கள்’ என்கிற நம்பிக்கையால் துணிந்து கீழே குதித்துவிடுவதுபோல் கீதாசாரியனும் கீதாபாஷ்யகாரருமான விராமானுசர்களிருவரும் நம்மைக் கைவிடார்களென்று நம்பிப் பிரவர்த்தித்தேனாகையால், அவர்கள் இதில் சிறிதும் குறைவு வரச் சகியார்களென்று சாதுக்கள் துணிவதோடு பிரகிருதிபரவசனான வடியேனால் சிறிது பிழைகள் கண்டாலும் பொருத்தருளவேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்.

క్వభాష్యకృద్గిరాంభారః క్వచాహంభృశమల్పధీః।
సారమాత్రదృశస్సన్త స్సహన్తాంమమసాహసమ్।

பு. கி. ர.

# విషయసూచికా.



## శ్రీభగవద్గీతామాహాత్మ్యమ్.

గీతాశాస్త్రమిదంపుణ్యం యఃపఠేత్ ప్రయతఃపుమాన్।
విష్ణోఃపదమవాప్నోతి భయశోకాదివర్జితః॥
గీతాధ్యయనశీలస్య ప్రాణాయామపరస్యచ।
నైవసంతిహిపాపాని పూర్వజన్మకృతానిచ॥
మలనిర్మోచనంపుంసాం జలస్నానందినేదినే।
సకృద్గీతాంభసిస్నానం సంసారమలనాశనమ్॥
గీతాసుగీతాకర్తవ్యా కిమన్యైశ్శాస్త్రసంగ్రహైః।
యాస్వయంపద్మనాభస్య ముఖపద్మాద్వినిస్సృతా॥
భారతామృతసర్వస్వం విష్ణోర్వక్త్రాద్వినిస్సృతమ్।
గీతాగంగోదకంపీత్వా పునర్జన్మనవిద్యతే॥
సర్వోపనిషదోగావో దోగ్ధాగోపాలనందనః।
పార్థోవత్సస్సుధీర్భోక్తా దుగ్ధంగీతామృతంమహత్॥
ఏకంశాస్త్రందేవకీపుత్రగీత మేకోదేవోదేవకీపుత్రఏవ।
ఏకోమంత్రస్తస్యనామానియాని కర్మాప్యేకంతస్యదేవస్యసేవా॥

శ్రీ భగవద్యామునమునయే నమః.

# ஸ்ரீமத்கீதார்த்தஸங்கிரஹம்.

నమోనమో యామునాయ యామునాయ నమోనమః।
నమోనమో యామునాయ యామునాయ నమోనమః॥

பகவத்சேஷபூதனான சேதனனுக்கு விஹிததர்மமான கர்மம், அந்த கர்மாநுட்டானத்தால் தெளிவுற்ற மனதிற்பிறக்கும் ஸ்வஸ்வரூப பரஸ்வரூபாதி யதார்த்தக்ஞானம்,அத்தால் பிறக்கும் விஷயவிரக்தி,அதன்பின் பகவத்கிருபையினால் உண்டாகும் பக்தி இவை எல்லாவற்றிற்கும் பிரப்பிரம்மமான ஸ்ரீமந்நாராயணனே உத்தேசியபூதனென்று ஸ்ரீகீதாசாஸ்திரத்தில் கூறப்படும். அதில்,ஆத்மாநுபவத்தை ஸித்திக்கப்பண்ணும் ஞானயோக கர்மயோகங்களென்கிற விரண்டு நிஷ்டைகளும் முதல் ஆறுஅத்யாயங்களில் நன்கு சோதிக்கப்பட்டன. நடுவிலுள்ள ஆறு அத்தியாயங்களாலும், பகவத்ஸ்வரூபத்தை உள்ளபடியே அடைவிப்பிக்குமதும் ஞானகர்மங்களால் தலைக்கூடுவதுமான பக்தியோகம் வருணிக்கப்பட்டது. கடைசி ஆறு அத்தியாயங்களில், பிரகிருதிபுருஷாளின் சேர்க்கையான பிரபஞ்சஸ்வரூபமும், ஸர்வேசுவரஸ்வரூபமும், முந்திய அத்தியாயங்களில் சொல்லப்பட்ட கர்மக்ஞானபக்திகளும் சொல்லப்படுகின்றன.

முதலில் - தகாதவிஷயத்தில் ஸ்நேகத்தையும் கருணையையும் பாராட்டித் தர்மாதர்மந்தெரியாமல் மயங்கினவனாய், தர்மந் தெரியவேண்டுமென்று எம்பெருமானைச் சரணம்புகுந்த பார்த்தனை யுத்தேசித்து கீதாசாஸ்திரம் ஆரம்பிக்கப்பட்டது.

௨-வது அத்தியாயத்தில் - அர்ச்சுநனுடைய கலக்கந் தெளிகைக்காக நித்தியமான ஆத்மாவைப்பற்றிய ஸாங்கியபுத்தியும், அந்த ஸாங்கிய புத்தியை முன்னிட்டே ஸ்திதப்பிரக்ஞதையென்னும் யோகத்துக்கு ஸாதநமாகின்ற கர்மயோகவிஷயமான புத்தியும் சொல்லப்படுகின்றன.

௩-வது அத்தியாயத்தில் - கர்திருத்வம் தனக்கில்லையென்று மதித்து, அதைப் பிரகிருதியினிடத்திலாவது ஸர்வேசுவரனிடத்திலாவது வைத்து லோகரக்ஷணார்த்தமாகக் கர்மத்தை யநுட்டிக்கவேண்டுமென்று மிடஞ் சொல்லுகிறது.

௪-வது அத்தியாயத்தில் - பிரஸ்தாவமாய் தம்முடைய ஸ்வபாவத்தை யருளிச்செய்து, கருமமே ஞானரூபமாகிறதென்றுமிடமும், அதன் பேதங்களும், ஞானத்தின் மாஹாத்மியமும் அருளிச்செய்தார்.

௫-வது அத்தியாயத்தில் - கர்மயோகம் எளிதில் செய்யக்கூடியதென்பதும், விரைவில் ஸித்திக்குமென்பதும், பின்னும் அதற்குண்டான சில பேதங்களும் பிரம்மக்ஞானமும் சொல்லப்படும்.

கூ-வது அத்தியாயத்தில் - யோகாப்பியாஸத்தின் விதியும், யோகிகள் நால்வகையென்பதும், யோகஸாதநமும், அதன் ஸித்தியும், அதில் பகவத்தியாநரூபமான யோகமே சிறந்ததென்பதுங் கூறப்படும்.

எ-வது அத்தியாயத்தில் - ஸ்ரீகிருஷ்ணபகவான் தமது யதார்த்தத்தையும், பிரகிருதியால் மறைக்கப்பட்டிருக்கின்றமையால் பிராணிகள் தம் யாதார்த்தியத்தை யறியார்களென்பதையும், சரணுகதியையும், பக்தாளின் உட்பிரிவையும், ஞாநியே சிறந்தவனென்பதையும் அருளிச்செய்கிருர்.

அ-வது அத்தியாயத்தில் - ஐசுவரியத்தைக்கோரியவரும் ஆத்மப்பிராப்தியைக் கோரியவரும் பகவத் சரணுபேக்ஷயுடையாரும் அறிந்து பற்றவேண்டிய விஷயங்களின் பேதங்கள் சொல்லப்படும்.

கூ-வது அத்தியாயத்தில் - தமது மாஹாத்மியமும், தாம் மனுஷியனுயிருக்கச்செய்தே தமக்குண்டான பரத்வமும், மஹாத்மாக்களுக்குண்டான விசேஷமும், பக்தியோகமுஞ் சொல்லப்படும்.

கo-வது அத்தியாயத்தில் - தமது கல்யாணகுணங்களுக்கு எல்லையில்லையென்றும், எல்லாம் தம்மாதீனமென்றும், அறிவதனுல் பக்தியுண்டாகி விருத்தியாமென்பதை விஸ்தாரமாய் அருளிச்செய்கிருர்.

கக-வது அத்தியாயத்தில் - பகவத்ஸ்வரூபத்தை அர்ச்சுநன் உள்ளபடியே ஸாக்ஷாத்கரித்தபடியும், பகவத்ஸாக்ஷாத்காரமும் தத்பிராப்தியும் பக்தியினுல்மாத்திரங் கிடைக்குமென்பதும் சொல்லுகிறது.

கஉ-வது அத்தியாயத்தில் - பக்தியோகம் விரைவில் ஸித்திக்குமென்பதும், அதைக் கைப்பற்று முபாயங்களும், அதை யநுட்டிக்கச் சக்தியற்றவன் ஆத்மநிஷ்டையிலிருக்கவேண்டுமென்பதும், ஆத்மநிஷ்டையின் பிரகாரங்களும், பக்தியுள்ளவர்கள் எம்பெருமானுக்கு மிகவும் இஷ்டர்களென்பதும் சொல்லப்படும்.

கங-வது அத்தியாயத்தில் - தேகத்தின் ஸ்வரூபமும், ஆத்மப்பிராப்திக்கு ஹேதுவும், ஆத்மஸ்வரூபசோதநமும், பந்தத்துக்குக்காரணமும், அதின் விவேகமும் சொல்லப்படும்.

கச-வது அத்தியாத்தில் - குணங்கள் புருஷனைக் கட்டுப்படுத்துகிற விதமும், அவைகளே கர்த்தாவென்பதும், அக்குணங்களை யொழிக்கவேண்டுமென்பதும், கதி மூன்றுக்கும் தாமே காரணமென்பதும் சொல்லப்படும்.

கரு-வது அத்தியாயத்தில் - அசேதநத்தோடு கலந்த ஜீவனையும் சுத்தனுன முக்தனையுங்காட்டில், புருஷோத்தமன் (உலகங்களை) வியாபித்தும் தரித்தும் ஆண்டும் போருகையாலே அந்நியனென்கிறது.

கசூ-வது அத்தியாயத்தில் - தத்வாநுஷ்டாநமும் தத்வவிஜ்ஞாநமும் திடப்படுவதற்காகத் தேவாசுரர்களின் விபாகத்தை யருளிச்செய்துகொண்டே சாஸ்திரத்துக்கு வசப்பட்டிருக்கவேண்டுமென்பதை யருளிச்செய்தார்.

கஎ-வது அத்தியாயத்தில்-சாஸ்திரத்தில் ஸித்தமாகாததெல்லாம் அசுரரைச்சேர்ந்ததென்றும், சாஸ்திரத்தில் ஸித்தமானதும் குணத்துக்குத்தக்

கபடி வெவ்வேறென்றும், சாஸ்திரஸித்தமானவைகளுக்கு மூன்றுலக்ஷண முண்டென்று மருளப்பட்டது.

கடைசி அத்தியாயத்தில்-எம்பெருமானிடத்தில் கர்திருத்வாநுஸந்தா நமும், ஸத்துவகுணத்தை அவசியம் கைப்பற்றவேண்டுமென்பதும், இவனு டைய கர்மம் பரிணமிக்கும்படியும் சாஸ்திரத்தின் ஸாரார்த்தமும் சொல்லப் பட்டது.

கர்மயோகமாவது=தபஸ், தீர்த்தயாத்திரை, தாநம், யக்ஞம் முதலிய வைகளை யநுட்டிப்பது. ஞாநயோகமாவது=அந்தஃகரணத்தை ஜெயித்து ப ரிசுத்த ஆத்மஸ்வரூபத்தில்தானே நிற்கை. பக்தியோகமாவது=பரனுக்கெ ன்றே அற்றுத்தீர்ந்த பிரீதியோடு தியாநாதிகளிலிருக்கை. இம்மூன்று யோக ங்களும் ஒன்றோடொன்று ஸம்பந்தப்பட்டவைகள். பரனுடைய ஆராதநரூப ங்களான நித்தியநைமித்திககர்மங்களும் அப்படியே. இம்மூன்றும் யோகத் துவாரா ஆத்ம ஸாக்ஷாத்காரத்துக்கு ஸாதகமாகின்றன. ஸகல அக்ஞாநங்க ளையுமொழித்தவன், ஆத்மவஸ்துவானது பரனுக்கு சேஷப்பட்டதென்பதை யறிந்து, பரமபுருஷனிடத்தில் பரபக்தியைப்பண்ணி, அதைக்கொண்டே பரமபதத்தை யடைவான். ஐசுவரியத்தை யபேக்ஷித்து பக்தியோகம் அநு ட்டிக்கப்படுமாகில் அது அதைப் பரிபூர்ணமாகச் சாதித்துக்கொடுக்கும். ஆத் மாவை யபேக்ஷிக்கும்பக்ஷத்தில் இம்மூன்றுங்கூடி ஆத்மாவின் கேவல்லியத் தைச் சாதிக்கும். இவ்வதிகாரிகள் மூவருக்கும் பகவானிடத்தில் ஐகாந்தியம் ஸமாநம். பகவத்பிராப்திபரியந்தம் பரமபுருஷனையே கோரியிருந்தானாகில் இறுதியில் பரமபுருஷனையேயடைவான். பரமைகாந்தியான ஞாநியானவன், தனது ஜீவனம் பரமாத்மாதீநமாய்,அவனைக்கூடினால் சுகமும் பிரிந்தால் துக் கமுமாய்,அவனையே சிந்தித்தல் அவன் விஷயமான அப்பியாஸயோகத்தை ய நுட்டித்தல் அவன் திருநாமங்களை ஜபித்தல் அவனை வந்தித்தல் துதித்தல் குணகீர்தனம் செய்தல் இவைகளைக்கொண்டு ஆத்மாவைத்தரித்து, பிராண ன் மனது புத்தி இந்திரியம் கிரியை எல்லாவற்றையும் அவனதீனமாக்கி, தன க்கென்று வகுத்த கருமம் முதல் பக்திபரியந்தமான வெல்லாவற்றையும் அவ னுக்கு முகோல்லாஸமாம்படி செய்கிறோமென்று கர்திருத்வாபிமாநமின்றிக் கே செய்து, அவைகளில் உபாயபுத்தியைவிட்டு, தனது உஜ்ஜீவனவிஷயத் தில் "நாமென்ன செய்யப்போகிறோ" மென்கிற பய லேசமுமின்றிக்கே "அதற்கு உபாயம் அவனே"யென்று பரமபுருஷனிடத்தில் உபாயபுத்தியை ப்பண்ணி "உனக்கே நானுட்செய்யவேண்டு" மென்று அவனுடைய தாஸ் யமே போக்கியமாயிருந்து கடைசியில் அவன் திருவடித்தாமரைகளை யடை வன்; என்கிற இவ்விஷயத்தை கீதாசாஸ்திரம் முக்கியமாய் பிரதிபாதிக்கிற தென்று கீதார்த்தம் ஸங்கிரகிக்கப்பட்டது.

ஸ்ரீமத்கீதார்த்தஸங்கிரஹம்

ஸம்பூர்ணம்.

శ్రీః.



శ్రీమతే రామానుజాయ నమః.

# ஸ்ரீமத்கீதாபாஷ்யகாலக்ஷேபாரம்பத்தில்

## தங்கள்தங்கள் ஸம்பிரதாயாநுஸாரமாக

## குருபரம்பரையை அநுஸந்தித்துப் பிறகு அநுஸந்திக்கவேண்டிய

## சுலோகங்கள்.

---

సమ్యఙ్న్యాయకలాపేన మహతా భారతేన చ।
ఉపబృంహితవేదాయ నమో వ్యాసాయ విష్ణవే॥

సారథ్యమర్జునస్యాదౌ కుర్వన్ గీతామృతం దదౌ।
లోకత్రయోపకారాయ తస్మై కృష్ణాత్మనే నమః॥

ప్రపన్నపారిజాతాయ వేత్రతోత్రైకపాణయే।
జ్ఞానముద్రాయ కృష్ణాయ గీతామృతదుహే నమః॥

కరకమలనిదర్శితాత్మముద్రః పరికలితోన్నతబర్హిబర్హచూడః।
ఇతరకరగృహీతవేత్రతోత్రో మమహృది సన్నిధిమాతనోతు శౌరిః॥

అగ్రేకృత్వాకమపి చరణం జానునైకేన తిష్ఠన్
పశ్చాత్పార్థం ప్రణయరసజుషా చక్షుషా వీక్షమాణః।
సవ్యే తోత్రం కరసరసిజే దక్షిణే జ్ఞానముద్రా
మాబిభ్రాణో రథమధివసన్ పాతు నస్సూతవేషః॥

కృష్ణం కమలపత్రాక్షం పుణ్యశ్రవణకీర్తనమ్।
వాసుదేవం జగద్యోనిం నౌమి నారాయణం హరిమ్॥

కృష్ణాయ యాదవేంద్రాయ జ్ఞానముద్రాయ యోగినే।
నాథాయ రుక్మిణీశాయ నమో వేదాంతవేదినే॥

ஸ்ரீ:



శ్రియై నమః



శ్రీమతే రామానుజాయ నమః

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித

# ஸ்ரீமத்கீதாபாஷ்யம்.

---

தனியன்.

యోనిత్యమచ్యుతపదామ్బుజయుగ్మరుక్మవ్యామోహతస్తదితరాణితృణాయమేనే।
అస్మద్గురోర్భగవతోఽస్యదయైకసిన్ధోః రామానుజస్యచరణౌశరణంప్రపద్యే॥

శ్రీమద్గీతాభాష్యమఙ్గళశ్లోకః.

యత్పదామ్భోరుహధ్యానవిధ్వస్తాశేషకల్మషః।
వస్తుతాముపయాతోఽహం యామునేయం నమామితమ్।

## மஹா ப்ரவேசம்.

ஸ்ரீய:பதியாய்; (ஸகல ஹேயங்களுக்கு மெதிர்த்தட்டாயும் கல்யாணை காஸ்பதமாயும் தேசகாலாதிகளாலே அளவிடவொண்ணாததாயும் ஞாநமாயும் ஆநந்தமாயு மிருந்துள்ள) திவ்ய ஆத்மஸ்வரூபத்தை உடையனாய்; (ஸ்வபாவஸித்தங்களாயும் அளவிலா வதிசய முடையனவாயு மிருக்கிற ஞாநம், பலம், ஐசுவரியம், வீரியம், சக்தி, தேஜஸ்முதலான) எண்ணிறந்த கல்லியாணகுணகணங்களுக்கு மஹாஸமுத்திரமாய்; (தனக்கு ஸம்மதமாய் தகுந்ததாய் ஏகரூபமாய் சிந்தைக்கெட்டாததாய் திவ்யமாய் அத்புதமாய் நித்யமாய் குற்றமற்றதாய் நிரதிசயமாய் பிரகாசம், ஸௌந்தர்யம், லாவண்யம், யௌவநம் தொடக்கமான அநந்தகுணங்களுக்கும் நிதியாயிருக்கிற) திவ்யமங்கள விக்ரஹத்தையுடையனாய்; (தனக்குசிதங்களும் நாநாவிதங்களும் விசித்திரங்களும் அநந்தஆச்சரியங்களும் நித்யநிரவத்யங்களுமான) அபரிமித திவ்யாபரணங்களுடையனாய்; (தனக்குத்தக்கவையாய் எண்ணிறந்தவையாய் எண்ணற்கரியசக்தியுற்றவையாய் நித்யநிரவத்ய நிரதிசய கல்லியாணங்களாயுள்ள)

திவ்ய ஆயுதங்கள் தரித்தவனாய்; (தனக்கு ஸம்மதையும் தகுந்தவளும்: நித்ய
நிரவத்யங்களான ஸ்வரூபம், ரூபம், குணம், விபூதி, ஐசுவ்ரியம், சீலம்முதலிய
வையாய் அபார அதிசயங்களாய் எண்ணற்றவைகளான கல்லியாணகுணங்க
ள்பொருந்தியவளுமான) பெரியபிராட்டியாருக்கு மணாளனாய்; (தன் ஸங்கல்
பத்தைப் பின்செல்லுகிற ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திபேதங்களையுடையராய்
ஸகல அவஸ்த்தைகளிலும் அடிமைசெய்வதிலுண்டான ருசியே சரீரமெடுத்
தாப்போலிருப்பவராய் நித்யநிரவத்ய நிரதிசயங்களான ஞானம், க்ரியை, ஐசு
வரியம், தொடங்கிய அநந்த குணகணங்கள் பொருந்தியவராயுள்ள அபரி
மிதரான) நித்யசூரிகளாலே எப்போதும் ஆராதிக்கப்பட்ட திவ்யமான சர
ணயுகளங்களுடையனாய்; மனோவாக்குக்களால் அளவிடப்போகாத ஸ்வரூப
ஸ்வபாவமுற்றவனாய்; (தனக்குத்தக்கவையும் நானாவிதங்களும் விசித்திரங்க
ளும் அநந்தங்களுமான) போக்யம், போக உபகரணம், போகஸ்தானம்
இவைகளால் நிறைந்ததாய் அநந்த ஆச்சரியமாய் அநந்த மஹாவிபவமாய்
அநந்த பரிமாணமாய் நித்யமாய் நிரவத்யமாய் அக்ஷரமென்றும் பரமாகா
சமென்றுஞ் சொல்லப்படுமதான) ஸ்ரீவைகுண்டத்தைக் கலவியிருக்கையாக
வுடையனாய்; (நாநாவிதங்களும் விசித்திரங்களுமான போக்கியபதார்த்தங்க
ளாலும் போக்தாக்களாலும் நிறைந்த) ஸகல லோகங்களையும் படைப்பதும்
காப்பதும் அழிப்பதுமான திருவிளையாட்டையுடையனாய்; பரப்ரும்மமாய்;
புருஷோத்தமனான ஸ்ரீமந்நாராயணன் - பிரமன் தொடங்கித் தாவரமீறாயு
ள்ள ஸகலலோகங்களையும் ஸ்ருஷ்டித்து, (தனக்கு அஸாதாரணமான ரூபத்
துடனிருந்து தான் பிரும்மாதி தேவமனுஷ்யர்களுடையத் தியானம் ஆராத
னம் முதலியவற்றிற்கு விஷயமாகாமலிருந்தானாகிலும், தனது அபாரமான
கருணையாலும் ஸௌசீல்யமென்கிற குணவிசேஷத்தாலும் அன்பினாலும்
ஔதாரியத்தாலும் தன்னுடையஅஸாதாரண திவ்யமங்கள விக்ரஹத்தை
யே தன் ஸ்வபாவம் மாறுதபடி தேவாதி ஸஜாதீயமாக்கி அந்தந்த லோகங்க
ளில் அவதரித்தவதரித்து, அவ்வவர்களால் ஆராதிக்கப்பட்டு, அவரவர் இஷ்ட
த்துக்குத்தக்கபடி தருமம், அர்த்தம், காமம், மோக்ஷமென்கிற பலங்களைக்
கொடுத்துக்கொண்டு, பூமிபாரத்தைத் தீர்க்கையென்கிற வியாஜத்தாலே நம்
போன்றவரும் ஆசிரயிக்கும்படி திருவவதரித்து, பூமியில் ஸகல ஜனங்களு
டைய நேத்திரங்களுக்கும் விஷயமாய், எத்தனையேனும் அறிவுடையோர்க்
கும் அறிவிலாதார்க்கும் வாசியற யாவருடைய மனதையும் கண்களையும் அப
ஹரிக்கின்ற திவ்யசேஷ்டிதங்களைச் செய்துகொண்டு, பூதனை, சகடம், யம
ளார்ச்சுநர், அரிஷ்டன், பிரலம்பன், தேநுகன், காளியன், கேசி, குவலயாபீ
டம், சாணூரன், முஷ்டிகன், கௌஸலன், கம்ஸன் முதலானோரைச்சிதைத்
து, பரமமான தயை ஸௌஹார்தம் இவற்றையுட்கொண்ட தன் கடாக்ஷ
அமிருதத்தாலும் வசந அமிருதத்தாலும் ஜகத்தை வளர்த்துக்கொண்டு, நிர
திசயமான ஸௌந்தரியம் ஸௌசீல்யம் முதலிய குணங்களைப் பிரகாசப்ப
டுத்துவதால் அக்ரூரர், மாலாகாரர் முதலானோரைப் பரமபாகவதர்களாகச்
செய்து, பாண்டுபுத்திரனை யுத்தத்தில் புகச்செய்வதென்கிற வியாஜத்தாலே
(பரமபுருஷார்த்தமான மோக்ஷத்துக்கு ஸாதநமாக வேதாந்தத்தில் சொல்ல
ப்பட்டதும் ஞானயோக கர்மயோகங்களை அங்கமாயுடையதும் தன்னை விஷ
யீகரித்ததுமான) பக்தியோகத்தை அவதரிப்பித்தருளினான்.

ஸ்ரீ:.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# ஸ்ரீமத்கீதாபாஷ்யம்,

## முதல் அத்யாயம்.

### அவதாரிகை.

ஸ்ரிய:பதியான ஸர்வேசுவரன், பரமகாருணிகனுகையாலே பூமியின் பாரத்தைத் தீர்க்கவேண்டுமென்கிற வியாஜத்தாலே, நம்போன்ற ஸம்ஸாரிகளும் கண்டுபற்றி உய்யுமாறு ஸகல மநுஷ்ய நயநங்களுக்கும் விஷயமாய் பூமியில் அவதரித்து, கம்ஸன் முதலிய ஸகலமான அசுரப்படைகளையும் நிரஸித்து, அக்குரூரர் மாலாகாரர் முதலர்களை ஸௌந்தர்யம் ஸௌசீல்யந் தொடக்கமான தன் கல்லியாணகுணங்களில் ஈடுபடுத்தி, அவர்களைப் பரம பாகவதர்களாகச்செய்து, அர்ச்சுனனை யுத்தம் செய்யும்படி உத்ஸாஹப்படுத்துவதென்கிற வியாஜத்தாலே (மோக்ஷஸாதநமாக வேதாந்தத்தில் சொல்லப்பட்டதும் கருமயோக ஞாநயோகங்களை அங்கமாய் உடையதுமான) பக்தியோகத்தை லோக உஜ்ஜீவநார்த்தமாக வெளியிட்டருளினன். அதில் பாண்டவாளுக்கும் கௌரவாளுக்கும் யுத்தம் தொடக்கமாக, தான் ஸர்வேசுவர ஈசுவரனுயிருக்கச்செய்தேயும் லோகோபகாரமாக மநுஷ்யனுய் அவதரித்த அந்த பகவான் புருஷோத்தமன்; ஆஸ்ரிதாளிடத்திலுண்டான வாத்ஸல்யத்துக்கு வசப்பட்டவனுகையாலே, தேராளனுயிருந்த அர்ச்சுனனுக்குத் தன்னைத் தேரோட்டியாக அமைத்துக்கொண்டு ஸகலமான ஜநங்களுக்கும் ஸேவைஸாதித்தருளினன். இந்தவிஷயம் தெரிந்திருக்கச்செய்தேயும் உட்கண் வெளிக்கண் என்கிற இரண்டுங் கெட்ட முழுக்குருடனுகிய திருதராஷ்டிரன், துரியோதனன் ஜயித்தானென்று கேட்கவேண்டுமென்கிற அவாவினுல் ஸஞ்சயனைப்பார்த்து வினவுகிருன்.

---

శ్రీభగవద్గీతాప్రారమ్భః.

ధృతరాష్ట్ర ఉవాచ॥ ధర్మక్షేత్రే కురుక్షేత్రే సమవేతా యుయుత్సవః।

మామకాః పాణ్డవాశ్చైవ కిమకుర్వత సఞ్జయ॥ ౧॥

(க) அஹோ ஸஞ்சய! நம் குமாரர்களான துரியோதனுதிகளும் பாண்டவாளும், தருமக்ஷேத்திரமான குருக்ஷேத்திரத்தில் யுத்தம் செய்வதாகக் கூடினர்களே, பிறகு என்ன நடந்தது? அதைச் சிறிது சொல்லிக்காண் என்றுன்.

(அவதாரிகை.) அதைக்கேட்டு ஸஞ்சயன் உத்தரம் சொல்லுகிறான்.

సఞ్జయఉవాచ॥ దృష్ట్వాతుపాణ్డవానీకంవ్యూఢందుర్యోధనస్తదా । ఆచార్యముపసఙ్గమ్య రాజావచనమబ్రవీత్॥ ౨ ॥ పశ్యైతాంపాణ్డుపుత్త్రాణా మాచార్యమహతీంచమూమ్। వ్యూఢాంద్రుపదపుత్త్రేణ తవశిష్యేణధీమతా॥ ౩॥ అత్రశూరామహేష్వాసా భీమార్జునసమాయుధి । యుయుధానోవిరాటశ్చ ద్రుపదశ్చమహారథః॥ ౪॥ ధృష్టకేతుశ్చేకితానఃకాశిరాజశ్చవీర్యవాన్ । పురుజిత్కున్తిభోజశ్చశైబ్యశ్చ నరపుఙ్గవః॥ ౫॥ యుధామన్యుశ్చవిక్రాన్తఉత్తమౌజాశ్చవీర్యవాన్ । సౌభద్రోద్రౌపదేయాశ్చ సర్వఏవమహారథాః॥ ౬॥ అస్మాకన్తువిశిష్టాయేతాన్నిబోధద్విజోత్తమ । నాయకామమసైన్యస్య సంజ్ఞార్థంతాన్బ్రవీమితే ॥ ౭ ॥ భవాన్భీష్మశ్చ కర్ణశ్చ కృపశ్చ సమితిఞ్జయః । అశ్వత్థామావికర్ణశ్చ సౌమదత్తిస్తథైవచ ॥ ౮ ॥ అన్యేచబహవశ్శూరా మదర్థేత్యక్తజీవితాః । నానాశస్త్రప్రహరణా స్సర్వేయుద్ధవిశారదాః ॥ ౯ ॥ అపర్యాప్తంతదస్మాకం బలంభీష్మాభిరక్షితం । పర్యాప్తం త్విదమేతేషాం బలంభీమాభిరక్షితమ్॥ ౧౦॥ అయనేషుచసర్వేషుయథాభాగమవస్థితాః । భీష్మమేవాభిరక్షన్తుభవన్తస్సర్వఏవహి ॥ ౧౧ ॥ తస్యసఞ్జనయన్హర్షం కురువృద్ధఃపితామహః । సింహనాదంవినద్యోచ్చైశ్శఙ్ఖన్దధ్మౌ ప్రతాపవాన్ ॥ ౧౨ ॥ తతశ్శఙ్ఖాశ్చభేర్యశ్చ పణవానకగోముఖాః । సహసైవాభ్యహన్యన్త సశబ్దస్తుములోఽభవత్॥ ౧౩ ॥ తతశ్శ్వేతైర్హయైర్యుక్తేమహతిస్యన్దనేస్థితౌ । మాధవఃపాణ్డవశ్చైవదివ్యౌశఙ్ఖౌ ప్రదధ్మతుః ॥ ౧౪ ॥ పాఞ్చజన్యంహృషీకేశోదేవదత్తంధనఞ్జయః । పౌణ్డ్రన్దధ్మౌమహాశఙ్ఖంభీమకర్మావృకోదరః ॥ ౧౫ ॥ అనన్తవిజయంరాజాకున్తీపుత్త్రోయుధిష్ఠిరః । నకులస్సహదేవశ్చసుఘోషమణిపుష్పకౌ ॥ ౧౬॥ కాశ్యశ్చపరమేష్వాసఃశిఖణ్డీచమహారథః । ధృష్టద్యుమ్నోవిరాటశ్చసాత్యకిశ్చాపరాజితః ॥ ౧౭॥ ద్రుపదోద్రౌపదేయాశ్చసర్వశఃపృథివీపతే । సౌభద్రశ్చమహాబాహుశ్శఙ్ఖాన్దధ్ముఃపృథక్పృథక్॥ ౧౮॥ సఘోషోధార్తరాష్ట్రాణాంహృదయానివ్యదారయత్ । నభశ్చపృథివీంచైవ తుములోవ్యనునాదయన్॥౧౯॥

(௨-௧௯) அஹோ ராஜந்! துரியோதனன், தன் சேனைக்குப் பீஷ்மரும் பாண்டவசேனைக்கு பீமனும் ரக்ஷகர்களாயிருக்கின்றமை கண்டு, தன்னை ஜயிக்கும்படி பாண்டவாளுக்குப் பலம்போந்திருக்கின்றமையையும் அவர்களை ஜயிப்பதற்குத் தனக்குப் போதாமையையுந் தன் ஆசாரியனிடம் சொல்லி, தன்னுள் கலங்காநின்றான். இப்படி அவன் துயரப்படுவதை பீஷ்மர் பார்த்து அவனை உகப்பிக்க வேண்டுமென்று ஸிம்மநாதமும் சங்கத்மாநமும் செய்து ஜயபேரியும் அறைவித்தார். பிறகு அந்த கோஷத்தைக்கேட்டு ஸர்வலோகநாதனாகிய பார்த்தஸாரதியும் ரதியான பாண்டுகுமாரனும், மூவுலகங்களையும் ஜயிப்பதற்கு ஸாதநமாய் மஹத்தாயிருக்கிற திருத்தேரில் இருந்தபடியே பாஞ்சஜந்யம் தேவதத்தமென்கிற திவ்யமான திருச்சங்கங்களையெடுத்து மூவுலகும் நடுங்கும்படி 'பம்பம்' என்று ஊதலானார்கள். பிறகு தரு

மன பீமன் முதலானோரும் தந்தாமுடைய சங்கங்களை யெடுத்துத் தனிதனி உத்கோஷிக்க, அந்த் கோஷமானது துரியோதனாதிகளான உம்பிள்ளைகளியாவருடைய உள்ளத்தையும் பிளக்க, அவர்களும் இன்றோடே நம் பலம் ஒழிந்துவிட்டதென்று தீர்மானித்தார்கள்.

అథవ్యవస్థితాన్దృష్ట్వా ధార్తరాష్ట్రాన్కపిధ్వజః । ప్రవృత్తేశస్త్రసంపాతే ధనురుద్యమ్యపాణ్డవః ॥ ౨౦ ॥ హృషీకేశంతదావాక్యమిదమాహమహీపతే । సేనయోరుభయోర్మధ్యేరథంస్థాపయమేఽచ్యుత ॥౨౧॥ యావదేతాన్నిరీక్షేఽహం యోద్ధుకామానవస్థితాన్।కైర్మయాసహయోద్ధవ్యమస్మిన్రణసముద్యమే॥౨౨॥ యోత్స్యమానానవేక్షేఽహంయఏతేఽత్రసమాగతాః ॥ ౨౩ ॥ ధార్తరాష్ట్రస్యదుర్బుద్ధేర్యుద్ధే ప్రియచికీర్షవః । సఞ్జయఉవాచ ॥ ఏవముక్తోహృషీకేశోగుడాకేశేనభారత । సేనయోరుభయోర్మధ్యేస్థాపయిత్వారథోత్తమమ్ ॥ ౨౪॥ భీష్మద్రోణప్రముఖతస్సర్వేషాంచమహీక్షితామ్ । ఉవాచపార్థపశ్యైతాన్సమవేతాన్కురూనితి ॥ ౨౫ ॥

(உ0 - உ௫) அநந்தரம் யுத்தம் செய்வதாய் நின்ற துரியோதனாதிகளைப்பார்த்து, இலங்கையைக்கொளுத்திய வாநரத்தைக் கொடியிற்கொண்ட பாண்டுகுமாரன்; ஞாநம், சக்தி, பலம், ஐசுவரியம், வீர்யம், தேஜஸ் இவற்றிற்கு நிதியாய், ஸங்கல்பமாத்திரத்தால் ஜகத்தினுடைய உத்பத்தி ஸ்திதி லயங்களைச்செய்பவனாய், எந்தப்பிராணியாகிலும் அவற்றின் அந்தஃகரண பஹிஃகரணங்களைத் தான் நினைத்தபடி யாளவல்லனாய் (ஆஸ்ரிதவத்ஸலனாகையாலே) தனக்கு ஸாரதியா யெழுந்தருளியிருக்கிற கண்ணனைப்பார்த்து யுத்தஞ்செய்யவந்தவரை உள்ளபடியே கண்டறிவதற்கு உசிதமானவிடத்தில் இரதத்தைக்கொண்டு நிறுத்தும்படி ஆக்ஞை செய்தான். அவரும் அவனாக்ஞைசெய்தக்ஷணமே, பீஷ்மர் துரோணர் முதலானோரும் மற்றெல்லா ராஜாக்களும் பார்த்திருக்கச்செய்தே திருத்தேரை அவன் குறித்தவிடத்திற் கொண்டு நிறுத்தி, துரியோதனாதிகளின் சேனையின் வளம் இத்தன்மையதென்றும் அருளிச்செய்தார்.

తత్రాపశ్యత్స్థితాన్పార్థఃపితౄనథపితామహాన్ । ఆచార్యాన్మాతులాన్భ్రాతౄన్పుత్రాన్పౌత్రాన్సఖీంస్తథా॥ ౨౬ ॥ శ్వశురాన్సుహృదశ్చైవసేనయోరుభయోరపి । తాన్సమీక్ష్యసకౌన్తేయస్సర్వాన్బన్ధూనవస్థితాన్ ॥ ౨౭ ॥ కృపయాపరయావిష్టోవిషీదన్నిదమబ్రవీత్ । అర్జునఉవాచ ॥ దృష్ట్వేమంస్వజనంకృష్ణయుయుత్సుంసముపస్థితమ్ ॥౨౮ ॥ సీదన్తిమమగాత్రాణిముఖంచపరిశుష్యతి । వేపథుశ్చశరీరేమేరోమహర్షశ్చజాయతే॥ ౨౯॥ గాణ్డీవంస్రంసతేహస్తాత్ త్వక్చైవపరిదహ్యతే । నచశక్నోమ్యవస్థాతుంభ్రమతీవచమేమనః ॥౩౦॥ నిమిత్తానిచపశ్యామివిపరీతానికేశవ । నచశ్రేయోఽనుపశ్యామిహత్వాస్వజనమాహవే ॥ ౩౧ ॥ నకాఙ్క్షేవిజయంకృష్ణ నచరాజ్యంసుఖానిచ । కిన్నోరాజ్యేనగోవిన్దకింభోగైర్జీవితేనవా ॥ ౩౨ ॥ యేషామర్థేకాఙ్క్షితంనో

రాజ్యంభోగాస్సుఖానిచ।తఇమేవస్థితాయుద్ధేప్రాణాంస్త్యక్త్వాధనానిచ॥౩౩॥ ఆచార్యాః పితరఃపుత్రాస్తథైవచపితామహాః । మాతులాశ్శ్వశురాఃపౌత్రాస్స్యాలాస్సమ్బన్ధినస్తథా॥ ౩౪॥ ఏతాన్నహన్తుమిచ్ఛామిఘ్నతోపిమధుసూదన । అపిత్రైలోక్యరాజ్యస్య హేతోఃకిన్నుమహీకృతే॥ ౩౫॥ నిహత్యధార్తరాష్ట్రాన్నఃకాప్రీతిస్స్యాజ్జనార్దన।పాపమేవాశ్రయేదస్మాన్హత్వైతానాతతాయినః॥ ౩౬॥ తస్మాన్నార్హావయంహన్తుంధార్తరాష్ట్రాన్సబాన్ధవాన్ । స్వజనంహికథంహత్వాసుఖినస్స్యామమాధవ॥ ౩౭॥ యద్యప్యేతేనపశ్యన్తిలోభోపహతచేతసః । కులక్షయకృతందోషం మిత్రద్రోహేచపాతకమ్॥ ౩౮॥ కథంనజ్ఞేయమస్మాభిఃపాపాదస్మాన్నివర్తితుమ్ । కులక్షయకృతందోషం ప్రపశ్యద్భిర్జనార్దన॥ ౩౯॥ కులక్షయేప్రణశ్యన్తి కులధర్మాస్సనాతనాః। ధర్మేనష్టేకులం కృత్స్నమధర్మోఽభిభవత్యుత॥ ౪౦॥ అధర్మాభిభవాత్కృష్ణ ప్రదుష్యన్తికులస్త్రియః । స్త్రీషుదుష్టాసువార్ష్ణేయజాయతేవర్ణసఙ్కరః ॥౪౧॥ సఙ్కరోనరకాయైవ కులఘ్నానాం కులస్యచ । పతన్తిపితరోహ్యేషాంలుప్తపిణ్డోదకక్రియాః ॥ ౪౨ ॥ దోషైరేతైఃకులఘ్నానాం వర్ణసఙ్కరకారకైః । ఉత్సాద్యన్తేజాతిధర్మాః కులధర్మాశ్చ శాశ్వతాః॥ ౪౩। ఉత్సన్నకులధర్మాణాంమనుష్యాణాంజనార్దన । నరకేనియతంవాసో భవతీత్యనుశుశ్రుమ॥ ౪౪ ॥ అహోబతమహత్పాపం కర్తుంవ్యవసితావయమ్ । యద్రాజ్యసుఖలోభేనహన్తుంస్వజనముద్యతాః ॥ ౪౫ ॥ యదిమామప్రతీకారమశస్త్రంశస్త్రపాణయః।ధార్తరాష్ట్రారణేహన్యుస్తన్మేక్షేమతరంభవేత్॥ ౪౬॥ సఞ్జయఉవాచ॥ ఏవముక్త్వార్జునస్సఙ్ఖ్యే రథోపస్థఉపావిశత్ । విసృజ్యసశరంచాపంశోకసంవిగ్నమానసః॥౪౭॥

(௨௯-௪௭) பரமகாருணிகனும் தீர்க்கபந்துவும் பரமதார்மிகனும் உதாரமனஸ்கனுமான பார்த்தன், அரக்குமாளிகையில் தீவைத்தது முதலாகப் பலகாலும் சாகவழிதேடிய மஹாபயங்கரர்களான உம்மவர்களால் கூடப்பிறந்தவருந் தானுமாய் வஞ்சிக்கப்பட்டிருந்தானாகிலும், 'இனி பரமபுருஷனுடைய ஸஹாயத்தால் உம்மவர்களைக் கொல்லப்போகிறோமென்கிற நிச்சயமுண்டாகையாலே அவர்களைப்பார்த்து மனங்கசிந்து, ஐயோ! இவர்களைக் கொல்லவேண்டுமே! என்று பந்துஸ்னேகத்தாலும் பரமதயையினாலும் அதர்மபயத்தாலும் சரீரங் குன்றியவனாய், இவர்களுடன் நான் யுத்தம் செய்யவேமாட்டேனென்று சொல்லி பந்துக்களைப் பிரிவதிலுண்டான சோகத்தால் மனம் நொந்து அம்பையும் வில்லையும் விட்டெறிந்து திருத்தேர்த்தட்டில் சாய்ந்துவிட்டான்.

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசிதமான ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்

முதல் அத்யாயம் - முடிந்தது.

---

ஸ்ரீ:.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# இரண்டாவது அத்யாயம்.

సఞ్జయ ఉవాచ॥ తం తథా కృపయావిష్టమశ్రుపూర్ణాకులేక్షణమ్ । విషీదన్తమిదం వాక్యమువాచ మధుసూదనః॥ ౧॥ శ్రీభగవానువాచ॥ కుతస్త్వా కశ్మలమిదం విషమే సముపస్థితమ్। అనార్యజుష్టమస్వర్గ్యమకీర్తికరమర్జున॥ ౨॥ క్లైబ్యం మాస్మ గమః పార్థ నైతత్త్వయ్యుపపద్యతే । క్షుద్రం హృదయదౌర్బల్యం త్యక్త్వోత్తిష్ఠ పరన్తప॥ 3॥

(௧ - ௩) இவ்வாறு அர்ச்சுனன் சோகவியாகுலனாயிருக்க, எம்பெருமான் அதைக் கடாக்ஷித்தருளி 'அர்ச்சுன! இதேது? பரலோக விரோதியும் அபகீர்த்தியை விளைப்பதும் மிகவும் இழிவானதுமான இந்த சோகம் தெரியாதவர்களைப்போல் உனக்கெங்கேயிருந்துண்டாயிற்று? யாருக்காகச் சோகிக்கிறாயென்று அதட்டி, தைரியமாயெழுந்திருந்து யுத்தம் செய்யடா பேதையே' என்று திடம் சொல்லியும் அர்ச்சுனன் ஸ்நேஹகாருண்யாதிகளுக்கு வசப்பட்டிருந்தமையால் அது தனக்கு அத்யந்தம் ஹிதமென்று தெரிந்துகொள்ளாமல் பின்வருமாறு சொல்லத்தொடங்கினான்.

అర్జున ఉవాచ॥ కథం భీష్మమహం సంఖ్యే ద్రోణం చ మధుసూదన । ఇషుభిః ప్రతియోత్స్యామి పూజార్హావరిసూదన ॥ ౪ ॥ గురూనహత్వా హి మహానుభావాన్ శ్రేయో భోక్తుం భైక్షమపీహ లోకే । హత్వార్థకామాంస్తు గురూనిహైవ భుఞ్జీయ భోగాన్ రుధిరప్రదిగ్ధాన్॥ ౫॥ న చైతద్విద్మః కతరన్నో గరీయో యద్వా జయేమ యది వా నో జయేయుః । యానేవ హత్వా న జిజీవిషామస్తేఽవస్థితాః ప్రముఖే ధార్తరాష్ట్రాః॥ ౬॥ కార్పణ్యదోషోపహతస్వభావః పృచ్ఛామి త్వాం ధర్మసమ్మూఢచేతాః । యచ్ఛ్రేయస్స్యాన్నిశ్చితం బ్రూహి తన్మే శిష్యస్తేఽహం శాధి మాం త్వాం ప్రపన్నమ్ ॥ ౭ ॥ న హి ప్రపశ్యామి మమాపనుద్యాద్యచ్ఛోకముచ్ఛోషణమిన్ద్రియాణామ్ । అవాప్య భూమావసపత్నమృద్ధం రాజ్యం సురాణామపి చాధిపత్యమ్॥ ౮॥ సఞ్జయ ఉవాచ॥ ఏవముక్త్వా హృషీకేశం గుడాకేశః పరన్తపః । న యోత్స్య ఇతి గోవిన్దముక్త్వా తూష్ణీం బభూవ హ॥ ౯॥

(௪ - ௯) ஓ மதுஸூதந! நான் வெகுமதிக்கும்படி ஆசார்ய ஸ்தாநத்தை நிர்வஹித்திருப்பவரும் போகத்தில் மிகவும் பற்றுடையவருமான இந்த பீஷ்மத் துரோணாதிகளைக்கொன்று, அவர்கள் அநுபவித்துவந்த அந்தபோகத்தை அவர்களிருந்த ஆஸனத்திலிருந்து நானெப்படி அநுபவிக்கத் துணிவேன்? ஆனால் 'யுத்தம்செய்வதாக ஆரம்பித்துப் பிறகு கைவாங்கினால் அவர்கள் உங்களை மேல்விழுந்து அடிப்பார்களே' என்பீரோ? அது எனக்கு ஸம்மதமே; அதர்மமாக அவர்களைக் கொன்று ஜயம்பெறுவதைப்பார்க்கத் தர்மஅதர்மந் தெரியாத அவர்களால் நாம் ஜயிக்கப்படுவதே மேலென்று எனக்குத் தோன்றுகிறது. இல்லையாகில், தேவரீருடைய சிஷ்யனாகியவடியேனுக்கு எது க்ஷேமமோ எது தருமமோ அதைத்தேவரீரே அருளிச்செய்ய

வேண்டு மென்று மிகவும் தீநமாய் கண்ணனுடைய சரணாரவிந்தங்களைப் பிடித்துக்கொண்டான். அப்பொழுது எம்பெருமானும்; 'இவன் ஸ்நேஹ காருண்யங்களுக்குப் பரவசனாய்க் கொண்டு, க்ஷத்ரியனுக்குப் பரமதர்ம மான யுத்தத்தை அதர்மமென்றுபிரமித்துத் தனக்குத் தருமம் தெரியவே ண்டுமென்று சரணாகதி பண்ணினான்; இவனுக்கு ஆத்மஸ்வரூபத்தின் வாஸ் தவஞானமும், பலத்தில் அபேக்ஷயின்றி யுத்தம்செய்வது க்ஷத்திரியருக்கு முக்திஸாதநமென்பதும், தெரியாதவரையில் இந்த மோஹம் தீரமாட்டா தாகையால் அதைத் தெரியச்சொல்ல வேண்டுமென்று திருவுள்ளம்பற்றி, இந்த * அத்யாத்ம சாஸ்த்ரத்தை அவதரிப்பித்தருளினான். இவ்வர்த்தத்தை "అస్థానస్నేహకారుణ్యధర్మాధర్మధియాకులమ్ । పార్థం ప్రపన్నముద్దిశ్య శాస్త్రావతర ణం కృతమ్॥" என்று ஆளவந்தாருமருளிச்செய்தார்.

తమువాచహృషీకేశః ప్రహసన్నివభారత।
సేనయోరుభయోర్మధ్యే విషీదన్తమిదంవచః॥ ౧౦॥

(கo) இப்படி தேஹஆத்மாக்களின் உண்மை தெரியாமல் சோகித்தி ருக்கச்செய்தே அது தெரிந்தவர்பேசும் பேச்சான தருமவார்த்தையைப் பே சுகிறவனும், யுத்தம்செய்வதாகப் புறப்பட்டுத் திடீரென்று இரண்டுசேனைக் கும் நடுவில் யுத்தத்தினின்றும் கைவாங்கித் திகைத்து நிற்பவனுமான அந்த அர்ச்சுநனைப்பார்த்து பரமபுருஷன் கொஞ்சம்சிரித்து, வேடிக்கைபேசுவது போல ஆத்மபரமாத்மாக்களின் உண்மையையும் அதை அடைவதற்குபாயங் களான கருமயோக,ஞாநயோக,பக்தியோகங்களையும் அறிவிக்கின்ற [నత్వేవా హం தொடங்கி అహంత్వా] என்று மளவான இவ்வார்த்தையை அருளிச்செ ய்தார்.

శ్రీభగవానువాచ॥ అశోచ్యానన్వశోచస్త్వం ప్రజ్ఞావాదాంశ్చభాషసే।
గతాసూనగతాసూంశ్చనానుశోచన్తిపణ్డితాః॥ ౧౧॥

(கக) அர்ச்சுந! இவர்களைக் கொல்வதாவென்று தேஹஆத்மாக்களின் ஸ்வரூபஞாநமில்லாதவன்போல, சோகமுற வேண்டாதவிஷயத்தில் சோகிக் கிறாய்; அன்றியும் 'இவர்களைக்கொன்றுவிட்டால் பித்ருக்களுக்குப் பிண்டோ தகக்கிரியை யில்லாமற் போய்விடுமே' என்பது முதலாக அந்த விவேகம் உண்டானவர் பேச்சாகவும் பேசுகிறாய்;இதென்ன? ஒன்றுக்கொன்று பொரு ந்தவில்லையே; தெரிந்தவர்கள் சோகிக்கமாட்டார்களே; ஏனெனில்:—ஆத்ம வஸ்து நித்யமானதுபற்றி அதற்கு ஜந்மமுமில்லை மரணமுமில்லையாகையால் அதுவிஷயத்தில் சோகிக்கவேண்டாம்; அசேதநமான சரீரத்துக்கு எப்போ தும் பரிணமிப்பதே ஸ்வபாவமாகையால் அதற்குமரணம் நேரிடுவதைப்பற் றியும் சோகிக்கவேண்டாம். ஆனபின்பு நீ இப்படி சோகப்படுவதைப்பார் த்தால் தேஹத்தின் ஸ்வபாவமும், அதற்கவ்வருகான ஆத்மஸ்வபாவமும், அதை அடையும் உபாயமான யுத்தமுதலிய தருமமும் ஒன்றும் அறியாய் போலும்.

---

* அத்யாத்மசாஸ்த்ரம் – (ஆத்மவிஷயக) அதாவது மோக்ஷசாஸ்த்ரம்.

[இந்த யுத்தத்தைப் பலனில் அபேக்ஷையின்றிச்செய்தால் அதனால் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தைக் காண்பதற்கு வழியுண்டாகும்; ஆத்மாவோ பிறப்பதனு லிருக்கிறனென்றும் இறப்பதனு லில்லாமற்போகிறனென்றுமில்லை; அவனுக்கு ஜநநமரண மிரண்டுங்கிடையாது. ஆகையால் அவன் விஷயத்தில் சோகிக்கக் காரணமில்லை. தேஹமோ க்ஷணந்தோறும் விகாரப்படுவதே ஸ்வபாவமாகையால் அதற்கு உத்பத்தியும் நாசமும் ஸ்வபாவமானதுபற்றி அதற்காகவும் விசனப்படவேண்டாம் என்று திருவுள்ளம்.]

(அ-கை.) முதலில் ஆத்மஸ்வபாவத்தைச் சொல்லுகிறேன் கேள்:

నత్వేవాహంజాతునాసం నత్వం నేమేజనాధిపాః।
నచైవనభవిష్యామ స్సర్వేవయమతఃపరమ్॥౧౨॥

(கஉ) அநாதியாய் வருகிற இந்தக்காலத்தில் இதுவரையில் ஒருக்ஷண முங்கூட நானும் இல்லாமலில்லை; நீயுமில்லாமலில்லை; இந்த ராஜாக்களு மில்லாமலில்லை; இனியும் அப்படியே நாமொருவரு மிராமற்போகிறோமென்பது மில்லை; எல்லோரும் எப்போதும் இருப்பவர்தான்: இதனுல் - ஸர்வேசுவரனு ன நான் (பரமாத்மா) எப்படி நித்யனென்பதில் ஸந்தேஹமில்லையோ அப்படியேதான் ஜீவர்களான நீங்களும் நித்யர்களென்பதில் ஸந்தேஹமில்லையென்று தெரிந்துகொள். [நித்யன் - எக்காலத்திலுமிருப்பவன்.]

[இங்கே அக்ஞானத்தாலே மயங்கிக்கிடந்த அர்ச்சுநனுக்கு அந்த அக்ஞானம் தீருகைக்காக யதார்த்தமான ஆத்மாவினுடைய நித்யத்வத்தை உபதேசிக்கிற ஸமயத்தில், 'நான், நீ, இவர்கள்' என்று பிரித்தருளிச்செய்ததைப் பார்த்தால், ஸர்வேசுவரனுக்கும் ஆத்மாளுக்கு முண்டான * பரஸ்பரபேதமும், ஆத்மாக்களுக்குள் ஒருவருக்கொருவர் உண்டான பேதமும் ஸத்யமேயொழிய கற்பிதமல்லவென்று எம்பெருமானே அருளிச்செய்ததாகத் தெரிய வருகிறது. இங்கே பாஸ்கரமதஸ்த்தர்கள் சொல்லுகிறது - இந்த பேதம் உபாதிவசத்தால் வந்ததாகையால் o தத்வமாகமாட்டாதென்பர்கள்; அது ஸரியன்று. ஏனெனில்! அப்படி பேதம் தத்வமாகாதபக்ஷத்தில், அதைத் தத்வோபதேசஸமயத்தில் உபதேசிக்கக்கூடுமோ? அப்படி உபதேசித்தமையாலேயே இது தத்வமென்பதில் ஸந்தேஹமில்லை. மேலும் இப்படியே ¶ வேதமுஞ் சொல்லுகிறது.]

[இதற்குமேல் அத்வைதிகள்-பரமபுருஷன் அக்ஞானத்தால் காணப்படும் பேதத்தைக்கண்டு அதை உபதேசித்தானென்பர்கள். அதுவும் ஸரியல்ல. பர

---

* பரஸ்பரபேதமாவது - (நான், நீ என்கிற) வேறுபாடு.

o தத்வம் - உண்மை.

¶ నిత్యోనిత్యానాంశ్చేతనశ్చేతనానామ్ ఏకోబహూనాంయోవిదధాతికామాన్. நித்யரான பல சேதநர்களுக்கு யாதொரு நித்யசேதநனுண்டு, அவன் இஷ்டங்களை யளிக்கிறனென்று இதன்பொருள்.

மார்த்தத்தைக் காணவல்ல பரமபுருஷனுக்கு (நிர்விசேஷ கூடஸ்த நித்ய சைதந்யமான) ஆத்மாவினுடைய யதார்த்த ஸாக்ஷாத்காரமுண்டாகையாலே அக்ஞாநமும் அதின் காரியமும் ஒழிந்தபடியால் அக்ஞாந காரியமான பேத தர்சநமும், அதைப்பற்றிய உபதேசாதி வ்யவஹாரமு மெப்படி கூடும்?

இனி; பரமபுருஷன் பாதிதாநுவர்த்தியான பேதக்ஞாநத்தாலே சொல்லுகிறுர்; * பாதிதாநுவர்த்தியாவது - கானலைப்பார்த்து முதலில் நீரென்று பிரமித்த ஒருவனுக்கு ‘இது நீரல்ல கானலே’ என்று தெளிவுபிறந்த பின்பும் அது நீர்போலவே தோற்றப்படுவதாம்; அதுபோல் ஈசுவரனுக்கு o அத்வைதக்ஞாநம் உண்டாயிருந்தபோதிலும் (பாதிதாநுவர்த்திரூபமான) பேதக்ஞாநம் சிறிதுகாலம் நடையாடுகிறது; ஆனுல் அது,வெந்த வஸ்திரம்போல அத்வைதக்ஞாநத்தாலே பாதிக்கப்பட்டமையால் பந்தஹேதுவாகமாட்டாது என்று சொல்லக்கூடும்; அதுவுஞ் சேராது. ஏனெனில்! ஒருவனுக்கு இது கானலேயென்கிற தெளிவு பிறந்தபின், அது நீர்போல் தோற்றுமாகிலும் அவனுக்கு இது நீரல்லவென்கிற நிச்சயமுண்டானபின்பு, அதை அவன் ஸ்நாநபாநாதிகளுக்காகக் கொண்டுவர யத்நப்படுவனே? இல்லை. அதுபோல் இங்கும், அத்வைதக்ஞாநத்தாலே பாதிக்கப்பட்ட பேதக்ஞாநம் ஈசுவரனுக்கும் அநுவர்த்திப்பதாகச் சொன்னுலும், இந்த பேதம் பொய்யென்கிற நிச்சயம் அவருக்குண்டானபிறகு உபதேசம் முதலியவற்றில் பிரவர்த்திப்பரோ? பிரவர்த்திக்கமாட்டார். மேலும் ஈசுவரனுக்கு பாதிதாநுவர்த்தியென்பதே சொல்லத்தகாது; ஏனென்முல்-முதலில் அக்ஞாநியாயிருந்து (சாஸ்திரக்ஞாநத்தாலே) தெளிவு பிறந்தவனுக்கன்றே பாதிதாநுவர்த்தியாவது? ஈசுவரனை யெக்காலத்திலாவது அக்ஞாநியாயிருந்ததாகச் சொல்லப்போமோ? சொன்னுல் ஸர்வக்ஞனகச்சொல்லுகிற † ஶ்ருதி ஸ்மிருதிகள் விரோதிக்கமாட்டாவோ? மேலும் இங்கே அவர்களை ஒன்று கேட்கிறேம். அதாவது:—பரமபுருஷனுகட்டும், இப்பொழுதுள்ள குருக்கள்தானுகட்டும், இவர்களுக்கு அத்வைத ஆத்மஸ்வரூப நிச்சயம் உண்டன்றே? (அதாவது நானெருவனே ஸத்யம், மற்றதெல்லாம் பொய் என்கிற நிச்சயம் உண்டல்லவா?) அதுண்டான பின்பு இவர்களுக்கு (பேதஞாநந் தொடர்ந்தாலும்,) இவ்வித நிச்சயத்தை இவர்கள் யாருக்கு உபதேசிக்கிறுர்களோ சொல்லவேண்டும். பிரதிபிம்பம்போல் காணப்படுகிற அர்ச்சுநாதிகளுக்குத் தானென்றுலோ, ஐயோ! அநுன்மத்தனு

---

* பாதிக்கப்பட்டும் அநுவர்த்திக்கிறபடியால்-(அதாவது அழிவுற்றும் தொடருகிறபடியால்) பாதிதாநுவர்த்தியென்கிறது.

o அத்வைதக்ஞாநமாவது - (ஜீவாத்மாவும் பரமாத்மாவும் வேறல்ல) ஒன்றுதான் என்கிற அபேதக்ஞாநம்.

† శ్రుతిః॥ యస్సర్వజ్ఞస్సర్వవిత్; శ్రు॥ పరాస్యశక్తిర్వివిధైవశ్రూయతే। స్వాభావికీజ్ఞానబలక్రియాచ॥ స్మృతిః॥ వేదాహంసమతీతానివర్తమానానిచార్జున। భవిష్యాణిచభూతానిమాంతువేదనకశ్చన.

கிய (அதாவது விவேகியான) புருஷன் எவனாகிலும், மணி கத்தி கண்ணாடி முதலிய நிர்மலவஸ்துக்களில் தன்னுடைய பிரதிபிம்பங்கள் காணப்பட்டால் அவைகளைப்பார்த்து (அவை தன்னைக்காட்டிலும் வேறல்லவென்று தெரிந்திருக்க) அவற்றோடு ஒருஸங்கதியைச் சொல்லுவனா? பித்தனன்றோ சொல்லுவன்? இது கிடக்கட்டும்; முதலில் அவர்கள் இங்கே பாதிதாநுவர்த்தியே சொல்லத்தகாது. ஏனெனில்! பாதகமான அத்விதீய ஆத்மக்ஞானத்தாலே (அதாவது ஜீவனும் ப்ரம்மமும் ஒன்றுதானென்கிற ஐக்யஞானத்தாலே) பேதக்ஞானத்தின் அநாதிகாரணமான (பாவரூப) அக்ஞானம் நசித்துப்போனபடியால், காரணமில்லாமையாலே காரியமுமில்லை; அதாவது பாவரூப அக்ஞானமில்லாமையாலே பேதக்ஞானரூபமான பாதிதாநுவர்த்தியுமில்லை; ஆகையால் பாதிதாநுவர்த்தியே சொல்லத்தகாது. ஆனால் ஒருவனுக்கு ஒருகாலத்தில் இருள் முதலிய தோஷத்தாலே ஒரு சந்திரன் இரண்டு சந்திரன்போல் காணப்பட்டு, பிறகு ஆப்தனாகிய மற்றொருவன் வார்த்தையினால் இது ஒன்றுதானென்கிற நிச்சயம் பிறந்தாலும், இரண்டென்கிற தோற்றம் தொடர்ந்தே வருகிறதன்றோ? அப்படிதானிங்கும் அத்வைதக்ஞானமுண்டானபோதிலும் பேதக்ஞானந் தொடருகிறதென்றால், அங்கே இரண்டென்கிற தோற்றத்துக்குக் காரணமுண்டு; இருள் முதலிய காரணம் ஒன்றென்கிற எண்ணத்தாலே அழியமாட்டாதன்றோ? ஆகையால் காரணமுள்ளவரையில் காரியம் || தொடரக்கூடும்; (அதாவது அங்கே பாதிதாநுவர்த்தியென்பது யுக்தம்.) இங்கோ காரணமில்லை; ஏனெனில்! பேதக்ஞானமும் அதின் விஷயமும் அதின்காரணமும் உண்மையல்லாமையால் அவை உண்மையான அத்வைதக்ஞானமுண்டானபோதே நசித்துவிட்டதாகக் கொள்ளவேண்டியதாகையால் எவ்விதத்திலும் பாதிதாநுவர்த்தியென்பதே கூடாது.

ஆகையாலே ஸர்வேசுவரனுக்கும் இப்போதுள்ள குருபரம்பரைக்கும் தத்வக்ஞானமுண்டாகில், பேததரிசநமும் அத்தால்வரும் உபதேசாதிகளுங் கூடாது; பேததரிசநமேயுண்டாகில், அக்ஞானமும் அதின்காரணமு முண்டாயிருக்கையாலே அக்ஞாநிகளான இவர்கள் உபதேசிப்பதென்பது சிறிதும் சேராது.

அன்றியும், ஆத்மா ஒருவனே பரமார்த்தமென்று குருவுக்குண்டான நிச்சயத்தாலேயே, பிரம்மத்துக்குண்டான அக்ஞானமும் (அந்த அக்ஞானத்தால் வரும்) பிரபஞ்சமும் நசித்தபடியால் சிஷ்யனுக்கு உபதேசிப்பதில் பயனில்லை; [அதாவது - உபதேசத்துக்குப் பயன், அத்வைதஞானம்பிறந்து அத்தால் அக்ஞானமும் அத்தால்வரும் பிரபஞ்சமும் ஒழிந்துபோகை; அவை குருவுக்குண்டான நிச்சயத்தாலேயே ஒழிந்துபோனபடியால் இனி யெந்த பயனைப்பற்றி உபதேசிப்பதென்பதாம்?]

இதற்குமேல், ஆசாரியனும் அவன் ஞானமும் கற்பிதமாகையால் பேதஞானத்தை யொழிக்கமாட்டாதென்றால் அப்பொழுது அந்த நியாயத்தைக்

|| தொடர்ந்தாலும் பிரபலப்பிரமாணமான ஆப்த வாக்யத்தாலே பாதிக்கப்பட்டமையால் அது பயன்படமாட்டாது.

கொண்டே சிஷ்யனும்அவன் ஞானமும் கற்பிதமென்று கொள்ளவேண்டுமாகையால் அதுவும் பேதஞானத்தைப் போக்கமாட்டாது. கற்பிதமானாலும் முந்திய பேதஞானத்துக்கு விரோதமாயிருக்கையாலே போக்கலா மென்றால், அது ஆசாரிய ஞானத்துக்கே யுண்டாகையால் அதுவே போக்கலாமாகையால், எவ்விதத்திலும் உபதேசம் வ்யர்த்தமேயாம். இப்படிப்பட்ட [அஸங்கதமான அவர்கள் வாதத்தை யிவ்வளவு நிரஸித்தது போதும்.]

దేహినోస్మిన్ యథాదేహే కౌమారంయౌవనంజరా ।
తథాదేహాన్తరప్రాప్తిర్ధీరస్తత్రనముహ్యతి॥ ౧౩॥

(௧௩) ஒருவனுக்குத் தன் தேகத்தில் பால்யஸ்திதி நீங்கி யௌவநம் முதலிய ஸ்திதிகள் வந்ததாகில் (தான் ஸ்திரமென்கிற எண்ணமுண்டாகையாலே) அவனெப்படி தானழிந்துபோனதாக நினைத்து விசனப்படுவதில்லையோ அப்படி, புத்திசாலியான புருஷன், தனக்கு வேறுதேகம் வந்தாலும் (ஆத்மா சாசுவதந்தானென்கிற திடமுள்ளவனாய்) அதுவிஷயத்தில் சிறிதும் சோகிக்கமாட்டான்.

[இதனால் இங்கே ஏற்பட்டது என்னவெனில்:—நித்யரான ஆத்மாக்கள் தாம் முன்செய்தவினைக்கு வசப்பட்டிருக்கையாலே அந்தந்த கருமவினைக்கேற்ற சரீரங்களையெடுத்து, அவைகளைக்கொண்டே தம் வருணாசிரமங்களுக்கு உசிதமான (யுத்தம் முதலிய) கருமங்களைப் பலனில் அபேக்ஷையில்லாமலே செய்துவரவேண்டும்; அப்படி செய்யும்பொழுது தம்மாலும் ஒழிக்கப்போகாமல் (சப்தம்முதலிய விஷயங்களால்)வரும் சீதம் உஷ்ணம் முதலிய சுகதுக்கங்களைத் தாம் அநுஷ்டிக்கிற கருமம் முடிகிறவளவாயில் பொறுத்தே தீரவேண்டு மென்பதாம். இவ்வர்த்தத்தை உடனே அருளிச்செய்கிறார்.]

మాత్రాస్పర్శాస్తుకౌన్తేయశీతోష్ణసుఖదుఃఖదాః ।
ఆగమాపాయినోనిత్యాస్తాన్తితిక్షస్వభారత॥ ౧౪॥

(௧௪) ஹே குந்திபுத்திர! (சப்தம் பரிசம் ரூபம் ரஸம் கந்தமென்கிற) குணங்களும், அவற்றுக்கிடமான (ஆகாசம் காற்று நெருப்பு நீர் நிலம் என்கிற) பஞ்சபூதங்களும், (செவி வாய் கண் மூக்கு உடல் என்கிற) ஐம்புலன்களின்வழியே (வெப்பம் குளிர்ச்சி மெதுவு கடிநம்முதலிய) சுகதுக்கங்களைத் தருகின்றன. அவை கருமாதீநமாய் வருமவைகளாகையாலே கருமம் நாசமடைந்தபோதே நசித்துப்போம். ஆகையால் சாஸ்திரத்தில்வகுத்த கருமயோகத்தை அநுஷ்டிக்கிற வளவாயில் தைரியமாய் அவைகளைப் பொறுப்பாயாக.

యంహినవ్యథయన్త్యేతేపురుషంపురుషర్షభ ।
సమదుఃఖసుఖంధీరంసోమృతత్వాయకల్పతే॥ ౧౫॥

(௧௫) எதற்காகப் பொறுக்கவேண்டுமென்றால்-உலகத்தில் எந்த புருஷன், (தன்னால் ஒழிக்கப்போகாமல் வருகின்ற) துக்கத்தைத் தைரியத்தினால்

சுகம்போல் ஸஹித்துத் தன் வருணத்துக்கடுத்த மோக்ஷஸாதநமான (யுத்த முதலிய) கருமங்களைச் செய்துகொண்டுவருகிறானோ, அவனொருவன் மோக்ஷத்தை ஸாதிக்கமாட்டுவனே யல்லது, துக்கத்தைப் பொறுக்கமாட்டாத உன்னைப்போலொத்தவனல்ல. [இதனால்; ஆத்மா நித்தியனாகையால் நீ இவ்வளவும் செய்யத்தக்கதென்று தாத்பர்யம்.]

(அ-கை.) ஆத்மா நித்யனென்றும், தேஹத்துக்கு நசிப்பது ஸ்வபாவமென்றும், சொன்னானன்றோ முன்பு? அதையே தக்கயுக்திகளைக்கொண்டு ஸாதிக்கத் தொடங்குகிறார்.

⊕ నాసతో విద్యతే భావో నాభావో విద్యతే సతః ।
ఉభయోరపి దృష్టోఽన్తస్త్వనయోస్తత్త్వదర్శిభిః ॥ ౧౬ ॥

(கசு) அஸத்தான சரீரத்துக்கு * ஸத்பாவம் கிடையாது. ஸத்தான ஆத்மாவுக்கு † அஸத்பாவங்கிடையாது; இவ்விரண்டுக்கும் இதுதான் ஸ்வரூபமென்று தத்வந்தெரிந்த பெரியோர்கள் நிஷ்கர்ஷம்பண்ணினார்கள். [அதாவது-ஸத் என்றால் நாசமுறாததன்மையது; அஸத் என்றால் நசிக்குந்தன்மையது; இப்படியானால் (சேதநமான)ஆத்மஸ்வரூபம் ஸத்தாகையாலே நாசமற்றது; (அசேதநமான)தேஹஸ்வரூபம்அஸத்தாகையாலே நாசமுற்றது: என்று நிச்சயிக்கப்பட்டதென்று தாத்பர்யம். இப்படியே பராசரபகவானும் - "తస్మాన్న విజ్ఞానమృతేఽస్తి కిఞ్చిత్క్వచిత్కదాచిద్ద్విజవస్తుజాతమ్ । జ్ఞానం యథా సత్యమసత్యమన్యత్॥ என்றும் అనాశీ పరమార్థశ్చ ప్రాజ్ఞైరభ్యుపగమ్యతే । తత్తు నాశి న సన్దేహో నాశిద్రవ్యోపపాదితమ్॥ యత్తు కాలాన్తరేణాపి నాన్యసంజ్ఞాముపైతి వై । పరిణామాదిసంభూతాం తద్వస్తు నృప తచ్చ కిమ్॥ என்றும் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் அருளிச்செய்தார்.

అవినాశి తు తద్విద్ధి యేన సర్వమిదం తతమ్ ।
వినాశమవ్యయస్యాస్య న కశ్చిత్కర్తుమర్హతి ॥ ౧౭ ॥

(கஎ) பிரபஞ்சத்திலுள்ள அசேதநங்களெல்லாம் (அதாவது அறிவில்லாதவஸ்துக்களெல்லாம்) சேதநமான எந்த வஸ்துவினால் வ்யாபிக்கப்பட்டுள

---

⊕ இந்த சுலோகம் ஸத்காரியவாத பரமென்று சிலர் பிரமித்தார்கள். அது அஸங்கதம். ஏனெனில் தேஹாத்மஸ்வபாவந்தெரியாமல் மயங்கிக்கிடந்தவனுக்கு அம்மயக்கந் தெளிவதற்காகச் சொல்லுகிற இந்தப்ரகரணத்தில் நசிக்குந்தன்மையதான சரீரத்தினுடையவும் நசியாததன்மையதான ஆத்மாவினுடையவும் ஸ்வபாவத்தைப் பற்றியன்றோ சொல்லவேண்டும்? அப்படியேதான் గతాసూనగతాసూన్ என்று முதலில்பிரஸ்தாவிக்கப்பட்டது; அநந்தரமும் అవినాశి తు తద్విద్ధి என்றும் అన్తవన్త ఇమే దేహాః என்றும் உபபாதிக்கப்பட்டது. ஆகையால் இங்கே சொன்னது தான் அர்த்தம்.

* ஸத்பாவம் - நிலைமை, † அஸத்பாவம் - நிலையாமை.

தோ அதுதான் ஆத்மா; அது நாசமற்றதென்றறி: அவ்யயமான இதற்கு நாசஞ்செய்ய ஒன்றுக்கும் திறமில்லை. [ஆத்மா நாசமற்றதென்று எப்படி அறிவதென்றால் - லோகத்தில் அக்நி வாயுமுதலிய வஸ்துக்கள், ஒரு வஸ்துவை நாசப்படுத்தும்பொழுது அதைமுழுதும் வ்யாபித்தே நாசப்படுத்தக்காண்கிறோமாகையாலே, நாசமடைகிறவஸ்து வ்யாபிக்கப்பட்டும் நாசப்படுத்துகிறவஸ்து அதை வ்யாபித்துக்கொண்டும் இருக்கவேண்டும். இப்படியானபின்பு, ஆத்மா அதிஸூக்ஷ்மமாய் ஸகல வஸ்துவையும் வ்யாபித்துக்கொண்டிருக்கையாலே அதை (அத்தால் வியாபிக்கப்பட்டு ஸ்தூலமாயிருக்கிற) எந்த வஸ்துதான் நாசப்படுத்தும்? ஆகையால் இனிஅதை நித்யமென்னக் குறையுண்டோ?.]

(அ-கை.) தேஹங்களுக்கோ நசிப்பதே ஸ்வபாவமென்கிறார்.

అన్తవన్తఇమేదేహా నిత్యస్యోక్తాశ్శరీరిణః।
అనాశినోప్రమేయస్య తస్మాద్యుధ్యస్వభారత॥ ౧౮॥

(கஅ) நித்யனான ஆத்மாவுக்கு (கருமப்பயனை அநுபவிப்பதற்காகப் பஞ்சபூதங்களின் சேர்க்கையினால் ஏற்பட்டிருக்கிற) இந்த தேகங்கள் (வெவ்வேறு வடிவாயிருக்கின்றமையால் பல உருப்புகளுடன்கூடிப் பருத்திருப்பவைகளென்று தெரிகிறது. ஆனதுபற்றியே இவை ○ சாஸ்திரத்தில் சொன்னபடி கருமம் நசித்தபோது தாமும் நசித்துப்போம். (பல உருப்புகள்கூடிப் பருத்திருக்கும் பானை முதலியவை நசிக்கக்காண்கிறோமல்லவா?) ஆத்மாவோ எந்த தேஹத்திலும் 'நான் இதை அறிகிறேன், நான் இதை அறிகிறேனென்று' அறிபவனாகவே தோற்றுகிறபடியால் ஒரேவடிவா யிருக்கிறானென்று தெரிகிறது. ஆனதுபற்றி தேஹத்தைப்போல் இடத்துக்குத்தக்கபடி வெவ்வேறு விதமாய்த் தோற்றாமையாலே பல வுருப்புகளுடன் கூடியவனல்ல; ஆனதினால் இவனுக்கு நாசமில்லை. இப்படி, ஆத்மா நித்யனாகையாலும் தேஹம் அநித்யமாகையாலும் (இரண்டுக்கும் சோகிக்க விடமில்லையென்று திடனுற்று, கத்தி வெட்டு முதலிய (ஒழிக்கப்போகாமல் வரும்) கொடும் பரிசங்களைத் தனக்கு நேரிட்டாலும் பிறருக்கு நேரிட்டாலும் பொறுத்து, பலனை உத்தேசிக்காமல் (மோக்ஷார்த்தமாக) யுத்தமென்கிற கருமத்தைச் செய்.

యఏనంవేత్తిహన్తారం యశ్చైనంమన్యతేహతమ్ ।
ఉభౌతౌనవిజానీతో నాయంహన్తినహన్యతే॥ ౧౯॥

(ககூ) லோகத்தில் ஆத்மாவைக் கொல்லும்படியான வஸ்து ஏதேனும் ஒன்று இருப்பதாக நினைப்பவனும் சரிதான், ஆத்மாவைக் கொல்லப்படுவதாக நினைப்பவனும் சரிதான், இருவரும் தெரியாதவர்களே; கீழ்ச்சொல்லிய காரணங்களால் ஆத்மா நித்யனாகையாலே அவனைக் கொல்லும்படியான தொன்றுமில்லை. ஆனதுபற்றியே அவன், கொல்லப்படுமவனுமல்லன். [ஆனால் கொலையாவது என்னவெனின், ஜீவனையும் தேஹத்தையும் பிரிக்கைதா

---

○ పుణ్యఃపుణ్యేన இத்யாதி சாஸ்திரத்தில் சொன்னபடி.

ன். அப்படியாகில் ஒரு ஜீவனையும் கொல்லலாகாதென்றும், பிராமணனைக் கொல்லலாகாதென்றும் இன்னுமிப்படி § சாஸ்த்ரம் சொல்லுகிறதேயென்றால், அங்கும் கொலையாவது - ஜீவனையும் தேஹத்தையும் பிரித்துவிடுகைதான். ஆனால் அதைச் செய்யவேண்டாமென்று விலக்குவானேனென்றால்- சாஸ்திரத்தில் சொல்லாதபடி வீணிலே ஹிம்ஸைசெய்யலாகாதென்று தெளிகைக்காக.

నజాయతేమ్రియతేవాకదాచి న్నాయంభూత్వాభవితావానభూయః।
అజోనిత్యశ్శాశ్వతోయంపురాణో నహన్యతేహన్యమానేశరీరే॥ ౨౦॥

(உ0) (ஜநநம் மரணம் முதலியவை சரீரந்தோறும் உண்டேயாகிலும் அவை ஆத்மாவில் ஸம்பந்திக்கமாட்டா.) ஆத்மாவுக்குப் பிறப்புமில்லை, இறப்புமில்லை; ஆகையால் பிறந்தானென்பதுமில்லை, பிறக்கிறானென்பதுமில்லை. (ஒரு கல்பத்தின் ஆதியில்பிரம்மாதிகள் பிறந்து அந்தகல்பத்தின் முடிவில் நசிப்பதாகச் சாஸ்திரஞ் சொல்வதும் தேஹத்துக்கேயன்றி ஆத்மாவுக்கல்லவாகையால்) பிறக்கப்போகிறானென்பதுமில்லை: இவன் நித்யன்: எப்போதும் புதிதாயிருப்பவன்: பிரகிருதியைப்போலே விகாரமடைபவனல்லன். [ஆகையால் சரீரம் நசித்தபோது இவ்வாத்மாவுக்கும் நாசம் உண்டாய்விட்டதாகப் பிரமித்து, நீபயப்படவேண்டாம்.]

వేదావినాశినంనిత్యం యఏనమజమవ్యయమ్ ।
కథంసపురుషఃపార్థ కంఘాతయతిహన్తికమ్॥ ౨౧॥

(உக) இப்படி உத்பத்தி விநாசங்கள் அற்று, ஒன்றாலும் நாசப்படுத்தக் கூடாமையாலே, ஆத்மா நித்யனென்று யாவனொருவன் அறிகிறானோ, அவன், (தேவர் மனிதர் திர்யக்குத் தாவரம் என்கிற நால்வகையான ஜீவர்களிலும்) யாரைத்தான் எப்படி கொல்லுவன்? யாரைக்கொண்டுதான் யாரைக்கொல்லுவிப்பன்? [என்றால், 'இவர்களைக் கொல்லுகிறேனென்றும் கொல்லுவிக்கிறேனென்றும்' நினைத்து துயரப்படுவதெல்லாம் ஆத்மாவின் உண்மையான நிலைதெரியாமையாலென்று தாத்பர்யம்.]

(அ-கை.) மரணமென்பது, ஜீவன் சரீரத்தைவிட்டுப் போகைதானென்றும் அதினால் ஆத்மாவுக்கு ஒரு கேடுமில்லையென்றும் நாம் நினைத்திருந்தாலும், ரமணீயமாய் போகத்துக்கு ஸாதகமாயிருக்கிற சரீரம் நசிக்கும்போது ஐயோ! இது போகிறதே என்கிற துக்கம் உண்டாகாமற்போமோவென்றால் சொல்லுகிறார்.

వాసాంసిజీర్ణానియథావిహాయ నవానిగృహ్ణాతినరోపరాణి।
తథాశరీరాణివిహాయజీర్ణా న్యన్యానిసంయాతినవానిదేహీ॥ ౨౨॥

(உஉ) (யுத்தத்தில் இறப்பவருக்கு அதிவிலக்ஷணமான சரீரம் கிடைப்பதாகச் சாஸ்திரம் சொல்லுகையாலே) பழையதான வஸ்திரத்தைக் களை

---

§ శ్రు॥ నహింస్యాత్సర్వాభూతాని॥ బ్రాహ్మణోనహన్తవ్యః॥

ந்தெறிந்து புதியவஸ்திரத்தை அணிந்துக்கொள்ளுவாரைப்போலே, பழகிப்போன சரீரத்தைவிட்டுப் புதிய சரீரத்தை அடைவதில், (உனக்கு) பின்னும் ஸந்தோஷ முண்டாக வேண்டுமேயல்லது துக்கமுண்டாவதற்குச் சிறிதும் இடமில்லை.

(அ-கை.) ஆத்மாவுக்கு நாசமில்லையென்று முற்கூறிய அர்த்தத்தையே திடப்படுத்துகிறார்.

నైనం ఛిన్దన్తి శస్త్రాణి నైనం దహతి పావకః । న చైనం క్లేదయన్త్యాపో న శోషయతి మారుతః ॥ ౨౩ ॥ అచ్ఛేద్యోఽయమదాహ్యోఽయమక్లేద్యోఽశోష్య ఏవ చ । నిత్యస్సర్వగతః స్థాణురచలోఽయం సనాతనః ॥ ౨౪ ॥

(௨௩-௨௪) ஆயுதம் அக்கினி தண்ணீர் காற்று இவைகள், வெட்டல் கொளுத்தல் நனைத்தல் உலர்த்தல் முதலிய எவ்விதத்துன்பத்தையும் இவ்வாத்மாவுக்குச் செய்யக்கூடியவையல்ல. ஏனெனில்! இது ஸகலவஸ்துக்களிலும் அதி ஸூக்ஷ்மமாய் அவைகளையெல்லாம் வியாபித்துக்கொண்டிருக்கிறது. (வெட்டல் கொளுத்தல் முதலிய எவ்வித வியாபாரமும் வியாபித்தே செய்யவேண்டுகையாலே, எல்லாவற்றையும் வியாபித்திருக்கிற ஸர்வவியாபகமான இதை வியாபித்து இதற்கு அழிவு தேடும்படியான வஸ்து லோகத்தில் ஒன்றுமில்லை. ஆகையால் ஆத்மா நித்யமாய் அசைவற்றதாய் புராதநமாயிருக்கிறதென்று தெரிந்துக்கொள்.

అవ్యక్తోఽయమచిన్త్యోఽయ మవికార్యోఽయముచ్యతే ।
తస్మాదేవం విదిత్వైనం నానుశోచితుమర్హసి ॥ ౨౫ ॥

(௨௫) ஆத்மாவானவன் வெட்டல் முதலிய காரியங்களுக்கு வசப்பட்டவனல்லனென்பதற்கு ஓர் அடையாளம் சொல்லுகிறேன் கேள்:—அவற்றுக்கு வசப்பட்டிருக்கிற கடம் (பாண்டம்) படம் (வஸ்த்ரம்) முதலிய பதார்த்தங்களை (கண்முதலிய) எந்தப் பிரமாணங்களைக்கொண்டு நாம் கண்டறிகிறோமோ அவைகளால் இவன் அறியப்படுகிறானா? இல்லை. ஆதலால் * அவ்யக்தனான இவன் வெட்டல் முதலியவைகளுக்கு வசப்பட்ட எந்த பதார்த்தத்தோடும் சேர்ந்தவனல்லன். இப்படி விஜாதீயனாயிருக்கையாலே இவனை அவற்றின் ஸ்வபாவத்தோடு கூடியவனாக நினைக்கப்போகாது: ஆனதுபற்றியே விகாரத்துக்கும் ஏலாதவன். இப்படிப்பட்ட ஆத்மாவின் விஷயத்தில் நீ சோகிப்பது சிறிதும் தகாது.

అథ చైనం నిత్యజాతం నిత్యం వా మన్యసే మృతమ్ ।
తథాపి త్వం మహాబాహో నైనం శోచితుమర్హసి ॥ ౨౬ ॥

(௨௬) இல்லையென்று "ஆத்மாவென்கிறது (நித்யமாய்ப் பிறப்பதும் இறப்பதுமாயிருகிற) இந்த தேஹத்தைத்தான்; இதைக்காட்டிலும் வேறொன்றையுமல்ல" வென்று நீ நினைத்திருந்தாயாகிலும், ஒரு நிலையாயிராமல்

* அவ்யக்தனான=புலன்களுக்குப் புலப்படாத.

விகாரப்படுவதே ஸ்வபாவமாயிருக்கிற இந்த தேஹத்துக்கு உத்பத்திவிநாசங்கள், எவ்விதத்திலும் ஒழியமாட்டாதாகையாலே அதுவிஷயத்தில் சோகித்தாத்தான்பயனென்ன?

జాతస్యహిధ్రువోమృత్యుః ధ్రువఞ్జన్మ మృతస్యచ ।
తస్మాదపరిహార్యేర్థే నత్వంశోచితుమర్హసి॥ ౨౭॥

(உஎ) உத்பத்தியான பதார்த்தத்துக்கு நாசம் எப்படி ஸித்தமோ, அப்படி நாசமான பதார்த்தத்துக்கு உத்பத்தியும்ஸித்தம். [அதெப்படியென்றால்: லோகத்தில் எதுவும் இருக்கிறவஸ்து உண்டாகிறதே யல்லது இல்லாதவஸ்து ஒன்றும் உண்டாகக்காணோம். திருஷ்டாந்தம்—நூல்முதலியவை (இருகிற வஸ்துக்களே) உண்டையும் பாவுமா யோடியிருக்குமாகில் அவற்றைப் பார்த்து, துணிமுதலானவைகள் உண்டானதாகச் சொல்லுகிறோம்: அதுவே யல்லது வேறில்லை. ஆகையால் இருக்கிற வஸ்துவினுடைய விகாரங்கள்தான் உத்பத்திவிநாசங்களாவது. அதில் உத்பத்தியென்கிற விகாரத்துக்கு விரோதமான விகாரத்தை நாசமென்கிறது. மண்ணென்கிற வஸ்துவுக்கு பிண்டமாதல், குடமாதல், கபாலமாதல், பொடியாதல் முதலிய முற்கூறிய உற்பத்தி விநாசரூபமான விகாரங்கள் வந்தே தீருகின்றனவல்லவா? இப்படிதான் விகாரப்படும் வஸ்துவுக்கெல்லாம் விகாரப்படுவதென்பது ஸித்தமான விஷயம்; ஒருபோதும் ஒழியாது. அதில் முன் விகாரத்திலிருக்கிற வஸ்துவுக்கு, பின் விகாரம் வந்ததாகில் அதை நாசமென்றும், மறுபடியும் முன் விகாரமே வந்ததாகில் அதை உத்பத்தியென்றுஞ் சொல்லுகிறோமே; இதுதான் விசேஷம்.] இப்படி உத்பத்தி விநாசங்களென்கிற விகாரபரம்பரையானது (சரீரம் முதலிய) விகாரமடையும் வஸ்துவுக்கெல்லாம் வந்தே தீருமென்று தெரிந்தபின்பு அதுவிஷயத்தில் ஏன் சோகிக்கிறாய்?

అవ్యక్తాదీనిభూతాని వ్యక్తమధ్యానిభారత ।
అవ్యక్తనిధనాన్యేవ తత్రకాపరిదేవనా॥ ౨౮॥

(உஅ) (பானைமுதலிய திரவியங்கள் நசித்துவிட்டதென்றால் எவ்வளவு துக்கமுண்டாகுமோ, அவ்வளவுங்கூட சரீரம் நசித்தால் கிடையாது; ஏனெனில்! 'முதலில் மண்ணாயிருந்து இடையில் பானையாய் உருவப்பட்ட வஸ்து, மீண்டும் மண்ணாய்ப்போயிற்றே' என்று ஒருநிலையிலிருந்தது அதற்கு விரோதமான வேறொரு நிலையை அடைவதை நாம்நேரில் பார்க்கிறபடியால் அதைப்பற்றியாகிலும் சிறிதுசோகிக்கவிடமுண்டு) சரீரமோ, முதலில் இந்தவிதம் உண்டாயிற்றென்றும் இறந்தபொழுது இந்தவிதம் இறந்ததென்றுந் தெரிகிறதில்லை. இப்படி தெரியாமல் உண்டானது தெரியாமற் போச்சுதென்று இருக்கவேண்டியதான இந்த சரீரத்தின் அழிவைப்பற்றி சோகிக்க என்ன காரணமுண்டு?

(அ-கை.) இவ்வளவாக, சரீரமே ஆத்மாவென்று நினைத்தாலும் சோகிக்க நிமித்தமில்லையென்று அருளிச்செய்து, சரீரத்தைக்காட்டிலும் வேறு

பட்டிருக்கிற ஆத்மாவின் ஸ்வரூபத்தை உள்ளபடியே அறிவது துர்லபமென்கிருர்.

ఆశ్చర్యవత్పశ్యతి కశ్చిదేన మాశ్చర్యవద్వదతి తథైవ చాన్యః।
ఆశ్చర్యవచ్చైన మన్యశ్శృణోతి శ్రుత్వాప్యేనం వేద న చైవ కశ్చిత్॥ ௨௯॥

(௨௯) லோகத்திலுள்ள ஸகல வஸ்துக்களிலும் வேறுபட்டு ஆச்சரியமாயிருக்கிற ஆத்மாவென்னும் வஸ்துவைப் பார்ப்பவனுவது, பார்த்துச் சொல்பவனுவது, சொன்னுலுங் கேட்பவனுவது, கேட்டாலும் நிச்சயங் கொள்ளுமவனுவது கிடையாது. அநந்தமான ஜீவராசிக்குள், தவத்தின் பெருமையால் பாவங்களை யொழித்தவன் எவனே ஒருவனிருந்தாலிருக்கலாம். அதிலும் அதை உள்ளபடியே அறியுமவனே மிகவும் துர்லபம்.

దేహీ నిత్యమవధ్యోయం దేహే సర్వస్య భారత।
తస్మాత్సర్వాణి భూతాని న త్వం శోచితుమర్హసి॥ ౩౦॥

(௩௦) அர்ச்சுந! இந்த பீஷ்மாதிகளுக்காகமாத்திரம் உன்னைச் சோகிக்கவேண்டாமென்று சொல்லுகிறேனில்லை; பின்னை, தேவர் முதலான எந்தப் பிராணிவிஷயத்திலும் நீ சோகிக்கவேண்டாம். சரீரம் நாநாவிதமாயிருந்தாலும், விகாரப்படுகையென்கிற ஸ்வபாவம் எல்லாவற்றிற்கும் ஒன்றேயாகையால் எந்த சரீரமும் நசிப்பதே; ஆனுல் அதிலுள்ள எந்த ஆத்மாவுக்கும் நாசமென்பது கிடையாது.

స్వధర్మమపి చావేక్ష్య న వికమ్పితుమర్హసి।
ధర్మ్యాద్ధి యుద్ధాచ్ఛ్రేయోఽన్యత్ క్షత్రియస్య న విద్యతే॥ ౩౧॥

(௩௧) மேலும், யுத்தமென்பது பிராணிஹிம்ஸையாயிருந்தாலும், க்ஷத்ரியனுக்கு அநுஷ்டிக்கவேண்டிய கர்மங்களுக்குள், (நியாயமாய் கிடைத்த) யுத்தத்தைக்காட்டிலும் ○ சிரேஷ்டமான கர்மம் வேறொன்று மில்லாமையாலே, அதை (அக்நீஷோமீயாதி யாகம்போலே) மனம் சலியாமல் செய்யக் கடவாய். [அக்நீஷோமீயாதி யாகங்களில் $ பசுவை ஹிம்ஸித்தால் அதற்கு அந்தப்பசுரூபமான சரீரம் போய் திவ்யமான சரீரமும் சுவர்க்காதிபோகமும் கிடைப்பதாகச் ‡ சாஸ்த்ரம் சொல்லுகையாலே, (நோயைத் தீர்ப்பதற்

---

○ శౌర్యం తేజో ధృతిర్దాక్ష్యం యుద్ధే చాప్యపలాయనమ్। దానమీశ్వరభావశ్చ క్షాత్రం కర్మ స్వభావజమ్॥ என்று சௌரியம், தேஜஸ்ஸு, தைரியம், ஸாமர்த்தியம், யுத்தத்தினின்று மோடாமை, தாநம், ஈசுவரத்தன்மை இவையெல்லாம் க்ஷத்திரியனுக்கு ஸ்வபாவமான கருமங்களென்று மேலே சொல்லப்போகிருர்.

$ பசுவென்ருல் - யாகத்தில் ஹிம்ஸை பண்ணப்படும் ஆடுமுதலியது.

‡ న వా ఉ వేతన్మ్రియసే న రిష్యసి దేవాగ్ం ఇదేషి పథిభిస్సుగేభిః। యత్ర యన్తి సుకృతో నాపి దుష్కృతస్తత్ర త్వా దేవస్సవితా దధాతు என்று ஶ்ருதி.

காக வைத்தியன் செய்யும் உபத்திரவமே ரக்ஷிப்பாகுவதுபோல்) அந்த பசு ஹிம்ஸையானது ரக்ஷிப்பாமேதவிர வேறில்லை. அப்படியே யுத்தத்தில் மறிப்பவருக்கும், விலக்ஷணமான சரீரமும் ஸ்வர்க்காதிபோகமும் கிடைக்கிறதாகையாலே, யுத்தத்தில் பிராணிஹிம்ஸை செய்வதும் க்ஷத்ரியருக்கு (யாகாதிகள்போலே) தருமமாவதுபற்றி அவசியம் செய்யத்தக்கதாம்.]

యదృచ్ఛయాచోపపన్నమ్ స్వర్గద్వారమపావృతమ్ ।
సుఖినఃక్షత్రియాఃపార్థ లభన్తేయుద్ధమీదృశమ్॥ 32॥

(கூஉ) வாராய் பார்த்த! ஒப்பில்லாத சுகமாயிருக்கும் ஸ்வர்க்கத்தில் புகுவதற்குத் தாராளமான வழிபோல், யத்தனமின்றிக் கிடைத்திருக்கிற இந்த யுத்தம் எல்லாருக்கும் கிடைக்கத்தக்கதோ? ஈடில்லாத சுகத்தை அநுபவிக்கும்படியான புண்ணியகருமஞ்செய்த க்ஷத்திரியருக்கன்றோ கிடைக்கும்?

అథచేత్త్వంధర్మ్యమిమం సఙ్గ్రామంనకరిష్యసి ।
తతస్స్వధర్మంకీర్తిఞ్చ హిత్వాపాపమవాప్స్యసి॥ 33॥

(கூகூ) க்ஷத்ரியனுக்குத் தருமமாகச் சொல்லப்பட்ட இந்த யுத்தத்தை அஞ்ஞானத்தாலே செய்யாதொழிவாயாகில், ஆரம்பித்த கருமத்தைச் செய்யாமையாலே ஈடில்லாத சுகமும் கீர்த்தியுமிழந்து ஒப்பில்லாத பாவத்துக்கும் ஆளாகுவாய்.

అకీర్తిఞ్చాపిభూతాని కథయిష్యన్తితేఽవ్యయామ్।
సమ్భావితస్యచాకీర్తిర్మరణాదతిరిచ్యతే॥ 34॥

(கூச) அதுமாத்திரமில்லை. அர்ச்சுநன் யுத்தம் செய்யத் தொடங்கி, கையில் திறமையில்லாமல் நடுவில் ஓடிப்போய்விட்டானென்று ஒன்றுக்கு முதவாதப்பிராணியும் ஏசும்படி எக்காலத்திலும் எத்தேசத்திலும் அழியாத அபகீர்த்தி விளைந்துவிடும். ஆனால் அதிலென்ன குறையென்பாயோ? ஸகல யோக்யதையு முண்டாயிருக்கும்பொழுது விபரீதமான அபகீர்த்தியைப்படைத்து உயிருடன் வாழ்வதைவிடப் பிராணனை விடுவது மிகவும் உத்தமம்.

(அ-கை.) கிருஷ்ண! பந்துக்களிடத்தில் பாசத்தாலும் கருணையாலும் யுத்தத்தினின்றும் நீங்குகிறேனேயல்லதுவேறில்லையே; அப்படியிருக்க, சூரனான எனக்கு அபகீர்த்தி ஏனுண்டாகுமென்கிற சங்கைக்கு உத்தரம் அருளிச்செய்கிறார்.

భయాద్రణాదుపరతం మంస్యన్తేత్వాంమహారథాః ।
యేషాఞ్చత్వమ్బహుమతో భూత్వాయాస్యసిలాఘవమ్॥ 35॥

(கூரு) சூரனான சத்துரு, பயத்தாலல்லது (பந்து ஸ்நேகம் முதலிய) மற்றெந்த காரணத்தாலும் யுத்தத்தினின்றும் ஓடமாட்டானென்பது லோகப்பிரஸித்தம். ஆகையால் உன்னைச் சூரனென்றும் வைரியென்றும்இதுவரையில் மதித்திருந்த கர்ணன், துரியோதனன் முதலிய மஹாரதர்கள், நீ இப்பொழுது பயந்தோடியதாக நினைப்பார்களேயல்லது வேறில்லை.

అవాచ్యవాదాంశ్చ బహూన్ వదిష్యన్తి తవాహితాః ।
నిన్దన్తస్తవ సామర్థ్యం తతో దుఃఖతరన్ను కిమ్ ॥ ౩౬ ॥

(௩௬) மேலும், 'இந்த அர்ச்சுநன் இதராளிடத்தில்போலச் சூரர்களான நம்முன்னே ஒருக்ஷணந்தான் நிற்பதற்கு வல்லவனோ' வென்று சத்துருக்களான இந்த துரியோதனாதிகள் உன் வீரியத்தை நிந்திப்பதோடு பின்னும் சொல்லத்தகாத சில சொற்களையும் பிதற்றப்போகிறார்கள்; அப்பொழுது இந்த வார்த்தையைக் கேட்டுக்கொண்டு "நாம் ஏன் பிராணனோடிருக்கிறோம்,, என்று நீயே விசனப்படப்போகிறாய் இனி அதைக்காட்டிலும் துக்கமும் உண்டோ?

(அ-கை.) ஆகையால், சூரனுக்கு எதிரிகளைக் கொன்றாலும், அவரால் தான் கொல்லப்பட்டாலும் இரண்டும் நன்மைதானென்கிறார்.

హతో వా ప్రాప్స్యసే స్వర్గం జిత్వా వా భోక్ష్యసే మహీమ్ ।
తస్మాదుత్తిష్ఠ కౌన్తేయ యుద్ధాయ కృతనిశ్చయః ॥ ౩౭ ॥

(௩௭) தருமயுத்தத்தில் பகைவரால் கொல்லப்பட்டால் பரலோகத்தில் உத்தமமான க்ஷேமம் உண்டாகிறது; அவர்களையே ஜயித்துவிட்டால் இந்தலோகத்தில் நிஷ்கண்டகமாக ராஜ்யசுகம் கிடைக்கிறது; ஆகையால் 'பலனில் அபேக்ஷையில்லாமல் யுத்தம்செய்தால் அது மோக்ஷஸாதநமாம்' என்கிற நிச்சயத்தோடு சடக்கென வெழுந்திரு; உத்தமஸந்ததியான குந்தியின்வயிற்றில் பிறந்த உனக்கு இதுதான் தகுதி.

(அ-கை.) மோக்ஷத்தில் இச்சையுடையவன் யுத்தம் செய்யவேண்டிய முறையை அருளிச்செய்கிறார்.

సుఖదుఃఖే సమే కృత్వా లాభాలాభౌ జయాజయౌ ।
తతో యుద్ధాయ యుజ్యస్వ నైవం పాపమవాప్స్యసి ॥ ౩౮ ॥

(௩௮) இப்படி ஆத்மாவானது தேஹஸ்வபாவத்தோடு சேராமல்வேறுபட்டு நித்தியமாயிருப்பது என்றறிந்து, யுத்தத்தில் உன்னால் ஒழிக்கப்போகாமல் (பாணமுதலியவற்றால்) வருகிற சுகதுக்கங்களிலும் லாப அலாபங்களிலும் ஜய அபஜயங்களிலும் மனம் சலியாமல், சுவர்க்கம் முதலியபலங்களில் நசையின்றிக் கேவலம் இது நாம் செய்யவேண்டிய கடமையென்று யுத்தத்தை ஆரம்பித்துச்செய்வாயாகில், ஸம்ஸாரமென்கிற கட்டுச்கடங்காமல் பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தை அடைந்து வாழ்வாய்.

(அ-கை.) இப்படி ஆத்மாவின் யதார்த்த ஞானத்தை உபதேசித்து, அத்துடன்கூடி மோக்ஷஸாதகமாகிற கர்மயோகத்தைச் சொல்லத் தொடங்குகிறார்.

ఏషా తేఽభిహితా సాఙ్ఖ్యే బుద్ధిర్యోగే త్విమాం శ్రుణు ।
బుద్ధ్యా యుక్తో యయా పార్థ కర్మబన్ధం ప్రహాస్యసి ॥ ౩౯ ॥

(௩௯) அஹோ பார்த்த! இவ்வளவாக (న త్వేవాహమ్ முதல் తస్మాత్సర్వాణి భూతాని న త్వం శోచితుమర్హసి என்கிறவனாயில்) அவசியம் அறியவே

ண்டியபதான ஆத்மஸ்வரூபத்தை, உள்ளபடியே அறியும்விஷயத்தில் உனக்கு வேண்டிய புத்தி சொல்லப்பட்டது. இனி மோக்ஷத்திற்கு ஸாதகமான கர்மாநுஷ்டானத்துக்கு எந்த * புத்தியோகம் வேண்டுமோ அது விஷயத்தில் சொல்லவேண்டியபுத்திசொல்லுகிறேன்; இதைக்கேட்டுத் தரித்தாயாகில் பிறகு உனக்கு கருமத்தால் வந்த பிணை நீங்கிவிட்டதென்றறி.

(அ-கை.) சொல்லப்போகிற புத்தியுடன் கூடிச்செய்யுங் கருமத்தின் மஹிமை சொல்லுகிறார்.

నేహాభిక్రమనాశో஽స్తి ప్రత్యవాయోనవిద్యతే।
స్వల్పమప్యస్యధర్మస్య త్రాయతేమహతోభయాత్॥ ౪౦॥

(சഠ) இந்த கருமயோகமானது, ஆரம்பித்து நடுவில் விடப்பட்டாலும் அத்தால் ⚜ இது பயன்படாமற்போவதில்லை; வேறுவிதமான கெடுதியை யுண்டாக்குவதுமில்லை. சிறிதுபாகம் அநுஷ்டிக்கப்பட்டாலும் இது மஹத்தான ஸம்ஸாரபயத்தினின்றும் காப்பாற்றும். [இதரமான (லௌகிக வைதிக) கருமங்கள் இடையில் பங்கப்பட்டதாகில் பலிப்பதுமில்லை, விரோதமான பலத்தையும் உண்டாக்கும். இதற்கு அவ்விரண்டு மில்லையென்று தாத்பரியம்.]

(அ-கை.) காம்ய கர்மவிஷயமான புத்தியைக்காட்டிலும் மோக்ஷஸாதகமானகர்மத்திற்குவேண்டிய புத்தியின் விசேஷத்தைஅருளிச்செய்கிறார்.

వ్యవసాయాత్మికాబుద్ధి రేకేహకురునన్దన।
బహుశాఖాహ్యనన్తాశ్చ బుద్ధయో஽వ్యవసాయినామ్॥ ౪౧॥

(சக) அஹோ குருநந்தந! மோக்ஷார்த்தி செய்யவேண்டிய சாஸ்திரோக்தமான ஸகலகர்மங்களுக்கும்வேண்டியது (வியவஸாயரூபமான) † புத்தி ஒன்றுதான். வியவஸாயமாவது நிச்சயம். காமியார்த்திசெய்யும்கருமங்களுக்கோ (வியவஸாயமென்கிற நிச்சயமல்லாததான) ‡ புத்தி பலவாயிரு

---

* இந்த యోగ சப்தம், ஆத்மஸ்வரூபத்தின் உண்மையான ஞானத்தோடு கூடிக்கொண்டு மோக்ஷஸாதநமாகிற கருமத்துக்கு வேண்டியதாக இனி சொல்லப்போகிறதான புத்தியோகத்தையே சொல்லுகிறது. దూరేణహ్య వరంకర్మ బుద్ధియోగాత్ என்று இனிசொல்லப்போகிறானன்றோ?

⚜ இவ்வர்த்தம் పార్థ నైవేహనాముత్ర వినాశస్తస్యవిద్యతే என்று மேலே விவரிக்கப்படுகிறது.

† இதுவும் ஆத்மாவினுடைய யதார்த்தஜ்ஞானத்தோடு அதாவது-'ஆத்மா, தேஹாதிவிலக்ஷணன் நித்யன்' இத்யாதியான முற்கூறிய ஞானத்தோடு கூடியிருக்கவேண்டும்.

‡ இதற்கு ஆத்மாவின் யதார்த்தஜ்ஞாநம் வேண்டுவதில்லை; கேவலம் தேஹத்தைக்காட்டிலும் வேறான 'ஆத்மா உண்டு' என்கிற அறிவுமாத்திரம், போதும்; அவ்வளவுமாத்திரத்தில் சுவர்க்கம்முதலிய பலனேக்கோருகையும், அதின் ஸாதநத்தை அநுஷ்டிக்கையும், அந்த பலத்தை அநுபவிக்கையும் விரோதமின்றி ஸம்பவிக்கலாமிறே?

க்கும். அதேனென்னில்:—முதலிற்சொன்ன மோக்ஷார்த்தியானவன் மோக்ஷமென்கிற ஒரோபலத்தைநாடியவனுகையாலும்;(சாஸ்திரமும் அந்த ஒருபலத்தைக்குறித்தே ஸகல கருமங்களையும் விதிப்பதுபற்றி) சாஸ்திரார்த்தம் ஒன்ருகையாலும் (*) ஒன்றேயாம். இந்த காமார்த்திக்கோ, புத்திரன், பசு அன்னம் என்று பலம் பலவாயிருக்கையாலே புத்தியும் பலவாயிருக்கும். அதிலும் தர்சபூர்ணமாஸாதி கருமஙகள், (ஒருபலத்துக்காக விதிக்கப்பட்டவையாயினும் அவற்றுள் ஆயுல் முதலிய அவாந்தரபலங்களையும் அபேக்ஷிக்க வேண்டுகையாலே அதற்குத்தக்கபடி) ஒவ்வொன்றும் பல கிளைகளுடன் கூடியதாயிருக்கும். [ஆக இதனால் நித்யநைமித்திககருமங்களில் பிரதாநமாயும் அப்பிரதாநமாயும் கூறப்படுகிற எல்லா பலங்களிலும் ஆசையற்று, மோக்ஷமொன்றையே உத்தேசித்து ஸகல சருமங்களையும் அநுஷ்டிக்கவேண்டுமென்றும், தன் வருணத்துக்குவகுத்த காமியகருமங்களையும் அப்படியே நித்ய நைமித்திக கருமங்களோடு ஒன்றுபடுத்திச் சக்திக்குத்தக்கபடி அநுஷ்டிக்க வேண்டுமென்று மாயிற்று.]

(அ-கை.) காம்யகர்மாதிகாரிகளை நிந்திக்கிருர்.

> యామిమాంపుష్పితాంవాచ మ్ప్రవదన్త్యవిపశ్చితః ।
> వేదవాదరతాఃపార్థ నాన్యదస్తీతివాదినః॥ ౪౨॥
> కామాత్మానస్స్వర్గపరా జన్మకర్మఫలప్రదామ్ ।
> క్రియావిశేషబహులాం భోగైశ్వర్యగతిమ్ప్రతి॥ ౪౩॥
> భోగైశ్వర్యప్రసక్తానా న్తయాపహృతచేతసామ్ ।
> వ్యవసాయాత్మికాబుద్ధి స్సమాధౌనవిధీయతే॥ ౪౪॥

(௪௨-௪௩-௪௪) சுவர்க்காதிபோகங்களில் மிக்க வாசையுடையராய், அந்த சுவர்க்காதிகளைக்காட்டிலும் வேறு புருஷார்த்தம் கிடையாதென்று வாதிக்கின்ற சில அறிவீனர்கள், வேதத்தில் மேலெழப் பார்க்கும்பொழுது ரமணீயமாய்த்தோற்றுகிற ஸ்வர்காதிபலங்களைச்சொல்லும் சில வாக்கியங்களைப் பற்றிக்கொண்டு, அவை போகைசுவரியங்களைப்பற்றிச் சொல்லுமவையென்றும், தத்வஞாநமில்லாமலே கேவலம் கிரியாவிசேஷங்களை மாத்திரம் அதிகமாயுடையனவென்றும், சுவர்க்காதி பலங்களைக்கொடுத்து முடிவில் புநர்ஜந்ம கரும மென்கிற பலத்தைத் தருமவையென்றும்; இப்படி அந்த போகத்திலுண்டான ஆசையினல் வீண்வாதம் செய்கிருர்கள். போகைசுவரியங்களைச்சொல்லும் அந்த வாக்கியத்தால் அவாளுடைய ஞாநம் அபஹரிக்க

---

(*) என்போலென்னில்:—ஆக்நேயம் முதலிய ஆறுயாகங்களும், (பிரயாஜம் அநுயாஜம்முதலிய அங்கஸஹிதமாய் ஸ்வர்க்கமென்கிற ஒரோபலத்துக்கு ஸாதநமானமைகொண்டு) சாஸ்திரார்த்த மொன்ருகையால் எப்படி தத்விஷயமான புத்தியும் ஒன்ருயிற்ருே! அப்படியே யிங்கு மோக்ஷமென்கிற ஒரோபலத்தை உத்தேசித்தமைகொண்டு சாஸ்திரார்த்த மொன்ருகையால் ஸகல கர்மங்களுக்கும்வேண்டியபுத்தியும் ஒன்றேயாம்.

ப்பட்டமையால், அவர்மனதில் ஒருபொழுதும் முற்கூறிய விவசாயரூப நிச்சயம் உண்டாகவேமாட்டாது. ஆகையால் அவர்களைப்போல் மோக்ஷா ர்த்தியானவன் ஒருபொழுதும் காம்யகருமங்களில் சிறிதும் மனம் வைக்க லாகாது.

(அ-கை.) மேற்சொல்லியபடி புநர்ஜந்மாதிகளைக்கொடுக்கின்ற அற்ப பலத்துக்குஸாதகமாகக் காம்யகருமங்களும் சில உண்டென்று வேதத்தில் சொல்லுகிறதாகத் தெரிகிறபடியால்,ஜீவனுடைய உஜ்ஜீவநவிஷயத்தில் ஆயி ரம் மாதாபிதாக்களுக்கு அதிகமாக நன்மைசெய்வதான வேதம், அவைகளை ஏன் சொல்லுகிறது? அப்படி வேதம் விதித்தபின்பு அக்கருமங்களைத்தான் எப்படி த்யாஜ்யமாகச் சொல்லலாமென்னில் சொல்லுகிறார்.

త్రైగుణ్యవిషయా వేదా నిస్త్రైగుణ్యో భవార్జున।
నిర్ద్వన్ద్వో నిత్యసత్త్వస్థో నిర్యోగక్షేమ ఆత్మవాన్॥ ౪౫॥
యావానర్థ ఉదపానే సర్వతస్సంప్లుతోదకే।
తావాన్ సర్వేషు వేదేషు బ్రాహ్మణస్య విజానతః॥ ౪౬॥

(௪௫-௪௬) ஸாத்விகர்-ராஜஸர்-தாமஸர் என்கிற மூன்றுவிதமான புரு ஷர்கள் உலகத்திலுளர்; அவரவர் குணத்துக்குத்தக்கபடி இதமாக ஸ்வர்க்க முதலிய இந்த அற்பபலன்களை வேதம் தெரிவிக்கிறது. அப்படி தெரிவிக்கா மற்போனால் இவர்கள் ரஜோகுண தமோகுணங்களுக்கு வசப்பட்டவராகை யாலே ஸாத்விகமான மோக்ஷபலத்தைக் கண்ணெடுத்தும் பாராமல், தங்க ளுக்கிஷ்டமான ஸ்வர்க்காதிபலத்திற்கு உபாயம் இதில் ஏதேனும் உண்டோ வென்று பார்த்து இதில் காணாவிடில் அந்தபோகத்தில் உண்டான ஊற்றத்தி னால் உபாயமாகாதவைகளையெல்லாம் உபாயமாகப்பற்றி அழிந்துபோவர்க ள். ஆனதுபற்றியே வேதம் த்ரிகுணவிஷயமாயுள்ளது. நீயோ அதில் கட்டுப் படாமல் இப்பொழுது நீ இருக்கிற ஸத்வகுணத்தையே வளர்த்துவந்து ஸம் ஸாரஸ்வபாவத்தில் தட்டாமலிருக்கக்கடவாய்; எப்படியெனில்-ஆத்மப்பிரா ப்திக்கு உபாய மெதுவோ அதற்குப் புறம்பாகவருமதையும் வந்திருப்பதை யும் விட்டு, கேவலம் ஆத்மஸ்வரூபத்தை மாத்திரம் தேடுவதில் முயன்றவனா யிரு; இப்படியிருக்கிற உனக்கு ரஜஸ்ஸூ,தமஸ்ஸூ என்கிற குணங்கள் கெ ட்டு ஸத்வம் ஒன்றே தலையெடுத்திருக்கும்; வேதத்தில் எல்லாம் சொல்லி யிருந்ததேயாகிலும் யாவும் யாவருக்கும் வேண்டியதில்லை; ஸகலருக்கும் உபயோகமான ஒருகுளத்தில் தாகமெடுத்தவனுக்குத் தண்ணீர் ஒன்றுமாத் திரம் வேண்டுமோ மற்றதும் வேண்டுமோ? அதுபோல மோக்ஷகாமனுக்கு மோக்ஷ உபாயத்தைத் தவிற மற்றொன்றும் வேண்டுவதில்லை.

(அ-கை.) ஆகையால் ஸாத்விகனான மோக்ஷார்த்திக்கு இவ்வளவுதான் வேண்டியதென்கிறார்.

కర్మణ్యేవాధికారస్తే మా ఫలేషు కదాచన।
మా కర్మఫలహేతుర్భూ ర్మా తే సఙ్గోఽస్త్వకర్మణి॥ ౪౭॥

(சஎ) ஏதேனும் ஒருபலத்தைத் தருவதாய்ச் சொல்லப்படுகிற (நித்ய நைமித்திக காம்ய) கருமங்களைச்செய்வதில்மாத்திரம் உனக்கு அதிகாரமேயல்லது அந்த பலத்தில் ஒருக்காலுமில்லை. ஏனெனில்! பலத்தில் ஆசையுண்டாகில் அது ஸம்ஸாரத்தை உண்டாக்கும்; ஆசையில்லையாகில் அது எனது ஆராதநத்தில் சேருமாதலால் மோக்ஷத்தை உண்டாக்கும். கருமத்திலும் அதின்பலத்திலும் 'நான் செய்தே'னென்கிற (கர்த்ருத்வ) புத்தியும் கூடாது. ஆனால் (யுத்தம் செய்யமாட்டேனென்று நீ இப்பொழுதுசொன்னது போல) கருமத்தைமாத்திரம்ஒருபொழுதும் கைவிடலாகாது.

(அ-கை.) இதையே பிரகாசப்படுத்துகிறார்.

యోగస్థఃకురుకర్మాణి సఙ్గంత్యక్త్వాధనఞ్జయ ।
సిద్ధ్యసిద్ధ్యోస్సమోభూత్వా సమత్వంయోగఉచ్యతే॥ ౪౮॥

(சஅ) இராஜ்யம், பந்து முதலியவற்றில் பற்றையொழித்து யோகநிஷ்டனாய், அதாவது-யுத்தாதிகளில் ஜயம் முதலியது கிடைத்தாலுங் கிடையாவிட்டாலும் அதனால் மனம் சலியாமல் ஒரேமனதாயிருந்து யுத்தாதிகருமங்களைச் செய்யக்கடவாய். (இங்கே யோகமாவது-ஸித்தி அஸித்திகளிரண்டிலும் மனந்தாழாமை.)

(அ-கை.) ஏனிப்படி இதைப் பலகாலும் அருளிச்செய்கிறதென்றால்.

దూరేణహ్యవరంకర్మ బుద్ధియోగాద్ధనఞ్జయ।
బుద్ధౌశరణమన్విచ్ఛ కృపణాఃఫలహేతవః॥ ౪౯॥

(சகூ) மேற்சொன்ன † புத்தியோகத்துடன் கூடிச்செய்கிற கருமத்தைத்தவிர மற்ற கர்மமெல்லாம் மிகவும் இழிவானது; ஏனெனில்! இது பரமகல்லியாணமான மோக்ஷத்தைத்தருமது: மற்றது நித்தியதுக்கமான ஸம்ஸாரத்தை. ஆகையால் மேற்சொன்ன புத்தியை விடாமலிரு. பலனில் ஸங்கத்தோடு கருமம் செய்பவர்கள் ஸம்ஸாரத்தில் கட்டுண்பர்கள்.

బుద్ధియుక్తోజహాతీహ ఉభేసుకృతదుష్కృతే।
తస్మాద్యోగాయయుజ్యస్వ యోగఃకర్మసుకౌశలం॥ ౫౦॥

(ருo) புத்தியோகத்துடன் கூடியவனே கர்மத்தைச் செய்தவனாய்க்கொண்டு, அநாதிகாலமாய் அளவில்லாமல் ஸம்பாதித்த ஸம்ஸாரஹேதுவான புண்ணியபாபங்களிரண்டையும் ஒழிக்கிறான். ஆகையால் நாம் சொன்ன புத்தியோகத்தையடைய ஸித்தப்படு. கருமஞ்செய்வதில் இதுதான் விசேஷஸாமர்த்தியம். [மஹாஸமர்த்தனாலே ஸாதிக்கத்தக்கதென்று பொருள்.]

కర్మజంబుద్ధియుక్తాహి ఫలంత్యక్త్వామనీషిణః।
జన్మబన్ధవినిర్ముక్తాః పదంగచ్ఛన్త్యనామయమ్॥ ౫౧॥

---

† பிரதானபலத்திலும் இடையிலுண்டாகும்பலமான ஸித்தி அஸித்திகளிலும் மனம் சலியாமையாகிற புத்தியோகத்துடன்.

(ருக) புத்தியோகத்தோடு கூடியவர்கள் பலாபேக்ஷையின்றிக் கருமத்தைமாத்திரம் செய்துவந்து, அதனால் ஜன்மமென்கிற கட்டைவிட்டுநீங்கி ஆரோக்கியமான பதத்தை (மோக்ஷத்தை) அடைகிறார்கள். இது ஸகல உபநிஷத்துகளிலும் பிரஸித்தம்:

యదాతేమోహకలిలం బుద్ధిర్వ్యతితరిష్యతి।
తదాగన్తాసినిర్వేదం శ్రోతవ్యస్యశ్రుతస్యచ॥౫౨॥

(ருஉ) நாம் கீழ்ச்சொன்னபடி கருமத்தில் நின்று பாபங்களைத் தொலைத்து, உன்புத்தியானது அற்பபலங்களில் கால்தாழப் பண்ணும் மோஹமென்னுங் கலக்கத்தை எப்போகடக்குமோ அப்பொழுது, நாம் முன்னே தியாஜ்யமாகச்சொன்னதும் இனிசொல்லப்போகிறதுமான பலம் முதலியவற்றில் உனக்கே வைராக்யம் உண்டாகும்.

(அ-கை) ஆத்மாவை உள்ளபடி அறிந்து, மோக்ஷத்தைத் தவிர மற்றதை நாடாமையாகிற புத்திவிசேஷத்துடன் கூடிக் கருமத்தை அநுஷ்டித்தால் யோகம் ஸித்திக்குமென்கிறார். [யோகம் - ஆத்மதரிசநம்.]

శ్రుతివిప్రతిపన్నా తే యదాస్థాస్యతినిశ్చలా।
సమాధావచలాబుద్ధిస్తదాయోగమవాప్స్యసి॥౫౩॥

(ருங) அர்ச்சுந! நம்மிடத்தில் கேட்டபின்பு, ஆத்மாவானது ஸகல பதார்த்தங்களிலும் வேறாய் நித்ய நிரதிசய சூக்ஷ்மமாய் இருக்கிறதென்று தெளிந்து (எப்பொழுதும் ஒரே ரீதியாயிருக்கிற) உன்புத்தியானது, (பற்றின்றிச்செய்த கருமாநுஷ்டாநத்தால் நிர்மலமான) மனதில் எப்பொழுது நிலைக்குமோ அப்பொழுதுதான் யோகத்தை அடைவாய். [என்றால் சாஸ்திரத்தால் பிறந்தஆத்மஞாநத்துடன்செய்யுங் கருமயோகமானது (ஸ்திதப்பிரக்ஞை என்கிற) ஞாநநிஷ்டையை உண்டாக்கும்; அது (யோகமென்னும்) ஆத்மதர்சநத்தை உண்டாக்குமென்றதாயிற்று.]

(அ-கை.) இவ்வாறு கண்ணன் அருளிச்செய்ய அர்ச்சுநன், கர்மயோகத்தால் ஸாதிக்கவேண்டியதாயும் யோகத்துக்கு ஸாதகமாயுமிருக்கிற ஸ்திதப்பிரக்ஞை என்னும் ஞானநிஷ்டையின் ஸ்வரூபத்தையும், அந்த நிஷ்டையுள்ளவன் செய்யும் அநுஷ்டாநத்தின்விதத்தையுங் கேட்கிறான்.

అర్జునఉవాచ॥ స్థితప్రజ్ఞస్యకాభాషా సమాధిస్థస్యకేశవ।
స్థితధీఃకింప్రభాషేత కిమాసీతవ్రజేతకిమ్॥౫౪॥

(ருச) கிருஷ்ண! ஸ்திதப்பிரக்ஞனுடைய ஸ்வரூபமெப்படிப்பட்டது? ஸமாதிநிஷ்டனானஅவன் பேசுவதென்ன? நடப்பதெப்படி? எவ்விதமாஸநத்திலிருப்பான்? அதை அருளிச்செய்யவேண்டும்.

(அ-கை). வ்ருத்தியை (அதாவது நடவடிக்கையைச்) சொன்னபோதே ஸ்வரூபமும் சொன்னதாகுமென்று வ்ருத்தியை அருளிச்செய்கிறார்.

శ్రీభగవానువాచ॥ ప్రజహాతియదాకామాన్ సర్వాన్పార్థమనోగతాన్।
ఆత్మన్యేవాత్మనాతుష్టః స్థితప్రజ్ఞస్తదోచ్యతే॥౫౫॥

(ருரு) கேளாய் பார்த்தனே! ஆத்மா ஒன்றையே பற்றிக்கொண்டு ஸந்துஷ்டனாய், அதனால் அதற்குப் புறம்பாயுள்ள ஸகலமான காமங்களையும் எப்பொழுது வாஸனையோடே விடுகிறானோ, அப்பொழுது இவனை ஸ்திதப்பிரக்ஞனென்கிறது. இதுதான் ஞாநநிஷ்டையின் எல்லையான நான்காம் அவஸ்த்தை. [அவஸ்த்தை=நிலைமை.]

(அ-கை.) இப்படி ஞாநநிஷ்டையின் நான்காம் அவஸ்த்தையை அருளிச்செய்து, அதற்குமுந்திய ⊕ மூன்றாம் அவஸ்த்தையை இதில்அருளிச்செய்கிறார்.

దుఃఖేష్వనుద్విగ్నమనా స్సుఖేషువిగతస్పృహః ।
వీతరాగభయక్రోధః స్థిరధీర్మునిరుచ్యతే॥౫౬॥

(ருசு) (தனக்குப் பிரியமானதொன்று தவறிப்போதல் முதலிய) துக்க ஹேதுக்களுண்டானபோது துக்கிக்காமலும் சுகஹேதுவான அவை நேர்ந்தபோது அவற்றில்ஆசைவையாமலும் † ராகம், * பயம், ‡ கோபம் இவைகளற்று ஆத்மாவைச் சிந்தித்துக்கொண்டேயிருப்பவன், ஸ்திதப்பிரக்ஞன் என்னப்படுவான். [இந்த அவஸ்த்தை நான்காம் அவஸ்த்தையோடு ஒத்திருந்தாலும் நெருப்பில்பூத்த நீறுபோல் இதில் விஷய வாஸனை மாத்திரமிருக்கும்; இதுவுமில்லை அதில் என்பது விசேஷம்.]

(அ-கை) அதற்கும் முந்திய ♀ இரண்டாவது அவஸ்த்தையை அருளிச்செய்கிறார்.

యస్సర్వత్రానభిస్నేహ స్తత్తత్ప్రాప్యశుభాశుభమ్ ।
నాభినన్దతినద్వేష్టి తస్యప్రజ్ఞాప్రతిష్ఠితా॥౫౭॥

(ருஎ) தனக்குப்பிரியமானது எது கிடைத்தாலும் அதில் அதிக ஸ்நேகம்வையாமல், சுப அசுபங்களை யடைந்தபோது ஸந்தோஷமும் துயரமுமில்லாமலிருப்பான் யாவன், அவன் ஸ்திதப்பிரக்ஞனாகிறான்.

(அ-கை) அதற்கு முந்திய § முதல் அவஸ்த்தை சொல்லுகிறது.

యదాసంహరతేచాయం కూర్మోఽఙ్గానీవసర్వశః ।
ఇన్ద్రియాణీన్ద్రియార్థేభ్య స్తస్యప్రజ్ఞాప్రతిష్ఠితా॥౫౮॥

---

⊕ மூன்றாம் அவஸ்த்தை - இதற்கு ஏகேந்திரியாவஸ்த்தையென்று பெயர்.

† ராகம்=தான் அடையாத வஸ்துவிலுண்டான ஆசை.

* பயமாவது=பிரியமானது தவறுகைக்கும், அப்பிரியமானது நேருகைக்கும் ஹேதுவைக்காண்பதால் வரும் துக்கம்.

‡ கோபமாவது=பிறருக்கு துக்கம் உண்டாக்குவதற்காகத் தன்மனதில் உண்டாகும் விகாரம்.

♀ இதற்கு வ்யதிரேகாவஸ்த்தையென்று பெயர்.

§ இதற்கு யதமாநஅவஸ்த்தையென்று பெயர்.

(ருஅ) இந்திரியங்கள் விஷயங்களைத்தேடி யோடும்பொழுது அவைகளைப் போகவொட்டாமல் (ஆமையானது தன் அவயவத்தை யிழுத்துக்கொள்ளுவதுபோல) இழுத்து, மனதை ஆத்மாவில் ஸ்தாபிக்கிறான் யாவன், அவனும் ஸ்திதப்பிரக்ஞனாவான்; [இந்நான்கு நிலைகளிலும் முந்திய நிலைக்குப் பிந்தியநிலை, காரணமென்றறிக.]

(அ-கை.) இப்பொழுது ஞாநநிஷ்டையை அடைவது துர்லபமென்றும், அதை அடைவதற்கு உபாயம் ஈதென்றும் அருளிச்செய்கிறார்.

విషయా వినివర్తంతే నిరాహారస్య దేహినః ।
రసవర్జం రసోప్యస్య పరం దృష్ట్వా నివర్తతే ॥ ౫౯ ॥

(ருகூ) இந்திரியங்களுக்கு ஆஹாரம் △ சப்தாதிவிஷயங்கள்; அந்தஆஹாரத்தை அவற்றிற்குக்கொடாமல் யாவனொருவன் பட்டினிபோடுகிறானோ அவனை அவ்விஷயங்கள் அணுகமாட்டா; ஆனால் அவற்றில்மாத்திரம் அவனுக்கு ருசி இருக்கும். அதுவும் (விஷயங்களைக்காட்டிலும் உத்கிருஷ்டனாய் அதிகசுகரூபனாயிருக்கிற) ஆத்மாவை ஸாக்ஷாத்கரித்தால் அடியற்றுப்போம்.

యతతో హ్యపి కౌంతేయ పురుషస్య విపశ్చితః ।
ఇంద్రియాణి ప్రమాథీని హరంతి ప్రసభం మనః ॥ ౬౦ ॥

(சுO) ஆத்மதரிசநமின்றி விஷயங்களில் ஆசைபற்றறாது; அந்த ஆசையொழியாமல் ஆத்மதரிசநத்துக்கு யத்தநம்செய்தால் அவன் எத்தனைவித்துவானாகிலும் இந்திரியங்கள் பலமுள்ளவையாகையால் அவன் மனதை மேல்விழுந்து அபஹரித்துவிடும். [இப்படி இந்திரியஜயமும், ஆத்மதரிசநமும் "இதுண்டானால் அதுண்டாகும், அதுண்டானால் இதுண்டாகும் என்று" ஒன்றுக்கொன்று காரியமாயும் காரணமாயுமிருப்பதுபற்றி ஞாநநிஷ்டைகிடைப்பது அரிது.]

తాని సర్వాణి సంయమ్య యుక్త ఆసీత మత్పరః ।
వశే హి యస్యేంద్రియాణి తస్య ప్రజ్ఞా ప్రతిష్ఠితా ॥ ౬౧ ॥

(சுக) ஆனதுபற்றி விஷயத்தில் ஆசையினால் பாய்கின்ற இந்திரியங்களை அடக்கி (மனதுக்கு) க்ஷேமஸ்தானமான என்னிடத்தில் மனதை நிறுத்தி ஒரேமனதாயிருக்கக்கடவன். [மனது, என்வழியில்திரும்பினபொழுதே ஸகலபாபமும் தொலைகின்றமையால் விஷயத்தில் நசையற்று நிர்மலமாய் விடுவதோடு இந்திரியங்களையும் தனக்கு வசப்படுத்திக் கொள்ளுகிறது. ☼]

---

△ சப்தாதி விஷயங்களாவன - சப்தம், ரூபம், ரஸம், கந்தம், பரிசம், முதலியன.

☼ இவ்வர்த்தம் యథాగ్నిరుద్ధతశిఖః కక్షం దహతి సానిలః । తథా చిత్తస్థితో విష్ణుః యోగినాం సర్వకిల్బిషమ్ என்று சொல்லப்பட்டது.

இந்திரியங்கள் வசமானால் (ஆத்மதரிசனத்துக்குப்) போதுமான வல்லமை மனதிலுண்டாகின்றமையால் ஆத்மஸாக்ஷாத்காரம் ஸித்தம்.

ధ్యాయతో విషయా౯ పుంస స్సఙ్గస్తేషూపజాయతే ।
సఙ్గాత్సఞ్జాయతే కామః కామాత్క్రోధోఽభిజాయతే ॥ ౬౨॥
క్రోధాద్భవతి సమ్మోహ స్సమ్మోహాత్ స్మృతివిభ్రమః ।
స్మృతిభ్రంశాద్బుద్ధినాశో బుద్ధినాశాత్ప్రణశ్యతి ॥ ౬౩॥

(௬உ) (௬௩) விஷயத்தில் ஆசை அறுமலும் என்னிடத்தில மனதை நிறுத்தாமலுமிருக்கிற ஒருவன் இந்திரியங்களை அடக்கிவைத்தானாகிலும், அவனுக்கு அநாதியான பாபவாஸனை உண்டாகையாலே, விஷயசிந்தை ஒருக்காலும் அவனால்ஒழிக்கப்போகாது; அப்படி விஷயத்தில்சிந்தையுள்ளவனுக்கு ஸங்கமானதுமென்மேலும் விருத்தியாகிறது. அதினால் ❀ காமம் விளைகின்றது; அதுகோபத்தை உண்டாக்கும்; எப்படியென்றால்:—ஆசைப்பட்டதுகிட்டாவிடில் கிட்டநிற்பவர்களைப்பார்த்து அவரால் தன் இஷ்டம் கெட்டுப்போனதாக நினைத்துக் கோபிக்கிறான். கோபத்தால் இது செய்யலாகும், இது செய்யலாகாதென்று தெரியாததான மோஹம் விளைகிறது. அதனால் தனக்குத் தோன்றியபடியெல்லாம் செய்கிறான். பிறகு இந்திரிய ஜயத்துக்கு முயற்சி செய்தோமென்பதையே மறந்துவிடுகிறான். மறப்புண்டானால் ஆத்மஞானத்துக்காக இவன்கொண்டிருந்தபுத்தி நசித்துப்போகிறது. புத்திநாசத்தாலே மீண்டும் ஸம்ஸாரத்தில் மூழ்கிக் கெட்டுப்போகிறான்.

రాగద్వేషవిముక్తైస్తు విషయానిన్ద్రియైశ్చర౯ ।
ఆత్మవశ్యైర్విధేయాత్మా ప్రసాదమధిగచ్ఛతి ॥ ౬౪॥

(௬௪) கீழ்ச்சொன்னபடியே மனதுக்கு சுபஸ்த்தாநமாயிருக்கிற ஸர்வேசுவரனை என்னிடத்தில் மனதை நிறுத்தியவன், ஸகலபாபங்களையும் தொலைக்கின்றமையால் ராகத்துவேஷங்களற்று இந்திரியங்கள் தனக்கு வசப்பட்டிருக்கிறபடியால் விஷயங்களைக் கணிசியாமலிருந்துகொண்டு சித்தஸ்வாதீனம்பொருந்தி நிர்மலாந்தஃகரணனாகிறான்.

ప్రసాదే సర్వదుఃఖానాం హానిరస్యోపజాయతే ।
ప్రసన్నచేతసో హ్యాశు బుద్ధిః పర్యవతిష్ఠతి ॥ ౬౫॥

(௬௫) இந்த புருஷனுக்கு (ஆத்மக்ஞாநவிரோதியான) தோஷங்களெல்லாம் நீங்கி மனம் தெளிவுற்றதாகில் (ஆத்மஞாநம் நிலைக்கின்றமையால்) பிரகிருதிஸம்பந்தத்தால் வரும் துயரங்களெல்லாம் தன்னடையே நசிக்கின்றன.

నాస్తి బుద్ధిరయుక్తస్య న చాయుక్తస్య భావనా ।
న చాభావయతశ్శాన్తి రశాన్తస్య కుతస్సుఖమ్ ॥ ౬౬॥

---

❀ காமம் - ஆசைப்பட்டதை அநுபவிக்காமல் தீராத ஆசை.

(௬௬) என்னிடத்தில் மனதை நிறுத்தாமல், தானே இந்திரியங்களை ஜயிப்பதாயிருந்தவனுக்கு ஒருக்காலும் விலக்ஷணமான ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஸித்திக்கமாட்டாது. ஆனதுபற்றியே ‡ ஆத்மபாவனையும் ஸம்பவிக்க இடமில்லை. ஆத்மபாவனை யில்லாவிடில் விஷயத்தில் நசையறுவதில்லை, அதில்லாதவனுக்கு நித்தியமானசுக மெப்படி கிடைக்கும்?

(அ-கை.) முன் சொன்னபடி இந்திரிய ஜயம்பண்ணுதவனுக்கு வரும் அநர்த்தத்தை மீண்டும் அருளிச்செய்கிறார்.

ఇన్ద్రియాణాంహిచరతాం యన్మనోऽనువిధీయతే ।
తదస్యహరతిప్రజ్ఞాం వాయుర్నావమివామ్భసి॥౬౭॥

(௬௭) விஷயங்களைத் தேடியோடும் இந்திரியங்களின்வழியே மனதைச் செலுத்துவானாகில் அம்மனதானது, ஆத்மாவை நாடியிருக்கின்ற புத்திவிசேஷத்தை இழுத்து, ஜலத்திற்செல்லும் ஓடத்தை எதிர்காற்றானது பலாத்காரமாய் அடித்துக்கொண்டோடுவதுபோல சப்தாதிவிஷயங்களில் மூட்டிவிடும்.

తస్మాద్యస్యమహాబాహో నిగృహీతానిసర్వశః ।
ఇన్ద్రియాణీన్ద్రియార్థేభ్య స్తస్యప్రజ్ఞాప్రతిష్ఠితా॥౬౮॥

(௬௮) ஆகையால் கீழ்ச்சொன்னபடியே சுபஸ்தானமான என்னிடத்தில் யாவனொருவன் மனதை நிறுத்தி இந்திரியங்களை விஷயத்திற்செல்லவொட்டாமல் சுத்தமாய் அடக்குகிறானோ, அவனுக்குத்தான் ஆத்மாவினிடத்தில் பிரக்ஞையானது நிலைத்திருக்கும்.

(அ-கை.) இப்படி இந்திரிய ஜயம்பெற்று மனந் தெளிந்தவனுக்கு உண்டாகும் ஸித்தியை அருளிச்செய்கிறார்.

యానిశాసర్వభూతానాం తస్యాంజాగర్తిసంయమీ ।
యస్యాంజాగ్రతిభూతాని సానిశాపశ్యతోమునేః॥౬౯॥

(௬௯) ஸகலப் பிராணிகளுக்கும் இரவாயிருக்கின்ற (அதாவது பிரகாசிக்காத) ஆத்மவிஷயமானபுத்தியில், இந்திரியங்களைஜயித்து உள்ளந்தெளிந்திருப்பவன் விழித்துக் கொண்டிருக்கிறான்; என்றால் எந்தவேளையும் ஆத்மாவை ஸாக்ஷாத்கரிக்கிறான். அப்படியே ஸகலப்பிராணிகளுக்கும் பிரகாசமாயிருக்கின்ற சப்தாதி விஷயகமான புத்தியானது (ஆத்மஸாக்ஷாத்காரம் பண்ணுகிற) அம்முனிக்கு இரவுபோலிருக்கிறது (அதாவது பிரகாசிக்கிறதில்லை.)

ఆపూర్యమాణమచలప్రతిష్ఠం సముద్రమాపఃప్రవిశన్తియద్వత్ ।
తద్వత్కామాయంప్రవిశన్తిసర్వే సశాన్తిమాప్నోతిన కామకామీ॥౭౦॥

---

‡ ஆத்மபாவனை-எந்தவேளையும் ஆத்மஸ்வரூபத்தையே நாடியிருத்தல்.

(எ௦) தனக்குத்தானே நிறைந்து ஏகரூபமாயிருக்கிற ஸமுத்திரத்தில் ஆற்றுநீர் முதலியவை போய்விழுந்தாலும் விழாவிட்டாலும் அதினால் அந்த ஸமுத்திரமானது எப்படி சிறுத்தல் பெருத்தல் முதலிய விகாரத்தை அடைவதில்லையோ, அப்படிபோல இந்திரியங்களுக்கு சப்தாதிவிஷயங்கள் கிடைத்தாலும் கிடையாவிட்டாலும் அதைக்கணிசியாமல் யாவனொருவன் ஆத்மஸாக்ஷாத்காரத்தினால் திருப்தனாயிருக்கிறானோ, அவனுக்குத்தான் சாந்தியுண்டு; மற்றப்படிசப்தாதிகளில் சாபல்யமுள்ளவனுக்குக்கிடையாது.

విహాయకామాన్యస్సర్వాన్ పుమాంశ్చరతినిస్స్పృహః ।
నిర్మమోనిరహఙ్కార స్స శాన్తిమధిగచ్ఛతి॥ ౭౧॥

(எக) யாவனொருவன் சப்தாதி விஷயங்களை யெல்லாம் துறந்து நசையற்று எனது என்கிற புத்தியும், தேஹமே ஆத்மாவென்கிற ப்ராந்தியும் விட்டிருக்கிறானோ, அவன் ஆத்மஸாக்ஷாத்காரத்தாலே சாந்தியடைகிறான்.

ఏషాబ్రాహ్మీస్థితిఃపార్థ నైనాంప్రాప్యవిముహ్యతి ।
స్థిత్వాస్యామన్తకాలేపి బ్రహ్మనిర్వాణమృచ్ఛతి॥ ౭౨॥

(எஉ) அர்ச்சுந! ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை யறிந்து அத்துடன் பலத்தில் அபேக்ஷையின்றிச் செய்யவேண்டியதாக இப்பொழுது நாம் சொன்ன கர்மநிஷ்டையானது, ஞாநயோகமென்கிற ஸ்திதப்பிரக்ஞதைக்குச் சாதநமாயுள்ளது; இது ப்ரம்மத்தை அடைவிக்குமது; புருஷன் அந்திமகாலத்தில் இந்த நிலையிலிருந்தானாகில் ஆநந்தமயமான ஆத்மாவை அடைகிறான். [ஆகஇப்படி ஆத்மாவின் உண்மையையும், அவ்வாத்மாவை யடைவதற்கு ஸாதநமான யுத்தமென்னுங் கருமத்தையும் அறியாது, சரீரமே ஆத்மாவென்றுபிரமித்து அதினால் யுத்தத்தினின்றுங்கையொழிந்த அர்ச்சுநனுக்குக் கண்ணன் அந்தப்பிரமம் தீருகைக்காக நித்திய ஆத்மவிஷயமான ஸாங்கியபுத்தியும், அந்த புத்தியுடன் கூடியதாய் ஸ்திதப்பிரக்ஞதையென்னும் ஞாநநிஷ்டைக்கு ஸாதகமாய் கர்மயோகத்துககு வேண்டியதாயிருக்கிற புத்தியும் இரண்டாவது அத்தியாயத்தில் அருளிச்செய்தார். இதை నిత్యాత్మాసఙ్గకర్మేహా గోచరాసాఙ్ఖ్యయోగధీః । ద్వితీయేస్థితధీలక్షా ప్రోక్తాతన్మోహశాన్తయే॥ என்று ஸ்ரீ ஆளவந்தாரும் அருளிச்செய்தார்.

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,

இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீ:.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# மூன்றுவது அத்யாயம்.

## அவதாரிகை.

இதுவரையில், மோக்ஷகாமர்களுக்குப் பலமாக வேதாந்தத்திற்சொல்லப்பட்ட * பரப்பிரம்மமான புருஷோத்தமனை அடைதற்குத்தகுந்த உபாயம் 0 பக்தியோகமென்று அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி, அதற்கு அங்கமான (యఆత్మాఽపహతపాప్మా இத்யாதி ⚘ பிரஜாபதி வாக்கியத்திற்சொன்ன) ஜீவா

---

* இங்கே, "அவித்யாதிகளான ஸகல தோஷங்களையும் வாஸனையோடே ஒழித்து, அபார அதிசயமாய் அளவிறந்தவையாயுள்ள ஸகல கல்யாண குணங்கள் பொருந்திய" என்று சேர்த்துக்கொள்வது.

0 இங்கே "வேதநம், உபாஸநம், தியாநம் என்கிற சப்தங்களாலே சொல்லப்பட்டதும், பல தசையிலுங்கூட பிராப்யப்பிராப்க பூதனான அவன் திருவடிகளில்மாத்திரம் பண்ணத்தக்கதுமான" என்று சேர்த்துக்கொள்வது.

⚘ பிரஜாபதிவாக்யத்திலோ! యస్తమాత్మానమనువిద్యవిజానాతి என்று ப்ராப்தாவான ஜீவாத்மாவின் தர்சநமானது, தஹரவாக்யத்தில் சொன்ன பரவித்தைக்கு சேஷப்பட்டதென்று சொல்லி; ஜாகரிதம், ஸ்வப்நம், ஸுஷுப்தி இவைகளைக்கடந்த அந்த ஜீவஸ்வரூபமானது சரீரவிலக்ஷணமென்று பிரதிபாதித்து; ఏవమేవైషసమ్ప్రసాదోఽస్మాచ్ఛరీరాత్సముత్థాయ పరంజ్యోతిరుప సంపద్యస్వేనరూపేణాభినిష్పద్యతే என்று ஜீவன்சரீரத்தினின்றும் வெளிப்பட்டுப்பரஞ்சோதியான பரமபுருஷனையடைந்து தனது நிஜரூபத்தோடு விளங்குகிருனென்று தஹர வித்தைக்குப் பலன்சொல்லி முடிக்கப்பட்டது. அப்படியே இங்கும் అధ్యాత్మయోగాధిగమేనదేవం మత్వాధీరోహర్షశోకౌజహాతి இத்யாதிகளில்దేవమ్మత్వా என்று தேவனை யறியவேண்டியதாக விதிக்கப்படும் பரவித்தைக்கு அங்கமாக అధ్యాత్మయోగాధిగమేన என்று ஜீவாத்மஞானத்தையும் விதித்து, నజాయతేమ్రియతేవావిపశ్చిత్ இத்யாதியால் ஜீவாத்மஸ்வரூபம்ஜநந மரண ரஹிதமென்று சோதித்து; అణోరణీయాన్ என்று ஆரம்பித்து మహాన్తం విభుమాత్మానమ్మత్వాధీరోనశోచతి ॥ నాయమాత్మాప్రవచనేనలభ్యో నమేధయానబహునాశ్రుతేన। యమేవైషవృణుతేతేన లభ్యస్తస్యైషఆత్మావివృణుతేతనూంస్వామ్ இத்யாதிகளால் பரஸ்வரூபத்தையும் அவனை உபாஸிக்குந்தன்மையையும் அவ்வுபாஸநமும் பக்திரூபமா யிருக்கவேண்டுமென்பதையும் பிரதிபாதித்து విజ్ఞానసారథిర్యస్తుమనఃప్రగ్రహవాన్నరః । సోఽధ్వనఃపారమాప్నోతితద్విష్ణోః పరమంపదమ్ என்று பரவித்தைக்குப் பலம் விஷ்ணுவினுடைய பரமபதமென்று சொல்லி முடிக்கப்பட்டது.

த்ம ஸாக்ஷாத்காரம் ‡ கர்மயோகத்தால் ஸம்பாதிக்கத்தக்க ஞாநயோகத்தாலே ஸாதிக்கத்தக்கதென்று அருளிச்செய்தார். இதற்குமேல் நான்கு அத்யாயங்களால் அந்த ஜீவஸாக்ஷாத்காரத்தையும், அதற்கு உபாயத்தையும் விவரித்தருளுகிறார்.

అర్జున ఉవాచ॥ జ్యాయసీచేత్కర్మణస్తే మతాబుద్ధిర్జనార్దన ।
తత్కింకర్మణిఘోరేమాం నియోజయసికేశవ॥౧॥

వ్యామిశ్రేణైవవాక్యేన బుద్ధింమోహయసీవమే ।
తదేకంవదనిశ్చిత్య యేనశ్రేయోహమాప్నుయామ్॥౨॥

(க-உ) அர்ச்சுனன் சொல்வது—ஓ ஜநார்த்தந! இதுவரையில் தேவரீர் அருளிச் செய்ததில், ஆத்ம ஸாக்ஷாத்காரத்துக்கு ஞாநநிஷ்டைதான் நேரான ஸாதநமென்றும், கருமநிஷ்டையோ அந்த ஞாநநிஷ்டையை உண்டாக்கித் தருமென்றும், அந்த ஞாநநிஷ்டையும் ஸகலமான இந்திரிய வியாபாரங்களையும் ஒழித்தே பெறவேண்டியதென்றும் ஏர்ப்பட்டது; இதனால் ஆத்மாவை ஸாக்ஷாத்கரிக்கும் விஷயத்தில் கருமநிஷ்டையைக் காட்டிலும் ஞாநநிஷ்டையே சிறந்ததென்று தேவர் திருவுள்ளமாகத் தெரியவருகிறது. இப்படியாகில் அடியேனுக்கு ஆத்மஸாக்ஷாத்காரம் ஸித்திக்கவேண்டுமானால் இந்திரியவியாபாரத்தை யொழித்துப் பெறவேண்டியதான ஞாநயோகத்தைச் செய்யும்படி நியமிச்கலாயிருக்க அது செய்யாது அதற்குவிரோதமாய் இந்திரியவியாபாரரூபமான கருமயோகத்தைச் செய்யும்படி நியமித்தீரோ! இதைப்பார்த்தால் ஒன்றுக்கொன்று விரோதமான வாக்கியங்களைச்சொல்லி அடியேனைக் கலங்கச்செய்வதுபோல் காண்கிறது. ஆகையால் அடியேனுடைய க்ஷேமத்தைக்கோறி அடியேன் செய்யவேண்டியதை நிச்சயித்துக்கொள்ளும்படி ஒருவாக்கியமாக அருளிச்செய்யவேண்டும்.

(௩-கை.) அதற்குக் கண்ணன் அருளிச்செய்கிறார்.

శ్రీభగవానువాచ॥ లోకేస్మిన్ద్వివిధానిష్ఠా పురాప్రోక్తామయానఘ ।
జ్ఞానయోగేనసాఙ్ఖ్యానాం కర్మయోగేనయోగినామ్॥౩॥

(௩) அர்ச்சுந! நாம் முன்னே சொன்னதைச் செவ்வையாயறிந்திலை. உலகத்தில் ஜநங்களுக்கு யோக்கியதை பலவிதமாயிருக்கையால் அவரவர் யோக்கியதைக்குத் தக்கபடி ஞாநநிஷ்டையென்றும் கருமநிஷ்டையென்றும் இரண்டுவகை உண்டென்று சொன்னோம்: அதாவது விஷயத்தில் வியாகுலமான புத்திகளான யோகிகளுக்குக் கருமயோகத்தில் அதிகாரமென்றும் ஆத்மாவையேநாடுகிற புத்தியுடன்கூடிய ஸாங்கியருக்கு ஞாநயோகத்தில் அதிகாரமென்றும் பிரித்துச்சொன்னோம் அதுவேயல்லது சிறிதும் விரோதமாய்ச் சொன்னோமில்லை. [மோக்ஷார்த்தியான வென்னை நேரே ஞாநயோக

‡ இங்கே-ஆத்ம யாதாத்ம்ய ஞாநபூர்வகமாய் பலாபேக்ஷையின்றிச் செய்த என்று கூட்டிக்கொள்ளவும்.

த்தில் நியமிக்கலாயிருக்கக் கருமத்தில் பிரவேசிக்கச் செய்வதேனென்ருல் லோகத்தில் மோக்ஷகாமருக்கெல்லாம் உடனே ஞாநயோகத்தில் அதிகாரம் வருமா? வரமாட்டாது. பலாபேக்ஷயின்றிக் கேவலம் எம்பெருமானுடைய ஆராதநரூபமாகக் கருமத்தை அநுஷ்டித்து † அதனல் மனக்கலக்கமற்று இந்திரியவியாகூலந் தொலைந்த பின்புதான் ஞாநநிஷ்டைக்கு யோக்கியதையுண்டாம். ஆகையாலே கருமத்தைச் செய்யும்படி நியமித்தோமித்தனை யென்று திருவுள்ளம்.]

(அ-கை.) லோகத்தில் எல்லாருக்கும் மோக்ஷத்தில் இச்சை பிறந்தபோதே ஞாநயோகம் செய்யும்படியான நிலையுண்டாவது அரிதென்கிருர்.

నకర్మణామనారమ్భాన్నైష్కర్మ్యంపురుషోఽశ్నుతే।
నచసన్న్యసనాదేవ సిద్ధింసమధిగచ్ఛతి॥౪॥

(௪) (பரமபுருஷனுடைய ஆராதநரூபமாகச் சாஸ்திரங்களில் சொல்லப்படுங்) கருமங்களைச் செய்யத்தொடங்காமலிருப்பதினுலாவது தொடங்கி நடுவில் விட்டுவிடுவதினுலாவது ஞாநநிஷ்டை ஸித்திக்குமென்று நினைக்கவேண்டாம்; பலாபேக்ஷயற்ற கருமங்களால் எம்பெருமானை ஆராதிக்காமல் அதனல் அநாதிகாலமாய் ஸம்பாதித்த பாபங்களைத் தொலையாதவருக்கு,இந்திரிய வியாகூலமற்றுப் பெறவேண்டிய ஆத்மநிஷ்டை கிடைப்பது அரிது.

(அ-கை.) இதைத்தான் தக்கநியாயங்களைக்கொண்டு நிரூபிக்கிருர்.

నహికశ్చిత్క్షణమపి జాతుతిష్ఠత్యకర్మకృత్।
కార్యతేహ్యవశఃకర్మ సర్వఃప్రకృతిజైర్గుణైః॥౫॥

(௫) லோகத்தில் ஒருவனும் ஒருக்காலும் ஒருகாரியமும் செய்யாமலிருக்கமாட்டான். அப்படி யிருப்பதாக ஒருவன் தான்ஒழிந்திருந்தானுகிலும், பிருகிருதியில் உண்டாய் இவனுடைய பூர்வ கர்மாநுஸாரமாக விருத்தியடைந்த ஸத்வம்,ரஜஸ்ஸு,தமஸ்ஸு என்கிற மூன்றுகுணங்களும் இவனையுமறியாமல் இவனுக்கு உசிதமான சிலகாரியங்களில்மூட்டிவிடும். [ஆகையால் முன் சொன்ன கருமயோகத்தால் பழைய பாபங்களைத் தொலைத்து ஸத்வாதிகுணங்களை வசப்படுத்தி நிர்மலமான அந்தஃகரணத்தாலே ஞாநயோகம் ஸம்பாதிக்கத்தக்கது.]

(அ-கை.) அப்படியில்லாமல் ஞாநயோகத்தில் இழிந்தால் அநர்த்தம் விளையுமென்கிருர்.

కర్మేన్ద్రియాణిసంయమ్య యఆస్తేమనసాస్మరన్।
ఇన్ద్రియార్థాన్విమూఢాత్మా మిథ్యాచారస్సఉచ్యతే॥౬॥

---

† கர்மாநுஷ்டாநம், பரமபுருஷாராதநரூபமென்று மிடம் యతఃప్రవృత్తిర్భూతానాంయేనసర్వమిదంతతమ్। స్వకర్మణాతమభ్యర్చ్యసిద్ధింవిన్దతిమానవః என்று மேலே அருளிச்செய்யப்போகிருர்.

(௬) பாபந் தொலையாமையாலே அந்தஃகரண பஹிஃகரணங்களுவசப்படாமலிருக்கிற ஒருவன் ஆத்மஞாநத்தை ஸம்பாதிக்க விழிந்தானாகில், அவன் சப்தாதிவிஷயங்களில் ஆசையுற்றவனானையால் ஆத்மாவைத்தேடி மனம் செல்லாமல் விஷயத்தையே நினைத்துக்கொண்டிருப்பான். அப்படி ஒன்று செய்யக்கோலி ஒன்று செய்கின்ற அவன் பொய்யேசெய்பவனாகை யால் அதனால் அநர்த்தப்படுவான்.

యస్త్వింద్రియాణి మనసా నియమ్యారభతేఽర్జున ।
కర్మేంద్రియైః కర్మయోగ మసక్తస్స విశిష్యతే॥ ౭॥

(௭) யாவனொருவன்தான் முன்பு பழகியிருக்கிற கருமங்கள்போலே சாஸ்திரோக்தமான கருமங்களும் சிலவாகையால் அவைகளில், (ஆத்ம தரிசநத்திலூன்றிய மனதைக்கொண்டு) இந்திரியங்களைச் செலுத்தி அவைக ளைப்பற்றின்றிச் செய்யத்தொடங்குகிறானோ அவனுக்கு யாதொரு பிரமாத மும் நேரிடமாட்டாதாகையால் அவன் முன்சொன்ன ஞாநநிஷ்டனைப்பார்க்கச் சிறந்தவனாவான்.

నియతంకురుకర్మత్వం కర్మజ్యాయో ⊕ హ్యకర్మణః ।
శరీరయాత్రాపిచతే నప్రసిద్ధ్యేదకర్మణః॥ ౮॥

(௮) அநாதிவாஸனையாலே பிரகிருதியில் அகப்பட்ட புருஷனுக்குக் கருமஞ்செய்வது ஸ்வபாவமாய் பழகிப்போனபடியால் அது செய்வதற்குச் சுகமாயும் பிரமாதத்தைத் தராததாயுமிருக்கிறது. ஞாநநிஷ்டையோ பழக் கமில்லாமையால் செய்வதற்குக் கஷ்டமாயும் அநர்த்தஹேதுவாயுமிருக்கிற து. இப்படி கர்மம்செய்வதற்கு சுகமாயிருக்கையாலும் (இதைச்செய்யும்பொழுது ஆத்மாவின் உண்மையான நிலையையறிந்து ஆத்மா கர்த்தாவல்லனென் று நினைக்கவேண்டுகையாலே) ஞாநயோகம் இதற்குட்படுகையாலும் இது ஞா நயோகத்தைக் காட்டிலும் சிறப்புற்றது. [ஆனால் ஞாநநிஷ்ட்டையை விசே ஷமாகச் சொல்வதெதினாலென்றால்:—அது தகுந்தஅதிகாரமுள்ளவன் விஷ யம்.] மேலும் ஸகல கருமங்களையும் விட்டுக் கேவலம் ஞாநநிஷ்டையில் இழிந்தவனுக்கு முதலில் அந்த நிஷ்டைக்கு வேண்டிய சரீரதாரணமே ஸி த்திக்கமாட்டாது. [ஏனெனில்:—நியாயார்ஜிதமான திரவியங்கொண்டு செ ய்த ‡ யக்ஞசேஷத்தாலே ⚜ சரீரத்தைக்காப்பாற்றவேண்டுமென்று ஏர்ப்பட்

---

⊕ மூலத்தில் అకర్మ சப்தம் இங்கே ஞாநநிஷ்டையைச் சொல்லுகிறது, నైష్కర్మ్యంపురుషోఽశ్నుతే என்று தொடங்குகையாலே.

‡ ఆహారశుద్ధౌ సత్త్వశుద్ధిః సత్త్వశుద్ధౌ ధ్రువానుస్మృతిః என்று ஆஹாரம் சுத்த மானால் ஸத்வம் சுத்தியாம்; அதினால் சலியாத சிந்தையுண்டாமென்று வே தம் சொல்லுகையாலும் அந்த சிந்தை ஞாநயோகத்துக்கு உபகாரகமாகை யாலும் யக்ஞசேஷங்கொண்டே சரீரத்தைத் தரிக்கவேண்டு மென்றறிக. இவ்வர்த்தத்தை తేత్వఘం இத்யாதியில் மேலே அருளிச்செய்யப்போகிறார்.

⚜ சரீரமானது ஸாதநம் தலைக்கூடுகிறவரையில் இருந்தே தீரவேண் டுமென்றறிக.

டபின்பு கருமமின்றி யக்ஞம் செய்வதெப்படி?] [ஆக ஞாநநிஷ்டனுக்கும் சரீரமுள்ளவரையில் நித்திய நைமித்திக கருமங்கள் செய்வது ஆவசியகமாகையாலும், கருமயோகத்திலும் ஆத்மஞாநம் உட்பட்டமையாலும், பிராகிருதபுருஷனுக்குக் கருமம்செய்வது சுலபமாயும் ப்ரமாதத்தையுண்டுபண்ணுததாயுமிருக்கையாலும் ஞாநநிஷ்டாதிகாரிக்குக்கூடக் கருமயோகமே சிறப்புற்றது. ஆகையால் நீ கருமயோகத்தையேசெய்யென்று திருவுள்ளம்.]

(அ-கை.) இப்படியானால் திரவியந்தேடல்முதலிய கருமங்கள் (அஹங்காரம் மமகாரம் முதலிய) இந்திரியவியாகூலத்தை யுண்டாக்குமாகையால் புருஷனுக்குக் கருமவாஸனைபிறந்து அதனால் ஸம்ஸாரபந்தம் உண்டாகாதோ? என்ன அருளிச்செய்கிறார்.

యజ్ఞార్థాత్కర్మణోఽన్యత్ర లోకోఽయం కర్మబన్ధనః ।
తదర్థం కర్మ కౌన్తేయ ముక్తసఙ్గస్సమాచర ॥౯॥

(௯) சாஸ்திரத்தில்சொன்ன யாகாதிகருமங்களுக்காகத் திரவியந்தேடுதல் முதலிய கருமங்களைவிட்டுத் தன்ப்ரயோஜநத்துக்காகச் செய்யுங் கருமமெல்லாம் (பந்தமென்கிற) ஸம்ஸாரத்துக்குக் காரணமாம். ஆகையால் யக்ஞத்துக்காகத் திரவியஸம்பாதநம் முதலிய கருமங்களைச் செய்யும்பொழுது அதில் பற்றின்றிச்செய். [பற்றின்றிச்செய்யும் யக்ஞாதிகளுக்காகக் கருமஞ் செய்துவந்தால் அந்த யக்ஞாதிகளால் எம்பெருமான் ஆராதிக்கப்பட்டவராய் அநாதிகாலமாய் இவனைப் பற்றிக்கிடந்த கருமவாஸனையைத் தொலைத்து வியாகுலமற்ற ஆத்மதரிசநத்தைப் பண்ணிக் கொடுக்கிறாரென்று திருவுள்ளம்.]

(அ-கை.) எந்த புருஷார்த்தத்தை ஸாதிக்க முயன்றவரும் யக்ஞசேஷத்தாலேயே சரீரத்தைத்தரிக்கவேண்டும்; மற்றப்படி தரித்தால் தோஷமுண்டென்கிறார்.

సహయజ్ఞాః ప్రజాస్సృష్ట్వా పురోవాచ * ప్రజాపతిః ।
అనేన ప్రసవిష్యధ్వమేష వోఽస్త్విష్టకామధుక్ ॥౧౦॥

(௧௦) ஸகலப் பிரஜைகளுக்கும் பதியான ஸ்ரீமந்நாராயணன் சிருஷ்டிகாலத்தில், அநாதிகாலமாய்த்தொடர்ந்த அசேதநஸம்பந்தத்தாலே பரவசர்களாய் நாமரூபங்களையிழந்து தனக்குள் லயித்து ஒருபுருஷார்த்தத்தையும் அடைவதற்கு யோக்கியமில்லாதவராய் அசேதநம்போலக்கிடந்தப் பிரஜைகளைக் கடாக்ஷித்து, பரமதயாளுவாகையாலே அவர்கள் உய்வதற்காகத் தன் ஆராதநரூபமான யக்ஞத்தைச் செய்யும்படி யக்ஞங்களோடுகூடவே அவர்க

---

* இங்கே ప్రజాపతి சப்தமானது நிருபாதிகமாய்க்கொண்டு ஸர்வேசுவரனாய் விசுவத்துக்கு சிருஷ்டிகர்த்தாவாய் விசுவாத்மாவாயெழுந்தருளியிருக்கிற ஸ்ரீமந்நாராயணனையே சொல்லக்கடவது; పతింవిశ్వస్యాత్మేశ్వరం என்று நிருபாதிகப்பிரஜாபதி ஸ்ரீமந்நாராயணனென்றல்லவோ வேதஞ்சொல்லுகிறது?

ளையும் சிருஷ்டித்து, "இந்த யக்ஞத்தைக்கொண்டே நீங்கள் முன்னுக்கு வரக்கடவீர், இதுதான் உங்களுக்கு மோக்ஷத்தையும் மற்றும் பலங்களையும்கொடுப்பது" என்று திருவாய்மலர்ந்தருளினான்.

(அ-கை.) அதெப்படியென்றால்:

దేవాన్భావయతానేన తేదేవాభావయన్తువః।
పరస్పరమ్భావయన్తశ్శ్రేయఃపరమవాప్స్యథ॥౧౧॥

(கக) தேவதாராதநரூபமான இந்த யக்ஞத்தாலே, எனக்கு || சரீரபூதர்களாய் என் ரூபமாயிருக்கிற தேவர்களை ஆராதநம் செய்யுங்கள்; அப்படி ஆராதிக்கப்பட்ட அவர்கள், தம் ஆராதநத்துக்கு வேண்டிய அந்நபாநாதிகளைத் தந்து உங்களைப்போஷிப்பர்கள். இப்படி ஒருவருக்கொருவர் பாவித்துக்கொண்டு மோக்ஷமென்கிற பரமபுருஷார்த்தத்தை அடையுங்கள்.

ఇష్టాన్భోగాన్హివోదేవా దాస్యన్తేయజ్ఞభావితాః।
తైర్దత్తానప్రదాయైభ్యో యోభుఙ్క్తేస్తేనఏవసః॥౧౨॥

(கஉ) யக்ஞத்தால் ஆராதிக்கப்பட்ட அந்த தேவர்கள் உங்களுக்கிஷ்டமான போகங்களை மென்மேலும் கொடுத்துவருவர்கள். அவர்கள் தம் ஆராதநத்துக்கென்று தந்தவைகளை அவர்களுக்குக்கொடாமல் எவன் புஜிக்கிறானோ அவன் திருடனாவான். [திருடாவது:—பிறருடைய பிரயோஜநத்துக்காக ஏற்பட்ட வஸ்துவில் தன்னுடையதென்கிற புத்தியைச்செய்து அதினால் தன் ஆத்மாவைப் போஷித்துக்கொள்ளுவதுதானே? இதனால் இவனுக்கு பரமபுருஷார்த்தம் கிடையாமற்போவதுமாத்திரமன்று; நரகமும் ஸம்பவிக்குமென்று அபிப்பிராயம்.]

(அ-கை.) அதையே விவரிக்கிறார்.

యజ్ఞశిష్టాశినస్సన్తో ముచ్యన్తేసర్వకిల్బిషైః।
తేత్వఘంభుఞ్జతేపాపా యేపచన్త్యాత్మకారణాత్॥౧౩॥

(கங) இந்திராதிகளுக்கு அந்தராத்மாவா யெழுந்தருளியிருக்கிற பரமபுருஷனை ஆராதிக்கவேண்டுமென்று திரவியங்களைத் தேடிச்சமைத்து அவற்றைக்கொண்டு அப்படிப்பட்ட பரமபுருஷனை ஆராதித்து அதில் மிகுதியைப்புசித்து சரீரத்தைக் காப்பாற்றுகிறார் யாவர், அவர்கள்தான் அநாதிகாலமாய் ஸம்பாதிக்கப்பட்டவைகளாய் ஆத்மாவினுடைய யதார்த்தஞாநத்துக்கு விரோதிகளாயிருக்கிற ஸகல பாபங்களினின்றும் விடுபடுவர்கள்; எவர்களானால் அப்படிப்பட்ட பரமபுருஷ ஆராதநத்துக்கென்று வகுத்த திரவியங்களைத் தமக்கென்று ஸம்பாதித்து அதைச் சமைத்துண்பார்களோ, அந்தப்பாவிகள் பாவத்தையே உண்கிறார்கள். அதாவது:—ஆத்மஞாநத்தில் கண்வையாமல் நரகத்துக்கென்றே சமைத்துண்கிறார்கள்.

---

|| అహంహిసర్వయజ్ఞానాం భోక్తాచప్రభురేవచ என்று ஸகலமான யக்ஞங்களுக்கும் எம்பெருமானே போக்தாவென்று மேலே அருளிச் செய்கிறாராகையால் இதரதேவதைகளைச் சரீரமென்கிறது.

(அ-கை.) திரும்பவும் லோகரீதியாகவுமாம், சாஸ்திரரீதியாகவுமாம், யாவும் யக்ஞத்தாலுண்டானதென்பதை யெடுத்துக்காட்டி, யக்ஞத்தை அநு ஸரிப்பது அவசியமென்றும் அதைச் செய்யாமற்போனால் தோஷமுண்டெ ன்றும் அருளிச்செய்கிறார்.

అన్నాద్భవన్తిభూతాని పర్జన్యాదన్నసమ్భవః ।
యజ్ఞాద్భవతిపర్జన్యో యజ్ఞఃకర్మసముద్భవః॥౧౪॥
కర్మ ψ బ్రహ్మోద్భవంవిద్ధి బ్రహ్మాక్షరసముద్భవమ్ ।
తస్మాత్సర్వగతంబ్రహ్మ నిత్యంయజ్ఞేప్రతిష్ఠితమ్॥౧౫॥
ఏవమ్ప్రవర్తితంచక్రం నానువర్తయతీహయః।
అఘాయురిన్ద్రియారామో మోఘంపార్థ సజీవతి॥౧౬॥

(௧௪-௧௫-௧௬) ஸகல பூதங்களும் அன்னத்தாலுண்டாகிறதென்பதும், அந்த அன்னம் வருஷத்தாலுண்டாகிறதென்பதும் எல்லாருக்கும் பிரத்ய க்ஷம். அந்தவர்ஷம் யக்ஞத்தாலுண்டாகிறதென்று (అగ్నౌప్రాస్తాహుతిస్సమ్యగాదిత్యముపతిష్ఠతే । ఆదిత్యాజ్జాయతేవృష్టిః இத்யாதியான) சாஸ்திரம் சொல்லு கிறது. அந்த யக்ஞம் (புருஷவியாபாரரூபமான) கருமத்தாலுண்டாகிறது; அந்தகருமம் (பிரகிருதியின் பரிணமமான) சரீரத்தாலுண்டாகிறது; அந்த ச ரீரமோ ஜீவனாலே: அதெப்படியெனில்-அந்நபாநாதிகளால்திருப்தியடைந்த ஜீவாத்மாவோடு கூடியிருந்தால் மாத்திரந்தான் சரீரம் கருமம் செய்யக்கூ டும். ஆகவிதனால் எந்தசரீரமும் யக்ஞத்தால்தான் நிலைக்கிறதென்றதாயிற்று. இப்படி ஜீவனுடன்கூடிய சரீரத்துக்கு அன்னமும் அன்னத்துக்கு வருஷமும் வருஷத்துக்குயக்ஞமும் யக்ஞத்துக்கு (கர்த்தாவின்வியாபாரமான) கருமமு ம், கருமத்துக்கு (ஜீவனுடன்கூடிய) சரீரமும் சரீரத்துக்குத் திரும்பவும் அ ன்னமுமென்றுஒன்றுக்கொன்று காரியமாயும் காரணமாயும் பரமபுருஷனால் ஏர்ப்படுத்தப்பட்ட இந்தசக்கிரத்தை, (ஞாநயோகாதிகாரியோ கருமயோகா திகாரியோ) யாவனொருவன் நடத்துகிறானில்லையோ அதாவது யக்ஞசேஷத் தாலே தேஹத்தைத்தரிக்கிறதில்லையோ அவன் தன்வாழ்நாளையெல்லாம் பா வத்துக்கே ஒப்புவிக்கிறான். ஆனதுகொண்டே அவன்புலன்களுக்குத் திருப் திசெய்பவனேயல்லது ஆத்மாவுக்கல்ல; அவன் சரீரத்தையும் மனதையும் கெ ட்ட அன்னத்தாலே வளர்த்தமையால் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற இரண்டு குணங்களுந் தலையெடுத்து ஆத்மதரிசநத்தில் கண்வையாமல் விஷயபோகத் தில் மண்டுகிறான். ஆகையால் அவன் ஞாநயோகாதிகளில் முயற்சிசெய்பவ னாயினும் அதுநிஷ்பலமாகையாலே வீணுக்கே ஜீவிக்கிறான்.

---

ψ బ్రహ్మ சப்தம் பிரகிருதி பரிணமரூபமான சரீரத்தைச் சொல்லக் கடவது. తస్మాదేతద్బ్రహ్మనామరూపమన్నఞ్చజాయతే என்று బ్రహ్మ சப்தத்தாலே பிரகிருதியை நிர்த்தேசிக்கையாலும்; మమయోనిర్మహద్బ్రహ్మ என்று மேலே சொல்லப்போகிறபடியாலும் சரீரவாசகம்.

(அ-கை.) ஸாதநமில்லாமலே ஆத்மதரிசநம்கிடைத்தவனுக்கோ இந்த வருணாசிரமகருமம் வேண்டாமென்கிறார்.

యస్త్వాత్మరతిరేవస్యా దాత్మతృప్తశ్చమానవః ।
ఆత్మన్యేవచసన్తుష్ట స్తస్యకార్యంనవిద్యతే॥౧౭॥

నైవతస్యకృతేనార్థో నాకృతేనేహకశ్చన ।
నచాస్యసర్వభూతేషు కశ్చిదర్థవ్యపాశ్రయః॥౧౮॥

తస్మాదసక్తస్సతతం కార్యంకర్మసమాచర ।
అసక్తోహ్యాచరన్కర్మ పరమాప్నోతిపూరుషః॥౧౯॥

(கஎ-கஅ-கக) ஞானயோக கருமயோகங்களிரண்டையும் அபேக்ஷிக்காமல் தனக்குத்தானே ஆத்மதரிசநம்பண்ணுகிறான் யாவனொருவன் அவன் இதரமான அந்நபாநாதிகளாலல்லாமல் ஆத்மாவினாலேயே திருப்தனாயும், உத்யாநம், மாலை, சந்தனம், பாட்டு, வாத்தியம், நர்த்தநம் முதலியவற்றிலன்றி, கேவலம் ஆத்மாவில் ஸந்தோஷமுற்றவனாய், $ தாரகம் △ போஷகம் ψ போக்கியம் எல்லாம் ஆத்மாவேயாயிருப்பவனாகையால் அவனுக்குச் செய்யவேண்டுங் கருமம் ஒன்றுமில்லை. (ஆத்மதரிசநமென்கிற) பலம் கைபுகுந்தவனாகையாலே செய்வதால் பயனுமில்லை; செய்யாமையால் தோஷமுமில்லை. ஏற்கனவே ஆத்மஸந்துஷ்டனாய் எல்லாவஸ்துக்களையும் உபேக்ஷித்திருப்பவனாகையால் பிரகிருதியின் விகாரங்களான ஆகாசமுதலிய பூதங்களினாலாவது அவற்றின் காரியங்களினாலாவது அவனுக்கு என்னப் பிரயோஜநம்? ஸாதநம்செய்வதெல்லாம் அவற்றில் உபேக்ஷையுண்டாகைக் காகத்தானே? இவனுக்கோ அது உண்டாய்விட்டது. இனி இவன் கருமம்செய்வதேன்? ஆக, தனக்குத்தானே ஆத்மதரிசநம் பண்ணவனுக்கு ஸாதநத்தில்பிரவர்த்திக்க வேண்டாமையாலும், பிரவர்த்தித்தவனுக்கு இந்தகர்மயோகம் சுலபமாயும் அநர்த்தஞ்செய்யாததாயும் ஆத்மஞானத்தை யுட்கொண்டதாயு மிருக்கின்றமையாலும், ஞானயோகிக்கும் இதில் சிறிது செய்யவேண்டுகையாலும் கருமயோகமே ஆத்மதரிசநத்துக்குச் சிறந்தது. ஆகையால் அர்ஜுந! பற்றின்றிக் கருமஞ் செய்யவேண்டுமென்கிற எண்ணத்துடன் பலஸித்தியாமளவும் கருமத்தையேசெய்.

కర్మణైవహిసంసిద్ధి మాస్థితాజనకాదయః ।౧౯½॥

(ககூ॥) ஞானயோக அதிகாரிக்கும் கருமமே சிறந்திருக்கையால்தான் ஞானிகளில் தலைவரான ஜநகாதிராஜருஷிகளும் கருமயோகத்தாலேயே ஸித்திபெற்றார்கள்.

(அ-கை.) இவ்வாறு-மோக்ஷார்த்தியானவன் ஞானயோகத்துக்குத்தகாதவனாகையாலே கருமயோகமே செய்யத்தக்கதென்று அருளிச்செய்து, ஞானயோகத்துக்குத் தகுந்தவனுக்கும் கருமயோகமே சிறந்ததென்பதை காரணத்தோடு அருளிச்செய்கிறார்.

లోకసఙ్గ్రహమేవాపి సమ్పశ్యన్కర్తుమర్హసి॥౨౦॥

---

$ தாரகம் - தரிக்கச்செய்யும் அன்னமுதலியன.

△ போஷகம் - பருக்கச்செய்யும் பால்முதலியன.

ψ போக்யம் - சுகத்தைத்தரும் தாம்பூலமுதலியன.

యద్యదాచరతి శ్రేష్ఠ స్తత్తదేవేతరో జనః ।
స యత్ప్రమాణం కురుతే లోక స్తదనువర్తతే ॥ ౨౧ ॥

(௨௦-௨௧) அர்ச்சுந! நீ லோகத்தாருடைய க்ஷேமத்தைப்பார்த்தாலும் கருமமே செய்யத்தகுந்தவனாகிறாய். ஏனெனில் ஸகலசாஸ்திரங்களையும் அறிந்து அப்படியே அநுஷ்டித்து பிரஸித்தனான ஒருபுருஷன், (எந்தப் பிரமாணங்கொண்டு எந்த அங்கத்தோடு) எதைச்செய்கிறானோ அது தன்னையே ‡ முழுதுந் தெரிந்துக்கொள்ளாத ஜநமும் அப்படியே அநுஷ்டிக்கும். ஆகையால் லோகரக்ஷணத்துக்காக அந்த சிரேஷ்டனுங்கூட தன்வருணாசிரமங்களுக்கு உசிதமான ஸகலகருமங்களையும் அநுஷ்டிக்கக்கடவன். இல்லாவிடில் லோகநாசத்தாலுண்டானபாபம் இவனை ஞாநயோகத்தினின்றுங்கூட நழுவப்பண்ணும்.

న మే పార్థాస్తి కర్తవ్యం త్రిషు లోకేషు కిఞ్చన ।
నానవాప్త మవాప్తవ్యం వర్త ఏవ చ కర్మణి ॥ ౨౨ ॥

(௨௨) ஸர்வேசுவரனாய் நினைத்ததெல்லா மடைந்து ஸகலமுந் தெரிந்தவனாய் நினைத்தது செய்யவல்லவனாய், தேவனாகவும் மனிதனாகவும் இன்னும் பலவிதமான சரீரங்களுமெடுத்து மூன்றுலோகத்திலும் இஷ்டப்படி திரிபவனாயிருக்கிற எனக்குச் சிறிதும் கருமம் செய்யவேண்டுவதில்லை; ஏனெனில்-வேறு ஒருவிதத்தாலும் அடையப்படாமல் கருமத்தாலேயே அடையவேண்டும்படியானது எனக்கேதாகிலும் உண்டாகிலன்றோ செய்யவேண்டுவது? அதில்லை. அப்படியிருக்க, நானுங்கூடலோக ரக்ஷணத்துக்காகக் கருமத்தையே அநுஷ்டிக்கிறேன் பார்.

యది హ్యహం న వర్తేయం జాతు కర్మణ్యతన్ద్రితః ।
మమ వర్త్మానువర్తన్తే మనుష్యాః పార్థ సర్వశః ॥ ౨౩ ॥

ఉత్సీదేయురిమే లోకా న కుర్యాం కర్మ చేదహమ్ ।
సఙ్కరస్య చ కర్తా స్యా ముపహన్యామిమాః ప్రజాః ॥ ౨౪ ॥

(௨௩-௨௪) ‡ ஸர்வேசுவரனாய் ஸத்தியஸங்கல்பனாய் ஸங்கல்பமாத்திரத்தாலே ஜகத்தினது உத்பத்தி ஸ்திதி லயங்களை லீலையாகச்செய்பவனாயிருக்

---

‡ முழுதுந் தெரிந்துகொள்ளாத-சாஸ்திரார்த்தங்களில் ஏகதேசந் தெரிந்துகொண்ட.

‡ முன் சுலோகம், மூவுலகங்களிலுமென் றருளிச்செய்கையால், ஸமஸ்தாவதாரபரம்; இதுவோ மநுஷ்யர்கள் என்கையாலே கிருஷ்ணவதாரத்தைமாத்திரம் பொறுத்தது என்று 'அஹம்' என்கிற நிர்த்தேசம் ஈசுவரஸ்வபாவத்தைவிடாத கிருஷ்ணவதார ஸாதாரணமென்று வியாக்கியானித்தது.

கிற நான், லோகோபகாரமாக என் இச்சையாலே மநுஷியனாய் அவதரித்தேனாகிலும் சிஷ்டஜநங்களிற்றலைவரான வசுதேவர் திருமாளிகையில் அவதரித்தமையால் அந்த குலத்துக்கேற்ற கருமங்களைச் சோம்பலில்லாமல் எப்போதும் நான் செய்யாதொழிவனேயாகில் "சிஷ்டஜநங்களிற்றலைவராய் வசுதேவர் மைந்தனான கண்ணன்போனவழியே நமக்கும் வழியாகக்கடவது" என்று நினைத்து ஸகலமுந்தெரிந்துகொள்ளாத சில சிஷ்டர்கள் அதையே அநுஸரிப்பர்கள். அப்பொழுது அவர்கள் தாம் செய்யவேண்டிய கருமங்களைச் செய்யாமையாலே ஆத்மாவை அடையாதவர்களாய் நரகத்துக்கும் ஆளாக நிற்பர்கள். நானே சாஸ்திரோக்தமான ஆசாரத்தைப் பரிபாலிக்காமையால் ஸகலமான சிஷ்டகுலங்களுக்கும் $ ஸங்கரத்தைச்செய்து இந்தப்பிராணிகளையெல்லாம் அழித்தவனாவேன். ஆகையால் நீயும் இப்படியே சிஷ்டஜநசிகாமணியான பாண்டுவின் புத்திரனாய் தருமன் தம்பியாய் அர்ச்சுநனென்றுப் பிரஸித்தனாயிருந்துகொண்டு ஞாநநிஷ்டையில் இழிவாயாகில் (மோக்ஷத்தைமாத்திரம் ஆசைப்பட்டவர்களாய் சாஸ்திரார்த்தத்தை முழுதும் தெரிந்துகொள்ளாத) சிலசிஷ்டர்கள் உனது ஆசாரத்தையே அநுஸரித்துத் தமக்கேற்ற கருமத்தில் நில்லாமல் நசித்துப்போவர்கள். ஆகையால் பிரஸித்தனுங்கூட கருமமே செய்யக்கடவன்.

సక్తాః కర్మణ్యవిద్వాంసో యథాకుర్వన్తి భారత।
కుర్యాద్విద్వాంస్తథాఽసక్తశ్చికీర్షుర్లోకసఙ్గ్రహమ్॥ ౨౫॥
నబుద్ధిభేదంజనయేదజ్ఞానాంకర్మసఙ్గినామ్।
జోషయేత్సర్వకర్మాణి విద్వాన్యుక్తస్సమాచరన్॥ ౨౬॥

(உரு-உசு) (ஆத்மவிஷயத்தில் ஸகலமுந் தெரியாதவர்களாய் கருமத்தில் விடப்போகாத ஸம்பந்தமுள்ளவர்களான) கருமாதிகாரிகள், அந்த ஆத்மாப்பியாஸரூபமான ஞாநயோகத்தில் பிரவேசிப்பது தம்மாலாகாதென்று தங்களுக்குப் பழக்கமான கருமயோகத்தில் எப்படி இழிகிறார்களோ, அப்படியே (ஆத்மவிஷயத்தில் முழுதுந் தெரிந்தவனாய் கருமத்தில் பற்றற்று ஞாநயோகத்துக்கு யோக்கியனாய் பெயர் பெற்றிருக்கிற) சிஷ்டனுங்கூட தனது ஆசாரத்தால் சிஷ்டஜநங்களுக்குத் தருமநிச்சயம் பண்ணிக்கொடுக்கையாகிற லோகரக்ஷணத்துக்காகக் கருமயோகத்தையே செய்யக்கடவன். அதுவேயன்றி ஆத்மவிஷயத்தில் ஸகலமுந் தெரியாதவனாகிய கருமயோகாதிகாரிக்கோ ஞாநயோகாதிகாரிக்கோ எவனுக்கும், கருமத்தைக்காட்டிலும் ஞாநமென்று வேறு ஓர் உபாயமுண்டென்கிற புத்தியைச் சிறிதும் உண்டுபண்ணக்கடவனல்லன்; பின்னை என்செய்வதென்றால்-ஞாநயோகாபேக்ஷையின்றிக்கே கருமயோகமே ஆத்மஸாக்ஷாத்காரத்துக்கு ஸாதநமென்கிற புத்தியோடு கூடிக்கருமத்தையே செய்துவந்து முழுதுந் தெரிந்துகொள்ளாதவர்களுக்கு ஸகலகருமங்களிலும் பிரீதியை உண்டுபண்ணக்கடவன்.

---

$ ஸங்கரம் (வர்ணாசிரமாசாரங்களின்) கலப்பு.

(அ-கை.) கருமயோகத்தை அநுஷ்டிப்பதில் தெரிந்தவனுக்கும் தெரியாதவனுக்குமுண்டான வாசியைக்காட்டா நின்றுகொண்டு, கருமயோகத்துக்குவேண்டியதான "நான் பண்ணவில்லை" யென்று நினைக்குந் தன்மையை அருளிச்செய்கிறார்.

ప్రకృతేః క్రియమాణాని గుణైః కర్మాణి సర్వశః।
అహంకారవిమూఢాత్మా కర్తాహమితి మన్యతే॥ ౨౭॥
తత్త్వవిత్తు మహాబాహో గుణకర్మవిభాగయోః।
గుణాగుణేషు వర్తన్త ఇతి మత్వా న సజ్జతే॥ ౨౮॥

(௨௭-௨௮) * அஹங்காரத்தால் ஆத்மஞானத்தை யிழந்தமூடன், பிரகிருதியின் குணங்களானஸத்வம்,ரஜஸ்ஸு,தமஸ்ஸுக்களால் செய்யப்பட்டகருமங்களைத்தான்செய்ததாகநினைக்கிறான். குணங்களின் வகுப்பையும் அவற்றின் காரியங்களின் வகுப்பையும் நன்கறிந்தவனோ குணங்கள் தந்தங்காரியங்களைச்செய்கின்றன வென்று தெரிந்தவனாகையால் அதில் நான்செய்தேனென்கிற பற்றைவைக்கமாட்டான்.

ప్రకృతేర్గుణసమ్మూఢాః సజ్జన్తే గుణకర్మసు।
తానకృత్స్నవిదో మన్దాన్ కృత్స్నవిన్న విచాలయేత్॥ ౨౯॥

(௨௯) ஸகலமுந் தெரிந்துகொள்ளாமல் கொஞ்சந் தெரிந்துக்கொண்டு ஆத்மதரிசநத்துக்காகப் பிரயத்தநப்படுமவர்கள்,பிரகிருதியோடு சேர்ந்திருப்பவராதல்பற்றி, அதின் குணத்தாலே ஆத்மாவினது உண்மை நிலைதெரியாமல்மூடர்களாய் குணக்கிரியைகளிலே நோக்கமுள்ளவர்களாய் அதைக்காட்டிலும்வேறான ஆத்மாவைச் சிறிதும்நினையார்கள். ஆகையால்இவர்கள்ஞாநயோகத்துக்குத் தக்கவர்களல்ல; கருமயோகத்திலேயே இவர்களுக்கதிகாரம்.இப்படி செவ்வையாய்த் தெரிந்துகொள்ளாத இம்மூடர்களை, செவ்வையாய்த்தெரிந்தவன் தன்னுடைய ஞாநயோகத்தி லிருப்பைக்காட்டிமயக்கக்கடவனல்லன். ஏனெனில் இவர்கள் மந்தர்களாகையால் (சிரேஷ்டஜநங்களினுசாரத்தைப்பார்த்து அநுஷ்டிப்பவராதல் பற்றி) சிரேஷ்டனான இவனைப்போலவே தாங்களும் கருமத்தைக்கைவிடுவர்கள். ஆகையால் இவனுங்கூடகருமயோகத்திலிருந்தபடியே ஆத்மாவின் உண்மையைநிருபித்து "நாம்செய்கிறோமில்லை"யென்று மதித்து ஆத்மஸாக்ஷாத்காரத்துக்குக் கருமயோகந்தான் தலையானஉபாயமென்றறுதியிட்டு, முழுதுந் தெரிந்துகொள்ளாத அவர்களுக்குப்பிரீதிசெய்யக்கடவன். [இதனால் பிரகிருதிக்கவ்வருகான ஆத்மஸ்வபாவத்தை நன்கறிவதனால் கர்த்ருத்வத்தைக் குணங்களிலேறிட்டுக் கருமத்தைஅநுஷ்டிக்க வேண்டுமென்றதாயிற்று. இங்கே அசேதநமானகுணங்களில்கர்த்ருத்வத்தையேறிடுகையாவது ஆத்மாவுக்கு ஸ்வபாவத்தாலே கர்த்ருத்

* அஹங்காரமாவது - அஹம் (நான்) என்பதற்கு அர்த்தமல்லாத பிரகிருதியில் அஹம் என்கிற அபிமாநத்தைச்செய்வது.

வமில்லாம லிருக்கச்செய்தே குணஸம்பந்தத்தாலே கர்த்தாவாகத் தோற்றுகிறதென்று நினைக்கை.]

(அ-கை.) இப்பொழுது, ஆத்மாக்கள் பரமபுருஷனுக்குச் சரீரமாயிருப்பது பற்றி அவனுக்கு சேஷப்பட்டிருக்கின்றமையை நினைத்து, குணத்தால்வரும் கர்த்ருத்வத்தை (ஸர்வ ஆத்மபூதனான) பரமபுருஷனிடத்தில் ஏறிட்டுக் கருமம் செய்யவேண்டுமென் றருளிச்செய்கிறார்.

మయి సర్వాణి కర్మాణి సంన్యస్యాధ్యాత్మచేతసా।
నిరాశీర్నిర్మమో భూత్వా యుధ్యస్వ విగతజ్వరః॥ ౩౦॥

(ரூ0) அர்ச்சுந! ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடியே அறிந்து ஸகல கருமங்களையும் நம்மிடத்தில்வைத்து பலத்தில் ஆசையின்றி என்னுடையதென்கிற வெண்ணத்தையுமொழித்து வருத்தமில்லாமல் யுத்தம்செய்.

என்றால்:—"இந்த ஆத்மாவானது ஸர்வேசுவரனான பரமபுருஷனுக்குச் சரீரமாய் அவன் ஏவிக்காரியங்கொள்ளும்படி அவனுக்கு அதீநமாயிருக்கையாலே ஸகல கருமங்களும் ஸர்வபூதாந்தராத்மாவான அவனாலே செய்யப்படுகின்றன" * என்று அநுஸந்தித்து, (அவைகள் கேவலம் பரமபுருஷனான நம்முடைய ஆராதநரூபமாயிருக்கையாலே) அவைகளின் பலத்தில் ஆசையையும் எனதென்கிற எண்ணத்தையு மொழித்து மனவருத்தமில்லாமல் தாராளமாய் யுத்தமுதலிய கருமங்களைச்செய். அதாவது:—¶ ஸர்வேசுவரன் தன் ஆராதநத்துக்காகத் தன்ஆத்மாக்களைக்கொண்டு தன் உபகரணங்களாலே தன் கருமங்களைச் செய்வித்துக்கொள்ளுகிறானென்று நினைத்து, கருமங்களில் எனதென்கிற புத்தியைவிட்டு, "அநாதிகாலமாய் நம்மைப்பற்றிவிடக்கிற பழையபாபங்களுக்கு நாமென்செய்வோம்" என்கிற பயத்தையுமொழித்து, "கருமத்தால்ஆராதிக்கப்பட்ட பரமபுருஷனே நம்மை ஸம்ஸாரத்தினின்றும் விடுவிப்ப"னென்கிற உறுதியோடு சுகமாகக் கருமயோகத்தையே செய்யென்று திருவுள்ளம்.

---

*இவ்வர்த்தம் பல ச்ருதிஸ்ம்ருதிகளில் பிரஸித்தம்: எங்ஙனேயென்னில்- అన్తః ప్రవిష్టశ్శాస్తా జనానాం సర్వాత్మా - అన్తః ప్రవిష్టం కర్తారమేతమ్— య ఆత్మని తిష్ఠన్నాత్మనోఽన్తరో యమాత్మా న వేద యస్య ఆత్మా శరీరం య ఆత్మానమన్తరో యమయతి స త ఆత్మాన్తర్యామ్యమృత இத்யாதி ச்ருதிகள், எம்பெருமானை பிரவர்த்திப்பிக்குமவனாகவும் ஜீவனை அவனால் பிரவர்த்திப்பிக்கப்படுமவனாகவும் சொல்லுகின்றன. ప్రశాసితారం సర్వేషాం இத்யாதி ஸ்ம்ருதிகளும், அப்படியே. సర్వస్య చాహం హృది సన్నివిష్టో మత్తః స్మృతిర్జ్ఞానమపోహనఞ్చ— ఈశ్వరస్సర్వభూతానాం హృద్దేశేఽర్జున తిష్ఠతి | భ్రామయన్ సర్వభూతాని యన్త్రారూఢాని మాయయా என்று மேலும் அருளிச்செய்யப்போகிறார்.

¶ பரமபுருஷனுடைய ஸர்வேசுவரத்வமும் ஸர்வசேஷித்வமும் తమీశ్వరాణాం పరమం మహేశ్వరం తం దైవతానాం పరమఞ్చ దైవతం-పతిం విశ్వస్య-పతిం పతీనాం இத்யாதி ச்ருதி ஸித்தம்.

(அ-கை.) இதுதான் உபநிஷத்துக்களில் திரண்ட ஸாரமான பொருளென்கிறார்.

యే మే మతమిదం నిత్య మనుతిష్ఠన్తి మానవాః।
శ్రద్ధావన్తోఽనసూయన్తో ముచ్యన్తే తేఽపి కర్మభిః॥ ౩౧॥

(௩௧) சாஸ்திரத்தை அநுஷ்டிக்கத்தக்கவரில் யாவர்கள், இதுதான் சாஸ்திரார்த்தமென்று நாம் நிஷ்கர்ஷித்தபடி இவ்வர்த்தத்தை இப்படியே அநுஷ்டிக்கிறார்களோ, அநுஷ்டிக்காவிட்டாலும் யாவர்கள் இதில் சிரத்தையோடிருக்கிறார்களோ, சிரத்தையில்லாவிடினும் யாவர் இதில் அசூயை கொள்ளாமலிருக்கிறார்களோ, அதாவது இதில் தோஷத்தை ஏறிடாமலிருக்கிறார்களோ, இவர்கள் யாவரும் அநாதிகாலமாய் பற்றிக்கிடக்கிற (ஸம்ஸாரஹேதுவான) ஸகல கருமங்களினின்றும் விடுபடுவார்கள். [அநுஷ்டிப்பவர்விடுபடுவது யுக்தம்; மற்றவரும் விடுபடுவார்களென்பது எப்படியெனில் - அநுஷ்டியாவிடினும் இதில் சிரத்தை பண்ணுவதினாலும் அசூயை கொள்ளாமையினாலும் அவர்களுக்கு ஸகல பாபங்களுந் தொலைகின்றன; அதனால் நாளடைவிலே இந்த அர்த்தத்தை அநுஷ்டித்து அப்புறம் விடுபடுவர்களென்று திருவுள்ளம்.]

(அ-கை.) எம்பெருமானுக்குத்திருவுள்ளமான உபநிஷத்தின்அர்த்தத்தை அநுஷ்டியாதவருக்கும் அதைப்பேணாதவருக்கும் அதில் அசூயை கொண்டவருக்கும் வரும் கெடுதி சொல்லுகிறது.

యే త్వేతదభ్యసూయన్తో నానుతిష్ఠన్తి మే మతమ్।
సర్వజ్ఞానవిమూఢాంస్తాన్ విద్ధి నష్టానచేతసః॥ ౩౨॥

(௩௨) "இந்த ஆத்மவஸ்துவெல்லாம் எனக்குச் சரீரமாயிருக்கையாலே என்னைப்பற்றியதாய் எனக்கு சேஷப்பட்டதாய் நான் ஏவினால் பிரவிருத்திக்குந் தன்மையதாயிருக்கிறது" என்கிற என் ஸித்தாந்தப்படி அநுஷ்டியாதவர்களும், இதில் சிரத்தைபண்ணாதவர்களும், இதில் அசூயை கொண்டவர்களும் ஒன்றிலும் ஒன்றுந்தெரியாத பெரும் மூடர்களாய்க் கெட்டுப்போவர்கள். [மனதுக்குக் காரியம் வஸ்துவை உள்ளபடி அறிகை;இவர்கள்மனதுக்கோ அதில்லை; அதில்லாமையாலே விபரீதஞானமுண்டாய்க் கெட்டுப்போகிறார்களென்று தாத்பரியம்.]

(அ-கை.) ஆக விப்படி "பிரகிருதியி லகப்பட்டவனைக் கர்த்தாவென்று நினைப்பது, அந்தப் பிரகிருதி குணங்களின் ஸம்பந்தத்தாலன்றி வேறில்லையென்றும் ஆனால்அந்தகர்த்ருத்வம் பரமபுருஷாயத்தமென்றும் அநுஸந்தித்து, கருமயோகத்துக்குத் தக்கவனாகிலும் ஞானயோகத்துக்குத் தக்கவனாகிலும் இருவரும்கருமயோகமே செய்யக்கடவர்கள். பிரஸித்தனோ மிகுதியும்அதையே செய்யவேண்டியது" என்றருளிச்செய்து, இனி இந்த அத்தியாயத்தின் மீதியாலே ஞானயோகம் செய்வது கஷ்டமென்றும் பிரமாதத்தை உண்டாக்குமென்றும் அருளிச்செய்கிறார்.

సదృశం చేష్టతే స్వస్యాః ప్రకృతేర్జ్ఞానవానపి।
ప్రకృతిం యాన్తి భూతాని నిగ్రహః కిం కరిష్యతి॥ 33॥

(௩௩) பிரகிருதிக்குப்புறம்பான ஆத்மவஸ்துவைத்தான் எப்போதும் அநுஸந்திக்கவேண்டுமென்று சொல்லுகிற சாஸ்திரஞானமுள்ளவனும், தன்னைத்தொடர்ந்த பிரகிருதியினது பழைய வாஸனையின்படி சப்தாதி விஷயங்களிலேயே பயிற்சிசெய்கிறான். ஏனெனில்-அசேதநத்தோடு கலசின ஜந்துக்கள் அநாதி வாஸனையைத் தொடாமலிருக்குமோ? அவைகளை சாஸ்திரக்ஞன் கட்டுப்படுத்தினமட்டில் இவன் செய்யும் கட்டு என்பயனுடைத்தாம்?

(அ-கை.) பிராணிகள் பிரகிருதியைத் தொடரும் வகை சொல்லுகிறது.

ఇన్ద్రియస్యేన్ద్రియస్యార్థే రాగద్వేషౌ వ్యవస్థితౌ॥ 33½॥

(௩௩உ) காது முதலியஞானேந்திரியத்துக்குசப்தம்முதலியவற்றிலும் வாக்கு முதலிய கருமேந்திரியத்துக்கு வசநம் முதலியவற்றிலும் அநுபவிக்கவேண்டுமென்கிற ஆசையானது பழைய வாஸனையின் வலிமையால் ஒழிக்கப்போகாதபடி வந்து சேருகிறது; அந்த ஆசை நிறைவேறுவதற்குஏதேனும் விரோதம் வருமாகில், அதனிடத்தில் அமோகமான குரோதம் விளைகிறது. [இவ்விரண்டும்; அதாவது-காமம் குரோதமென்கிற விரண்டும், ஞானயோகத்திலிழிந்து ஸகல இந்திரியங்களையு மடக்கியவனையும் தாம் வசப்படுத்தி, பலாத்காரமாய் தங்காரியங்களோடு கொண்டுசேர்க்கின்றன. பின்பு இவன் ஆத்மஸ்வருபத்தை நாடாமல் நசித்துப்போகிறான்.$]

తయోర్న వశమాగచ్ఛేత్తౌ హ్యస్య పరిబన్ధినౌ॥ 34॥

(௩௪) புருஷனால் ஜயிக்கக்கூடாத சத்துருக்கள் காமமென்னும் குரோதமென்னு மிரண்டுண்டாகையாலே வீணிலே ஞானயோகத்திலிழிந்து அவற்றிற்கு வசப்படக்கடவனல்லன்.

శ్రేయాన్స్వధర్మో విగుణః పరధర్మాత్స్వనుష్ఠితాత్।
స్వధర్మే నిధనం శ్రేయః పరధర్మో భయావహః॥ 35॥

(௩௫) பிரகிருதியிலகப்பட்ட புருஷன் தனக்கேலாத ஞானயோகத்தைச் சிறிதுகாலம் குறைவற அநுஷ்டித்துவந்து இடையில் விட்டு விட்டுஅதனால் பிரமாதத்தைவிளைவித்துக்கொள்வதைப்பார்க்கிலும், தனக்கு அடுத்ததாய் சுகமாய் செய்யக்கூடியதான கருமயோகத்தைச்செய்துவந்து அதில் ஸித்திபெறுமற்போனாலுங்கூடமிக நலமாம். அதெப்படியென்றால்:—ஞானயோகத்துக்கு விரோதியான பாவமொன்று மில்லாமையாலே மறுஜந்மத்திலாவது இந்திரியவியாகூலமற்றுச் செய்யும்படி ஸம்பவிக்குமன்றோ? ஆகையால் தன்தர்மமானகருமத்தைவிட்டுப் பிறர்தர்மமான ஞானத்தைமேற்கொள்வதுஎப்போதும் அநர்த்தந்தான்.

---

$ [] இதற்குள்ளகப்பட்ட விஷயம் - பூர்வ சுலோகத்தோடு இந்த சுலோகத்தை ஒன்றுபடுத்துவதால் ஏர்ப்பட்ட தாத்பரியம்.

(அ-கை.) அர்ச்சுநன் பிரசிநம்பண்ணுகிறான்.

అర్జున ఉవాచ॥ అథకేన ప్రయుక్తోయం పాపఞ్చరతి పూరుషః।
అనిచ్ఛన్నపి వార్ష్ణేయ బలాదివ నియోజితః॥ ౩౬॥

(௩௬) ஞாநயோகத்திலிழியுமவன் "நான் விஷயாநுபவத்தில் இழியக்கடவேனல்லேன்" என்கிற உறுதியோடிருக்கச்செய்தே அவனை வலிவில் இழுத்து விஷயங்களை அநுபவிக்கும்படி செய்வது யாது? என்று கேட்டான்.

శ్రీభగవానువాచ॥ కామఏష క్రోధఏష రజోగుణసముద్భవః।
మహాశనో మహాపాప్మా విద్ధ్యేనమిహ వైరిణమ్॥ ౩౭॥

(௩௭) அதற்குக் கண்ணன் திருவாய் மலர்ந்தருளியது - அர்ச்சுந! தோன்றுவதுந்திரிவதுமாயிருக்கிறப் பிரகிருதியோடு சேர்ந்திருக்கிறவனாயில் புருஷன் ஞாநயோகத்தை ஆரம்பித்தானாகில் ரஜோகுணத்தின் காரியமாய் பழைய வாஸனையாலுண்டான காமமென்னும் பகையானது, இவனைச் சப்தாதிவிஷயங்களில் ஏவாமல் விடாது. அப்போது இவனுக்கு அபேக்ஷை நிறைவேறுமற் போமாகில், அதற்கு விரோதிகளாய்த் தோன்றும் பிராணிகளிடத்தில் (அந்த காமமே) கோபமாகத்திரிந்து, ஹிம்ஸைமுதலான கொடுஞ்செயலையுஞ்செய்யும்படி செய்கிறது. ஆகையால் ஞாநயோகத்துக்கு இதுவே விரோதியென்றறி.

ధూమేనావ్రియతే వహ్ని ర్యథాదర్శో మలేనచ।
యథోల్బేనావృతో గర్భ స్తథా తేనేదమావృతమ్॥ ౩౮॥

(௩௮) அக்னியைப் புகையும் கண்ணாடியை அழுக்கும் கர்ப்பத்தைக் கருப்பையும் மூடிக்கொள்வதுபோல இந்தப் பிராணி ஸமூஹத்தைக் காமமானது மூடிக்கொண்டிருக்கிறது.

(அ-கை.) அது மூடும்படியை அருளிச்செய்கிறார்.

ఆవృతంజ్ఞాన మేతేన జ్ఞానినో నిత్యవైరిణా।
కామరూపేణకౌన్తేయ దుష్పూరేణానలేనచ॥ ౩౯॥

(௩௯) ஞாநஸ்வபாவனான இந்த ஜந்துவின் ஆத்மஞாநத்தை, (விஷயமோஹத்தைச்செய்யும் நித்திய சத்துருவான) காமமானது, எட்டாதவஸ்துவிலெல்லாம் ஆசையை விளைவித்து, அவை கிடைத்தாலும் போதுமென்கிற திருப்தியை உண்டுபண்ணுமல் மூடிவிடுகிறது.

(அ-கை.) எவ்வித உபகரணங்கள் கொண்டு மூடுகிறதென்றால் அருளிச்செய்கிறார்.

ఇన్ద్రియాణిమనో బుద్ధి రస్యాధిష్ఠానముచ్యతే।
ఏతైర్విమోహయత్యేష జ్ఞానమావృత్యదేహినమ్॥ ౪౦॥

(௪௦) காமமானது, இந்திரியம் மனது புத்தி இவைகளோடு ஆத்மாவில் இருந்துகொண்டு, (விஷயமென்றால்கொண்டாட்டமான) அவைகளைக் கொண்டே பிரகிருதியோடு கலசிய ஞாநஸ்வரூபனான இந்த ஜீவனை மூடி, நானாவிதமாய்மோஹிக்கச்செய்கிறது. அதனால் ஆத்மஞாநத்தில் கண் வைக்கவொட்டாமல் விஷயத்தில் திருப்பிவிடுகிறது.

తస్మాత్త్వమిన్ద్రియాణ్యాదౌ నియమ్యభరతర్షభ।
పాప్మానమ్ప్రజహి హ్యేనం జ్ఞానవిజ్ఞాననాశనమ్॥౪౧॥

(௪௧) இந்திரிய வியாபாரங்களையெல்லா மொழித்துச் செய்யவேண்டியதான ஞாநயோகத்தில் இழிந்தவனுக்கு, இந்தக் காமமென்னும் சத்துருவானது விஷயத்தில் உண்டான ஊற்றத்தாலே ஆத்மஞாநத்தை விரோதிக்கின்றமையால், (பிரகிருதியுடன் கலசி இந்திரிய வியாபாரங்களிற் பழகிய) நீ, மோக்ஷோபாயந் தேடத்தொடங்கும்போதே (இந்திரியவியாபாரரூபமான) கருமத்திலிழிந்து, (ஆத்மஸ்வரூபஞாநத்தையும் அதின் விவேகத்தையும் போக்கடிக்கின்ற) நாசமான பாசத்தை ஒழிக்கப்பார்.

(அ-கை.) ஞாநவிரோதிகளுக்குள் இதுதான் பிரதாநமென்கிறார்.

ఇన్ద్రియాణిపరాణ్యాహు రిన్ద్రియేభ్యఃపరమ్మనః।
మనసస్తుపరాబుద్ధి ర్యోబుద్ధేఃపరతస్తుసః॥౪౨॥

(௪௨) இந்திரியங்கள் விஷயத்தைத் தேடப்புக்கால், ஆத்மாவின் விஷயத்தில் ஞாநம் பிறவாதாகையாலே ஞாநவிரோதிகளில் முக்கியம் இந்திரியங்கள்: அவை அடங்கினாலும் மனது விஷயத்தைத் தேடுமாகில் அந்த ஞாநம் உண்டாகமாட்டாதாகையாலே அவற்றிலும் மனது முக்கியம்: அம்மனது அடங்கினாலும் புத்தியானது, விபரீதமாகஎண்ணத்தொடங்குமாகில்அது உண்டாகமாட்டாதாகையால் அதிலும் புத்தி முக்கியமாம்: இவையெல்லாம் அடங்கினாலும் (வாஸனையாலுண்டான இச்சையென்கிற) காமம்இருந்ததாகில்,அதுவே அவ்விந்திரியம் முதலானவைகளைத் தன்வசமாக்கி ஞாநமுண்டாகாதபடி செய்துவிடும். ஆகையா லிதுவே யெல்லாவற்றிலும்சீரியது.

ఏవమ్బుద్ధేఃపరమ్బుధ్వా సంస్తభ్యాత్మానమాత్మనా।
జహిశత్రుమ్మహాబాహో కామరూపన్దురాసదమ్॥౪౩॥

(௪௩) ஓ மஹாபாகுவே! ஞாநவிரோதிகளுக்குள் புத்தியைக்காட்டிலும் காமமானது மேலானதென்றோர்ந்து அந்த புத்தியைக்கொண்டு மனதைக் கருமயோகத்தில் நிறுத்தி, காமமென்னும் இக்கொடும்பகையை வெல்லப்பார்.

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,

மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ:.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# நான்காவது அத்யாயம்

## அவதாரிகை.

மூன்றுவது அத்தியாயத்தில் பிரகிருதியோடு கலசிய புருஷனுக்கு, மோக்ஷாபிலாஷையுண்டானாலும் உடனே ஞாநயோகத்தில் இழியப்போகாதாகையாலே கருமயோகமே செய்யத்தக்கதென்றும்; ஞாநயோகத்தில் அதிகாரமுள்ளவனுக்கும் (நான் செய்யவில்லையென்கிற வெண்ணத்துடனே) கருமயோகம் செய்வதே மேலானதென்றும்; அதில் விசேஷமாய்ஞாநாநுஷ்டாநங்களால் பிரஸித்தனுக்கோ மிகுதியும் அதுவே செய்யத்தக்கதென்றும் தகுந்த காரணத்தோடு அருளிச்செய்து, நான்காவதில் - கருமயோகமானது லோகரக்ஷணத்துக்காக இந்த மந்வந்தரத்தின் ஆதியிலே தம்மால் அருளிச்செய்யப்பட்டமையால் கருமத்தை அவசியம் செய்யவேண்டுமென்று திடப்படுத்தி; இந்த கருமயோகமும் ஞாநத்தை உட்கொண்டமையால் இதுவே ஞாநயோகரூபந்தானென்று மருளிச்செய்து கருமயோகத்தின் ஸ்வரூபம், அதின் பேதம், அதில் ஞாநபாகத்துக்குப் பிராதாந்யம், இவைகளையெல்லாம் அருளிச்செய்கிறுர். * பிரஸங்கமாய் எம்பெருமானுடைய அவதாரரஹஸ்யமும் சொல்லப்படுகிறது.

శ్రీభగవానువాచ-ఇమంవివస్వతేయోగం ప్రోక్తవానహమవ్యయమ్।
వివస్వాన్మనవేప్రాహ మనురిక్ష్వాకవేబ్రవీత్ ॥౧॥
ఏవమ్పరమ్పరాప్రాప్త మిమంరాజర్షయోవిదుః।
సకాలేనేహమహతా యోగోనష్టఃపరన్తప॥౨॥
సఏవాయమ్మయాతేద్య యోగఃప్రోక్తఃపురాతనః।
భక్తోసిమేసఖాచేతి రహస్యంహ్యేతదుత్తమమ్॥ 3॥

(க-உ-ஙு) அர்ச்சுந! இப்பொழுது நம்மால் சொல்லப்பட்ட இந்த யோகமானது கேவலம் உன்னை யுத்தத்தில் புகவிடுவதற்காகச் சொன்னதாக நினையாதே கொள். மந்வந்தரத்தின் ஆதியில், ஸகலலோகமுங் கடைத்தேற நிமித்தம் மோக்ஷஸாதநமாக இதை நாம் விவஸ்வானுக்குச் சொன்னேம்; அவர் மநுவுக்கும் அவர் இக்ஷ்வாகுவுக்கும் சொல்ல இப்படி பரம்பரையாய் வந்தது; இதை ராஜருஷிகளெல்லா மறிவார்கள். கேட்பவரின் புத்திக்குறைவிஞல் வெகுகாலத்துக்குமுன் இது நஷ்டப்பிராயமாய்விட்டது. அதையே இப்பொழுது சிறிதும் பிசகாதபடி, (நமக்குத் தோழனுய் நம்மிடத்தில் மிகுதியும் பக்தியுடன் நம்மையே சரணுகப்பற்றிய) உனக்கு விஸ்தா

---

* பிரஸங்கமாவது - ஒன்றின்மீதொன்ருய் வரும் பேச்சு.

ரமாகச்சொன்னோம். இது, வேதாந்த ரஹஸ்ய ஞானமாகையால் நம்மாலல்லது மற்றொருவராலும் சொல்லுந் திறத்ததன்று.

(அ-கை.) இதனிடையில் எம்பெருமானுடைய அவதாரத்தின் உண்மையை அறிவதற்காக அர்ச்சுநன் பிரசிநம் பண்ணுகிறான்.

అర్జున ఉవాచ॥ అపరం భవతో జన్మ పరం జన్మ వివస్వతః।
కథమేతద్విజానీయాం త్వమాదౌ ప్రోక్తవానితి॥౪॥

(ச) கிருஷ்ண! காலஸங்கியையைப்பார்த்தால் அடியேன் பிறந்த (ஸம) காலத்தில்தான் தேவரீரும் அவதரித்ததாகத் தெரிகிறது; விவஸ்வானுடைய பிறப்போ இருபத்தெட்டு சதுர்யுகமானதாகத் தெரிகிறது; இப்படியிருக்க, ஆதியில் விவஸ்வானுக்குத் தேவரீர் அருளிச்செய்ததாகச் சொன்னால் அதை யெங்ஙனம் நம்புவது? [மஹான்கள் ஜந்மாந்தரவிருத்தாந்தம் அறிந்து சொல்லக்கூடுமாகையாலும், கண்ணன் மஹானென்றும் ஸர்வேசுவரனென்றும் அர்ச்சுநனுக்குத்தெரியுமாகையாலும் ¶ கண்ணன் வார்த்தையில் விரோதமில்லையென்று தெரிந்திருக்கச்செய்தே, அர்ச்சுநன் தெரியாதவன் போல் கேட்பதைப்பார்த்தால் (நிகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாநனாய் ஸார்வஜ்ஞ ஸத்தியஸங்கல்பாதிகளுடையனான) பரமபுருஷனுக்கு, (கருமாதீனரான தேவமனுஷியாளோடொத்திருக்கு) மிந்த ஜந்மம் என்ன இந்திரஜாலம்போல் மாயமா? இல்லையென்று ஸத்யமா? ஸத்யமானால் ஜந்மத்தின் பிரகாரமென்ன? திருமேனி என்ன ஸ்வரூபம்? எப்பொழுது ஜந்மம்? எதர்க்காக வெடுத்ததென்கிற சங்கையைப் பரிஹரிப்பதற்காகக் கேட்டதாய்த் தெரியவருகிறது.]

(அ-கை.) இப்படி வினவிய அர்ச்சுனனைப்பார்த்து கண்ணன் அருளிச்செய்கிறார்.

శ్రీభగవానువాచ॥ బహూని మే వ్యతీతాని జన్మాని తవ చార్జున।
తాన్యహం వేద సర్వాణి న త్వం వేత్థ పరన్తప॥౫॥

(ரு) அர்ச்சுந! எனக்கும் பல ஜந்மங்கள் கழிந்தன, உனக்கு மப்படியே; ஆனால் அவை யாவும் எனச்குத்தெரியும் உனக்குத் தெரியாது. [இங்கெ உனக்கும் என்று அர்ச்சுனன் ஜந்மத்தைத் திருஷ்டாந்தமாகச் சொல்லுகையாலே எம்பெருமானுடைய அவதாரம் ஸத்யமென்றதாயிற்று.]

(அ-கை.) அவதாரத்தின்படியும், திருமேனியின் உண்மையும், திருவவதாரத்துக்குக் காரணமும் அருளிச்செய்கிறார்.

అజోఽపి సన్నవ్యయాత్మా భూతానామీశ్వరోఽపి సన్।
ప్రకృతిం స్వామధిష్ఠాయ సమ్భవామ్యాత్మమాయయా॥౬॥

---

¶ அர்ச்சுனன் పరంబ్రహ్మ పరంధామ ఇత్యాదియாக மேலேசொல்லப்போகிறபடியாலும், కృష్ణ ఏవ హి లోకానాముత్పత్తిః இத்யாதியாக பீஷ்மாதிகள் ராஜசூயயாகாதிகளில் சொல்லக்கேட்டானாகையாலும் தெரியும்.

(௬) பிறப்பில்லாமை, அழிவில்லாமை, ஸர்வேசுவரத்வமென்கிற பரமேசுவரன் தன்மைகளிலொன்றும் விடாமல் * ஸ்வஸ்வரூபத்துடனே என் இச்சையினால் அவதரிக்கிறேன்; அதாவது - ஸமஸ்தகல்யாண குணாத்மகனாயிருக்கையாகிற ஸர்வேசுவர ஸ்வபாவத்தைவிடாமல் என் ஸ்வரூபத்தையே என் ஸங்கல்பத்தால் தேவாதிரூபமாகச்செய்துக்கொண்டு அவதரிக்கிறேனென்றபடி. இவர்த்தம் (అజాయమానో బహుధా విజాయతే) என்று சுருதியும் சொல்லுகிறது.

[இப்படி அர்த்தம் சொல்லாதபோது బహూని మేవ్యతీతాని జన్మానితవచార్జున। తాన్యహంవేద సర్వాణితదాత్మానం సృజామ్యహమ్॥జన్మకర్మచ మేదివ్యంఏవంయోవేత్తి తత్త్వతః என்கிற முன்பின்னோடு விரோதிக்கும்.] మాయావయునంజ్ఞానం என்று நிகண்டுக்காரர் சொல்லியபடி, மூலத்தில் మాయా சப்தம் ஸங்கல்பரூபமான ஞானபரம். మాయయాసతతంవేత్తి ప్రాణినాఞ్చశుభాశుభమ్ என்று முன்னோர்களும் மாயாசப்தத்தாலே ஞானத்தைச்சொன்னார்கள். அப்படியே பிரகிருதியென்றால் இங்கே ஸ்வபாவபரம்.

(அ-கை.) அவதாரகாலத்தை அருளிச்செய்கிறார்.

యదాయదాహిధర్మస్య గ్లానిర్భవతిభారత।
అభ్యుత్థానమధర్మస్య తదాత్మానంసృజామ్యహమ్॥౭॥

(௭) நாம் அவதரிப்பதற்கு ஒருகால நியமமில்லை; வேதத்திற்சொன்ன வருண ஆசிரம ஆசாரங்களுக்கு வாட்டமுண்டாய் எப்பொழுதெப்பொழுது அதருமத்துக்குக் கிளர்ச்சியுண்டாகுமோ, அப்பொழுதப்பொழுது முற்கூறியபடியே நாம் அவதரிக்கிறோம்.

పరిత్రాణాయసాధూనాం వినాశాయచదుష్కృతామ్।
ధర్మసంస్థాపనార్థాయ సమ్భవామియుగేయుగే॥౮॥

(௮) அவதரிப்பதற்குப் பிரயோஜநம் அருளிச்செய்கிறார். ஸாதுக்களை ரக்ஷிக்கவும், துஷ்கர்மாக்களை நாசம்செய்யவும், தருமத்தை ஸ்தாபிக்கவும் யுகந்தோறும் அவதரிக்கிறேன் [என்று சப்தார்த்தம்.]

ஸாதுக்களாவார் கீழ்ச்சொன்ன லக்ஷணமுள்ள ஸ்ரீவைஷ்ணவசிகாமணிகள்: அவர்கள் நம்மை ஆச்ரயிக்கப்பிரவர்த்தித்து, (நமது நாம கர்ம ஸ்வரூபங்கள் வாக்குக்கும் மனதுக்கு மெட்டாமையாலே நம்மைக்கண்டாலல்லது தமக்கு ஆத்மயாத்ரை நடவாமல், ஒருக்ஷணத்தை ஆயிரங்கற்பமாக நினைத்தவர்களாய் உருமாய்ந்துப்போவர்கள் என்று நமது ஸ்வரூபம், சேஷ்டிதம்,

---

* ஸ்வஸ்வரூபமோ ఆదిత్యవర్ణం తమసఃపరస్తాత్ ॥ క్షయన్తమస్యరజసఃపరాకే। యఏషోఽన్తరాదిత్యేహిరణ్మయఃపురుషః ॥ తస్మిన్నయంపురుషోమనోమయః అమృతోహిరణ్మయః॥ సర్వేనిమేషాజజ్ఞిరేవిద్యుతఃపురుషాదధి ॥ భారూపస్సత్యసఙ్కల్ప ఆకాశాత్మాసర్వకర్మా॥ సర్వకామస్సర్వగన్ధస్సర్వరసఃమహారజతంవాసః என்று சுருதியில் பிரஸித்தம்.

கடாக்ஷம், ஸம்பாஷணம் முதலியவைகளைத் தந்து அவர்களை ரக்ஷிப்பதற்காகவும்; அப்படியில்லாமல் கெட்டநடையில் இருப்பாரை யழிப்பதற்காகவும், நமது ஆராதநரூபமானவைதிகத்தருமம் க்ஷீணமாய்ப்போனால் அதை (ஆராத்யனை) நம் ஸ்வரூபத்தைக்காட்டி ஸ்தாபிப்பதற்காகவும், தேவமநுஷ்யாதிரூபமாய் யுகந்தோறும் அவதரிக்கிறோம். [கிருதயுகமென்றும் திரேதாயுகமென்றும் இப்படி யுகவிசேஷ நியமமுமில்லை] [என்று பாஷியம்.]

జన్మకర్మచమేదివ్య మేవంయోవేత్తితత్త్వతః।
త్యక్త్వాదేహంపునర్జన్మ నైతిమామేతిసోర్జున॥౯॥

(௯) திவ்யமான என் ஜந்மத்தையும் கர்மத்தையும் உள்ளபடியே எவன் அறிகிறானோ, அர்ச்சுந! அவன் தேஹத்தைவிட்டு என்னை அடைகிறான்; மீண்டும் வருகிறதில்லை [என்று சப்தார்த்தம்.] இதற்கு பாஷியம்:—

(இப்படி) கர்மாதீநமாய், (ஹேயத்ரிகுணரூபப்) பிரகிருதி ஸம்பந்தரூபமாயிருக்கிற ஜந்மமில்லாதவனாய், ஸர்வேசுவரத்வம் ஸர்வக்ஞத்வம் ஸத்யஸங்கல்பத்வம் தொடக்கமான ஸமஸ்த கல்யாண குணாத்மகனாயிருக்கிற நம்முடைய ஸ்வரூபமும் சேஷ்டையும், அப்ராக்ருதமாய் நமக்கே அஸாதாரணமாயிருக்கிறதென்றும், ஸாதுக்களை ரக்ஷிப்பதும் பிராணிகள் நம்மை ஆஶ்ரயிப்பதுமே அதற்குப்பிரயோஜந மென்றும், உள்ளபடியே எவன் அறிகிறானோ, அவன் அப்பொழுதுண்டான தேஹத்தைவிட்டவுடன் மறுபடியும் ஜந்மமெடுக்காமல் நம்மையே யடைகிறான். நம்முடைய திவ்யமான ஜந்மசேஷ்டிதங்களை உள்ளபடியே அறிந்தமையால், நம்மை ஆஶ்ரயிக்கவொட்டாமல் விரோதிக்கிற ஸகலபாபங்களும் நசித்து இந்த ஜந்மத்திலேயே முன் சொன்னபடி நம்மை ஆஶ்ரயித்து நம்மையே விரும்பி நம்மையே நினைத்திருந்து நம்மையே அடைகிறான். [என்று பாஷ்யம்.]

(அ-கை.) அதையே அருளிச்செய்கிறார்.

వీతరాగభయక్రోధా మన్మయామాముపాశ్రితాః।
బహవోజ్ఞానతపసా పూతామద్భావమాగతాః॥౧౦॥

(௧0) ராகம், பயம், குரோதம் இவற்றையொழித்து நம்மை ஆஶ்ரயித்து நாமே கதியாயிருந்த வெகுபேர்கள் நமது ஜந்மகர்மங்களை யுள்ளபடியே அறிவதென்கிற பெருந்தவத்தால் பரிசுத்தர்களாய் நமது ஸ்வபாவத்தையடைந்தார்கள். இப்படியே * வேதமும் சொல்லுகிறது.

యేయథామాంప్రపద్యన్తే తాంస్తథైవభజామ్యహమ్।
మమవర్త్మానువర్తన్తే మనుష్యాఃపార్థసర్వశః॥౧౧॥

(௧௧) என்னை எவர்களெப்படி ஆஶ்ரயிக்கிறார்களோ, அவர்களை நான் அப்படியே அடைகிறேன்; ஸகலமநுஷ்யர்களும் என் மார்க்கத்தையே அநுஸரிக்கிறார்கள். [என்று சப்தார்த்தம்.] இதற்கு பாஷியம்:—

---

* తస్యధీరాఃపరిజానన్తియోనిమ్. புத்திமான்களுக்குள் சிறந்தவர்களே அவனுடைய ஜந்மப்பிரகாரத்தை அறிகின்றார்களென்றர்த்தம்.

நம்மை ஆஶ்ரயிக்கவேண்டுமென்கிற அபேக்ஷையுள்ளவர்களை நாம் கேவலம் தேவ மநுஷ்யாதி ரூபமாய் மாத்திரம் அவதரித்துப் பரிபாலிக்கிறோமில்லை. பின்னை நம்மை அடையக்கோரி எவர்கள் எந்தப்பிரகாரம் தம் அபேக்ஷைக்குத்தக்கபடி நம்மைநினைத்து ஆஶ்ரயிக்கிறார்களோ, அவர்களுக்கு அவரிஷ்டப்படி நம் தரிசநம் கொடுக்கிறோம். இவ்விஷயத்தில் அதிகமாய்ச் சொல்லுவதென்ன? ஸகலமநுஷ்யர்களும் நம்மை அநுஸரிக்கவேண்டுமென்றே விரும்பியவர்களாய், யோகிகளுடைய வாக்குக்கும் மனதுக்கு மெட்டாத நமது ஸ்வபாவமெல்லாவற்றையும் தமது கண் முதலிய கரணங்களாலே தாம் அபேக்ஷித்தபடியெல்லாம் அநுபவித்து மீண்டும் நம்மைத் தொடர்ந்து நாமிட்ட வழக்காயிருக்கிறார்கள்.

(அ-கை.) இப்படி பிரஸங்கமாய்ச் சொல்லிவந்த விஷயத்தை முடித்து, பிரகிருதம் கருமயோகத்துக்கே ஞாநாகாரமுண்டென்று அருளிச்செய்வதற்காக, அப்படிப்பட்ட கர்மயோகாதிகாரி கிடைப்பது அரிதென்கிறார்.

కాంక్షన్తః కర్మణాం సిద్ధిం యజన్త ఇహ దేవతాః।
క్షిప్రం హి మానుషే లోకే సిద్ధిర్భవతి కర్మజా॥౧౨॥

(கஉ) கர்மஸித்தியை அபேக்ஷித்து இந்த தேவதைகளைமாத்திரம் ஆராதிக்கிறார்கள்; காரணம்:—* மநுஷ்யலோகத்தில் உடனே கருமஸித்தியுண்டாகிறது. [என்று சப்தார்த்தம்.] இதற்கு பாஷியம்:—

லௌகிக புருஷர்கள் யாவருமே அநாதிகாலமாய்த்தொடர்ந்த பாவங்கள் தொலையாமையாலே விவேகமற்றவர்களாய் தங்களுக்கு உடனே பலம் கிடைக்க வேண்டுமென்று ஆசைப்பட்டு, மோக்ஷவிரோதியான புத்திரன் பசு அன்னம்முதலிய பலன்களுக்காக ஸகல கர்மங்களையும் இந்திராதிதேவதைகளின் ஆராதநார்த்தமாகமாத்திரஞ் செய்கிறார்கள். அதுவேயல்லது ஒருவனாகிலும் ஸம்ஸாரத்தை வெறுத்து மோக்ஷகாமனாய் முன் சொன்ன கருமயோகத்தைப் பலத்தில் அபேக்ஷையின்றி, (இந்திராதிதேவதைகளுக்கு ஆத்மாவாய் ஸகல யக்ஞங்களுக்கும் போக்தாவான) நமக்கு ஆராதனமாகச் செய்பவனில்லை.

(அ-கை.) கீழ்ச்சொன்ன கர்மயோகத்தை ஆரம்பிக்கவொட்டாமல் தடைசெய்கிற பாபம் நசிக்கும் வழி அருளிச்செய்கிறார்.

చాతుర్వర్ణ్యం మయా సృష్టం గుణకర్మవిభాగశః।
తస్య కర్తారమపి మాం విద్ధ్యకర్తారమవ్యయమ్॥౧౩॥

(கங) குணகர்மங்களின் பிரிவின்படி என்னால் நான்குவர்ணம் சிருஷ்டிக்கப்பட்டது; நான் அதற்குக் கர்த்தாவாயிருக்கச்செய்தேயும் கர்த்தாவல்லேனென்று நிர்விகாரனான என்னையறி [என்று சப்தார்த்தம்.] பாஷியம்:—

---

* மநுஷ்யலோகசப்தம் ஸ்வர்க்காதிகளையுங் காட்டக்கடவது.

நான்குவர்ணங்களுடன்கூடிப் பிரம்மாதி ஸ்தம்பபர்யந்தமான ஸகல லோகமும், ஸத்வம்முதலியகுணங்களின் பிரிவுக்குத்தக்கபடியும், அதுக்கேற்ற சமம் முதலிய கருமங்களின் பிரிவுக்குத்தக்கபடியும் பிரித்து என்னால் * ஸ்ருஷ்டிக்கப்பட்டது. என்னாலேயே ரக்ஷிக்கப்படுகிறது, என்னாலேயே ஸம்ஹரிக்கப்படுகிறது. இப்படி விசித்திரமான இந்த ஸ்ருஷ்டி முதலியவற்றிற்கு நான் கர்த்தாவாயிருந்தாலும் கர்த்தாவல்லேனென்றுமறி. [இந்த அம்சம் மேல் சுலோகத்தில் விவரிக்கப்படும்.]

(அ-கை.) எப்படியென்றால் அருளிச்செய்கிறார்.

నమాంకర్మాణిలింపన్తి నమేకర్మఫలేస్పృహా।

(கஙூ) என்னைக் கர்மம் ஸம்பந்திக்கமாட்டாது; எனக்குக் கர்மபலத்தில் அபேக்ஷையில்லை [என்று சப்தார்த்தம்.] இதற்கு பாஷியம்:—

விசித்திரமான இந்த ஸ்ருஷ்டி முதலிய வியாபாரங்களில் நமக்கு யாதொரு ஸம்பந்தமு மில்லை; (அதாவது - தேவர்களென்றும் மனிதர்களென்றும் பலவிதமாகப் படைக்கப்பட்டுள்ள இந்த விசித்திரமெல்லாம் நம்மால் வருமதல்ல; அர்ச்சுந! அந்தந்த ப்ராணிகளின் புண்ணியபாபங்களுக்குத்தக்கபடி உண்டாகின்றன. ஆனதுபற்றியே நாம் சிருஷ்டிகர்த்தாவா யிருக்கச் செய்தேயும் நம்மைக் கர்த்தாவல்லவென்கிறது. மேலும் சிருஷ்டிக்கப்படும் பிராணிகள், சிருஷ்டியில் தங்களுக்குக் கிடைத்த சரீரம்முதலியவைகளைக் கொண்டு, (பலாபேக்ஷைக்கு ஹேதுவான தம் கர்மத்துக்குத்தக்கபடி) நமது சிருஷ்டியிலகப்பட்ட போக்யபதார்த்தங்களை அநுபவிக்கிறபடியால், சிருஷ்டிமுதலிய வியாபாரங்களாலுண்டாகும் பலத்தில் அபேக்ஷையும் அவர்களுக்கேயல்லது நமக்கில்லை. [அப்படியே ० ஸூத்திரகாரரும் சொன்னார். ஸ்ரீபராசரபகவானும் அப்படியே $.]

ఇతిమాంయోభిజానాతి కర్మభిర్నసబధ్యతే॥౧౪॥

(கச) இவ்வாறு சிருஷ்டிமுதலிய வியாபாரங்களுக்கு நாம்கர்த்தாவாயிருக்கச்செய்தேயும் கர்த்தாவல்லோமென்பதையும், அப்படியே சிருஷ்டி

---

* ஸ்ருஷ்டியென்றது - ரக்ஷணாதிகளுக்கும் உபலக்ஷணம்.

० సూ। వైషమ్యనైర్ఘృణ్యేనసాపేక్షత్వాత్ என்று.

$ నిమిత్తమాత్రమపిమేసృజ్యానాంసర్గకర్త్రి। ప్రధానకారణీభూతాయతోవై సృజ్యశక్తయః॥ నిమిత్తమాత్రంముక్త్వైవం నాన్యత్కించిదపేక్షతే। నీయతేతపతాంశ్రేష్ఠ స్వశక్త్యావస్తువస్తుతామ్॥ சிருஷ்டிக்கப்படுகிற ஜீவர்களின் சிருஷ்டிக்குமாத்திரம் இந்த பரமபுருஷன் நிமித்தமேதவிர தேவாதிரூபமான விசித்திரத்துக்கெல்லாம் சிருஷ்டிக்கப்படும் ஜீவர்களின் பிராசீந கருமசக்திதான் பிரதானகாரணம்; ஆகையால் இந்தஜீவராசியானது நிமித்தத்துக்குமாத்திரம் எம்பெருமானை அபேக்ஷித்துத் தனது பிராசீந கர்மவாஸனையின்படி தேவாதிபேதத்தை யடைகிறதென்று பொருள்.

முதலிய வியாபாரங்களால் வரும் பலத்தில் நமக்குச் சிறிதும் ஸம்பந்தமில்லையென்பதையும் எவனறிகிருனே! அவனைக் (கர்மயோகத்தி விழியவொட்டாமற்றடுக்கிற) பலாபேக்ஷை முதலிய எவ்விதத் தொல்வினையும் கட்டுப்படுத்தமாட்டாது.

ఏవంజ్ఞాత్వాకృతంకర్మ పూర్వైరపిముముక్షుభిః।
కురుకర్మైవ తస్మాత్త్వం పూర్వైః పూర్వతరంకృతమ్॥౧౫॥

(௧௫) இப்படி நமது ஸ்வரூபம் ஸ்வபாவம் முதலியவற்றை யறிந்து அதனுல் ஸகல பாபங்களையும் போக்கடித்து, பூர்வீகமோக்ஷார்த்திகள் பலரும் கர்மத்தையே அநுட்டித்தார்கள். ஆகையால் நீயும் அப்படியே இப்பொழுது நாம் சொன்னபடி நம்மை அறிந்து அதனுல் பாவமற்றவனுய் விவஸ்வான் மநு முதலான பூர்வீகர்களால் செய்யப்பட்டதாயும் அக்காலத்திலேயே நம்மால் உபதேசிக்கப்பட்டதாயும் புராதநமாயுமுள்ள கர்மயோகத்தை நாம்சொல்லுகிறபடியே அநுஷ்டிக்கக்கடவாய்.

(அ-கை.) இப்போது தாம் அருளிச்செய்கிறபடி கர்மத்தைக்கண்டறிவது மிக துர்லபமென்கிருர்.

కింకర్మ కిమకర్మేతి కవయోఽప్యత్ర మోహితాః।
తత్తేకర్మ ప్రవక్ష్యామి యద్జ్ఞాత్వా మోక్ష్యసేఽశుభాత్॥౧౬॥

(௧௬) மோக்ஷத்தைக்கோரியவன் செய்யவேண்டிய கர்மம் இன்னவிதமென்றும் அதற்குள்பட்ட (ஆத்மயதார்த்த) ஞாநம் இன்னவிதமென்றுந் தெரியாமல் மஹத்தான வித்வான்களும் மயங்கிக்கிடந்தார்கள். (ஞாநத்தை யுட்கொண்டதான) அப்படிப்பட்ட கருமத்தை இப்பொழுது நாமுனக்கு உபதேசிக்கிருேம். அதைக்கேட்டறிந்து அப்படியே அநுஷ்டித்தாயாகில் ஸம்ஸாரபந்தத்தினின்றும் விடுபடுவாய். [அறிவதற்குப் பயன் அநுஷ்டாநமென்று திருவுள்ளம்.]

(அ-கை.) இதை அறிவது துர்லபமென்கிற தெதினுலென்ருல் சொல்லுகிருர்.

కర్మణోహ్యపిబోద్ధవ్యం బోద్ధవ్యంచవికర్మణః।
అకర్మణశ్చబోద్ధవ్యం గహనాకర్మణోగతిః॥౧౭॥

(௧௭) * கர்மம் ० விகர்மம் ¶ அகர்மம் என்னு மிவற்றுள் ஒவ்வொன்றிலும் சிறிது விஷயம் அறியவேண்டியதுண்டாகையாலே மோக்ஷகாமன் செய்யுங் கர்மத்தின் வழியைக்கண்டறிவது மிகவும் துர்லபம். [இதில் விகர்மத்தி

---

* கர்மமாவது - மோக்ஷத்துக்கு ஸாதநமாகச்செய்யும் வியாபாரம்.

० விகர்மமாவது-வெவ்வேறுவிதமான கர்மம்; அதாவது - நித்யமென்றும் நைமித்திகமென்றும் காம்யமென்றும் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட கர்மங்களும்; அதற்கு வேண்டுந் திரவியத்தை ஸம்பாதித்தல் முதலிய கர்மங்களும். ¶ அகர்மமாவது - ஞாநம்.

ல் அறியவேண்டிய அம்சமென்னவெனில்-நித்யம் நைமித்திகம், காம்யம் திரவ்யார்ஜநம் முதலிய அந்தந்த கர்மங்களுக்குத்தக்கபடி பலன் வெவ்வேறு விதமாயிருந்தாலும் அவைகளில் மனம்வையாமல் இவைகளுக்கெல்லாம் பலன் மோக்ஷமொன்றுதானென்று சாஸ்திரப்பொருளை ஒன்றுபடுத்தி நினைக்கை. இவ்விஷயம் వ్యవసాయాత్మికాబుద్ధిరేకా என்கிற விடத்தில் சொல்லப்பட்டபடியால் இங்கே விவரிக்கிறோமில்லை.]

(அ-கை.) கர்மத்திலும் (அகர்மமென்கிற) ஞாநத்திலும் அறியவேண்டுமதை யருளிச்செய்கிறார்.

కర్మణ్యకర్మ యః పశ్యే దకర్మణిచకర్మ యః।
సబుద్ధిమా న్మనుష్యేషు సయుక్తః కృత్స్నకర్మకృత్ ॥౧౮॥

(கஅ) அர்ச்சுந! கர்மத்தில் ஞாநத்தையும் ஞாநத்தில் கர்மத்தையும் பார்க்கவேண்டும். (அதாவது-செய்யுங் கர்மத்துக்கு ஆத்மஸ்வரூபத்தின் வாஸ்தவஞாநம் வேண்டுகையாலே அந்த கர்மத்தையே ஞாநமாகவும்; அந்த ஞாநமுங் கர்மத்துக்குட்பட்டிருக்கையாலே அதையே கர்மமாகவும் * அறியவேண்டுமென்பதாம்.) இப்படி எவன் அறிகிறானோ புத்திமானாகிய அவந்தான் மனிதருக்குள் மோக்ஷத்துக்கேற்றவன்; அவன் ஸகல சாஸ்திரார்த்தங்களும் அநுஷ்டித்தவனாகிறான்.

(அ-கை.) பிரத்யக்ஷத்தில் இவன் செய்வது கர்மமாயிருக்க, அதை ஞாநமாக எப்படி நினைக்கத்தகுமென்றால் அருளிச்செய்கிறார்.

యస్య సర్వే సమారమ్భాః కామసఙ్కల్పవర్జితాః।
జ్ఞానాగ్నిదగ్ధకర్మాణం తమాహుః పణ్డితం బుధాః ॥౧౯॥

(கசு) எந்த மோக்ஷார்த்திக்கானால் தான் செய்யும் o ஸகல கர்மங்களும் பலாபேக்ஷையற்றதாயும் (நான் செய்கிறேனென்கிற) ‡ ஸங்கல்பமில்லாததாயு மிருக்குமோ அவன் கர்மம் செய்யும்பொழுதெல்லாம் (பிரகிருதியைக்காட்டிலும் வேறுபட்ட) ஆத்மஞாநத்துடனே செய்கிறபடியால் அவனைத் தத்துவமறிந்த பெரியோர்கள் ஆத்மஞாநமென்னுந் தீயினால் ஸகல பாபங்களையுந் தஹித்துவிட்ட மஹாபண்டிதனாகச் சொல்லுகிறார்கள். ஆனபின்

---

* ஆத்மஸ்வரூபத்தின் வாஸ்தவஞாநத்தோடு கர்மம் செய்துவந்தால் அவ்விரண்டையும் அறிந்தவனாகிறானென்றறிக.

o ஸகல கருமங்கள் அதாவது - நித்யமென்றும் நைமித்திகமென்றும் சொல்லப்பட்ட வைதிக கர்மங்களும், திரவியந்தேடல் முதலிய லௌகிககர்மங்களுமாம்.

‡ ஸங்கல்பமாவது - பிரகிருதியோடும் அதன் குணங்களோடுந் தன்னை ஒன்றுபடுத்தி நினைக்கை; அதாவது - கர்மஞ்செய்யும்பொழுது பிரகிருதியின் குணத்தால்வந்த கர்த்ருத்வத்தைத் தானேற்றுக்கொண்டு "நான் செய்தேனென்று" நினைக்கை.

பு இவன் செய்யுங் கர்மங்களையெல்லாம் ஞாநரூபமாக நினைப்பதற்கு ஆக்ஷேபமுண்டோ?

(அ-கை.) இதையே விவரிக்கிறார்.

త్యక్త్వా కర్మఫలాసఙ్గం నిత్యతృప్తో నిరాశ్రయః।
కర్మణ్యభిప్రవృత్తోఽపి నైవ కిఞ్చిత్కరోతి సః॥ ౨౦॥

(௨0) கர்மபலத்தில் பற்றை ஒழித்து, நித்யமான தன் ஆத்மாவில் தானே திருப்தியடைந்தவனாய் (அசாசுவதமானப் பிரகிருதியில் "இது ஆதாரமென்கிற" நினைவையயாமல் எவன் கர்மஞ்செய்கிறானோ, அவன் கர்மத்தைச் சிரத்தையுடன்செய்ய விழிந்தானாகிலும் சிறிதுங் கர்மஞ்செய்தவனாகச் சொல்லப்படான். [என்றால் - கர்மமென்கிற வியாஜத்தாலே ஞாநத்தையே செய்கிறானென்று பொருள்.]

(அ-கை.) மறுபடியும் கர்மத்துக்கு ஞாநரூபத்வமுண்டென்பதையே தெளிவிக்கிறார்.

నిరాశీర్యతచిత్తాత్మా త్యక్తసర్వపరిగ్రహః।
శారీరం కేవలం కర్మ కుర్వన్నాప్నోతి కిల్బిషమ్॥ ౨౧॥

(௨௧) பலத்தில் அபேக்ஷையில்லாமல் சித்தத்தையும் மனதையுமடக்கி ஆத்மா ஒன்றையே நம்பியவனாய் பிரகிருதியிலும் அதைச்சேர்ந்த வஸ்துக்களிலும் எனதென்கிற அபிமானத்தை ஒழித்தவன், வாழ்நாளுள்ளளவும் கேவலம் சரீரஸம்பந்தமான கர்மத்தையே செய்துவந்தபோதிலும் அதனால் கர்மபலமான ஸம்ஸாரத்தை ஒருக்காலும் அடையமாட்டான், [ஞானநிஷ்டையில் இழியாமல் இவ்வித கர்மநிஷ்டையிலிருந்தபடியே ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை யடைகிறானென்று பொருள்.]

యదృచ్ఛాలాభసన్తుష్టో ద్వన్ద్వాతీతో విమత్సరః।
సమస్సిద్ధావసిద్ధౌ చ కృత్వాపి న నిబధ్యతే॥ ౨౨॥

(௨௨) புருஷன் தன்சரீரத்தைத் தரிப்பதற்கு உபயோகமாய் ஏதேனும் சிறிது தானாகவே நேர்ந்ததாகில் அவற்றைப்பெற்று திருப்தியடைந்து ஸாதநம் முடிகிறவனாயில் நேரிடும் சீதம் உஷ்ணம்முதலியவைகளைப் பொறுத்து, அப்படி நேரிடுகின்ற அநிஷ்டங்களுக்கெல்லாங் காரணம் தன்னுடைய பாவமென்கிற வெண்ணத்தினால் பிறரிடத்தில் மாச்சரியங்கொள்ளாமல், யுத்தமுதலிய கர்மங்களில் ஜயம்முதலிய ஸித்தி உண்டானாலும் உண்டாகாவிட்டாலும் அதில் மனந்தாழாமலிருந்தானாகில், அவன் ஞானநிஷ்டையின்றி கேவலம் கர்மத்தையே செய்துவந்தபோதிலும் அதினால் ஸம்ஸாரத்தில் கட்டுப்படமாட்டான்.

గతసఙ్గస్య ముక్తస్య జ్ఞానావస్థితచేతసః।
యజ్ఞాయాచరతః కర్మ సమగ్రం ప్రవిలీయతే॥ ౨౩॥

(உ௩) ஆத்மஞாநத்தில் மனமூன்றி அதனுல் இதர ஸம்பந்தங்களற்று பிரகிருதிப் பிராகிருதங்களினின்று விடுபட்டவனுய் கீழ்ச்சொன்ன யாகா கர்மங்களை நிறைவேற்றுவதற்கென்றே இருக்கும் புருஷனுக்கு, ஸம். ஹேதுவான கர்மம் முழுதும் நசித்துப்போகிறது. ௪க.

(அ-கை.) பிரகிருதிக்குப் புறம்பான ஆத்மஸ்வரூபத்தை நினைப்பதனுல் கர்மம் ஞாநரூபமாகிறதென்றுர் கீழ்; இங்கு, ஸகல கர்மமும் பரப்ரம்மமான பரமபுருஷ ஸ்வரூபமென்று நினைப்பதனுல் ஞாநரூபமாகுமென்கிறுர்.

బ్రహ్మార్పణం బ్రహ్మహవిర్బ్రహ్మాగ్నౌ బ్రహ్మణాహుతమ్।
బ్రహ్మైవ తేన గన్తవ్యం బ్రహ్మకర్మసమాధినా॥౨౪॥

(உச) "ப்ரம்மமயமான (* ஸ்ருக்முதலிய) கருவிகளோடுகூடிய ப்ரம்மமயமான 0 ஹவிஸ்ஸானது ப்ரம்மஸ்வரூபமான அக்நியில் ப்ரம்மரூபனுகிய கர்த்தாவால் ஹோமம் செய்யப்பட்டது" என்று ஸகல கர்மமும் ப்ரம்ம ஸ்வரூபமென்று எவன் நினைக்கிறுனே அவனுல் † ப்ரம்மமான ஆத்மாவே அடையத்தக்கதாகும். [என்றுல் - மோக்ஷத்தை விரும்பியவன் செய்யுங் கர்மமெல்லாம் பரப்ரம்மமேயென்கிற எண்ணத்தோடுகூடி செய்யப்படுமாதலால் அதுதானே ஞாநரூபமாய்க்கொண்டு, ஞாநநிஷ்டையை யெதிர்பாராமலே ஆத்மஸாக்ஷாத்காரத்தை யுண்டுபண்ணிக் கொடுக்குமென்று பொருள்.]

(அ-கை.) இப்படி கர்மமே ஞாநரூபமாகிறதென்றருளிச்செய்து, இப்பொழுது அந்த கர்மத்தின் உட்பிரிவுகளை யருளிச்செய்கிறுர்.

దైవమేవాపరే యజ్ఞం యోగినః పర్యుపాసతే।

(உசற) சில கர்மயோகிகள் தேவதார்ச்சநரூபமான யக்ஞத்தையே அநுஷ்டிக்கிறுர்கள்.

బ్రహ్మాగ్నావపరే యజ్ఞం యజ్ఞేనైవోపజుహ్వతి॥౨౫॥

(உரு) சிலர் ப்ரம்மஸ்வரூபமான அக்நியில் யக்ஞத்துக்கு ஸாதநமாயிருக்கிற ஹவிஸ் ஸ்ருக் முதலியவைகளைக்கொண்டு ஹோமம் செய்துவருகிறுர்கள். [என்றுல் - யாகத்தையும் அதைச் சேர்ந்தவைகளையும் ப்ரம்மஸ்வரூபமாக நினைத்து ஹோமம் செய்வதே தொழிலாயிருக்கிறுர்கள் என்றர்த்தம்.]

శ్రోత్రాదీనీన్ద్రియాణ్యన్యే సంయమాగ్నిషు జుహ్వతి।

---

* ஸ்ருக் என்பது - ஹவிஸ்முதலியவற்றை அக்கினியில் சேர்ப்பதற்கு ஸாதகமாயிருப்பதோர் கருவி. இது ப்ரம்மத்தா லுண்டாக்கப்பட்டதுபற்றி இதை யிங்கே ப்ரம்மமயமென்கிறது.

0 ஹவிஸ் என்பது - தேவதாராதநத்துக்கென்று அக்நியில் ஹோமம் பண்ணப்பட்ட வஸ்துவிசேஷம்.

† ப்ரம்மத்துக்கு ஆத்மா சரீரமாயிருப்பதுபற்றி அதை ப்ரம்மமென்கிறது.

(உ௬உ) பின்னும் சிலர் செவிமுதலான இந்திரியங்களைப் புறம்போக வொட்டாமல் தகைவதில் முயற்சிசெய்கிறார்கள்.

శబ్దాదీన్విషయానన్య ఇన్ద్రియాగ్నిషు జుహ్వతి॥౨౬॥

(உ௬) மற்றும் சிலர் இந்திரியங்களைச் சப்தாதிவிஷயங்களில் மண்ட வொட்டாமற் றகைகிறார்கள்.

సర్వాణీన్ద్రియకర్మాణి ప్రాణకర్మాణి చాపరే।
ఆత్మసంయమయోగాగ్నౌ జుహ్వతి జ్ఞానదీపితే॥౨౭॥

(உஎ) ஞானத்தால் ஜ்வலிப்பதாய் மனதை அடக்குவதான யோகமென்னும் அக்கியில், இந்திரிய வியாபாரங்களையும் பிராணவியாபாரங்களையும் சிலர் ஹோமஞ்செய்கிறார்கள். [அதாவது மனதை இந்திரியங்களோடும் பிராணனோடும் சேரவொட்டாமல் தகைவதில் முயல்கின்றார்களென்று பொருள்.]

ద్రవ్యయజ్ఞాస్తపోయజ్ఞా యోగయజ్ఞాస్తథాపరే।
స్వాధ్యాయజ్ఞానయజ్ఞాశ్చ యతయస్సంశితవ్రతాః॥౨౮॥

(உஅ) விடாமுயற்சி செய்பவரும் த்ருடஸங்கல்பமுள்ளவருமான சில கர்மயோகிகள் நியாயமாய் ஸம்பாதித்த திரவியத்தைக்கொண்டு தேவதார்ச்சநம் செய்வதிலும், சிலர் தாநஞ்செய்வதிலும், சிலர் யாகஞ்செய்வதிலும், சிலர் ஹோமஞ்செய்வதிலுமாக யத்தநம் செய்கிறார்கள். இந்நால்வகையோருக்கும் திரவிய யக்ஞஞ் செய்பவர்களென்று பெயர்; சிலர் கிருச்சிரம் சாந்திராயணம் உபவாஸம் முதலிய தபோயக்ஞம் செய்கிறார்கள்; பின்னுஞ் சிலர் புண்ணிய தீர்த்த ஸ்நாநமும் புண்யக்ஷேத்ரவாஸமுஞ் செய்கிறார்கள்; சிலர் வேதாப்யாஸத்தில் நிஷ்டராயிருக்கிறார்கள்; சிலர் அதின் அர்த்தஞானத்தில் ஊக்கமாயிருக்கிறார்கள்.

అపానే జుహ్వతి ప్రాణం ప్రాణేఽపానం తథాపరే।
ప్రాణాపానగతీ రుద్ధ్వా ప్రాణాయామపరాయణాః॥౨౯॥
అపరే నియతాహారాః ప్రాణాన్ప్రాణేషు జుహ్వతి।

(உ௯-உ௯உ) பிராணாயாமஞ்செய்வதில் சிலர் நிஷ்டைபண்ணுகிறார்கள். இவர்கள் பூரகரென்றும் ரேசகரென்றும் கும்பகரென்றும் மூவர். அபாநத்தில் பிராணனை ஹோமஞ்செய்யுமவர் பூரகர். பிராணனில் அபாநத்தை ஹோமம் செய்பவர் ரேசகர்: அவ்விரண்டையும் செல்லவொட்டாமல் தடுத்துப் பிராணனைப் பிராணனில்தானே அடக்குமவர்கள் கும்பகர்: ஆகிய இம்மூவரும் ஆகாரநியமத்தோடு கூடியவர்கள்.

సర్వేఽప్యేతే యజ్ఞవిదో యజ్ఞక్షపితకల్మషాః॥౩౦॥
యజ్ఞశిష్టామృతభుజో యాన్తి బ్రహ్మ సనాతనమ్।

(௩0-௩0உ) (திரவ்ய யக்ஞம்முதல் பிராணாயாமம் வரையிலுள்ள கீழ்ச்சொன்ன கர்மயோகங்களின் உட்பிரிவுகளில் தங்கள் தங்களுக்கிஷ்ட

மானவைகளை அநுஷ்டிக்கின்ற) இவர்கள் யாவரும் (సహయజ్ఞాః ప్రజాస్సృష్ట్వా) என்று கீழேசொல்லப்பட்ட) மஹாயக்ஞம் முதலான யக்ஞங்களை யநுஷ்டிப்பவர்கள். ஆனதுபற்றியே இவர்கள் ஸகல பாபங்களையு மொழித்தவர்களாய் யக்ஞசேஷமான அமிருதத்தால் சரீரத்தைக் காப்பாற்றிவந்து சாசுவதமான ப்ரம்மத்தை அடைகிறார்கள். [யக்ஞசேஷத்துக்கு அமிருதமென்று பெயர்.]

నాయం లోకోఽస్త్యయజ్ఞస్య కుతోఽన్యః కురుసత్తమ॥ ౩౧॥

(௩௧) கீழ்ச்சொன்னவர்களைப்போல் மஹாயக்ஞம் முதலிய நித்ய நைமித்திக கர்மங்கள் செய்யாதவனுக்கு இந்த லோகமே கிடைக்கமாட்டாது. அதாவது இந்த லோகஸம்பந்தமான அரம் பொருள் இன்பம் என்கிற மூன்று புருஷார்த்தங்களுங் கிடைக்கமாட்டா. அல்பங்களான இவையே கிடையாவிட்டால் மோக்ஷமென்னுங் கனமான புருஷார்த்தமெங்ஙனங் கிடைக்கும்?

ఏవం బహువిధా యజ్ఞా వితతా బ్రహ్మణో ముఖే।
కర్మజాన్విద్ధి తాన్సర్వానేవం జ్ఞాత్వా విమోక్ష్యసే॥ ౩౨॥

(௩௨) ஆக விப்படி ஆத்மப்ராப்திக்கு ஸாதகமான கர்மயோகங்கள் பலவாயிருக்கின்றன. இவைகளெல்லாம் தினந்தோறும் அநுஷ்டிக்கவேண்டியதான (நித்யநைமித்திக) கர்மங்களைச்செய்வதால் ஸித்திக்குமவைகள். இவைகளைக் கீழ்ச்சொல்லியபடி யநுஷ்டித்தாயாகில் மோக்ஷத்தையடைவாய்.

(அ-கை.) கர்மம் ஞானத்தை யுட்கொண்டிருக்கையாலே அதுவே ஞானரூபமாகிறதென்றானன்றோ கீழ்? (ஞானத்தை யுட்கொண்ட) அக்கர்மத்தில் ஞானாம்சந்தான் பிரதானமென்கிறாரிங்கு.

శ్రేయాన్ ద్రవ్యమయాద్యజ్ఞాత్ జ్ఞానయజ్ఞః పరన్తప।
సర్వం కర్మాఖిలం పార్థ జ్ఞానే పరిసమాప్యతే॥ ౩౩॥

(௩௩) சத்துருக்களை அழிக்கவல்லனாகிய ஓ அர்ச்சுந! கர்மம் * (திரவியத்தாலும் ஞானத்தாலும் ஸாதிக்கவேண்டுகையால் இரண்டம்சமாயன்றோ இருக்கிறது?) அதில் திரவியமயமான அம்சத்தைக்காட்டிலும் ஞானமயமான அம்சந்தான் சிறந்தது. ஏனெனில் - ஸகல கர்மங்களும் மற்றவையும் முடிவில் ஞானத்தைக்கொண்டல்லவோ முடிகின்றன. [அதாவது - எந்த ஸாதநத்தை யநுஷ்டித்தும் பெறவேண்டியது ஆத்மஸாக்ஷாத்காரம். அது கர்மஞ் செய்யத்தொடங்கின நாள்முதல் அப்பியஸிக்கப்பட்டுவந்து கடைசியில் அதுவே ஸாக்ஷாத்காரஞானமாய் பழுக்கிறது; இப்படியான பின்பு கர்மத்தில் திரவியாம்சத்தைப்பார்க்க ஞானாம்சம் சிறந்ததென்னக் குறையில்லையிறே!]

తద్విద్ధి ప్రణిపాతేన పరిప్రశ్నేన సేవయా।
ఉపదేక్ష్యన్తి తే జ్ఞానం జ్ఞానినస్తత్త్వదర్శినః॥ ౩౪॥

---

* திரவியமென்றால் - தட்டுமுட்டு முதலிய வெல்லாப்பொருளுக்கும் பெயர்.

(௩௪) அர்ச்சுந! நீ கர்மயோகத்தைச் செய்ய விழிந்து அப்பொழுதை க்கப்பொழுது * ஞாநிகளிடஞ்சென்று, அவர்களைத் தண்டன் ஸமர்ப்பித்து அவர்களுக்குத் தகுந்த பணிவிடைசெய்து உன் உள்ளத்தின் பரிபாகத்துக்கு த்தக்கபடி நாம் சொன்ன † ஆத்மஞாநத்தை அவர்களிடங் கேட்பாயாகில், அவர்கள் (ஞாநந் தெரியவேண்டுமென்று பலகாலும் பல்படியுங் கேட்கின்ற) உன் நினைவறிந்து உனக்கு அந்த ஞாநத்தைத் தெளிவாயுபதேசிப்பார்கள்.

(அ-கை.) ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடியே பார்க்கின்ற ஸாக்ஷாத்கார ஞாநத்தின் லக்ஷணம் இத்தன்மையதென்கிறார்.

యద్ జ్ఞాత్వా న పునర్మోహ మేవం యాస్యసి పాణ్డవ।
యేన భూతాన్యశేషేణ ద్రక్ష్యస్యాత్మన్యథో మయి॥౩౫॥

(௩௫) ஓ பாண்டவ! அந்த ஆத்மஞாநத்தை யறிந்தாயாகில் மறுபடியும் இப்படி மோகத்தை அடையமாட்டாய். [அதாவது - தேஹமே ஆத்மாவென்று பிரமித்தல், அத்தால் எனதென்கிற மமதை கொள்ளுதல் முதலியவைகளுக்குக் காரணமான மோஹத்தை அடையமாட்டாய்.] மேலும் அதனால் தேவனென்றும் மனிதனென்றும் இன்னு மிப்படி பலவிதமாயுள்ள ஸகலப் பிராணிகளையும் உன் ஆத்மாவிலேயே பார்ப்பாய். [அதாவது- $ ஸ்தாலீபுலாக நியாயமாய் ஸகலப் பிராணிகளும் நம்மைப்போலவேதான் பிரகிருதிக்குப் புறம்பாய் ஞாநமே ஸ்வரூபமாய் ¶ ஓரோமாதிரியா யிருக்குமென்றறிவாய்] அநந்தரம் நம்மிடத்திலும் அப்படியே பார்ப்பாய். [அதாவது - அப்படி உன்னைப்போ லிருப்பதாக நீ யறிந்த அவ்வாத்மாக்களெல்லாம் ஸர்வேசுவரனுன என்னைப்போலவு மிருப்பதாகவும் § அறிவாய்.]

[ஆக இதனால் பிரகிருதிக்குப் புறம்பான ஆத்மஸ்வரூபமானது ஒன்றைப்போ லொன்றாயிருப்பதுந்தவிர ஸர்வேசுவரனுக்கு ஸமமாகவு மிருக்குமென்றதாயிற்று.]

---

* இங்கே ஞாநிகளாவார் - ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஸித்தித்தவர்கள்.

† நாம் சொன்ன - அதாவது అవినాశితుతద్విద్ధి என்பது முதல் ఏషాతేఽభిహితా என்று மளவாக நாம் சொன்னவென்றபடி.

$ ஸ்தாலீபுலாக நியாயமாயென்றது - ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோற்றைப் பதம் பார்ப்பதுபோலென்றபடி.

¶ பிரகிருதியைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மஸ்வரூப மெல்லாம் ஸமமென்கிறவிஷயம் నిర్దోషంహిసమంబ్రహ్మ తస్మాద్బ్రహ్మణితేస్థితాః என்று மேலே சொல்லுகிறார்.

§ நாமரூபங்களற்ற முக்தஸ்வரூபமான ஆத்மாவானது பரமாத்மாவோ டொத்திருக்குமென்கிறவிஷயம் ఇదంజ్ఞానముపాశ్రిత్యమమసాధర్మ్యమాగతాః என்று மேலே சொல்லப்போகிறார். அப்படியே తథావిద్వాన్ పుణ్యపాపే విధూయనిరఞ్జనఃపరమంసామ్యముపైతి இத்யாதியாகச்சுருதிகளுஞ் சொல்லுகின்றன.

అపిచేదసిపాపేభ్య స్సర్వేభ్యగ్పాపకృత్తమః।
సర్వంజ్ఞానప్లవేనైవ వృజినంస న్తరిష్యసి॥౩౬॥

(௩௬) அர்ச்சுந! நீ பாவஞ்செய்தா ரெல்லாரிலும் மிக்க பாவியாயிருந்தாலும் நெடுங்காலமாய் ஸம்பாதித்த அந்த பாவக்கடலை ஆத்ம ஸாக்ஷாத்காரமென்னும் ஓடத்தாலே தாண்டிவிடுவாய்.

యథైధాంసిసమిద్ధోగ్ని ర్భస్మసాత్కురుతేర్జున।
జ్ఞానాగ్నిస్సర్వకర్మాణి భస్మసాత్కురుతేతథా॥౩౭॥

(௩௭) நன்ருய்ப்பற்றியெரியும் நெருப்பானது விறகுகளைச் சாம்பலாக்குவதுபோல் ஆத்மஞாநமென்னுந் தீயானது தொன்றுதொட்டுத் தொடர்ந்துவருந் தீவினைகளைப் பொசுக்கிச் சாம்பலாக்குகின்றது.

నహిజ్ఞానేనసదృశం పవిత్రమిహవిద్యతే।
తత్స్వయంయోగసంసిద్ధగ్కాలేనాత్మనివిన్దతి॥౩౮॥

(௩௮) லோகத்தில் ஆத்மாவைப்போல் பரிசுத்தமான வஸ்து ஒன்றுங் கிடையாதன்ருே? [ஆகையால்தான் அவ்வாத்மஞாநமானது ஸகல பாவங்களையும் நாசஞ்செய்கிறது.] அப்படிப்பட்ட ஞாநத்தைப் பெறவேண்டுமாகில் நாம் சொன்னபடி கர்மயோகத்தை யநுஷ்டித்து ஸித்திபெற்ருல் அதை வருத்தமின்றி உன் ஆத்மாவில்தானே நாளடைவில் பெறுவாய்.

(அ-கை.) அதையே தெளிவாய் அருளிச்செய்கிருர்.

శ్రద్ధావాన్లభతేజ్ఞానం తత్పరస్సంయతేన్ద్రియః।
జ్ఞానంలబ్ధ్వాపరాంశాన్తి మచిరేణాధిగచ్ఛతి॥౩౯॥

(௩௯) இப்படி உபதேசத்தால் ஞாநத்தைப்பெற்று அந்த ஞாநம் விருத்தியடையும் விஷயத்தில் மிகவும் சிரத்தையோடு கூடியவனுய் ஓரே மனதாயிருந்து, இந்திரியங்களை மற்ற விஷயங்களில் செல்லவொட்டாமல் அடக்கினுல், வெகு சீக்கிரத்தில் முன் சொன்ன பரிபக்குவமான ஞாநத்தை யடைந்து அதனுல் மேலான ஆநந்தத்தையு மடையலாகும்.

అజ్ఞశ్చాశ్రద్దధానశ్చ సంశయాత్మావినశ్యతి।
నాయంలోకోస్తినపరో నసుఖంసంశయాత్మనః॥౪౦॥

(௪௦) இப்படி உபதேசத்தாலே ஞாநத்தைப் பெருமலும் பெற்ருலும் அதை விருத்திசெய்வதில் முயற்சிசெய்யாமலு மிருப்பவன் மனதில் ஸம்சயமுற்றவனுய்க் கெட்டுப்போகிருன். அப்படி ஸந்தேஹிப்பவனுக்கு இந்த லோகமுமில்லை, பரலோகமுமில்லை. அதாவது இவ்வுலகஸம்பந்தமான தர்மம், அர்த்தம், காமமென்கிற மூன்றும் பரலோகமான மோக்ஷமுமற்றுச் சிறிது சுகமும் அடையாமற்போகிருன்.

[புருஷார்த்தங்களெல்லாம் சாஸ்திரோக்தமான கர்மத்தால் ஸித்திக்கவேண்டுகையாலும், அந்த கர்மம் ஸித்திக்கும்போது தேஹத்தைக்காட்டி

லும் வேறான ஆத்மஸ்வரூப நிச்சயம் வேண்டுகையாலும், அதில்லாதவனுக்கு ஒருபுருஷார்த்தமும் கிடைக்கமாட்டாதென்று திருவுள்ளம்.]

యోగసన్న్యస్తకర్మాణం జ్ఞానసంఛిన్నసంశయమ్।
ఆత్మవన్తం నకర్మాణి నిబధ్నన్తి ధనఞ్జయ॥౪౧॥

(௪௧) இப்படி உபதேசிக்கப்பட்ட யோகத்தாலே கர்மத்தை விட்டு (அதாவது செய்யுங் கர்மத்தை ஞானாகாரமாக நினைத்து,) அப்படியே உபதேசத்தால் பெற்ற ஆத்மஞானத்தைக்கொண்டு ஸகல ஸம்சயங்களையு மொழித்து, கேட்ட வர்த்தத்தில் திடமான மனதுடன் கூடியிருப்பவனை ஸம்ஸாரத்துக்கு வேர்முதலான பழைய கர்மங்களில் யாதொன்றுங் கட்டுப்படுத்தமாட்டாது.

తస్మాదజ్ఞానసమ్భూతం హృత్స్థంజ్ఞానాసినాత్మనః।
ఛిత్త్వైనం సంశయం యోగ మాతిష్ఠోత్తిష్ఠభారత॥౪౨॥

(௪௨) ஆகையால் அர்ச்சுந! அக்ஞானத்தால் உன் மனதிலுண்டான (ஆத்மவிஷயமான) ஸந்தேஹத்தை நாமுபதேசித்த ஆத்மஞானமென்னுங் கத்தியாலறுத்து நம்மால் உபதேசிக்கப்பட்ட கர்மயோகத்தைச் செய்வாயெழுந்திரு.

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,
நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீः.
ஸ்ரீமதேராமாநுஜாயநமः.

# ஐந்தாவது அத்யாயம்

## அவதாரிகை.

நான்காம் அத்தியாயத்தில் கர்மயோகத்தின் ஞானத்தன்மையும் அதன்உட்பிரிவும் அதில் ஞானபாகந்தான் பிரதானமென்பதும் சொல்லப்பட்டது. கர்மயோகம் ஞானத்தை யுட்கொண்டிருக்கையாலும், செய்வதற்கு எளிதாயிருக்கையாலும் பிரமாதத்தை உண்டுபண்ணுமையாலும், பயன் ஸித்திக்கும்பொழுது மற்றொன்றை அபேக்ஷிக்காமையாலும் ஞானயோகாதிகாரிக்குக்கூட கர்மயோகமே செய்யவடுக்குமென்கிற விஷயமோ, மூன்றாவது அத்தியாயத்தில்தானே அருளிச்செய்யப்பட்டது. இப்பொழுது கர்மயோகம் ஞானயோகத்தைப்பார்க்க ஆத்மப்பிராப்திக்குச் சுருக்கான உபாயமென்றும், அதைச்செய்யும்பொழுது அதில் தனக்குக் கர்த்ருத்வம் இல்லையென்று நினைக்கவேண்டுமென்றுஞ் சொல்லி அதற்குக் காரணமான ஞானமும் சோதிக்கப்படுகிறது.

అర్జున ఉవాచ॥ సన్న్యాసఙ్కర్మణాంకృష్ణ పునర్యోగంచశంససి।
యచ్ఛ్రేయఏతయోరేకం తన్మేబ్రూహిసునిశ్చితమ్॥౧॥

(க) அர்ச்சுநன் சொல்லுவது:—வாரீர் கிருஷ்ண! கர்மத்தை விட்டே பற்றவேண்டியதான ஞாநயோகத்தைச் செய்யும்படி முதலில் அருளிச்செய்து மீண்டும் கர்மத்தையே செய்யும்படியாய் அருளிச்செய்தீர். [அதாவது மோக்ஷத்தை விரும்பியவன் கர்மத்தைச்செய்து அதினுல் மனதிலுண்டான கல்மஷத்தையெல்லாமொழித்துப் பிறகு ஞாநயோகத்தாலே ஆத்மாவை ஸாக்ஷாத்காரம் பண்ணக் கடவனென்று முதலில் சொல்லி, பிறகு மூன்று நான்கு அத்தியாயங்களில் ஞாநயோகஞ்செய்யத் தகுந்தவனுக்குக்கூட கர்மநிஷ்டையே சிறந்ததாகுமென்றும், அது ஞாநநிஷ்டையை எதிர்பாராமல் தானே ஆத்மப்பிராப்தியை ஸாதிக்குமென்றும் கர்மயோகத்தை அதிகமாய்ப் புகழ்ந்துபேசினீர்.] ஆகையால் அந்த ஞாநயோக கர்மயோகங்களில் எது சீக்கிரமாயும் எளிதாயும் ஆத்மப் பிராப்தியைச் சாதிக்குமென்று தேவரீர் நிச்சயித்திருக்கிறதோ அதை அருளிச்செய்யவேண்டும்.

శ్రీభగవానువాచ॥ సన్న్యాసఃకర్మయోగశ్చ నిశ్శ్రేయసకరావుభౌ।
తయోస్తుకర్మసన్న్యాసా త్కర్మయోగోవిశిష్యతే॥౨॥

(உ) அதற்குப் பகவான் அருளிச்செய்கிறது:—அர்ச்சுந! ஸந்யாஸமென்று சொல்லப்படும் ஞாநயோகமும், கர்மயோகமும் இரண்டும் மோக்ஷத்தையளிப்பவைகளே; ஆனுலும் அதில் ஞாநயோகத்தைக் காட்டிலும் கர்மயோகமே சிறப்புற்றது.

(அ-கை.) ஏனென்ருல் அருளிச்செய்கிருர்.

జ్ఞేయస్సనిత్యసన్న్యాసీ యోనద్వేష్టినకాఙ్క్షతి।
నిర్ద్వన్ద్వోహిమహాబాహో సుఖంబన్ధాత్ప్రముచ్యతే॥3॥

(ரு) கர்மயோகத்தைச் செய்பவன் அதற்குட்பட்ட ஆத்ம அநுபவத்தாலே திருப்தியடைந்து அதற்குப் புறம்பானதொன்றையும் விரும்பாமலும் அப்படியே ஒன்றையும் பகைக்காமலும் இன்பதுன்பங்களைப் பொறுத்திருக்கிறபடியால் அவனை நித்தியஸந்யாஸியான ஞாநயோகியென்று அறியத்தக்கது. ஏனெனில் - (அவன் எளிதில் இயற்றக்கூடிய கர்மத்தைச்செய்தபடியே) சுகமாய் ஸம்ஸாரபந்தத்தினின்றும் விடுபடுகிருன்.

(அ-கை.) ஞாநயோக கர்மயோகங்களிரண்டும் ஆத்மஸாக்ஷாத்காரத்தைச் சாதிக்கும் விஷயத்தில் ஒன்றை யொன்று எதிர்பார்க்கமாட்டாது என்பதை விளக்குகிருர்.

సాఙ్ఖ్యయోగౌపృథగ్బాలాః ప్రవదన్తినపణ్డితాః।
ఏకమప్యాస్థితస్సమ్య గుభయోర్విన్దతేఫలమ్॥౪॥

(ச) ஞாநயோக கர்மயோகங்களிரண்டும் வெவ்வேறென்று, தெரியாதவர்கள் சொல்லுவார்களே யல்லது நன்ருய்த் தெரிந்தவர் சொல்லமா

ட்டார்கள். [அதாவது-"கர்மயோகம்ஞானயோகத்தை மாத்திரம் ஸாதிக்கும்; ஆத்மஸாக்ஷாத்காரத்தை ஸாதிக்கமாட்டாது. ஞானயோகமொன்றுதான் ஆத்மஸாக்ஷாத்காரத்தைச் சம்பாதிப்பது; ஆகையால் இரண்டுக்கும் பலம் வெவ்வேறாயிருக்கையால் இரண்டும் வெவ்வேறு" என்று சொல்லுமவர்கள் நன்றாய்த் தெரிந்தவர்களல்லவென்று பொருள்.] ஏனெனில்-இரண்டுக்கும் ஆத்மதரிசனமொன்றே பயனாகையால் எதை யநுஷ்டித்தாலும் அந்த பயனையே யடைகிறான்.

(அ-கை.) இதையே விவரிக்கிறார்.

యత్సాఙ్ఖ్యైః ప్రాప్యతే స్థానం తద్యోగైరపి గమ్యతే।
ఏకం సాఙ్ఖ్యం చ యోగం చ యః పశ్యతి స పశ్యతి॥౫॥

(ரு) ஞானயோகிகளால் எந்தபலம் அடையப்படுமோ அதுவேதான் கர்மநிஷ்டர்களாலும் அடையப்படும்; இப்படி பலம் ஒன்றாகையால் ஞானயோக கர்மயோகங்களிரண்டும் ஒன்றுதானென்று எவன் பார்க்கிறானோ அவனே பண்டிதன்.

(அ-கை.) இவற்றுள் இவ்வளவுதான் விசேஷமென்கிறார்.

సంన్యాసస్తు మహాబాహో దుఃఖమాప్తుమయోగతః।
యోగయుక్తో మునిర్బ్రహ్మ నచిరేణాధిగచ్ఛతి॥౬॥

(சு) ஞானயோகமானது கர்மயோகத்தோடு ஸம்பந்தப்படாமல் ஸித்திப்பது வருத்தம்; கர்மயோகியோ எப்போதும் தனக்குத்தானே ஆத்மாவைச் சிந்தித்துக்கொண் டிருப்பவனாகையால் சுகமாகக் கர்மயோகத்தைச் சாதித்து அற்பகாலத்தில் ஆத்மாவை அடைகிறான். [ஞானயோகத்தை மிகவும் வருத்தப்பட்டு ஸாதிக்கவேண்டுகையாலே வெகுகாலஞ் சென்றபின்பு ஆத்மாவை யடையவேண்டும். இதுதான்விசேஷமென்று அபிப்பிராயம்.]

యోగయుక్తో విశుద్ధాత్మా విజితాత్మా జితేన్ద్రియః।
సర్వభూతాత్మభూతాత్మా కుర్వన్నపి న లిప్యతే॥౭॥

(எ) கர்மயோகஞ்செய்பவன் பரமபுருஷனுடைய ஆராதநமாக சாஸ்திரத்திற் சொல்லப்படுங்கர்மங்களைச் செய்தபடியே அதனால் மனந்தெளிந்து, (தனக்குப் பழக்கமான கர்மத்தில் இழிந்தமையால்) மனதையும் இந்திரியங்களையும் வருத்தமின்றிஜயித்து, "தேவர் மனிதர் என்று வித்தியாஸமாயிருப்பதெல்லாம் பிரகிருதியின் விகாரம், ஆத்மாவானது எந்தசரீரத்திலும் ஒரேவடிவமாய் ஞானஸ்வரூபமாய் ஸமமாயிருக்கிறது" என்று ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை எந்தவேளையுஞ் சிந்தித்திருக்கிறானதலால் அவன் கர்மத்தைச்செய்து வந்தபோதிலும் தேஹமே ஆத்மாவென்கிற எண்ணத்தால் கட்டுப்படான் [ஆகையால் வெகு சீக்கிரத்தில் ஆத்மாவை யடைவானென்று தாத்பர்யம்.]

(அ-கை.) செய்வதற்கு எளிதாயும் விரைவில் பலனைத்தருவதாயுமிருப்பதுபற்றி கர்மயோகஞ் சிறந்திருக்கையால் அதற்கு வேண்டுமவற்றைச் சொல்லுகிறேன்கேள்.

నైవకిఞ్చిత్కరోమీతి యుక్తోమన్యేతతత్త్వవిత్।
పశ్యంఛృణ్వన్స్పృశన్జిఘ్రన్నశ్నన్గచ్ఛన్స్వపంఛ్వసన్॥౮॥
ప్రలపన్విసృజన్గృహ్ణన్నున్మిషన్నిమిషన్నపి।
ఇన్ద్రియాణీన్ద్రియార్థేషు వర్తన్తఇతిధారయన్॥౯॥

(௮-௯) ஆத்மஸ்வரூபத்தின் உண்மைதெரிந்தவன், "செவிமுதலிய ஞாநேந்திரியங்களும் வாய்முதலிய கர்மேந்திரியங்களும் பிராணனும் தந்தம் விஷயங்களில் செல்லுகின்றனவேயல்லது நான் சிறிதும் செய்யவில்லை" என்று நினைத்திருப்பன் [அதாவது-ஞாநமேஸ்வபாவமான எனக்கு (நான் செய்தேனென்கிற) எண்ணமானது இந்திரியாதிகளின் ஸம்பந்தத்தால் வந்ததேயல்லது என் ஸ்வரூபத்தால் வந்ததல்லவென்று நினைத்திருப்பன் என்று தாத்பரியம்.]

బ్రహ్మణ్యాధాయకర్మాణి సఙ్గన్త్యక్త్వాకరోతియః।
లిప్యతేనసపాపేన పద్మపత్రమివామ్భసా॥౧౦॥

(௧௦) யாவனொருவன் கர்த்ருத்வத்தைப் பிரகிருதியில் வைத்து (அதாவது இந்திரிய வியாபாரங்களெல்லாம் கர்மாதீனமென்று கர்மபலத்தில் ஸம்பந்தப்படாமல் "நான் சிறிதுஞ் செய்கிறேனில்லை" என்று நினைத்தவனாய்) கர்மங்களைச்செய்து வருகிறானோ, அவன் பிரகிருதியோடு கலந்திருந்தானாகிலும் பந்தத்துக்குக் காரணமான பாவத்தால் கட்டுப்படான். அதென்போலென்னில் - தாமரையிலையானது ஜலத்திலிருக்கச்செய்தே அதில் ஒட்டாததுபோலென்றறியவும்.

కాయేనమనసాబుద్ధ్యా కేవలైరిన్ద్రియైరపి।
యోగినఃకర్మకుర్వన్తి సఙ్గన్త్యక్త్వాత్మశుద్ధయే॥౧౧॥

(௧௧) யோகிகளாயிருப்பார் அநாதிகாலமாய் ஆத்மஸ்வரூபத்தைப்பற்றிக் கிடக்கிற கருமப்பிணி தீருகைக்காகச் சரீரம் மனது புத்தி இந்திரியம் இவைகளைக்கொண்டு கர்மயோகத்தைப் பலாபேக்ஷையின்றிச் செய்துவருகிறார்கள்.

యుక్తఃకర్మఫలంత్యక్త్వా శాన్తిమాప్నోతినైష్ఠికీమ్।
అయుక్తఃకామకారేణ ఫలేసక్తోనిబధ్యతే॥౧౨॥

(௧௨) இதரமான பலங்களில் சபலிக்காமல் ஆத்மா ஒன்றையே நாடிக் கேவலம் ஆத்மசுத்திக்காகக் கர்மஞ்செய்யுமவன் ஆத்மாநுபவமென்னும் ஸ்திரமான சுகத்தை யடைவான். அப்படி ஆத்மாவைப் பார்க்கவேண்டுமென்கிற எண்ணமில்லாமல் பலனில் அபேக்ஷையோடு கர்மஞ்செய்யுமவன் அக்

கர்மத்தால் கட்டுப்பட்டு நித்திய ஸம்ஸாரியாவான். [ஆக விதனுல் புருஷன், தான் செய்யுங் கர்மங்களெல்லாம் இந்திரியரூபமாய் விகாரப்பட்டிருக்கிற பிரகிருதியைச் சேர்ந்ததென்று நினைத்தவனுய் ஆத்மாவைப் பிணையினின்று விடுவிக்கைக்காகப் பலாபேக்ஷையின்றிக் கர்மத்தையே செய்யக்கடவனென்றதாயிற்று.]

(அ-கை.) அநந்தரம் தேகரூபமாய் விகாரப்படிருக்கும் பிரகிருதியில் கர்த்ருத்வத்தை வைக்கும்படி சொல்லுகிறது.

సర్వకర్మాణిమనసా సన్న్యస్యాస్తే సుఖంవశీ|
నవద్వారేపురేదేహీ నైవకుర్వన్న కారయన్॥౧౩॥

(கங) "ஆத்மாவுக்கு நான் செய்தேனென்கிற கர்த்ருத்வமானது சுபாவத்தாலுண்டானதல்ல; பழையகர்மமடியாகவந்த சரீர ஸம்பந்தத்தால் வந்தது" என்கிற மனதோடு புருஷன் தான்செய்யுங் கர்மங்களையெல்லாம் நவத்துவாரபட்டணமான சரீரத்தில்வைத்து, தேஹத்தில் தானிருப்பதற்கு வேண்டும் பிரயத்திநங்களைச்செய்யாமலும் அத்தேஹத்தைக்கொண்டு செய்விக்காமலும் சுதந்திரனுய் சுகமாயிருக்கக் கடவன்.

(அ-கை.) ஆத்மாவுக்கு ஸ்வதஸ்ஸித்தமான ரூபம் இன்னதென்கிருர்.

నకర్తృత్వంనకర్మాణి లోకస్యసృజతిప్రభుః|
నకర్మఫలసంయోగం స్వభావస్తుప్రవర్తతే॥౧౪॥

(கச) தேவர் விலங்கு மனிதர் தாவரமென்று பிரகிருதியின் ஸம்பந்தத்தால் பலவகையாயுள்ள இந்தப்பிராணிகளுக்கு, கர்மஞ்செய்யுந் திறமையும், கர்மமும்,அக்கர்மப்பயனில் ஸம்பந்தமும் ஆத்மாவால் வந்ததல்ல; ஆத்மாசுதந்திரனுய் கர்மத்துக்கு வசப்படாமலிருக்கிருன். ஆனுல் யாருண்டாக்குகின்ருரென்ருல் ஸ்வபாவம் அப்படி பிரவர்த்திக்கிறது. [என்ருல் அநாதிகாலமாய்த் தொடர்ந்த தொல்வினைப்பயனுகிய (பிரகிருதியின்) சேர்க்கையினுல் 'நான்தேவன் நான்மனிதன்' என்று பிரகிருதியையே ஆத்மாவாகநினைத்துப் பிரமிப்பதால் வரும்வாஸனை உண்டுபண்ணுகிறதென்று தாத்பர்யம்.]

నాదత్తేకస్యచిత్పాపం నచైవసుకృతంవిభుః|
అజ్ఞానేనావృతంజ్ఞానం తేనముహ్యన్తిజన్తవః॥౧౫॥

(கரு) புருஷன் தனக்கு உறவினராக மதிக்கப்பட்ட புத்திராதிகளுக்கு ஒரு நன்மை செய்யவேண்டுமென்று அவர்களுடைய பாவத்தைப் போக்கவாவது, தனக்குப் பகையாக மதிக்கப்பட்ட ஒருவனுடைய புண்ணியத்தை யழிக்கவாவது செய்பவனல்லன். [ஏனெனில் - இவன் ஒரு இடத்தில் இது என்னுடையதென்று நிலையாயிருப்பவனுகில் இவனுக்கு உறவென்றும் பகையென்றும் ஏர்ப்படும். இவனே எங்குமிருப்பவனுகையால் தேவர் மனிதர் முதலிய எந்த சரீரங்களிலும் நிலையாயிருப்பவனல்ல.] ஆனுல் இவனுக்

கு இந்த விபரீதவாஸனை ஏன் உண்டாயிற்றென்றால் - (ஞானவிரோதியான) பழைய கர்மமானது தன் பயனைப் புசிப்பிக்கவேண்டுமென்று இவனுடைய ஞானத்தை மறைக்க, அதனால் தேவாதி சரீரங்களில் சேர்க்கையும் அதனால் 'நான் தேவன் நான் மனிதன்' என்கிற மலைப்புமுண்டாய், அதனால் அதேரீதியான மலைப்புக்குக் காரணமான வாஸனையும் அதற்கேற்ற கர்மவாஸனையும் அதனால் (ஒன்றுகிடக்க ஒன்றாய் தேஹமே ஆத்மாவென்கிற) மோஹமும் கர்மஞ்செய்யுந் திறமையுங் கூடுகிறது.

(அ-கை.) ஸகலமான அக்ஞானத்தையும் ஞானமென்னுமோடத்தாலே கடக்கிறானென்றும் ஞாநாக்நியானது ஸகல கர்மங்களையும் சாம்பலாகச்செய்யுமென்றும் ஞானத்தைப்போல் பரிசுத்தமானது உலகத்தில் வேறொன்றுங் கிடையாதென்றும் முன்பு சொன்னாரன்றோ? அதற்கு இப்போது ஸமயமாயிருக்கையால் அதை இவ்விடத்தில் கொண்டு கூட்டுகிறார்.

జ్ఞానేన తు తదజ్ఞానం యేషాం నాశితమాత్మనామ్|
తేషామాదిత్యవద్జ్ఞానం ప్రకాశయతి తత్పరమ్॥౧౬॥

(கசு) முற்கூறிய லக்ஷணமான ஆத்மகோடிகளுக்குள் எவர்களானால் ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடியே உபதேசிக்கப்பெற்று (அதை நாடோறும் அப்பியாஸம் செய்துவந்து) அதனால் மிகவும் பொலிவுபெற்ற பரிசுத்த ஞானத்தாலே, அதற்கு விரோதியும் ஊழ்வினையின் பயனுமான அக்ஞானத்தை நாசப்படுத்துகிறார்களோ அவர்களுக்கு, தங்களுடைய ஸ்வாபாவிகஞானமானது மென்மேலும் விருத்தியடைந்து சூரியனைப்போல் விளங்கி ஸகலபதார்த்தங்களையும் பிரகாசப்படுத்துகிறது. (அதாவது ஸர்வக்ஞாளாகிறார்கள்.)

[இங்கே 'அவர்களுக்கு' என்று அஞானமொழிந்தவர்கள் பலருண்டாயிருப்பதாகச் சொல்லுகையாலே, నత్వేవాహంజాతునాసం என்கிறவிடத்தில் ஊஹிக்கப்பட்ட ஆத்மாக்களின்பன்மை, இங்கு நன்கு விளக்கப்பட்டது. ஆனால் அவிடத்தில் சொன்னதுபோலவே இந்தபன்மையும் உபாதியால் வந்ததுதானென்றாலோ அதுகூடாது. ஏனெனில்-அக்ஞானம் ஒழிந்தவர்களுக்கு உபாதியின் மணந்தானேது? மேலும் இங்கே இன்னொருவிசேஷம், அதாவது:—அவர்களுடைய ஞானம் ஆதித்தியனைப்போலென்று சூரியனை திருஷ்டாந்தமாகச் சொல்லுகையாலே, ஞானம் ஆத்மஸ்வரூபத்தைச் சேர்ந்த தர்மமென்றும், ஒளியும் ஒளிக்கிடமான சூரியனும்போல் ஞானமும் ஞானத்துக்கிடமான ஆத்மாவும் தர்ம தர்மிகளென்றும் சொன்னதாயிற்று. ஆனதுபற்றியே ஸம்ஸாரதசையில் ஞானத்துக்கு மறைவும் மோக்ஷதசையில் மலர்ச்சியும் கூடும்.]

తద్బుద్ధయస్తదాత్మానస్తన్నిష్ఠాస్తత్పరాయణాః|
గచ్ఛన్త్యపునరావృత్తిం జ్ఞాననిర్ధూతకల్మషాః॥౧౭॥

(கள) அவ்வித ஆத்மதரிசநத்தில் திடமான உத்தேசங்கொண்டவர்கள் மனதில் எந்தவேளையும் அதே நினைவாயிருந்து அதையே நன்கு பழகி இனி இதற்குமேல் வேறு பிரயோஜநமில்லையென்று நினைத்தவர்களாய், தாம்

அப்பியஸிக்கின்ற அந்த ஞாநத்தைக்கொண்டே ஸகல பாபங்களையும் போக்கடித்து மறுபடியுந் திரும்பாத தசையான ஆத்மஸ்வரூபமாத்திரத்தில் நிற்கிறார்கள்.

విద్యావినయసమ్పన్నే బ్రాహ్మణే గవి హస్తిని।
శుని చైవ శ్వపాకే చ పణ్డితాస్సమదర్శినః॥౧౮॥

(கஅ) அப்படிப்பட்ட பண்டிதர்கள், "இவன் படித்து விநயத்தோடு கூடியவன், இவன் பிராம்மணன், இது பசு, இது யானை, இது நாய், இவன் நீசன்" என்று ஒன்றை உயர்ந்ததாகவும் ஒன்றைத் தாழ்ந்ததாகவும் பாராமல் எங்கும் ஆத்மவஸ்துவானது ஒரே ரீதியாய் ஞாநவடிவமா யிருக்கிறதென்று எல்லாவற்றையும் ஸமமாய்ப் பார்க்கிறார்கள்.

ఇహైవ తైర్జితస్సర్గో యేషాం సామ్యే స్థితం మనః।
నిర్దోషం హి సమం బ్రహ్మ తస్మాద్బ్రహ్మణి తే స్థితాః॥౧౯॥

(ககூ) இப்படி ஸகல வஸ்துக்களிலும் ஆத்மா ஞாநவடிவமாய் ஒரே ரீதியாயிருக்கிறதென்று பார்ப்பவர்கள் ஆத்மப்பிராப்திக்காகச் சாதநம் செய்யும்பொழுதே ஸம்ஸாரத்தை ஜயித்தவர்களாவார். எப்படியெனில்-ஸம்ஸார ஜயமாவதென்ன? ப்ரம்மமென்கிற ஆத்மாவில் நிலைத்தல்; அதாவது-பிரகிருதிக்கு அவ்வருகாய் எங்கும் ஏகரூபமாயிருக்கிற ஆத்மாவில் மனதை ஸ்தாபிக்கை: அது இவர்களுக்கு உண்டாய்விட்டதன்றோ? ஆனபின்பு இவர்கள் ஸம்ஸாரத்தை ஜயித்தார்களென்னக் குறையுண்டோ? [ஆத்மவஸ்துவெல்லாம் ஞாநமே வடிவாய் ஸமமாயிருக்குமென்றுநினைத்திருப்பவர்கள் முக்தர்களே யென்று தாத்பரியம்.]

(அ-கை.) எப்படியிருந்தால் கர்மயோகிக்கு அந்த ஸமபுத்தியுண்டாகுமோ அதை உபதேசிக்கிறார்.

న ప్రహృష్యేత్ప్రియం ప్రాప్య నోద్విజేత్ప్రాప్య చాప్రియమ్।
స్థిరబుద్ధిరసమ్మూఢో బ్రహ్మవిద్బ్రహ్మణి స్థితః॥౨౦॥

(உ0) புருஷன் எந்த சரீரத்திலிருக்கும்பொழுது(இவனுக்குப் பழைய கர்மத்தின்படி)எது இஷ்டமாயும் எது அநிஷ்டமாயுமிருக்குமோ, அவைகளில் ஸந்தோஷம் வெறுப்பு இரண்டுமெற்று இருக்கக்கடவன் - அதெப்படி யிருக்கலாகுமென்றால் - ஆத்மா ஸ்திரனென்றும் சரீரம் அஸ்திரமென்றும் அறிந்து அதனால் தேஹமே ஆத்மாவென்கிற மயக்கத்தைத் தீர்த்தாலிருக்கலாம். அதெப்படி மயக்கத்தைத் தீர்க்கலாமென்றால் - ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடியே உபதேசிக்கப்பெற்று அதையே பழகிக்கொண்டிருந்தால் தீர்க்கலாம்.

[என்றால் தத்வந்தெரிந்தவர் செய்த உபதேசத்தால் ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடியறிந்து அதையே பழகிவந்து அதனால் தேஹமே ஆத்மாவென்கிற அபிமாநத்தைவிட்டு ஸ்திரமான ஆத்மாவைத் தரிசிப்பதாலுண்டாகும் பிரீதியால், அஸ்திரமான பிரகிருதியால் வரும் இஷ்டாநிஷ்டங்களில் ஸந்தோஷமாவது வெறுப்பாவது அடையக்கடவனல்லனென்று தாத்பரியம்.]

బాహ్యస్పర్శేష్వసక్తాత్మా విన్దత్యాత్మని యత్సుఖమ్।
స బ్రహ్మయోగయుక్తాత్మా సుఖమక్షయమశ్నుతే॥౨౧॥

(௨௧) இப்படி ஆத்மாவைக்காட்டிலும் புறம்பான விஷயங்களில் பற்றில்லாமல் ஆத்மாவில்மாத்திரம் சுகத்தை யடையுமவன் பிரகிருதியோடுபயிர்ச்சியைவிட்டுப் பிரம்மத்தில் அப்பியாஸஞ்செய்பவனாய் ப்ரம்மாநுபவமென்னும் சாசுவதமான சுகத்தை அடைகிறான்.

(அ-கை.) பிரகிருதியால் வரும் போகத்தை எளிதில் விடலாமென்கிறார்.

యే హి సంస్పర్శజా భోగా దుఃఖయోనయ ఏవ తే।
అద్యన్తవన్తః కౌన్తేయ న తేషు రమతే బుధః॥౨౨॥

(௨௨) விஷயங்களாலும் இந்திரியங்களாலுமுண்டாகும் போகம் துக்கத்தைத்தருவதும் ஆதியந்தமுள்ளதுமென்று தெரிந்துக்கொண்டவன் அதில் சுகபுத்தியைப் பண்ணமாட்டான்.

శక్నోతీహైవ యస్సోఢుం ప్రాక్శరీరవిమోక్షణాత్।
కామక్రోధోద్భవం వేగం స యుక్తస్స సుఖీ నరః॥౨3॥

(௨௩) யாவனொருவன் சரீரம் விடுவதற்கு முன்பு ஸாதநத்தை யநுஷ்டிக்கும்பொழுதே ஆத்மாநுபவத்திலுண்டான பிரீதியால், காமக்குரோதங்களின் வேகத்தை ஜயிக்கிறானோ, அவன்தான் ஆத்மாநுபவத்துக்கு யோக்கியனாய் சரீரம் விட்டபின்பு அவ்வநுபவத்தை யடைந்து சுகிப்பான்.

యోఽన్తస్సుఖోఽన్తరారామ స్తథాన్తర్జ్యోతిరేవ యః।
స యోగీ బ్రహ్మనిర్వాణం బ్రహ్మభూతోఽధిగచ్ఛతి॥౨౪॥

(௨௪) யாவனொருவன் புறம்புண்டான அநுபவத்தையெல்லாம் விட்டு உள்ளுக்குள்ளே சுகமடைந்தவனாய் ஆத்மாவே பூங்காவனமாய் அதாவது ஆத்மகுணங்களே இனியவிஷயமாய் எப்போதும் ஆத்மஞாநியாகவே யிருக்கிறானோ அந்த யோகியே ஆத்மாநுபவமென்னும் சுகத்தை யடைவான்.

లభన్తే బ్రహ్మనిర్వాణ మృషయః క్షీణకల్మషాః।
ఛిన్నద్వైధా యతాత్మాన స్సర్వభూతహితే రతాః॥౨౫॥

(௨௫) சீதோஷ்ணாதிகளால் விடுபட்டவராய் ஆத்மாவில் தானே மனம் வைத்துத் தங்களைப்போலவே ஸர்வப்பிராணிகளும் கடைத்தேறவேண்டுமென்கிற சிரத்தையுடையவர்களாய் ஆத்மாவைத் தரிசிப்பவராயிருக்கிறார்கள் யாவர், அவர்கள் ஆத்மப்பிராப்திக்கு விரோதமான ஸகல பாபங்களையுந் தொலைத்து பிரம்மாநந்தத்தை யடைவார்கள்.

(அ-கை.) கீழ்ச்சொன்ன குணமுடையவர் எளிதில் ப்ரம்மத்தை அடைவார்களென்கிறார்.

కామక్రోధవియుక్తానాం యతీనాం యతచేతసామ్।
అభితో బ్రహ్మనిర్వాణం వర్తతే విదితాత్మనామ్॥౨౬॥

(௨௬) காமக்குரோதங்களற்று யத்நசீலராய் மனதை ஜயித்திருப்பவ ருக்குப் பிரம்மாநந்தம் எங்கே வேண்டுமானாலும் கைம்மேல் கிடைக்கும்.

(அ-கை.) இப்படி சொல்லிய கர்மயோகத்தை அதற்கிலக்கான யோ கத்துடன் கூட்டித் தலைக்கட்டுகிறார்.

స్పర్శాన్కృత్వాబహిర్బాహ్యాం శ్చక్షుశ్చైవాన్తరేభ్రువోః|
ప్రాణాపానౌసమౌకృత్వా నాసాభ్యన్తరచారిణౌ||౨౭||

యతేన్ద్రియమనోబుద్ధిర్మునిర్మోక్షపరాయణః|
విగతేచ్ఛాభయక్రోధో యస్సదాముక్తఏవసః||౨౮||

(௨௭-௨௮) புறம்புண்டான பற்றுக்களையெல்லாம் ஒழித்து யோகத்து க்கு யோக்கியமான ஆஸனத்தில் நேராகவிருந்து கண்களிரண்டையும் புரு வத்தின் நடுவில் மூக்கு நுனியில் வைத்து, மூக்குக்குள்ளோடும் பிராண அ பாநங்களை அதாவது உள்மூச்சு வெளிமூச்சுகளைச் சமமாகச்செய்து, இந்திரி யம் மனம் புத்தி இவைகளை ஆத்மாவைத்தவிர மற்றொன்றிலும் போகவொ ட்டாமல் மடக்கி, காமம் குரோதம் பயம் இவையற்று, மோக்ஷமே கதியெ ன்றெண்ணி ஆத்மதரிசநமே காரியமாய் எவனிருக்கிறானோ அவன் ஸித்தி யுண்டாவதற்கு முன்னமுங்கூட முக்தனென்னப்படுவான்.

(அ-கை.) நித்திய நைமித்திக கர்மங்களைச் செய்யவேண்டியதாய் யோ கத்தை முடிவாய்க்கொண்ட இக்கர்மயோகத்தை யெளிதில் அடையும் வகை சொல்லுகிறது.

భోక్తారంయజ్ఞతపసాం సర్వలోకమహేశ్వరమ్|
సుహృదంసర్వభూతానాం జ్ఞాత్వామాంశాన్తిమృచ్ఛతి||౨౯||

(௨௯) யக்ஞம் தவம் இவைகளைப் புஜிப்பவனாய், తమీశ్వరాణాంపరమమ హేశ్వరం என்கிறபடியே ஸகல லோகேசுவரருக்கும் மஹேசுவரனாய் ஸர்வ ப்பிராணிகளுக்கு மினியனாயிருக்கும் நம்மையறிந்தவன், கர்மயோகம் நமக்கு ஆராதநமென்கிற நினைவினால் அதில் சுகமாயிழிந்து அநுஷ்டிப்பான்.

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,

ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ:.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# ஆறுவது அத்யாயம்.

அவதாரிகை.

இதுவரையில் கர்மயோகத்தை ஸாங்கமாக விதித்து, இப்பொழுது ஞாநயோக கர்மயோகங்களால் ஸாதிக்கவேண்டியதான (ஆத்ம ஸாக்ஷாத்கா ரரூப) யோகாப்பியாஸம் செய்யும் பிரகாரத்தை விதிக்கிறார். அதில் கர்ம

யோகம் மற்றொன்றை யெதிர்பாராமல் தானே ஆத்மப்ராப்தியை ஸாதிக்கிறதென்பதைத் திடப்படுத்துவதற்காக, அதை ஞாநரூபமாகவும் யோகத்தைக்கொண்டு முடிவதாகவும் அநுபாஷிக்கிறார்.

శ్రీభగవానువాచ॥ అనాశ్రితః కర్మఫలం కార్యం కర్మ కరోతి యః।
స సన్న్యాసీ చ యోగీ చ న నిరగ్నిర్న చాక్రియః॥౧॥

(க) கர்மத்துக்குப்பயனாக ஸ்வர்கம் முதலியவைகளை விரும்பாமல் (அவசியம் அநுஷ்டிக்கவேண்டியதான) அதை "எல்லாவிதத்தாலும் நமக்கன்பனாகிய பரமபுருஷனுக்கு இந்த கர்மம் ஆராதநமாகக்கடவது; இத்தால் அடையவேண்டும் பயன் எனக்குச்சிறிதுமில்லை" என்று எவன் செய்கிறானோ அவன்தான் ஸந்யாஸியும், யோகியும். [அதாவது - ஆத்மதரிசநத்துக்கு ஸாதகங்களான ஞாநகர்மங்களிரண்டையுஞ் செய்தவனென்று தாத்பர்யம்.] அதுவேயல்லது அக்நிகாரியஞ் செய்யாமலும் மற்றுங் கர்மங்களைச் செய்யாமலும் கேவலம் ஞாநத்தில்மாத்திர மிருப்பவனல்ல. [அப்படிசெய்யாம லிருப்பவனுக்கு ஞாநநிஷ்டை யொன்றுதானுண்டு; கர்மநிஷ்டனுக்கோ அவ்விரண்டுமுண்டென்று தாத்பர்யம்.]

(அ-கை.) இந்த கர்மயோகத்தில்தானே ஞாநமும் உண்டென்கிறார்.

యం సన్న్యాసమితి ప్రాహుర్యోగం తం విద్ధి పాణ్డవ।
న హ్యసన్న్యస్తసఙ్కల్పో యోగీ భవతి కశ్చన॥౨॥

(உ) அர்ச்சுந! பெரியோர்கள் எதையானால் ஸந்யாஸமென்கிறார்களோ அதாவது (ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடியே யறிவதான) ஞாநமென்கிறார்களோ அதுதான் கர்மயோகமென்றறி. எப்படியெனில் - ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி யறிந்து அதனால் (முன் பிரகிருதியைப்பார்த்து இதுதான் ஆத்மாவென்று) தான் கொண்டிருந்த அபிமாநத்தை விடாதவன் கீழ்ச்சொன்ன கர்மயோகிகளில் எவனாகிலும் ஒருவனுண்டா? యస్య సర్వే సమారమ్భాః కామసఙ్కల్పవర్జితాః என்று ஸங்கல்பத்தை விட்டவனே கர்மயோகியாவானென்றன்றோ கீழ்ச்சொன்னது?

(அ-கை.) கர்மயோகந்தான் பிரமாதமில்லாமல் யோகத்தைச் சாதிக்குமென்கிறார்.

ఆరురుక్షోర్మునేర్యోగం కర్మ కారణముచ్యతే।
యోగారూఢస్య తస్యైవ శమః కారణముచ్యతే॥3॥

(ங) புருஷன் ஆத்மதரிசநமென்னும் யோகத்தைச்செய்ய விரும்புவானாகில் அவனுக்குக் கர்மம் ஸாதகமாமென்றும், யோகம் நிலைத்தபிறகே (கர்மநிவ்ருத்தியான) ஞாநம் ஸாதகமாமென்றும் சொல்லப்படுகிறது. [இதனால் ஆத்மதரிசநமென்னும் மோக்ஷமுண்டாமளவும் கர்மயோகமே செய்யத்தக்கதென்று தாத்பர்யம்.]

(அ-கை.) புருஷனுக்கு எப்பொழுது யோகம் நிலைக்குமென்னில் சொல்லுகிறார்.

యదా హి నేన్ద్రియార్థేషు న కర్మస్వనుషజ్జతే।
సర్వసఙ్కల్పసన్న్యాసీ యోగారూఢస్తదోచ్యతే॥౪॥

(௪) இந்த யோகியானவன் எப்பொழுது ஆத்மாநுபவஞ் செய்வதே சுபாவமாய் விஷயங்களிலும் விஷயாதீனமாய் வரும் வியாபாரங்களிலும் ஸம்பந்தத்தை யொழித்துக்கொள்ளுகிருனே, அப்பொழுதுதான் (ஸகல ஸங்கல்பத்தையு மொழித்த) இவனுக்கு யோகம் நிலைத்ததாகச் சொல்லக்கூடும். [யோகஞ்செய்ய வாரம்பித்தவனுக்கு ஆரம்பத்திலேயே விஷயத்தில் வைராக்யமுண்டாக மாட்டாதாகையால் அதுண்டாவதற்குச் செய்யும் அப்பியாஸரூபமான கர்மயோகமே யோக ஸாதநமாகையால் யோகஸித்தியை விரும்பியவன் அதையே செய்யக்கடவன்.]

(அ-கை.) அதையே அருளிச்செய்கிருர்.

ఉద్ధరేదాత్మనాత్మానం నాత్మానమవసాదయేత్।
ఆత్మైవహ్యాత్మనో బన్ధురాత్మైవరిపురాత్మనః॥౫॥

(௫) மனதை விஷயத்தில் பற்றவொட்டாமல் தடுத்து அதைக்கொண்டு ஆத்மாவைக் கடைத்தேறச் செய்யவேண்டுமே யல்லது, கண்டதையுந் தேடியோடும்படியான மனதைக்கண்டபடியேவிட்டு ஆத்மாவைக் கெடுக்கலாகாது.ஏனெனில்-ஆத்மாவுக்குப் பந்துவும் மனந்தான் பகையும் மனந்தான்.

బన్ధురాత్మాత్మన స్తస్యయేనాత్మైవాత్మనాజితః।
అనాత్మనస్తుశత్రుత్వేవ ర్తే తాత్మైవశత్రువత్॥౬॥

(௬) எந்த புருஷன் தனக்குத்தானே மனதை விஷயங்களிற் செல்லவொட்டாமல் ஜயிக்கிருனே, அவனுக்கு அம்மனமே பந்துவாகிறது. அப்படி ஜயிக்காவிடில் அதுவே இவனுக்குப் பகையாய் இவனை நற்கதியடையவொட்டாமற் கெடுக்கிறது. [இவ்வர்த்தத்தை మనఏవ మనుష్యాణాం కారణం బన్ధమోక్షయోః । బన్ధాయవిషయాసఙ్గిముక్త్యై నిర్విషయమ్మనః என்று பராசரபகவானும் சொன்னர்.]

(அ-கை.) யோகாரம்பஞ் செய்யத்தக்க நிலை சொல்லுகிறது.

జితాత్మనఃప్రశాన్తస్య పరమాత్మాసమాహితః।
శీతోష్ణసుఖదుఃఖేషు తథామానావమానయోః॥౭॥

(௭) வெப்பம் குளிர்ச்சி சுகம் துக்கம் மாநம் அவமாநம் இவைகளில் மனஞ்சலியாமலிருந்தால் அவன் மனதில் ஆத்மஸ்வரூபம் மிகவும் நிலைத்திருக்கும்.

జ్ఞానవిజ్ఞానతృప్తాత్మా కూటస్థోవిజితేన్ద్రియః।
యుక్తఇత్యుచ్యతేయోగీ సమలోష్టాశ్మకాఞ్చనః॥౮॥

(௮) ஆத்ம ஸ்வரூபத்தை ஸாதாரணமா யறிவதனுலும், பிரகிருதியைக்காட்டிலும் வேறுபட்டிருக்கிறதென்று அதையே விசேஷமாயறிவதனுலும் திருப்தனுய், தேவர் மனிதர் என்று விதம்விதமான நிலைகளிலும் ஞாநமே வடிவாயிருக்கின்ற ஆத்மாவில் நின்றவனுய், இந்திரிய ஜயம்பண்ணி

பொன்னையும் புழுதியையும் ஸமமாகவெண்ணியிருக்குங் கர்மயோகிதான் ஆத்மதரிசநமென்னும் ஞாநயோகத்துக்குத் தக்கவனுவான்.

సుహృన్మిత్రార్యుదాసీన మధ్యస్థద్వేష్యబన్ధుషు।
సాధుష్వపిచపాపేషు సమబుద్ధిర్విశిష్యతే॥౯॥

(௯) 1 ஸுஹிருத்துக்கள், 2 மித்திரர்கள், 3 அரிகள், 4 உதாஸீநர்கள், 5 மத்தியஸ்தர்கள்; 6 த்வேஷிகள், 7 பந்துக்கள், 8 ஸாதுக்கள், பாவமே தொழிலாயிருப்பவர்கள் இவர்களிடத்தில் ஸமமாயிருப்பவன் (அதாவது-ஆத்மா ஒன்றே பயனுய் பகைவரால் விரோதமும் நண்பர்களால் பிரயோஜநமும் இல்லாமையால் யாவரையும் ஸமமாக நினைப்பவன்) யோகாப்பியாஸஞ் செய்யத்தக்கவனுவான்.

యోగీయుఞ్జీతసతత మాత్మానంరహసిస్థితః।
ఏకాకీయతచిత్తాత్మా నిరాశీరపరిగ్రహః॥౧౦॥

(௧0) கீழ்ச்சொன்ன கர்மயோகியானவன், தினந்தோறும் யோகஞ் செய்யுங்காலத்தில் ஜநங்களில்லாமல் நிச்சப்தமாயிருக்கிற விடத்தில் தனியாயிருந்து சித்தத்தையும் மனதையுமடக்கி ஆத்மாவைத் தவிர மற்றவைகளில் அபேக்ஷையற்று ஒன்றிலும் எனதென்கிற எண்ணம்வையாமல் ஆத்மாவைத் தன்னைத்தான் பார்க்கும்படியான நிலையில் வைக்கக்கடவன்.

శుచౌదేశే ప్రతిష్ఠాప్య స్థిరమాసనమాత్మనః।
నాత్యుచ్ఛ్రితంనాతినీచం చేలాజినకుశోత్తరం॥౧౧॥
తత్రైకాగ్రం మనఃకృత్వా యతచిత్తేన్ద్రియక్రియః।
ఉపవిశ్యాసనేయుఞ్జ్యాద్యోగమాత్మవిశుద్ధయే॥౧౨॥

(௧௧-௧௨.) அசுத்த புருஷர்களாலும் அசுத்த வஸ்துக்களாலும் தீண்டப்படாத பரிசுத்த ஸ்தாநத்தில், கட்டைமுதலியவற்றுல் செய்ததாய் அதிக உயரமும் அதிக தாழமுமில்லாமல் ஸமமாயிருக்கிற ஓர் ஆஸநத்தில் தர்ப்பை மான்தோல் வஸ்திரம் இவைகளை ஒன்றின்மீ தொன்றுய்ப்பரப்பி அதில் சார்ந்துக்கொண்டு உட்கார்ந்து, மனதை ஒரு நிலையாகச்செய்து இந்திரிய மநோவியாபாரங்களைச் சுத்தமாயடக்கி, தான் இந்தப் பிரகிருதியினின்றும் விடுபடுகைக்காக ஆத்ம ஸாக்ஷாத்காரம்பண்ணக்கடவன்.

---

1 ஸமான வயதாயில்லாமலிருக்கச்செய்தே தனக்கு இதத்தைக் கோருமவர்கள். 2 ஸமான வயதாயிருக்கையால் தனக்கு இதத்தைக் கோருமவர்கள். 3 இவனிடத்தில் ஒரு காரணத்தைக்கண்டு இவனுக்கு அநர்த்தந்தேடுமவர்கள். 4 உறவு பகை இரண்டுக்கும் காரணமில்லாமையால் உறவு கொள்ளாமலும் பகைக்காமலு மிருப்பவர்கள். 5 ஸ்வபாவமாகவே உறவாடாமலும் பகைக்காமலுமிருப்பவர். 6 ஸ்வபாவமாகவே பகைப்பவர். 7 ஸ்வபாவமாகவே இதம் செய்பவர். 8 தர்மசீலர்கள்.

సమం కాయశిరోగ్రీవం ధారయన్నచలం స్థిరమ్।
సంప్రేక్ష్య నాసికాగ్రం స్వం దిశశ్చానవలోకయన్ ॥౧౩॥
ప్రశాన్తాత్మా విగతభీర్బ్రహ్మచారివ్రతే స్థితః।
మనస్సంయమ్య మచ్చిత్తో యుక్త ఆసీత మత్పరః ॥౧౪॥

(௧௩-௧௪.) உடல் தலை கழுத்து இவைகளை அசையாமல் † சாய்ந்தாற்போல் ஸமமாய்நிறுத்தி திசைகளைப்பாராமல் தன்மூக்கு நுனியைப்பார்த்துக்கொண்டே அடங்கிய மனதோடு பயமின்றிப் * பிரம்மசரிய வ்ரதத்தில் இருந்தவனாய் மனதை நம்மிடத்தில்திருப்பிவைத்து இடைவிடாமல் நம்மையே சிந்தித்திருக்கக்கடவன்.

యుఞ్జన్నేవం సదాత్మానం యోగీ నియతమానసః।
శాన్తిం నిర్వాణపరమాం మత్సంస్థామధిగచ్ఛతి ॥౧౫॥

(௧௫.) இப்படி மனதுக்கு க்ஷேமஸ்தாநமான நம்மிடத்தில் இடைவிடாமல் மனதை நிறுத்தியவன், நம் ஸம்பந்தத்தால் பரிசுத்தமாய் அசையாமலிருக்கும் அம்மனதைக்கொண்டு நம்மிடத்திலுண்டான மேலான ஆநந்தத்தை யடைகிறான்.

(அ-கை.) இப்படி ஆத்மயோகஞ்செய்ய ஆரம்பித்தவன் மனந்தெளிவதற்காக சுபஸ்தாநமான பகவானிடத்தில் மனதை நிறுத்தவேண்டுமென்பதை யருளிச்செய்து யோகத்துக்கு உபகரணமான மற்றவைகளையும் அருளிச்செய்கிறார்.

నాత్యశ్నతస్తు యోగోఽస్తి నచైకాన్తమనశ్నతః।
నచాతిస్వప్నశీలస్య జాగ్రతో నైవచార్జున ॥౧౬॥
యుక్తాహారవిహారస్య యుక్తచేష్టస్య కర్మసు।
యుక్తస్వప్నావబోధస్య యోగో భవతి దుఃఖహా ॥౧౭॥

(௧௬-௧௭.) அதிகமாயுண்பதும் முதலே உண்ணாமலிருப்பதும் அளவற்ற காரியஞ்செய்வதும் காரியமே செய்யாமலிருப்பதும் அப்படியே அதிகமாயுறங்குவதும் உறங்காமலே யிருப்பதும் அதிக ஆயாஸப்படுவதும் சிறிதும் ஆயாஸப்படாம லிருப்பதும் இவையெல்லாம் யோகத்துக்கு விரோதிகள். ஒவ்வொன்றும் மிதமாயிருப்பவனுக்குத் தான் துக்கநிவர்த்தகமான யோகம் ஸித்திக்கும்.

యదా వినియతం చిత్తమాత్మన్యేవావతిష్ఠతే।
నిస్పృహస్సర్వకామేభ్యో యుక్త ఇత్యుచ్యతే తదా ॥౧౮॥

---

† சாய்ந்துக் கொள்ளாமற்போனால் நடுவில் பின்பக்கத்தைத் தரிப்பதற்காகப் பிரயத்தநஞ் செய்வதனால் ஸமாதி நிலைகுலையுமென்று அதற்காகச் சாய்ந்தாற்போலென்கிறது.

* பிரம்மசரியவிரதமானது - பிரம்மமென்கிற ஆத்மாவையே சிந்தித்திருக்கும் நிலை.

(௧௮.) மனது ஆத்மாவில்தானே விசேஷமாய் நிலைத்து எப்பொழுது அசையாமலிருக்குமோ அப்பொழுதுதான் ஸகலகாமங்களிலும் ஆசையற்று யோகத்துக்குத் தக்கவனாவான்.

యథాదీపోనివాతస్థో నేఙ్గతేసోపమాస్మృతా।
యోగినోయతచిత్తస్య యుఞ్జతోయోగమాత్మనః॥౧౯॥

(௧௯.) மனோவியாபாரமற்று ஆத்மயோகம் செய்பவனுடைய ஆத்மாவுக்கு, காற்றில்லாவிடத்தில் அசையாமல் விளங்கும் விளக்கைச் சமமாய் கூறப்படும். [காற்றில்லாமையால் அசையாமல் காந்தியோடு விளங்கும் விளக்குபோல் ஆத்மாவானது ஸகல வியாபாரங்களையுமொழித்த மனதுடன் கூடினமையால் அசையாமல் ஞானமென்னும் காந்தியோடுகூடி விளங்குமென்று தாத்பரியம்.]

యత్రోపరమతేచిత్తం నిరుద్ధంయోగసేవయా।
యత్రచైవాత్మనాత్మానం పశ్యన్నాత్మనితుష్యతి॥౨౦॥
సుఖమాత్యన్తికంయత్త ద్బుద్ధిగ్రాహ్యమతీన్ద్రియమ్।
వేత్తియత్రనచైవాయం స్థితశ్చలతితత్త్వతః॥౨౧॥
యంలబ్ధ్వాచాపరంలాభం మన్యతేనాధికంతతః।
యస్మిన్స్థితోనదుఃఖేన గురుణాపివిచాల్యతే॥౨౨॥
తంవిద్యాద్దుఃఖసంయోగ వియోగంయోగసంజ్ఞితమ్।
సనిశ్చయేనయోక్తవ్యో యోగోఽనిర్విణ్ణచేతసా॥౨3॥

(௨௦-௨௧-௨௨-௨௩.) யோக ஸித்திக்காகத் தகையப்பட்ட மனதானது எந்த யோகத்தில் சுகப்படுமோ, எந்த யோகத்தில் ஆத்மாவைப் பார்ப்பதினால் அதில்தானே அதிகமாய் ஸந்தோஷிக்கிறானோ, இந்திரியங்களா லறியப்படாமல் கேவலம் ஆத்மாவினாலும் புத்தியினாலும் அறியக்கூடிய வின்பத்தையெந்தயோகத்தில்பெற்று அதனால் மற்றவிஷயங்களில் சபலிக்கமாட்டானோ, எந்த யோகம்செய்பவன் யோகத்தைவிட்டு நீங்கிய பின்பும் மற்றொன்றை யபேக்ஷிக்காமல் அந்த யோகத்தையே விசேஷமாய் நினைப்பனோ, எந்த யோகம் ஸித்தித்தவன் அந்த யோகத்தைவிட்டு நீங்கியபின்பும் (குணமுள்ள புத்திரன் இறத்தல் முதலியவற்றாலுண்டாகும்) பெருந்துயரங்களுக்கும் சலிக்கமாட்டானோ) அப்படிப்பட்ட யோகம் இதுவென்று யோகம்செய்ய வாரம்பித்தபொழுதே நிச்சயித்து மனக்கலக்கமற்று செய்யக்கடவன்.

సఙ్కల్పప్రభవాన్కామాం స్త్యక్త్వాసర్వానశేషతః।
మనసైవేన్ద్రియగ్రామం వినియమ్యసమన్తతః॥౨౪॥

శనైశ్శనైరుపరమే ద్బుద్ధ్యాధృతిగృహీతయా।
ఆత్మసంస్థంమనఃకృత్వా నకించిదపిచిన్తయేత్॥౨౫॥

(௨௪-௨௫.) பெண்டு பிள்ளை வீடுவாசல் முதலியவற்றில் தனக்குண்டான கோரிக்கையை, (அவர்களுக்கும் தனக்கும் ஸம்பந்தமில்லையென்கிற வெண்ணத்தைக்கொண்டு) ஒழித்து, சீதம் உஷ்ணம் முதலியவற்றாலுண்டாகும்விருப்பையும், வெறுப்பையுந்தொலைத்து, புலன்களையெங்கும்செல்லவொட்டாமல் தடுத்து மெள்ளமெள்ள விவேகத்தைக்கொண்டு மனதை ஆத்மாவில் நிறுத்தி, மற்றொன்றையும் நினையாமலிருக்கக்கடவன்.

యతోయతోనిశ్చరతి మనశ్చఞ్చలమస్థిరమ్।
తతస్తతోనియమ్యైత దాత్మన్యేవ వశంనయేత్॥౨౬॥

(௨௬.) சஞ்சல ஸ்வபாவமான மனது ஆத்மாவில் நிலையாமல் எந்தெந்தவிஷயத்தைத் தேடியோடுமோ, அதை அவ்வவற்றில் செல்லவொட்டாமல் வலுவிலிழுத்து ஆத்மாவில் தானே நிறுத்தி 'இது அதிக சுகமாயிருக்கிறது' என்கிற உத்தேசத்தோடு ஸ்வாதீனம் செய்யக்கடவன்.

ప్రశాన్తమనసంహ్యేనం యోగినంసుఖముత్తమమ్।
ఉపైతిశాన్తరజసం బ్రహ్మభూతమకల్మషమ్॥౨౭॥

(௨௭.) மனதை ஆத்மாவில் அசையாமல் நிறுத்தி அதனால் ஸகல பாபங்களையுந்தொலைத்து ரஜோகுணத்தையுமொழித்து ஸ்வஸ்வரூபத்தில் நிற்கு மிந்த யோகிக்கு ஆத்மாநுபவமென்னும் உத்தம சுகம் கிடைக்கும்.

ఏవంయుఞ్జన్సదాత్మానం యోగీవిగతకల్మషః।
సుఖేనబ్రహ్మసంస్పర్శ మత్యన్తంసుఖమశ్నుతే॥౨౮॥

(௨௮.) இப்படி ஆத்மயோகத்திலிருப்பவன் தொல்வினையாவுமொழித்து அதனால் ஈறிலின்பமான பிரம்மாநுபவத்தை எளிதில் அடைகிறான்.

(அ-கை.) யோகம் பக்குவமாம்போது அதனுடைய நான்குவிதமான நிலைமைகளையும் அருளிச்செய்கிறார்.

సర్వభూతస్థమాత్మానం సర్వభూతానిచాత్మని।
ఈక్షతేయోగయుక్తాత్మా సర్వత్రసమదర్శనః॥౨౯॥

(௨௯) யோகஞ்செய்யுமவன் தன்னை மற்ற பூதங்களிலும் எங்கும் * ஸமமாய்ப்பார்க்கிறான். அதாவது-ஆத்மாக்களெல்லாம் பிரகிருதிக்கவ்வருகாய் ஞானமே வடிவாய் தன்னைப்போலவே யிருப்பதாக நினைக்கிறான். [ஏகரூபமாயிருக்கிற ஆத்மாக்களில் ஒன்றைப் பார்த்தபோதே மற்றவைகளையும் பார்த்தவனாகிறானென்று தாத்பரியம்.]

---

* సర్వత్రసమదర్శనః என்றும், నిర్దోషంహిసమంబ్రహ్మ என்றும் சொல்லுகையாலும், యోయంయోగస్త్వయాప్రోక్తస్సామ్యేన என்று அநுவதிக்கையாலும் பிரகிருதிக்கவ்வருகாய் ஞாநாகாரமாயிருக்கையாகிற ஆத்மாக்களின் ஸாம்யமே இங்கு சொல்லப்படுகிறது.

యోమాంపశ్యతి సర్వత్ర సర్వంచమయిపశ్యతి।
తస్యాహంనప్రణశ్యామి సచమేనప్రణశ్యతి॥30॥"

(௩௦) முந்திய நிலையைக்காட்டிலும் பக்குவமான நிலையை (அதாவது என்னோடு ஸாம்மியத்தை) எவன் அடைகிறுனே அவன் ஆத்மாக்களையெல்லாம் என்னிடத்திலும்: என்னை ஸகல ஆத்மாக்களிலும் பார்க்கிறுன். (அதாவது-புண்யபாபங்களற்று ஸ்வஸ்வரூபமாயிருக்கும் ஆத்மாக்களெல்லாம் நிரஞ்ஜநஃப ரமంసామ్యముపైతి என்கிறபடியே பரமபுருஷனுன என்னைப்போலிருப்பதாகப் பார்க்கிறுன். [ஸ்வஸ்வரூபமாத்திரனுன அவன் பரமபுருஷனுக்கு ஸமனுயிருக்கையாலே தன்னைப்போன்ற மற்ற ஆத்மாக்களும் அப்படிதானிருக்குமென்று பார்க்கிறுனென்று தாத்பரியம்.] அப்படி தன்னை என்னைப்போல் பார்க்குமவனுக்கு அந்த ஸாம்யத்தைவிட்டு நான் காணுமற்போவதில்லை. அவனும் அப்படி (எனக்கு ஸமமாகக்) காணுமற்போவதில்லை.

(அ-கை.) அதற்கும் முதிர்ந்த நிலை சொல்லுகிறது.

సర్వ్వభూతస్థితంయోమాం భజత్యేకత్వమాస్థితః।
సర్వ్వథావర్త్తమానోపి సయోగీమయివర్త్తతే॥3౧॥

(௩௧) தேவர் மனிதர் என்று பிரகிருதியால் வரும் பேதத்தைவிட்டு சுருங்காத ஞானமே வடிவான ஆத்மாவிலொன்றியவனுய் யாவனொருவன் ஸர்வபூதங்களிலுமுள்ள நம்மை யோகநிலையில் திடமாய் ஸேவிக்கிறுனே, யோகமில்லாத நிலையிலுங்கூட அவன் தன் ஆத்மாவையும் மற்றப் பிராணிகளையும் பார்த்துக்கொண்டிருந்தும் நம்மிடத்திலேயே யிருக்கிறுன். [என்றால் - தன்னிடத்திலும் பிறரிடத்திலும் நமது ஸாம்யத்தையே பார்க்கிறுன் என்று தாத்பரியம்.]

(அ-கை.) இதற்கும் முதிர்ந்த முடிவான நிலை சொல்லுகிறது.

ఆత్మౌపమ్యేనసర్వత్ర సమంపశ్యతియోఽర్జున।
సుఖంవాయదివాదుఃఖం సయోగీపరమోమతః॥3౨॥

(௩௨.) ஆத்மாக்களெல்லாம் சுருங்காத ஞானமே வடிவமாய் ஸமமாயிருக்கையால் (புத்திரன் பிறத்தல் இறத்தல் முதலியவைகளாலுண்டாகும்) இன்பதுன்பங்களோடு ஒரு ஆத்மாவுக்கும் ஸம்பந்தமில்லையென்று பார்த்து, அதனுல் தன்னிடத்திலும் பிறரிடத்திலும் சுகதுக்கங்களைச் சமமாய்ப் பார்ப்பவன் அதாவது பிறருடைய புத்திரஜந்ம மரணுதிகளுக்குச் சமமாகத் தன் புத்திரஜந்ம மரணுதிகளையும் பார்ப்பவன் யோகத்தின் முடிவான நிலைமையிலிருப்பவனுவான்.

(அ-கை.) அர்ச்சுநன் சொல்லுவது

అర్జునఉవాచ॥ యోయంయోగస్త్వయాప్రోక్త స్సామ్యేనమధుసూదన।
ఏతస్యాహంనపశ్యామి చఞ్చలత్వాత్ స్థితిం స్థిరామ్॥33॥

చఞ్చలంహిమనఃకృష్ణ ప్రమాథిబలవద్దృఢమ్।
తస్యాహంనిగ్రహంమన్యే వాయోరివసుదుష్కరమ్॥౩౪॥

(௩௩-௩௪.) ஸ்வாமி! தேவர் மனிதர் என்கிற பேதத்தை நெடுங்காலமாய்ப் பார்த்துவந்தவனை, யிப்பொழுது "ஆத்மாக்கள் ஞானஸ்வரூபராய்" ஒருவர்க்கொருவர் ஸமமாயிருக்கிறார்களென்று நினைக்கும்படியாகச்சொன்னால் அதெப்படி நினைக்கக்கூடும். ஆகையால் நீர் சொன்ன இந்த யோகம் நிலைக்குமென்று எனக்குத் தோன்றவில்லை; ஏனெனில்:—சலிப்பதே ஸ்வபாவமான மனதை பழக்கமான விஷயத்தில் நிறுத்தும்பொழுதே அது ஒன்றை நினைக்கும்போது மற்றொன்றில் பாய்கிறது; அப்படியிருக்க, பழக்கமில்லாத ஆத்மாவில் இம்மனதை ஸ்தாபிக்கிறதென்றால் எதிர்காற்றை விசிறிகொண்டு தடுப்பதுபோல் மிகவும் வருத்தமாமென்று நினைக்கிறேன். [ஆகையால் மனதையடக்கும் உபாயஞ் சொல்லவேண்டுமென்று கருத்து.]

(அ-கை.) அதற்கு எம்பெருமான் அருளிச்செய்கிறார்.

శ్రీభగవానువాచ॥ అసంశయంమహాబాహో మనోదుర్నిగ్రహంచలమ్।
అభ్యాసేనతుకౌన్తేయ వైరాగ్యేణచగృహ్యతే॥౩౫॥

అసంయతాత్మనాయోగో దుష్ప్రాపఇతిమేమతిః।
వశ్యాత్మనాతుయతతా శక్యోఽవాప్తుముపాయతః॥౩౬॥

(௩௫-௩௬.) பெருந்தோள் மன்னா! சஞ்சல ஸ்வபாவமான மனதை அடக்குவதென்பது வருத்தமே! ஆயினும் ஆத்மா குணஸ்வரூபமாயிருக்கிறதென்று பழகுவதால் அதில் அன்பும், இதரவிஷயங்கள் தோஷரூபமாயிருக்கின்றனவென்று அறிகையால் அவைகளில் வெறுப்புமுண்டாய் நாளடைவில் மனதை யெப்படியாவது கட்டிப்பிடிக்கவேண்டும். மனதை ஜயிக்காவிடில் யோகம் ஸித்திப்பது மிகவும் துர்லபம். உபாயத்தாலே மனதை ஸ்வாதீனம் செய்தவனுக்கோ, அதாவது-நாம் முன்சொன்னபடி நமது ஆராதநரூபமான கர்மயோகத்தாலே மனதை ஜயித்தவனுக்கோ (எல்லாவற்றையும் ஸமமாய்ப்பார்க்கையாகிற) யோகம் ஸித்திப்பது மிகசுலபம்.

(அ-கை.) அநந்தரம் నేహాభిక్రమనాశోఽస్తి இத்யாதிகளில் கேட்ட யோக மாஹாத்மியத்தையே * உள்ளபடி கேட்கவேண்டுமென்று அர்ச்சுநன் பிரச்நம் பண்ணுகிறான்.

---

* அங்கே கர்மயோகத்தின் மஹிமையன்றோ சொல்லப்பட்டதென்றால், அது யோகத்துக்கு அங்குரமான ஞாநத்தையுட்கொண்டதாயும் யோகத்தைக்கொண்டு முடிவதாயும் சொல்லப்பட்டமையால் அங்கும் யோகமே சொல்லப்பட்டது; என்றால் யோகத்துக்கு அங்கமான கர்மயோக மாஹாத்மியஞ் சொன்னபோதே அங்கியான யோகமும் சொன்னதாமென்று அபிப்பிராயம்.

అర్జునఉవాచ॥ అయతిశ్శ్రద్ధయోపేతో యోగాచ్చలితమానసః।
అప్రాప్యయోగసంసిద్ధిం కాంగతింకృష్ణగచ్ఛతి॥౩౭॥

కచ్చిన్నోభయవిభ్రష్ట శ్ఛిన్నాభ్రమివనశ్యతి।
అప్రతిష్ఠోమహాబాహో విమూఢో బ్రహ్మణఃపథి॥౩౮॥

ఏతన్మేసంశయంకృష్ణ ఛేత్తుమర్హస్యశేషతః।
త్వదన్యస్సంశయస్యాస్య ఛేత్తానహ్యుపపద్యతే॥౩౯॥

(௩௭-௩௮-௩௯) அர்ச்சுநன் சொல்லுவது:—மிகவும் ஊற்றத்துடன் யோகஞ்செய்ய விழிந்த ஒருவன், தான் திடமான அப்பியாஸம் செய்யமாட்டாமல் அதனுல் யோக ஸித்தியடையாமல் யோகத்தினின்றும் நழுவினுனுகில் அவன் அதனுல் என்ன கதியடைகிருன்? ஒருபெரிய மேகத்தினின்றுந் துண்டுபட்ட ஒரு சிறுமேகமானது மற்ருெரு பெருமேகத்தையுமடையாமல் நடுவில் அழிந்துபோவதுபோல், ¶ கர்மமார்க்கமும் கெட்டு பிரம்மமார்க்கமுங்கெட்டு அழிந்து போகிருனு! இல்லையென்று ஏதாகிலும் இவனுக்கு க்ஷேமமுண்டா? இந்த ஸம்சயத்தை நன்ருய்ப் போக்கியருளவேண்டும். ஸ்வயம் ப்ரத்யக்ஷமாய் ஏககாலத்தில் எல்லாவற்றையு மெப்போதுங் காண வல்லராகிய தேவரீரைத் தவிர மற்ருெருவராலும் இந்த ஸம்சயம் போக்கக்கூடியதல்ல.

(அ-கை.) அதற்குக் கண்ணன் அருளிச்செய்வது.

శ్రీభగవానువాచ॥ పార్థనైవేహనాముత్ర వినాశస్తస్య విద్యతే।
నహికల్యాణకృత్కశ్చి ద్దుర్గతిం తాతగచ్ఛతి॥౪౦॥

(௪௦) ஊற்றத்தோடு யோகத்திலிழிந்தவன் அதினின்று நழுவினுனுகில் அவனுக்கு இஹபரங்களிரண்டிலும் அழிவில்லை. அதாவது-பிரகிருதியைச்சேர்ந்த ஸ்வர்க்காதிபோகத்திலும் ப்ரம்மாநுபவத்திலும் (கோரியதைப்பெருமல் போவதும் அநிஷ்டத்தை யடைவதுமான) நாசமுண்டாகமாட்டாது. மிகவும் மங்களகரமான யோகத்தைச் செய்பவனுக்கு முக்காலத்திலுங் கேடுவரமாட்டாதன்ருே?

(அ-கை.) ஆனுல் இவன் என்னகதியடைகிருன்? என்ருல் அருளிச்செய்கிருர்.

ప్రాప్యపుణ్యకృతాంలోకా నుషిత్వాశాశ్వతీస్సమాః।
శుచీనాంశ్రీమతాంగేహే యోగభ్రష్టోభిజాయతే॥౪౧॥

---

¶ இவன் (கர்மத்தைப் பலாபேக்ஷையுடன் செய்யாமையால் அது ஸ்வர்க்காதிபலன்களை ஸாதிக்கமாட்டாதாகையால் அதிலும் ஆதாரமற்று, தான் ஆரம்பித்தப் பிரம்மமார்க்க மான யோகந் தலைக்கட்டாமையால் இதிலும் ஆதாரமற்றுப்போகிருன்.)

(சக) யோகத்தினின்றும் நழுவியபோது எவ்விதபோகத்தில் ஆசையினுல் நழுவினுனே இவன் சரீராந்தத்தில் மஹா புண்ணியசாலிக ளடையும்படியான லோகங்களையடைந்து அவ்வித போகங்களை யோகமஹிமையினுலே அநுபவித்தவனுய்,அந்தபோகத்தில் நசையறுமளவும் வெகுகாலம் அங்கிருந்து நசையற்று, பின்பு பரிசுத்தர்களாயும் ஸ்ரீமான்களாயும் யோகஞ்செய்யத் தக்கவராயுமுள்ள மஹாத்துக்களின் கிருஹத்தில் அந்த யோக மஹிமையைக்கொண்டே வந்து பிறக்கிருன்.

అథవాయోగినామేవ కులేభవతిధీమతామ్|
ఏతద్ధిదుర్లభతరం లోకేజన్మయదీదృశమ్॥౪౨॥

(சஉ) யோகந் தலைக்கூடுகிறஸமயத்தில் நழுவிப்போனுனுகில் அவன், யோகஞ் செய்யுமவர்களும் பிறருக்கு உபதேசிக்கத் தக்கவர்களுமான மஹான்களின் குலத்தில்வந்து பிறக்கிருன். இப்படி யோகஞ்செய்யத் தக்கவர்களுடையவும் யோகிகளுடையவும் குலத்தில்வந்து பிறப்பதென்பது லோகத்தில் ஸாதாரணமாய் எல்லாருக்கும் கிடைப்பதன்று; கேவலம் யோகமஹிமையினுல்பெறத்தகுந்தது.

తత్రతంబుద్ధిసంయోగం లభతేపౌర్వదైహికమ్|
యతతేచతతోభూయ స్సంసిద్ధౌకురునన్దన॥౪౩॥
పూర్వాభ్యాసేనతేనైవ హ్రియతేహ్యవశోపిసః|

(சங-சசூ) இவன் அந்த மறுஜந்மத்திலும், முன்ஜந்மத்தில் பழகிய யோக புத்தியையேயடைந்து தூங்கியெழுந்தவன்போல் மறுபடியும் அந்த யோக ஸித்தியைக்குறித்தே எப்படியானுல் இடையூறு நேரிடாதோ அப்படி யத்தநம்செய்கிருன். இவன் முன்செய்த அப்பியாஸமானது இவனை மறுபடியும் அந்த மார்க்கத்திலேயே இழுக்கிறது. இப்படி இந்த யோகத்தின் மகிமை எங்கும் பிரஸித்தமன்ருே?

జిజ్ఞాసురపియోగస్య శబ్దబ్రహ్మాతివర్తతే॥౪౪॥

(சச) யோகஞ்செய்யத் தொடங்காமல் யோகமார்க்கத்தை யறிய விரும்பியவன் அதினின்று மனஞ்சலித்தானுகில் அவனும் அப்படியே மறுபடியும் அந்த யோகவிசாரத்தையே செய்யத்தொடங்கி கர்மயோகமடியாக யோகத்தை யநுஷ்டித்து அதனுல் சப்தப்பிரமத்தை (அதாவது - பிரகிருதியை) க்கடக்கிருன். [அதாவது பிரகிருதியினின்றும்விடுபட்டு தேவன் மனிதன் என்பதுமுதலான சப்தங்களைக்கொண்டு சொல்லப்போகாமல் ஞாநாநந்த ஸ்வரூபனுன ஆத்மாவை யடைகிருனென்று பொருள்]

ప్రయత్నాద్యతమానస్తు యోగీసంశుద్ధకిల్బిషః|
అనేకజన్మసంసిద్ధ స్తతోయాతిపరాంగతిమ్॥౪౫॥

(சரு) யோகத்தின் மஹிமை யிவ்வண்ணமாயிருக்கையால் அனேக ஜந்மங்களாய் புண்ணியத்தை யோராளமாகச்செய்து அதனுல் பாவங்களைத்

தொலைத்து யோகஞ்செய்ய விழிந்தவன் அந்த யோகத்தினின்றும் நழுவிய போதிலும் மறுபடியும் நற்கதியேயடைகிறான்.

(அ-கை.) உயர்ந்த புருஷார்த்தத்தைக் கோரியவனாகையால் யோகியானவன் யாவரினும் பெரியனென்கிறார்.

తపస్విభ్యోఽధికో యోగీ జ్ఞానిభ్యోఽపిమతోఽధికః|
కర్మిభ్యశ్చాధికో యోగీ తస్మాద్యోగీభవార్జున॥౪౬॥

(சசு) கேவலந் தங்களால் எந்த புருஷார்த்தங்களை யடையலாகுமோ ஆத்மஞாநந் தவிர மற்ற ஞாநங்களாலெவைகளை யடையலாகுமோ கேவலம் அசுவமேதம்முதலிய கர்மங்களால் எவையடையப்படுமோ அவையெல்லாவற்றிலும் சிறந்த புருஷார்த்தத்தை யோகம் ஸாதிக்குமாகையால் இந்த யோகி அவர்கள் யாவரினும்பெரியவன். ஆகையால் அர்ச்சுந! நீ யோகியாகும் வழியைப்பார்.

(அ-கை.) இதுவரையில் பரவித்தைக்கு அங்கமான பிரஜாபதிவாக்கியத்தில் சொன்ன ஜீவாத்மதரிசநம் சொல்லப்பட்டது. இனி பரவித்தையைச்சொல்லுகிறார். [பரவித்தைபகவது பாஸநம்.]

యోగినామపిసర్వేషాం మద్గతేనాన్తరాత్మనా|
శ్రద్ధావాన్భజతేయోమాం సమేయుక్తతమోమతః॥౪౭॥

(சஎ) அகச்செயல் புறச்செயல்களுக்கு ஆதாரமாயுள்ள மனது நம்மையே நாடியிருக்கையாலே பரமபுருஷனான நம்மைவிட்டால் ஒரு க்ஷணங்கூட ஆத்மாவைத் தரிக்கமாட்டாத ஸ்வபாவனாய் நம்மை யடையவேண்டுமென்று துரிதப்பட்டு எவன் என்னை ஸேவிக்கிறானோ அவன் கீழ்ச்சொன்ன யோகிகளிலும் மற்றும் தவசிமுதலானோர் யாவரினும் மிகவும் மேலானவன் என்று ஸர்வக்ஞனான நாம் நினைக்கிறோம். [மேருவுக்கும் கடுகுக்கும் உண்டான வித்தியாஸம்போல் இந்த பிரம்ம உபாஸகனுக்கும், மற்ற யோகி தவசி முதலானோருக்குமுண்டான வித்தியாஸம்; ஆனால் கடுகுக்குள் ஒன்றுக்கொன்று சிறிதுபெரிதென்கிற வித்தியாஸம்போல் ஜீவாஸாக்ஷாத்காரம் பண்ணிய யோகிக்கும் மற்ற தவசிமுதலானோருக்கும் வித்தியாஸமென்றறிக.] அதென்ன? (ஜீவஸாக்ஷாத்காரம்பண்ணும்) யோகிக்கும் பிரம்மநிஷ்டனுக்கும் அவ்வளவு தாரதம்யம் எங்ஙன முண்டாவதென்னில்:—விசித்திரமாய் எண்ணிறந்த போக்கிய பதார்த்தங்களும். போக்தாக்களின் கூட்டங்களும் போகத்துக்குவேண்டும் கருவிகளும் அதற்கேற்ற ஸ்தாநங்களும் நிறைந்த இவ்வெல்லா உலகங்களுக்கும் உத்பத்தி ஸ்திதி லயம் என்கிற மூன்று நிலைமையையும் விளையாட்டாய்ச் செய்பவனாய், ஒரு தோஷத்தாலும் தட்டுப்படாமல் எல்லையும் ஈடுமற்ற ஞாநம்பலம் ஐசுவரியம்வீரியம் சக்தி தேஜஸ்ஸூமுதலிய எண்ணிறந்த கல்லியாணகுணங்களுக்கு நிதியாய், நமக்கு ஸம்மதமாய் நமக்குத்தக்கதாய் ஏகரூபமாய் சிந்தைக்கெட்டாததாய் திவ்யமாய் அற்புதமாய் நித்தியமாய் குற்றமற்றதாய் நிரதிசயமாய் பிரகாசம் ஸௌந்தரி

யம் பரிமளம் ஸௌகுமாரியம் லாவண்யம் யௌவநம் முதலிய அநந்த குணங்களுக்குமிடமான திவ்யமங்கள விக்கிரகத்தையுடையவனாய், வாக்குக்கும் மனதிற்குமெட்டாதஸ்வரூபஸ்வபாவங்களுடையனாயிருக்கச்செய்தே, அபாரமானகருணை ஸௌசீல்யம் வாத்ஸல்யம்ஔதாரியம் இவைகளுக்குஸமுத்திரமாயும் காரணமில்லாமலே எல்லாப்பிராணிகளுக்கும் புகலிடமாயுமிருக்கையாலும் அடுத்தவரின் துயரத்தை யொழிப்பதற்காக, ஆஸ்ரிதவாத்ஸல்லிய ஸாகரமாய், ஸகலமனுஷ்யருக்கும் நேத்திரவிஷயமாய், தன் ஸ்வபாவத்தைவிடாமலே வசுதேவர் திருமாளிகையில் அவதரித்து ஈடில்லாத நங்காந்தியால் ஸகல லோகத்தையும் பிரகாசப்படுத்திவளர்த்துக்கொண்டிருக்கிற நம்மையே உபாஸிக்கு மிந்தப் பிரம்மநிஷ்டனுக்கும், கேவலம் பிரகிருதிக்குப் புறம்பாய் ஞாநாகாரனாயிருக்கும்ஜீவஸ்வரூபத்தை உபாஸிக்கிற யோகிக்கும் ஒப்புச்சொல்லசிறிதாகிலும் இடமுண்டோ? ஆகையால் அவன் எல்லாரிலும் மிருதியும் சீரியவனென்று நம் ஸித்தாந்தம்.

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,

ஆறுவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ:.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# ஏழாவது அத்யாயம்.

அவதாரிகை,

இப்படி பிரதாநபலனாய் பரப்பிரம்மமாய் நித்தியனாய் குற்றமற்றவனாய் எல்லாவுலகங்களுக்கும் முக்கியகாரணனாய் யாவுமறிந்தவனாய் எப்பொருட்குமுயிராய் நினைத்ததைத்தப்பாமல் செய்யவல்லனாய் மஹத்தான ஐசுவரியவானாயிருக்கும் ஸ்ரீமந்நாராயணனைக் கிட்டுகைக்கு உபாயம், அவனை உபாஸிப்பதுதானென்றருளிச்செய்வாராய், அதற்கு ஆத்மஞாநத்தோடுகூடிக் கர்மத்தைச்செய்து பெறவேண்டிய ஜீவாத்மதரிசநம் அங்கமாயிருக்கையாலே அதையருளிச்செய்தார். இப்பொழுது நடுவிலுள்ள இந்த ஆறு அத்தியாயங்களால் பரப்பிரம்மமான பரமபுருஷஸ்வரூபத்தையும் அவனை உபாஸிப்பதான ‡ பக்தியையும் அருளிச்செய்கிறார். †

---

† இவ்வர்த்தத்தை "యతః ప్రవృత్తిర్భూతానాం యేన సర్వమిదం తతమ్। స్వకర్మణా తమభ్యర్చ్య సిద్ధిం విన్దతి మానవః என்று தொடங்கி విముచ్య నిర్మమశ్శాన్తో బ్రహ్మభూయాయ కల్పతే। బ్రహ్మభూతః ప్రసన్నాత్మా న శోచతి న కాఙ్క్షతి। సమస్సర్వేషు భూతేషు మద్భక్తిం లభతే పరామ్ என்று மேலே சுருக்கி யருளிச்செய்கிறார்.

‡ எம்பெருமானை உபாஸிக்கும்போது அவ்வுபாஸநமென்னும் ஞாநம் பக்தியாய்த் திரிந்தால் மாத்திரந்தான் பரமபுருஷனை யடையலாமென்கிற

அதில் இந்த ஏழாவது அத்யாயத்தில் (உபாஸ்யனான) பரமபுருஷஸ்வரூபத்தின் உண்மையும் அது பிரகிருதியால் மறைக்கப்பட்டிருக்குந்தன்மையும் அம்மறைவு நீங்குகைக்காக எம்பெருமானிடத்தில்பண்ணும் பிரபத்தியும் உபாஸிப்பவர்களின் உட்பிரிவும் அதில் ஞாநிகளுக்குண்டான சிறப்பும் சொல்லப்படுகிறது.

శ్రీభగవానువాచ|| మయ్యాసక్తమనాః పార్థ యోగం యుఞ్జన్మదాశ్రయః|
అసంశయం సమగ్రం మాం యథా జ్ఞాస్యసి తచ్ఛృణు||౧||

(க) அர்ச்சுந! நீ நமது ஸ்வரூபம் குணம் சேஷ்டை! விபூதி இவைகளைப் பிரியும்படி நேரிட்டால் அந்த க்ஷணமே நம்மிடத்தில் விருப்பத்தால் நீர்ப்பண்டம்போல் உருகிப்போம்படியான மனதைக்கொண்டு நம்மையே நாடியவனாய்,(அப்படியே நம்பிரிவில் தரிக்கமாட்டாமல்) நம்மையே ஆதாரமாக நம்பியவனாய் யோகஞ்செய்யத் துவக்கி, (அந்த யோகத்துக்கிலக்கான நம்மை ஸம்சயமில்லாமல் முழுதும் எப்படியானால் அறிவுதியோ (அவ்வித ஞாநத்தை யுனக்கு உபதேசிக்கிறோம்) அதை ஸாவதாநமாகக் கேட்பாயாக.

விஷயம் வேதாந்தவாக்கியஸித்தம். எங்ஙனேயென்னில்:—"க. அவனையறிந்தால் தான் மிருத்யுவைக்கடக்கலாம்" என்றும், "உ. அவனை இப்படிஅறிபவன் இங்கே அழிவில்லாதவனாகிறான்" என்றும்,இன்னுமிப்படி வேதவாக்கியங்களில் சொல்லும் அறிவானது, "ங. பரமாத்மைவக் காணவேண்டுமாகில் தியாநஞ்செய்யவேண்டும்" என்றும், "ச. ஆத்மாவையே பிரத்தியக்ஷமாய்க்கண்டு உபாஸிக்கக்கடவன்" என்றும், "ரு. ஸத்வம் சுத்தமானால் இடைவிடாத சிந்தை யுண்டாம், சிந்தையுண்டாகில் எல்லா முடிச்சுகளும் அவிழ்ந்துபோம்" என்றும்"சு. அந்த பரமாத்மாவைக் கண்டவுடனே உள்ளத்திலுண்டான முடிச்சு அவிழ்ந்துபோகிறது; ஸகலஸம்சயங்களும் அற்றுப்போகின்றன; இவனுடைய கர்மங்களெல்லாம் அழிந்துபோகின்றன" என்று மிவைமுதலிய வாக்கியங்களோடு ஒருபொருட்படுகையாலே இடைவிடாத சிந்தையாயும் பிரத்யக்ஷம்போன்றதாயு மிருக்கவேண்டுமென்றும் அது தியாநம் உபாஸநம் முதலிய சப்தங்களால் கூறப்படுமென்றும் தெரியவருகிறது.

மறுபடியும் "எ. இந்த பரமாத்மா மநநத்தினாலாவது தியாநத்தினாலாவது பலகாலுங்கேட்பதினாலாவது அடையக்கூடியவனல்ல; இந்தபரமாத்மா எவனையானால் வரிக்கிறானோ அவனால்மாத்திரம்தானடையப்பட்டு தன் ஸ்வரூபத்தை அவனுக்குப் பிரகாசிப்பிக்கிறான்" என்று சிறப்பித்துச் சொல்லுகையாலே உபாஸந சப்தத்துக்குப் பொருள், பரமபுருஷன் இவனை

౧. తమేవం విదిత్వాఽతిమృత్యుమేతి || ౨. తమేవం విద్వానమృత ఇహ భవతి || 3. ఆత్మా వారే ద్రష్టవ్యః......నిదిధ్యాసితవ్యః|| ४. ఆత్మానమేవ లోకముపాసీత ||౫. సత్త్వశుద్ధౌ ధ్రువా స్మృతిః స్మృతిలమ్భే సర్వగ్రన్థీనాం విప్రమోక్షః || ౬. భిద్యతే హృదయగ్రన్థిః ఛిద్యన్తే సర్వసంశయాః క్షీయన్తే చాస్య కర్మాణి తస్మిన్ దృష్టే పరావరే || ౭. నాయమాత్మా ప్రవచనేన లభ్యో న మేధయా న బహునా శ్రుతేన| యమేవైష వృణుతే తేన లభ్యస్త

జ్ఞానం తేహం సవిజ్ఞాన మిదం వక్ష్యామ్యశేషతః।
యత్ జ్ఞాత్వా నేహ భూయోన్యత్ జ్ఞాతవ్యమవశిష్యతే॥౨॥

(௨) அர்ச்சுன! ஞானத்தை விஜ்ஞானஸஹிதமா யுபதேசிக்கிறேன் [ஞானமாவது பகவத் ஸ்வரூபஞானம், விஜ்ஞானமாவது அதைப்பிரித்தறியும் ஞானம்; அதாவது:—ஸர்வேசுவரனாகியநாம் ஈனமான வெல்லாப்பொருளுக்கும் எதிராய் அளவிலாவதிசயமும் எண்ணற்கரிய கல்யாணகுணங்களும் அநந்தமான விபூதியும் உடைத்தாயிருக்கையால் சேதநாசேதநங்களெல்லாவற்றிலும் வேறுபட்டிருக்கிறே மென்பதை யறியும்படியான ஞாநம்: அதை யுபதேசிக்கிறே மென்றபடி.] அதிக வார்த்தையென்ன? இதைக் கேட்டாயாகில்பிறகு நம்விஷயமாய்க் கேட்கும்படியான அம்சம் சிறிதுங் கிடைக்கமாட்டாது.

(அ-கை.) இப்பொழுது தாம் உபதேசிக்கப்போகிற ஞாநம் எளிதில் கிடைப்பதல்லவென்கிறார்.

మనుష్యాణాం సహస్రేషు కశ్చిద్యతతి సిద్ధయే।
యతతామపి సిద్ధానాం కశ్చిన్మాం వేత్తి తత్త్వతః॥3॥

(௩) சாஸ்திராப்பியாஸத்துக்கு யோக்கியமான மநுஷ்ய ஜாதிக்குள் எவனோ ஒருவந்தான் நம்மைத்தெரிந்து நம்மிடத்தில் ஸித்தியையபேக்ஷித்து யத்தநம்செய்பவன்; அதிலும் எவனோ ஒருவந்தான் நம்மை உள்ளபடியே அறிபவன். [స మహాత్మా సుదుర్లభః என்றும், మాంతు వేద న కశ్చన என்றும் மேலே சொல்லப்போகிறபடியால் உள்ளபடியே அறிபவன் ஒருவனுமில்லையென்று தாத்பரியம்.]

---

வரிப்பதற்குக் காரணமாய் இவன் செய்யும் இடைவிடாத சிந்தையென்றும், சிந்திக்கப்படும் பகவான் இனியனாகையாலே அச்சிந்தையும் இனியதாயிருக்குமென்றும் நிச்சயிக்கப்படுகிறது. இனி பக்தியாவதென்ன இதுதானே? "௮. ஸ்நேகத்தோடு இடைவிடாமல் சிந்திப்பதுதான் பக்தியென்னப்படும்" என்றன்றோ சொல்லப்படுகிறது?

இப்படி ஸமந்வயம்பண்ணுமல்மாத்திரந்தான் "௯. அவனை இப்படியறிபவன் இங்கே அழிவற்றவனாகிறான்! கதிக்கு அதைவிட வேறுவழியில்லை" என்றும் "௧௦. நான் வேதங்களாலாவது தவத்தாலாவது தாநத்தாலாவதுயாகத்தாலாவது அர்ச்சுந! நீ இப்பொழுது பார்த்ததுபோல் பார்க்கக்கூடியவனல்ல; ௧௧. பின்னையென்னையேவிஷயீகரித்திருக்கிற பக்தியொன்றினால் மாத்திரந்தான் என்னை உள்ளபடி யறியவாவது பார்க்கவாவது அடையவாவதுகூடும்; நான் இப்படிப்பட்டவன்" என்னும்வாக்கியங்களுக்கு ஏகார்த்தத்வம்ஸித்திக்கும்.

---

సైష ఆత్మా వివృణుతే తనూం స్వామ్॥౮. స్నేహపూర్వమనుధ్యానం భక్తిరిత్యభిధీయతే॥ ౯, తమేవం విద్వానమృత ఇహ భవతి। నాన్యః పన్థా అయనాయ విద్యతే॥ ౧౦. నాహం వేదైర్న తపసా న దానేన న చేజ్యయా। శక్య ఏవంవిధో ద్రష్టుం దృష్టవానసి మాం యథా॥౧౧. భక్త్యా త్వనన్యయా శక్యః అహమేవంవిధోఽర్జున। జ్ఞాతుం ద్రష్టుం చ తత్త్వేన ప్రవేష్టుం చ పరన్తప॥

భూమిరాపోఽనలోవాయుః ఖంమనోబుద్ధిరేవచ|
అహఙ్కార ఇతీయంమే భిన్నా ప్రకృతిరష్టధా||౪||

(ச) இந்தப் * பிரகிருதியானது கெந்தம்முதலான குணங்கள்பொருந்திய பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்று பஞ்சபூதங்களாகவும் மனம்முதலிய இந்திரியங்களாகவும் மஹத்தென்றும் அஹங்காரமென்றும் இப்படி யெட்டுவகையாய்ப் பிரிக்கப்பட்டு நமக்கு ஆதீனமா யிருக்கிறதென்றறி.

అపరేయమితస్త్వన్యాం ప్రకృతింవిద్ధిమేపరామ్|
జీవభూతాంమహాబాహో యయేదంధార్యతేజగత్||౫||

(ரு) அர்ச்சுந! நமக்கு இரண்டுப் பிருகிருதிகளுண்டு; அதில் கீழ்ச்சொன்ன பிரகிருதி மிகவும் இழிவானது. இதைக்காட்டிலும் வேறான ஜீவனென்னும் மற்றொருப் பிரகிருதியானது(இதைப்புசிப்பதாகையால்)இதைக்காட்டிலும் சிறந்ததாய் ஞானவடிவமாயிருக்கின்றது. இது தான் அசேதநமான இவ்வுலகங்களெல்லாவற்றையும் தரிக்கின்றது.

ఏతద్యోనీనిభూతాని సర్వాణీత్యుపధారయ|
అహంకృత్స్నస్యజగతః ప్రభవః ప్రళయస్తథా||౬||

(சா) சேதநமாயும் அசேதநமாயும் நமக்கு சேஷப்பட்டதாயுமிருக்குமிவ்விருவகைப் பிரகிருதியினின்றுந் தான், பிரமன்தொடங்கித் தாவரமிறுய்ஏற்றமுந்தாழ்வுமாய் சித்தும் அசித்துமாயுள்ள இந்தப்பூதங்கள்யாவும் உண்டாகின்றன. நமது பிரகிருதியால் உண்டானது பற்றி இவையாவும் நம்முடையவைகளே; ஆகவிப்படிஸகலலோகங்களுக்கும் பிரகிருதிகள் காரணமாயிருப்பதுபோல் அப்பிரகிருதிகளுக்கு நாம்காரணமாய் சேஷியாயிருக்கையால்எல்லாவுலகங்களுக்கும் நாமே $ காரணமென்றும் நாமே நாசகமென்றும்நாமே சேஷியென்றுமறி.

---

* பிரகிருதியென்றால் புசிக்கும் பண்டங்களாகவும் புசிக்குங் கருவிகளாகவும் புசிக்கத்தக்கவிடங்களாகவும் விசித்திரமாய் எண்ணிறந்தவைகளாயுள்ள இவ்வுலகத்தின் முதற்காரணம்.

$ சேதநா சேதநங்களின் தொகையான பிரகிருதி புருஷாளுக்குப் பரமபுருஷன் காரணமென்றுமிடம்ஶ்ருதி ஸ்மிருதிஸித்தம். எங்ஙனே யென்னில்:-శ్రు||మహానవ్యక్తే లీయతేఅవ్యక్తమక్షరేలీయతే||అక్షరంతమసిలీయతేతమఃపరేదేవఏకీభవతి||విష్ణోస్స్వరూపాత్పరతోదితేద్వేరూపేప్రధానంపురుషశ్చవిప్ర||స్మృ|| ప్రకృతిర్యామయాఖ్యాతావ్యక్తావ్యక్తస్వరూపిణీ। పురుషశ్చాప్యుభావేతౌలీయేతే పరమాత్మని పరమాత్మాచసర్వేషామాధారఃపరమేశ్వరః| విష్ణునామాసవేదేషువేదాన్తేషు చగీయతే இவைமுதலியன.

మత్తఃపరతరంనాన్య త్కించిదస్తిధనఞ్జయ|౬-౭|

(சூ-ற) நாம் ஸர்வகாரணமானப் பிரகிருதிகளிரண்டுக்குங் காரணமாயிருக்கையாலும், ஸகலஅசேதநத்துக்கும் சேஷியான சேதநனுக்கும் சேஷியாயிருக்கையாலும், எப்படி பராத்பரமாயிருக்கிறோமோ அப்படியே ஞாநம் சக்தி பலம்முதலியவைகளாலும் நாமே பராத்பரம். ஞாநத்தாலாவது பலத்தாலாவது மற்றெவ்விதத்தாலும் நமக்கு மேற்பட்டதத்வம் ஒன்றுங் கிடைக்கமாட்டாது.

మయిసర్వమిదంప్రోతం సూత్రేమణిగణాఇవ||౭||

(எ) சேதநாசேதநரூபமான இவ்வஸ்துக்களெல்லாம் காரியமான நிலையிலும் காரணமானநிலையிலும் எப்போதும் நமக்குச் சரீரமாய், ஒருநூலில் கோக்கப்பட்ட (முத்துமுதலிய) ரத்தினங்கள்போல் அந்தராத்மாவாய் நிற்கும் நம்மிடத்தில் கோக்கப்பட்டிருக்கின்றன.

(அ-கை.) ஆகையால் ஸகலமும் (1) அந்தராத்மாவான எம்பெருமானுக்குச்சரீரமாய் (2) பிரகாரமாயிருக்கையால் அவனே ஸர்வப்பிரகாரமாகவும்இருக்கிறானென்றும் ஆனதுபற்றியே உலகத்தில் வழங்கும் எல்லாசப்தங்களும் அவனையே சொல்லுகின்றனவென்றும் அந்தந்த சப்தங்களைக்கொண்டுபரமாத்மாவைக்குறிக்கிறார்.

రసోహమప్సుకౌన్తేయ ప్రభాస్మిశశిసూర్యయోః|
ప్రణవస్సర్వవేదేషు శబ్దఃఖేపౌరుషంనృషు||౮||
పుణ్యోగన్ధఃపృధివ్యాంచ తేజశ్చాస్మి విభావసౌ|
జీవనంసర్వభూతేషు తపశ్చాస్మితపస్విషు||౯||
బీజంమాంసర్వభూతానాం విద్ధిపార్థసనాతనమ్|
బుద్ధిర్బుద్ధిమతామస్మి తేజస్తేజస్వినామహమ్||౧౦||
బలంబలవతాంచాహంకామరాగ వివర్జితమ్|
ధర్మావిరుద్ధోభూతేషు కామోస్మిభరతర్షభ||౧౧||

(அ-கூ-க௦-கக) ஓ! பரதகுலத்தரசே! ஜலத்தில் ரஸமாயும் சூரியசந்திரனில் காந்தியாயும் வேதங்களில் பிரணவமாயும் ஆகாயத்தில் சத்தமாயும் பிராணிகளில் ஆண்மையாயும் புவியில் நல்லமணமாயும் தீயில் சுடரா

---

(1) ஜகத்தும் பிரம்மமும்முறையேசரீரமும்ஆத்மாவுமாயிருக்குமென்கிற விஷயம் యస్యపృథివీ శరీరం ... యస్య ఆత్మాశరీరం ఏషసర్వభూతాన్తరాత్మా౽పహతపాప్మాదివ్యోదేవ ఏకోనారాయణః என்கிற அந்தரியாமிப் பிராம்மணஞ்திகளில் பிரஸித்தம்.

(2) பிரகாரமாயிருக்கையாவது - குடம்முதலியவற்றைவிட்டுக் குடத்தன்மைமுதலியவை பிரிக்கப்படாததுபோல் பரமாத்மாவைவிட்டு பிரகிருதியும் ஜீவனும் பிரிக்கப்படாமலிருக்கை.

யும் ஸகலபூதங்களில் ஜீவனமாயும் தவசிகளில் தவமாயும் ஸர்வபூதங்களு க்கும் அழியாத வேர்முதலாயும் புத்திமான்களுக்குள் புத்திமானுயும்பரா க்கிரமமுள்ளவைகளுள் பராக்கிரமமாயும் பலமுள்ளவைகளுள் ஆசா பாசங்களற்ற பலமாயும் பிராணிகளுள் தருமத்துக்கு விரோதமில்லாத ஆசையாயுமிருக்கிறோம் [என்றால்:—இப்படி பலவாறுயுள்ள பதார்த்தங்கள் யாவும் நம்மிடத்தினின்றுமுண்டாய்நமக்குச்சேஷப்பட்டுநமக்குச்சரீரமாய் நம்மிடத்திலேயே யிருக்கின்றன. ஆகையால் அவ்வவ்விதமாக நாமே யிருக் கிறோமென்று பொருள்.]

(அ-கை.) பிரித்துப் பிரித்தென்னசொல்வது ?

యేచైవసాత్త్వికాభావా రాజసాస్తామసాశ్చయే|
మత్తఏవేతితాన్విద్ధి నత్వహంతేషుతేమయి॥౧౨॥

(௧௨) ஸாமான்னியமாய்லோகத்தில்சரீரங்களாகவும் இந்திரியங்களா கவும் மற்றும்போக்கியவஸ்துக்களாகவும் போகத்துக்குரிய கருவிகளாகவுமி ருக்கின்ற வெல்லாப்பொருள்களும் என்னிடத்திலிருந்துண்டாய்எனக்குச் ச ரீரங்களாய் என்னிடத்தில் நிலைபெற்றிருக்கின்றன. நம்நிலையோ அவைகளா ல்ஒருக்காலும்வருவதல்ல;[என்றால்சரீரஸ்திதி ஆத்மாதீநமானுலும் ஆத்மஸ்தி திக்குச்சரீரத்தாலும் சிறிது உபகாரமுண்டு உலகத்தில்; நமக்கோ இந்தபதா ர்த்தங்களெல்லாம் சரீரமாயிருந்தாலும் இவைகளால் சிறிதும்உபகாரமில்லை கேவலம் லீலைதான் இதற்குப் பிரயோஜநமென்று திருவுள்ளம்.]

త్రిభిర్గుణమయైర్భావైరేభిస్సర్వమిదంజగత్|
మోహితంనాభిజానాతి మామేభ్యఃపరమవ్యయమ్॥౧౩॥

(௧௩) [இப்படிசேதநா சேதநமாய் நமக்கு ஆதீனப்பட்டுள்ள இவ்வு லகங்களெல்லாம் அந்தந்தகாலத்தில் நம்மிடத்திலிருந்துண்டாய் நம்மிடத்தி ல் லயமடைந்து நம்மிடத்தில்தானே நிலைக்கப்பெற்று நமக்குச்சரீரமாய் ந ம்ஸ்வரூபமாயிருக்கையால், காரணமான நிலையிலும் காரியமான நிலையிலும் ஸர்வத்தையும்நாமே சரீரமாகத்தரித்து ஸர்வப்பிரகாரமாகவுமிராநின்றோம். இப்படி காரணமாயும் சோதியாயுமிருக்கிற நாம் ஞாநம்முதலிய அளவிறந்த கல்லியாண குணங்களாலும் சிறப்புற்று மேன்மையாய் விளங்குகிறோம். அ ந்தகுணத்தாலாவது நம்மைக்காட்டிலும் சிறந்தவஸ்து உலகத்தில் ஒன்றுங் கிடைக்கமாட்டாது.]இப்படிப்பட்ட நாம் ஸத்வரஜஸ்தமோ குணங்களின்வி காரமாயுள்ள ஸகலபதார்த்தங்களிலும் சிறந்து நமக்கே உரியவைகளான க ல்லியாண குணங்களாலும் அவ்வவைகளின் இனிமையாலும் எப்பொழுதும் ஏகரூபனுய் மிகவும் சிறந்திருக்கிறோமென்பதை இவ்வுலகமானது அறிகிறதி ல்லை. ஏனெனில்:—குணவிகாரங்களாய் ஈனங்களாய் க்ஷணந்தோறும் அழி வனவாய் பூர்வ கர்மாநுஸாரமாகச் சரீரங்களாயும் இந்திரியங்களாயும் புசி க்கும்பண்டங்களாயுந் திரிந்துள்ள பதார்த்தங்களால் மயக்கப்பட்டமையா ல் அறிகிறதில்லை.

(அ-கை.) ஸ்வாமி! உலகத்தி லின்பந்தரு மெய்பொருளுக்கும் மேலாய், அந்தமில்பேரின்ப வடிவமாய், எந்தநாளும் ஒரே ரூபமாயெழுந்தருளியிருக்கிற தேவரீரைவிட்டு, பிராணிகள் மிகவும் இழிவுற்றகுணங்களின் விகாரமாய் அசாசுவதமாயுள்ள பண்டங்களை யநுபவிக்க விரும்புகிறார்களே இதற்கென்னகாரணம்! என்றால் அருளிச்செய்கிறார்.

దైవీహ్యేషాగుణమయీ మమమాయాదురత్యయా।

(கஉ) ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு என்கிற முக்குணங்களின் விகாரமான இந்த என் I. பிரகிருதியென்னும் மாயையானது என்னுடைய லீலைக்காக என்னாலேயே ஏற்படுத்தப்பட்டதாகையால் இதைக்கடப்பதற்கு ஒருவராலுமாகாது.

(அ-கை.) ஆனால் அதைக்கடக்கும் வழிதானெது! என்றால் அருளிச்செய்கிறார்.

మామేవయేప్రపద్యంతే మాయామేతాంతరన్తితే॥౧౪॥

(கச) ஸத்யஸங்கல்பனாய் பெருங்கருணை வள்ளலாய் எல்லாவுலகத்தையும் சிறிதும் கைம்முதலைக்கோராமல் காப்பவனாகிய நம்மையே எவர்கள் சரணாகப்பற்றுவார்களோ, அவர்கள்தான் குணவிகாரமான இம்மாயையைக்கடந்து நம்மை உபாஸிப்பார்கள்.

(அ-கை.) ஆகில் அப்படிப்பட்ட சரணாகதியை எல்லாரும் ஏன் அநுஷ்டிக்கிறதில்லை! என்றால் அருளிச்செய்கிறார்.

నమాందుష్కృతినోమూఢాః ప్రపద్యన్తే నరాధమాః।
మాయయాపహృతజ్ఞానా ఆసురంభావమాశ్రితాః॥౧౫॥

---

1. ஆசுராஸ்திரம் ராக்ஷஸாஸ்திரம் முதலியவைபோல் விசித்திரமான செயல்களைச் செய்கையாலே இதை மாயையென்கிறது. எப்படியெனில் తతోభగవతాతస్యరక్షార్థం చక్రముత్తమమ్ । ఆజగామసమాజ్ఞప్తం జ్వాలామాలిసుదర్శనమ్ । తేనమాయాసహస్రంతచ్ఛమ్బరస్యాశుగామినా । బాలస్యరక్షతాదేహం ఏకైకశ్యేనసూదితమ్॥ இத்யாதியிலும் சொல்லப்பட்டபடியால் மாயை என்பது பொய்யான விஷயத்தை சொல்வதல்ல. இந்திரஜாலவித்தை முதலிய விடங்களில்கூட பொய்யான விஷயத்தை யுட்கொண்ட மெய்யறிவையுண்டுபண்ணும்படியான சில மந்திரம் ஔஷதம்முதலியவையுண்டாகையாலே அங்கும் மாயாவியென்று வழங்குகிறார்கள். எங்கும் ஒரு சொல்லுக்கு ஒரேவிதமாய் பொருளுரைப்பது யுக்தமாகையாலே இந்திரஜால வித்தையிலும் மாயையென்கிறது மந்திரம் ஔஷதம் முதலியவைகளைத்தான். அங்கே பொய்யானவிஷயத்தை மாயையென்பதெதினாலென்றால் மஞ்சத்திலிருப்பவர் பேசக்கண்டு மஞ்சம்பேசுகிறதென்று வழங்குவதுபோல் மாயையென்று சொல்லப்பட்ட மந்திரம் ஔஷதமும் முதலியவைகளின் காரியத்தைக் கண்டு மாயையென்றுவழங்குகிறது.

(௧௫) அர்ச்சுந! பிராணிகளில் புண்ணியம் செய்தார் சிலர், பாவஞ் செய்தார் சிலர். அப்படி பாவஞ்செய்தவர்களில் சிலர் 2. மூடர்; சிலர் 3. நராதமர்; சிலர் 4. மாயையால் அறிவிழந்தவர்; சிலர் 5. அசுரத்தன்மையடைந்தவர்; இந்நால்வரும் நம்மைச் சரணடையார்கள். இவர்கள் முதலிலிருந்து ஒருவரைப்பார்க்க ஒருவர் மஹாபாபிகள்.

చతుర్విధాభజంతేమాం జనాస్సుకృతినోర్జున।
ఆర్తోజిజ్ఞాసురర్థార్థీ జ్ఞానీచభరతర్షభ॥౧౬॥

(௧௬) புண்ணியஞ் செய்தவர்களோ! நம்மையே சரணடைந்து நம்மையே ஸேவிக்கிறார்கள். இவர்களும் அப்படியே 6. ஆர்த்தனென்றும் 7. ஜிக்ஞாஸுவென்றும் 8. அர்த்தார்த்தியென்றும் 9. ஞாநியென்றும் நாலுவகைப்பட்டு தங்கள் தங்கள் புண்ணியச் சிறப்புக்குத் தக்கபடி முதலிலிருந்து ஒருவரைப்பார்க்க ஒருவர் அதிக சுகிருதஞ்செய்தவர்கள்.

తేషాంజ్ఞానీనిత్యయుక్త ఏకభక్తిర్విశిష్యతే।
ప్రియోహిజ్ఞానినోత్యర్థమహం సచమమప్రియః॥౧౭॥

(௧௭) இவர்களில் ஞாநிதான் மிகுதியுஞ்சிறந்தவன். ஏனெனில்:—அவன் நம்மையடையவேண்டுமென்று நம்மையே எப்போதும் நாடியவனாய் மற்றொன்றிலும் பற்றின்றி விசேஷமாய் நம்மிடத்தில் மாத்திரம் பக்தியுடையவனாயிருக்கிறான். (மற்றவர்களோ தமது இஷ்டம் ஸித்திக்குமளவும் மாத்திரம் நம்மை நாடியிருந்து நம்மையும் தாம்கோரிய பலத்தையும் விரும்பியிரு

---

அதுபோல் இங்கும் குணமயமானப் பிரகிருதியென்னும் மாயையானது பரமார்த்தமேயல்லது பொய்யல்ல; இது பரமபுருஷனுடைய ஆதீனம் என்று మాయాన్తు ప్రకృతిం విన్ద్యాన్మాయినన్తు మహేశ్వరమ్ இத்யாதிகளில் சொல்லப்படுகிறது. இதற்குக் காரியம் பகவத்ஸ்வரூபத்தை மறைத்துத் தன்ஸ்வரூபத்தை யினியதாகத் தோற்றுவிக்கை. ஆகையால் எம்பெருமானுடைய பரமார்த்தமான மாயையால் மோஹிக்கப்பட்டுள்ள இஜ்ஜகமெல்லாம் ஈறிலின்பவெள்ளமான பகவத்ஸ்வரூபத்தை யறியமாட்டாது.

2. எல்லாப்பொருளும் எம்பெருமானுக்கு ஆட்பட்டிருக்க அதைத்தனக் காட்பட்டதாக நினைப்பவர்கள் 3. ஸாமான்யமாய் நம்ஸ்வரூபம் அறியப்பட்டாலும் நம்வழியில் திரும்பமாட்டாதவர்கள் 4. ஈசுவரனும் அவனுக்கு ஐசுவரியமு முண்டாயிருப்பதாகத் தெளிவுபிறந்தாலும் அதை வஞ்சகமான யுக்திகளைக்கொண்டு போக்கிக்கொண்டவர்கள் 5. ஈசுவரனும் அவன் விபூதிகளும் (யுக்திகளைக்கொண்டும் இல்லை செய்யப்போகாமல்) திடமாய் ஏர்ப்பட்டாலும் அவற்றைக் கேட்டபோதே பகைப்பவர்கள் 6. இழந்துபோன செல்வத்தை மீண்டும் அடையவிரும்பியவன் 7. செல்வமில்லாமையால் புதிதாய் அடையக்கோரியவன் 8. பிரகிருதிக்குப்புறம்பான ஆத்மாவை யடையக்கோரியவன் 9. ఇతస్త్వన్యాం ప్రకృతిం విద్ధిమేపరాం என்று சொன்னபடியே ஆத்மஸ்வருபம் எம்பெருமானுக்கே சேஷப்பட்டிருக்குந்தன்மையது" என்கிற அறி

க்கிறார்கள். ஆகையால் இவர்களைப்பார்க்க அவனே சிறந்தவன். ஏனெனில்:—அவன் நம்மை யடையவேண்டியவனாகையால் எப்பொழுதும் நம்மோடு அவனுக்குச் சேர்க்கையுண்டு; இவர்களுக்கோ பயன்கைப்படுமளவுந்தான். அப்படியே அவன் நம்மைத்தவிர மற்றொன்றை விரும்பான். இவர்களோ நம்மையும் விரும்பி தமக்கென்று ஒருபயனையும் விரும்புவார்கள். ஆகையால் இவர்களைப்பார்க்க அவனே சிறந்தவன். மேலும் நாம் ஞாநிக்கு மிகவும் இனியனாகிறோம். அதாவது இனிமைக்கு இவ்வளவென்கிற இறுதியில்லாமையால் அவனுக்கு நாமினியனாமிடம் இவ்வளவுதானென்று ஸர்வக்ஞனான நம்மாலும் சொல்லப்போகாதபடி (ஞாநிகளிற்றலைவரான *. பிரஹ்லாதாழ்வானுக்குப்போலே) இனியனாகிறோம். அப்படியே அந்த ஞாநியும் நமக்கு இனியனாகிறான்.

ఉదారాస్సర్వఏవైతే జ్ఞానీత్వాత్మైవమేమతమ్।
ఆస్థితస్సహియుక్తాత్మా మామేవానుత్తమాంగతిమ్॥౧౮॥

(கஅ) இவர்களெல்லாரும் மஹா உதாரர்கள். [அதாவது-நம்மிடத்திலிருந்து யாவர்களானும் சிறிதாயினுங்கொள்ளுகிறார்களோ அவர்களைநாம் நமக்குஎல்லாச்செல்வத்தையும் வழங்கிய பெருங்கொடையாளிகளாக நினைக்கிறோம்.] ஞாநியோ! நம்ஸ்வரூபத்தைத் தரிக்கின்ற ஆத்மாவென்றே நமக்கு ஸித்தாந்தம். அதெதினாலென்றால்:—அவன் நம்மைவிட்டுப்பிரிந்தால்தரிக்கமாட்டாததுபோல் நாமும் அவனைப் பிரிந்தால் தரிக்கமாட்டோம்; ஆகையால் அவன் நமக்கு ஆத்மாவே.

బహూనాంజన్మనామన్తే జ్ఞానవాన్ మాంప్రపద్యతే,
వాసుదేవస్సర్వమితి సమహాత్మాసుదుర్లభః॥౧౯॥

(கக) "இப்படி எம்பெருமானுக்கு ஆட்பட்டிருக்கையே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்" என்கிற ஞானவானாய் நம்மைச்சரணப்புகுவதென்கிற விஷயம் ஸாமான்னியமாய் சில ஜந்மங்களிற்செய்த புண்ணியவசத்தால் வருவதல்ல; கேவலம் புண்ணிய ஜந்மங்களைத்தனையோ எடுத்த பிறகுதான் "நான் †வாஸுதேவனுக்கே ஆட்பட்டவன், எனது ஸ்வரூபம் ஸ்திதிபிரவிருத்தியே

என்கிற அறிவுடையனாய் அவ்வாத்மவஸ்துவோடு நில்லாமல் எம்பெருமானைப்பெற வாசைப்பட்டு அவனையே பெரும்பேறாக நினைத்திருப்பவன்.

* సత్వాసక్తమతిఃకృష్ణే దశ్యమానోమహోరగైః। నవివేదాత్మనో గాత్రంతత్స్మృత్యాహ్లాదసంస్థితః என்று பிரஹ்லாதாழ்வான் கண்ணனிடத்தில் படிந்திய மனதாயிருக்கையாலே மஹாஸர்ப்பங்களால் கடிக்கப்பட்டிருக்கச்செய்தேயும் அவ்வெம்பெருமானை நினைப்பதால் மிகவும் ஸந்துஷ்டஹிருதயராய் தம்சரீரம் இன்னபடி யிருக்கின்றதென்று அறிந்தாரில்லை.

† ప్రియోహిజ్ఞానినోత్యర్థమ్ என்றும் ఆస్థితస్సహి యుక్తాత్మా మామేవానుత్తమాంగతిమ్ என்றும் தொடங்கின படியால் వాసుదేవస్సర్వమ్ என்றதற்கு இதுவே பொருள். ஞாநவானென்பதும் இங்கே சொன்னவனைத்தான்; முன்சொ

ல்லாம் அவனுடைய ஆதீனம்" என்கிற நினைவுபிறந்து "நான் அடையவேண்டும்பயனும் அப்பயனை யடைவிக்குமுபாயமும் மற்றும் நான் கோரியவெல்லாம் அந்த வாஸுதேவனே" என்று நம்மை உபாஸிப்பன். அப்படிப்பட்ட பெருந் தன்மையோடுகூடிய புருஷன் கிடைப்பது லோகத்தில் மிகவும் அரிது.

(அ-கை.) அந்த ஞானியின் அருமையைப்பற்றியே உபபாதிக்கிறார்.

కామైస్తైస్తైర్హృతజ్ఞానాః ప్రపద్యన్తేఽన్యదేవతాః।
తంతంనియమమాస్థాయ ప్రకృత్యానియతాస్స్వయా॥౨౦॥

(உ0) உலகத்திலுள்ள புருஷர்கள் யாவருமே தங்களுக்கு ஸ்வபாவமான பாபவாஸனைக்குத் தக்கபடி எப்போதும் சப்தாதிவிஷயங்களில் ஆசைகொண்டு, அப்படி தாம் ஆசைப்பட்டவைகளைப் பெறவேண்டி கேவலம் (நம்மையொழிந்த) இந்திராதி தேவர்களையடுத்து, அத்தேவர்களுக்குப் பிரீதிகரமான சிலநியமங்களை யநுட்டித்து அவர்களை யர்ச்சிக்கிறார்கள்.

యోయోయాంయాంతనుంభక్తశ్శ్రద్ధయార్చితుమిచ్ఛతి।
తస్యతస్యాచలాంశ్రద్ధాం తామేవవిదధామ్యహమ్॥౨౧॥

(உக) அப்படி அவர்கள் அர்ச்சிக்குந் தேவர்களெல்லாம் நமக்குச் சரீரமென்று (*-சாஸ்திரஞ்சொல்லுகிற விஷயம் தெரியாமல்) எந்த எந்த பக்தன் (நம்சரீரமான) எந்த எந்த தேவதையைச் சிரத்தையோடு அர்ச்சிக்க விரும்புகிறானோ (அவன் நம்மையறியாமற்போனாலும் உள்ளபடியே நம்சரீரத்விதத்தானே யர்ச்சிக்கிறானென்று நாம்நினைப்பிட்டு) அவனவனுக்கு அவ்வவ்விதமான சிரத்தையைத் திடப்படுத்துகிறோம்.

సతయాశ్రద్ధయా యుక్తస్తస్యారాధనమీహతే।
లభతేచతతఃకామాన్ మయైవవిహితాన్హితాన్॥౨౨॥

---

ன்ன ஞானியுமிவந்தான். భూమిరాప என்று தொடங்கி అహఙ్కారఇతీయం మే భిన్నా ప్రకృతిరష్టధా। అపరేయమితస్త్వన్యాం ప్రకృతిం విద్ధిమేపరామ్ । జీవభూతామ్ என்று மளவாக, சேதநம் அசேதநம் என்று இருவகையானப்பிரகிருதிகளும் பரம புருஷனுக்கு சேஷப்பட்டிருக்கின்றன வென்று சொல்லப்பட்டதன்றோ? மேலும் అహంకృత్స్నస్యజగతఃప్రభవఃప్రళయస్తథా। మత్తఃపరతరన్నాన్యత్కిం-చిదస్తిధనఞ్జయ என்றுதொடங்கி యేచైవసాత్త్వికాభావారాజసాస్తామసాశ్చయే। మత్తఏవేతితాన్విద్ధినత్వహంతేషుతేమయి என்று காரியமாயுங் காரணமாயு மிருவகைப்பட்ட பிரகிருதிகளின் ஸ்வரூபமும் ஸ்திதியும் பிரவிருத்தியும் பரமபுருஷாதீனமென்றும் பரமபுருஷன் ஸர்வவிதத்தாலும் ஸர்வஸ்மாத் பரனென்றும் சொல்லப்பட்டது. ஆகையால் அவனையே யிங்கே ஞானியென்கிறது.

* శ్రు॥ యఆదిత్యేతిష్ఠన్ యమాదిత్యోనవేద యస్యాదిత్యశ్శరీరమ్ முதலியன.

(உஉ) இப்படி நம்மாலருளப்பட்ட (நிர்விக்கினமான) சிரத்தையைக் கொண்டே, அந்த இந்திராதி தேவதையின் ஆராதநத்தைச்செய்து (நம்சரீரமான) அத்தேவதையினிடத்தில் தான்கோரியபயனை நம்மாலளிக்கப்பெற்று அநுபவிக்கிறான். [ஆராதிக்கும்பொழுது இந்திராதிகள் நமக்குச் சரீரமென்கிற விஷயத்தை அவன் அறியாமற்போனாலும், உள்ளபடியே அது நம்மாராதனமாகையால் அவன் கோரிக்கையை நாம் நிறைவேற்றுகிறோம்.]

అన్తవత్తుఫలంతేషాం తద్భవత్యల్పమేధసామ్|
దేవాన్దేవయజోయాన్తి మద్భక్తాయాన్తిమామపి||౨3||

(உங) ஆனால் இந்திராதிகளை யாராதிக்கும் அவ்வற்பமதிகளுக்குக் கிடைக்கும் அந்தப் பயனெல்லாம் அற்பமாயும் முடிவுள்ளதாயுமிருக்கும்: ஏனெனில்:—இந்திராதி தேவர்கள் அநுபவிக்கும் போகங்களெல்லாம் இவ்வளவென்றும் இத்தனை காலமென்றும் வரையறையுற்றவையாகையால் அவ்விந்திராதிதேவர்கள் போகம் நசித்து நழுவும்பொழுது (அவர்களை யாராதிக்கும்) இவர்களும் நழுவுவர்கள். நம்பக்தர்களோ அதேகர்மங்களை நம்மாராதநமாக நினைத்து அற்பபலங்களில் பற்றில்லாமல் நமக்கினிமை செய்வதே பயனாய் நம்மையடைந்து மீண்டுந் திரும்பாமலிருக்கிறார்கள். [మాముపేత్యతుకౌన్తేయ పునర్జన్మ నవిద్యతే என்று மேலே அருளிச்செய்யப்போகிறாரன்றோ.]

(அ-கை.) மற்றவர்களோ பிராணிகளெல்லாம் சுகமாய் நம்மை ஆஶ்ரயிக்கவேண்டுமென்று நாம்மனுஷ்யாதிகளிடத்தில் வந்தவதரித்தால் அதைப் பயன்படவொட்டாமற் செய்கிறார்களென்கிறார்.

అవ్యక్తంవ్యక్తిమాపన్నం మన్యన్తే మామబుద్ధయః|
పరంభావమజానన్తో మమావ్యయమనుత్తమమ్||౨౪||

(உச) நாம் ஸர்வகர்மங்களாலும் ஆராதிக்கப் படுமவனாய் ஸர்வேசுவரனாய் வாக்குக்கும் மனதுக்குமெட்டாத ஸ்வரூப ஸ்வபாவமுடையனாயிருக்கச்செய்தேயும், கரைகடந்த கருணையாலும் அடியார்களிடத்திலுண்டான வன்பினாலும் யாவரும் நம்மைக்கண்டு பற்றவேண்டுமென்று நம் ஸ்வபாவத்தைவிடாமலே வசுதேவர்மைந்தனாய் வந்தவதரித்தோம். இப்படிவிகாரமில்லாத நம்பரத்துவத்தை யறியாமல், நாம் இதற்கு முன்பு தோன்றாமல் மறைந்திருந்து இப்பொழுதுதான் கர்மவசத்தால் ஒரு ராஜகுமாரனாய்ப்பிறந்து தோன்றியதாய் இம்மூடர்கள் நினைத்துவிடுகிறார்கள். ஆனது பற்றியே நம்மை ஆஶ்ரயிப்பதுமில்லை, நம்மை யாராதிப்பதுமில்லை.

(அ-கை.) அப்படியாகில் தேவரீர் ஏன் அப்படி யாவர்க்கும் விளங்குவதில்லையென்றால் சொல்லுகிறார்.

నాహంప్రకాశఃసర్వస్య యోగమాయాసమావృతః|
మూఢోయంనాభిజానాతిలోకో మామజమవ్యయమ్||౨౫||

(உரு) (ஜீவர்களுக்கேற்ற மானிடத்தன்மை முதலியவற்றை யடைந்திருக்கையென்கிற)மாயையால் நாம் மறைக்கப்பட்டமையால் யாவர்க்கும்

பிரகாசிக்கிறதில்லை. நாமிப்படி மனுஷ்யாதிகளிடத்தில்வந்து பிறந்தமாத்திரத்தில் இந்த மூடஜநம் நம்மை ஸாதாரணமாய் நினைத்துவிடுகின்றதேயல்லது, இந்திரவாயுக்களின் செயலையும் சூரியன் அக்கினி இவாளுடைய தேஜஸ்ஸையும்கடந்து உத்பத்தி விநாசங்களற்று எல்லா வுலகங்களுக்கும் முக்கிய காரணனாய் ஸர்வேசுவரனாயிருக்கிற நாம், பிராணிகளெல்லாம் ஆஶ்ரயிப்பதற்காக மனுஷ்யாதிரூபமாய் வந்தவதரித்தோமென்றறிகிறதில்லை.

వేదాహంసమతీతాని వర్తమానానిచార్జున|
భవిష్యాణిచభూతాని మాంతువేదనకశ్చన||౨౬||

(உசு) இதுவரையில் கடந்ததும் இப்பொழுது நிகழ்வதும் இனி வருவதுமான ஸகலப்பிராணிகளையும் நாம் அறிவோம்; நம்மை மாத்திரம் ஒருவனும்,அறிவதில்லை. [அதாவது நம் சிந்தைக்கெட்டியப் பிராணிகளிலொருவனாகிலும் பரமபுருஷந்தான் இப்படி யாவருந் தன்னை ஆஶ்ரயிக்கும்படி வசுதேவன் மைந்தனாய் அவதரித்திருக்கிறான்,, என்று அறிபவனில்லை.] ஆகையால் ஞானியைக்கிடைப்பது மிகவரிது.

(அ.கை.) அதெப்படி யென்றால் அருளிச்செய்கிறார்.

ఇచ్ఛాద్వేషసముత్థేన ద్వన్ద్వమోహేనభారత|
సర్వభూతాని సమ్మోహం పరేయాన్తిపరన్తప||౨౭||

(உஎ) விருப்பம் வெறுப்பு என்கிற விரண்டாலுமுண்டான சீதம் உஷ்ணம் முதலிய துவந்த்வமென்கிற மோஹத்தாலே ஸகலப் பிராணிகளும் பிறக்கும்பொழுதே மயங்கிப்போகின்றன. [என்றால் குணவிகாரமான ஸுகம் துக்கமென்கிற துவந்த்வங்களில் எந்தெந்த விஷயத்தில் பிராணிகள் பூர்வஜந்மங்களில் விருப்பமும் வெறுப்பும் பாராட்டிவந்தார்களோ, மறுபடியும் அந்தந்த துவந் துவங்களே விரும்பப்பட்டவைகளாயும் வெறுக்கப்பட்டவைகளாயுமிருந்துகொண்டு ஜநநகாலத்தில்தானே ஸகல ப்பிராணிகளையும்மயங்கச்செய்கின்றன; இதனால் நம்மை அடைந்தபோது சுகித்தும் நம்மைப் பிரிந்தபோது துக்கித்தும் இருக்கவேண்டியவைகளானப் பிராணிகள்,அவைகளில்தானே விருப்பத்தையும் வெறுப்பையும் பாராட்டுகின்றன. ஞானியோ நம்மைக்கிட்டியபோது இன்பமும், பிரிந்தபோது துன்பமுமே ஸ்வபாவமாயிருப்பன்; அப்படிப்பட்ட ஸ்வபாவத்தோடுகூடிய ஞானியாக ஒருப்பிராணியாவது உண்டாகிறதில்லை என்றபடி.]

యేషాంత్వన్తగతంపాపం జనానాంపుణ్యకర్మణామ్|
తేద్వన్ద్వమోహనిర్ముక్తా భజన్తేమాందృఢవ్రతాః||౨౮||

(உஅ) எவர்களானால் பலபிறப்பும்பிறந்து அவைகளில் அளவிறந்த புண்யங்களைத் திரட்டி அதனால் (விருப்பத்திற்கும் வெறுப்புக்கும் காரணமாயும் நம்மை நினைக்க வொட்டாமல் விரோதிப்பதாயும் அநாதிகாலமாய்த் தொடர்ந்ததாயு மிருக்கும்) பாவத்தை யொழிக்கிறார்களோ, அவர்கள் முன்

சொன்ன புண்யத்தின் வாசிக்குத்தக்கபடி நம்மைச் சரணமடைந்து குண விகாரமான மோஹத்தினின்றும் விடுபட்டவர்களாய் ஜரை மரணம் இவை களை ஒழிக்கவும் பேரின்பத்தை அடையவும் நம்மைக்கிட்டவுமாக முயன்றவ ர்களாய், திடமான ஸங்கற்பத்தோடு நம்மையே உபாஸிக்கிறார்கள்.

(அ-கை) அதில் எம்பெருமானைச் சேவிப்பவர்களான இம்மூவர்களு க்கும் அவசியம் அறியவேண்டிய விஷயமும் அவசியம் கைப்பற்றவேண்டிய விஷயமும் இன்னதென்கிறார்.

జరామరణమోక్షాయ మామాశ్రిత్యయతన్తియే।
తేబ్రహ్మతద్విదుఃకృత్స్న మధ్యాత్మంకర్మచాఖిలమ్॥౨౯॥

(௨௯*) ஜராமரணங்களை யொழித்துப் பிரகிருதிக்குப் புறம்பான ஆத் மாவைக் காணவேண்டி எவர்கள் நம்மை ஆஶ்ரயித்து யத்தனம் செய்கிறார் களோ, அவர்கள் அந்தப் பிரம்மத்தையும் அத்யாத்மத்தையும் கர்மங்களையும் சிறிதும் விடாமல் நன்றாய் அறியவேண்டும்.

సాధిభూతాధిదైవంమాం సాధియజ్ఞంచయేవిదుః।
ప్రయాణకాలేపిచమాం తేవిదుర్యుక్తచేతసః॥౩౦॥

(௩0*) நம்மை அதிபூதமாகவும் அதிதைவமாகவும் அதியக்ஞமாகவும் எவர்கள் அறிகிறார்களோ அவர்கள், சரீரத்தைவிட்டுப் போகுங்காலத்திலும் தங்கோரிக்கைக்குத் தக்கபடி நம்மையே நினைக்கிறார்கள். (இம்மூவருக்கும் நித்ய நைமித்திக கர்மங்களான மஹாயக்ஞாதிகள், செய்யவேண்டுங் கடமை யாயிருக்கின்றன. [ஞானிகளிருவர் ஐசுவரியகாமன் ஒருவன் ஆகமூவர்]

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,

ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ:

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# எட்டாவது அத்யாயம்.

## அவதாரிகை.

ஏழாவது அத்யாயத்தில் யாவரும் உபாஸிக்கவேண்டிய பரபிரம்ம மான வாஸுதேவன் சேதநாசேதநங்களுக்கெல்லாம் பதியென்றும், கார ணமென்றும், ஆதாரனென்றும், எல்லாப்பொருளும் சரீரமாயிருக்கையாலே ஸர்வப்பிரகாரமாகவு மிருக்கின்ற அவன் எல்லாசப்தங்களுக்கும் பொருளெ

(௨௯-* ௩0) இந்த சுலோகங்களில் சொல்லுகிற விஷயம் எட்டாவ து அத்தியாயத்தில் விவரிக்கப்படும்.

ன்றும், யாவரையும் ஆள்பவனென்றும், ஸகலகல்யாண குணங்களாலும் அவனே மேன்மைப்பட்டிருக்கிறானென்றும், ஸத்வரஜஸ்தமோ மயங்களான தேஹமாயு மிந்திரியமாயும் மற்றும் புசிக்கும்பண்டங்களாயுமிருக்கிற சப்தாதி விஷயங்களால் அவன் மறைக்கப் பட்டிருக்கிறானென்றும், மிகுந்தபுண்ணிய வசத்தால் கிடைத்த பகவத்சரணாகதியாலே அம்மறைவு நீக்கப்படுமென்றும், புண்ணியத்தின் வாசிக்குத்தக்கபடி இவன் பண்ணும் சரணாகதியின் சிறப்பால் ஐசுவரியம், கைவல்யம், பகவத்ப்ராப்தியென்று பயன் வேறுபடுகையாலே அதற்குத்தக்கபடி பக்தர்களும் வேறுபட்டிருப்பர்களென்றும் எம்பெருமானை அடையக்கோரியவன் எப்பொழுதும் அவனையே நம்பி அவனிடத்தில் விசேஷபக்தியைப்பண்ணி எம்பெருமானுக்கு மிகவு மினியனாயிருக்கையாலே அவன் யாவரிலும் சிறந்தவனென்றும், அப்படிப்பட்டவன் கிடைப்பது அரிதென்றும் அருளிச்செய்து, இம்மூவர்களும் அறியவேண்டுமவற்றையும் கைப்பற்றவேண்டுமவற்றையும் அருளிச்செய்தார்.

அப்படி யறியவேண்டியதாயும் அடைய வேண்டியதாயும் பிரஸ்தாவிக்கப்பட்டவைகளையே இந்த எட்டாவது அத்தியாயத்தில் விவரிக்கிறார்.

అర్జున ఉవాచ॥ కింతద్బ్రహ్మకిమధ్యాత్మం కింకర్మపురుషోత్తమ।
అధిభూతంచకింప్రోక్త మధిదైవంకిముచ్యతే॥౧॥
అధియజ్ఞఃకథంకోఽత్ర దేహేఽస్మిన్మధుసూదన।
ప్రయాణకాలేచకథం జ్ఞేయోఽసినియతాత్మభిః॥౨॥

(க-உ) அர்ச்சுநன் கேட்கிறான். ஜராமரணங்களை யொழிப்பதற்காக வெம்பெருமானையாச்ரயித்து யத்தநஞ்செய்யும் மோக்ஷார்த்திகளுக்கு, அவசியம் அறியவேண்டிய விஷயமானப் பிரம்மமாவதென்ன? அத்தியாத்மமாவதென்ன? கர்மமாவதென்ன? இவைகளை அருளிச்செய்யவேண்டும். மேலும் ஐசுவரியத்தைக் கோரியவர்களுக்கு அறியவேண்டிய விஷயமான அதிபூதமாவதென்ன? அதிதைவமாவ தென்ன?. இவர்கள் மூவரும் அறியவேண்டியதான அதியக்ஞமாவதென்ன? அந்த அதியக்ஞத்தின் தன்மையெப்படிப்பட்டது? இவர்கள் சரீரத்தை விட்டுப்போகுங்காலத்தில் சலியாமனத்தராய் தேவரீரை நினைப்பதெப்படி? இவைகளையும் அருளிச்செய்யவேண்டும் என்று கேட்டான்.

శ్రీభగవానువాచ॥ అక్షరంబ్రహ్మపరమం స్వభావోఽధ్యాత్మముచ్యతే।
భూతభావోద్భవకరో విసర్గఃకర్మసంజ్ఞితః॥౩॥

(௩) அதற்குப் பகவான் அருளிச்செய்கிறார். அர்ச்சுந! பிரம்மமாவது $ பரமாக்ஷரம். அதாவது:—பிரகிருதியினின்றும் விடுபட்ட ஆத்மஸ்வரூப

---

$ అవ్యక్తమక్షరేలీయతే అక్షరంతమసిలీయతే இத்யாதி ச்ருதிகளிற் சொன்னபடி அக்ஷரமென்று ஜீவஸமுதாயத்தைச் சொல்லுகையாலே பரமாக்ஷரமென்று பிரகிருதியினின்று விடுபட்ட ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறது.

ம். அத்யாத்மமாவது:—பஞ்சாக்நிவித்தையில் அறியவேண்டியதாகச் சொல்லப்பட்டதும் ஆத்மாவோடு ஸம்பந்திப்பதுமான பூதஸூக்ஷ்மமும் அதின் உபாஸனை முதலானதும். [ஆகவிவ்விரண்டிலும் ஒன்றைப் பற்றவேண்டியதாயும் ஒன்றை விடவேண்டியதாயும் மோக்ஷார்த்தியானவன் அவசியம் அறியவேண்டும்.] கர்மமாவது:—மானிடத்தன்மை முதலியவைகளுக்குக் காரணமாய், சாஸ்திரத்தில் சொன்னபடி ஸ்திரீகளுடன் புணர்ந்து வீரியத்தை விடுகை. [மோக்ஷார்த்தி இதையும் வெறுக்கவேண்டியதாயும் ஒழிக்கவேண்டியதாயும் அறியவேண்டும்.] [ஒழிக்கவேண்டுமென்கிற விஷயத்தை யதிச்ச ந்தோ ப்ரஹ்மசர்யஞ்சரந்தி என்று உடனே சொல்லப்போகிறார்.]

అధిభూతంక్షరోభావః పురుషశ్చాధిదైవతమ్।
అధియజ్ఞోఽహమేవాత్ర దేహే దేహభృతాంవర॥४॥

(ச) ஓ மானிடச்சிங்கமே! ஐசுவரியார்த்திகள் அறியவேண்டியதாகச் சொன்ன அதிபூதமாவது:—க்ஷரபாவம், அதாவது:—ஆகாசம் முதலிய பூதங்களில் ஓர் விகாரமாய் வேறுபட்டுத்தோற்றும் சப்தம் பரிசம் முதலிய குணங்களும் அவைகளின் ஆதாரங்களும். [இதை யறிவதாவது - ஐசுவரியார்த்திகள் இவைகளைத் தங்கள் பேறாக நினைக்கவேண்டுமென்பது.] அதிதைவமாவது:—தைவத்தின் மீதிருப்பது, அதாவது:—இந்திரன் பிரமன் முதலிய வெல்லாத்தேவர்களுக்கும் மேலாயிருப்பது;என்றால் இந்திரன் முதலானோர் அநுபவிக்கு மவைகளைக்காட்டிலும் விலக்ஷணமான சப்தாதிவிஷயங்களை யநுபவிக்கும் புருஷனென்றபடி. [அதை யறிவதாவது:—அப்படிப்பட்ட போகங்களைப்புசிப்பவராகத் தம்மை ஐசுவரியார்த்திகள் நினைக்கவேண்டும்.] அதியக்ஞமாவது:— யக்ஞங்களால் ஆராதிக்கப் படுகிற நாந்தான். [இந்த என்னை யறிவதாவது:—என் சரீரமான இந்த இந்திராதிகளுக்கு அந்தராத்மாவாயிருக்கும் என்னையே யக்ஞங்களால் ஆராதிப்பதாக இம்மூவரும் மஹாயக்ஞம் முதலான நித்யநைமித்திககர்மங்களை யநுஷ்டிக்கும்பொழுதெல்லாம் நினைக்கவேண்டுமென்றபடி.]

అన్తకాలేచమామేవ స్మరన్ముక్త్వాకళేబరమ్।
యఃప్రయాతిసమద్భావం యాతినాస్త్యత్రసంశయః॥௫॥

(ரு) அர்ச்சுந! இப்போ நாம்சொல்லப்போகிறவிஷயம் இம்மூன்றுபேருக்கும்வேண்டியதுதான்.அந்திமகாலத்திலும்நம்மையேநினைத்துக்கொண்டு சரீரத்தைவிட்டு எவன்போகிறானோஅவன்நம் ஸ்வபாவத்தை யடைகிறான். அதாவது:—அப்பொழுது நம்மை யெப்படி நினைத்திருக்கிறானோ அப்படிப்பட்ட ஸ்வபாவத்தையடைகிறான். [ஆதிபரதன் முதலானோர் அந்திமகாலத்தில் நினைத்திருந்தபடி மிருகங்களுக்கு ஸமானமான வடிவத்தை யடைந்தாற்போலென்றபடி.]

(அ-கை.) அந்திமகாலத்தில் நினைக்கும் நினைவுக்கு, நினைத்த விஷயத்தைப்போன்ற நிலையை நினைப்பவனுக்குக் கொடுக்கை ஸ்வபாவம் என்கிற விஷயத்தைத் தெளிவாயருளிச்செய்கிறார்.

యంయంవాపిస్మరన్భావం త్యజత్యన్తేకళేబరమ్।
తంతమేవైతి కౌన్తేయ సదాతద్భావభావితః॥౬॥

(௬) அந்திமகாலத்தில் எவ்வித ஸ்வபாவத்தை நினைத்துக் கொண்டு சரீரத்தைவிடுகிறானோ அவ்விதஸ்வபாவத்தை மறித்தபின்பு அடைகிறான். அந்த நினைவோ முன்பு இவன் கோரிய விஷயமாய்த்தானிருக்கும்.

తస్మాత్సర్వేషుకాలేషు మామనుస్మరయుధ్యచ।
మయ్యర్పితమనోబుద్ధిర్మామేవైష్యస్యసంశయః॥౭॥

(௭) புருஷன் முன்பு தான் எந்த விஷயத்தில் பழகியிருக்கிறானோ அ-
ந்த விஷயமாகவே அந்திமகாலத்தில் நினைவு உண்டாகுமாகையால் எப்போ
தும் நீ பிரயாணமாமளவும் தினந்தோறும் நம்மைவிடாமல் நினை. நாடோ
றும் நம் நினைவையுண்டாக்குவதான யுத்தம் முதலிய வர்ணாசிரமாசாரத்தை
ச்சேர்ந்த சாஸ்திரோக்தமான நித்தியநைமித்திக கர்மங்களைச்செய். இப்படி
ப்பட்ட உபாயத்தாலே மனதையும் புத்தியையும் நம்மிடத்தில்வைத்து அந்தி
மகாலத்திலும் நம்மையே நினைத்திருந்து உன் இஷ்டப்பிரகாரம் நம்மைய
டைவாய்; இதில் ஸம்சயமில்லை.

(௮-கை.) இப்படி தம்மை யடையவேண்டுமானால் அந்திமகாலத்தில் நினைக்கவேண்டுமென்று ஸாதாரணமாய் அருளிச்செய்து, அதற்காகமுற்கூறியமூன்றுபேரும் வேறுவேறுவிதமாய் உபாஸிக்க வேண்டுமென்பதை யருளிச்செய்யத் தொடங்குகிறார். அதில் ஐசுவரியார்த்திகள் உபாஸிக்கவேண்டும் பிரகாரத்தையும் அவ்வுபாஸநத்துக்குத்தக்கபடி அந்திமகாலத்தில் சிந்திக்கவேண்டும் பிரகாரத்தையு மருளிச்செய்கிறார்.

అభ్యాసయోగయుక్తేన చేతసానాన్యగామినా।
పరమంపురుషన్దివ్యం యాతిపార్థానుచిన్తయన్॥౮॥

(௮) தினந்தோறும் § அப்பியாஸத்தோடும் யோகத்தோடும் கூடியிருக்கையாலே மனது மற்றொன்றையும் நாடாமல் அந்திம காலத்தில் திவ்யபரமபுருஷனான நம்மை இனி சொல்லப்போகிறபடி நினைத்திருந்தால் நம்மையே யடையலாம். [என்றால் ஆதிபரதன் மிருகத்தன்மையை யடைந்தாற்போல் ஐசுவரியத்தையடைந்தவனாய் நம்மோடு ஸமானமாவானென்றபடி.]

కవింపురాణమనుశాసితారమణోరణీయాంసమనుస్మరేద్యః।
సర్వస్యధాతారమచిన్త్యరూపమాదిత్యవర్ణన్తమసఃపరస్తాత్॥౯॥
ప్రయాణకాలేమనసాఽచలేన భక్త్యాయుక్తోయోగబలేనచైవ।
భ్రువోర్మధ్యేప్రాణమావేశ్యసమ్యక్ సతంపరంపురుషముపైతిదివ్యమ్॥౧౦॥

---

§ அப்பியாஸமாவது - நித்ய நைமித்திக கர்மங்களுக்கு விரோதமில்லாத ஸகல காலங்களிலும் உபாஸ்யவிஷயத்தை நினைத்துக்கொண்டிருப்பது. யோகமாவது - நாடோறும் யோகஞ்செய்யவேண்டுங் காலத்தில்மாத்திரம் கீழ்ச்சொன்னபடி அநுஷ்டிக்கும் உபாஸநம்.

(கூ-கO) ஸர்வக்ஞனாய் அநாதிகாலமாயுள்ளவனாய் உலகத்தை யாள்பவனாய் அணுவான ஜீவனைக்காட்டிலும் சிறியனாய் எல்லாவற்றையும் தரிப்பவனாய் யாவையும் படைப்பவனாய் ஒன்றோடும் சேராத ஸ்வரூபனாய் பிரகிருதிக் கவ்வருகாயும் தனக்கே யானதாயுமிருக்கிற திருமேனியோடு கூடியவனாயிருக்கும் அந்த திவ்யபுருஷனை நாடோறும் பயில்கின்ற பக்தியுடன் கூடிய யோகபலத்தாலே (நன்றாய்த்திருந்தி சலியாமலிருக்கிற) மனதைக்கொண்டு எவன் பிரயாணகாலத்தில் புருவங்களுக்கு நடுவில் பிராணனை வைத்து அங்கே பகவானை இடைவிடாமல் சிந்திக்கிறானோ, அவன் அந்த பகவானையே யடைவான்: [என்றால் - அந்த பகவானுக்கு ஸமமான ஐசுவரியத்தை யடைகிறானென்றபடி.]

(அ-கை.) அநந்தரம் கைவல்லியத்தைக் கோரியவன் நினைக்கவேண்டும்படி சொல்லுகிறது.

యదక్షరం వేదవిదో వదన్తి విశన్తి యద్యతయో వీతరాగాః।
యదిచ్ఛన్తో బ్రహ్మచర్యం చరన్తి తత్తే పదం సఙ్గ్రహేణ ప్రవక్ష్యే॥౧౧॥

(கக) வைதிகர்கள் எதையானால் அக்ஷரமென்று (அதாவது - பருக்காமைமுதலிய குணங்களுடன் கூடியதாக) சொல்லுகிறார்களோ, வைராக்கியமுடையரான யதிகள் எந்த அக்ஷரத்தைப் பிரவேசிக்கிறார்களோ, எதை யடையக் கோரியவர்கள் பிரம்மசரிய விரதத்தை யநுட்டிக்கிறார்களோ, அந்த ஸ்தாநத்தைச் சுருக்கமாய்ச்சொல்லுகிறோம். [ஸகல வேதாந்தங்களாலும் அறியவேண்டியதான அக்ஷரமென்னும் நம் ஸ்வரூபத்தை (அதாவது ஜீவனை) எப்படி உபாஸிக்கவேண்டுமோ அதைச் சுருக்கமாய் சொல்லுகிறோமென்றபடி.]

సర్వద్వారాణి సంయమ్య మనో హృది నిరుధ్య చ।
మూర్ధ్న్యాధాయ త్మనః ప్రాణ మాస్థితో యోగధారణామ్॥౧౨॥
ఓమిత్యేకాక్షరం బ్రహ్మ వ్యాహరన్ మామనుస్మరన్।
యః ప్రయాతి త్యజన్ దేహం స యాతి పరమాం గతిమ్॥౧౩॥

(கஉ-கங) ஞாநத்துக்கு வழியான செவிமுதலிய வெல்லாப்புலன்களையும் தம்வியாபாரங்களினின்று நிவ்ருத்திசெய்து, இருதயகமலத்தில் உறைகின்ற அக்ஷரமென்னும் நம்மிடத்தில் மனதை நிறுத்தி, யோகமென்னுந் தாரணையை யடைந்தவனாய் நம்மிடத்தில்தானே சலியாமல் நிலைத்து, நமக்கு வாசகமான "ஓம்" என்று மோர் அக்ஷரப்பிரம்மத்தை உச்சரித்துக்கொண்டு அதற்குப் பொருளான நம்மைச் சிந்தித்துக்கொண்டு தன்பிராணனைத் தலையில் வைத்து சரீரத்தை விட்டவனாய் எவன்போகிறானோ, அவன் பரமகதியை அடைகிறான்; [அதாவது:—பிரகிருதிக்குப் புறம்பாய் நமக்கு ஸமமாய் மீண்டும் திரும்பவேண்டாத ஜீவாத்மஸ்வரூபத்தையடைகிறான். యస్స సర్వేషు భూతేషు నశ్యత్సు న వినశ్యతి। అవ్యక్తోఽక్షర ఇత్యుక్తస్తమాహుః పరమాం గతిమ్ என்று அக்ஷரஸ்வரூபத்தைப்பரமகதியென்று உடனே அருளிச்செய்யப்போகிறார்.]

(அ-கை.) இவ்வாறு ஐசுவரியார்த்தியும் கைவல்யார்த்தியும் தாமடையவேண்டிய பயனுக்குத் தக்கபடி எம்பெருமானை உபாஸிக்கவேண்டும் பிரகாரத்தை யருளிச்செய்தார். இனி மோக்ஷார்த்தியான ஞாநியானவன் பகவானை உபாஸிக்கவேண்டும் பிரகாரத்தை யருளிச்செய்கிறார்.

అనన్యచేతాస్సతతం యోమాంస్మరతినిత్యశః।
తస్యాహంసులభఃపార్థ నిత్యయుక్తస్యయోగినః॥౧౪॥

(கச) ஆரம்பித்த நாள்முதல் நித்தியமாய் எப்போதும் மற்றொன்றையும்நாடாமல் நம்மையே ஏவன் சிந்திக்கிறானோ (என்றால் நாம் அவனுக்கு மிகவும் இனியோமாகையாலே நம்மை நினைத்தாலொழிய தன்னைத் தரிக்கமாட்டாதவனாய் கேவலம் இன்பமயமான நம்சிந்தையை யெவன்செய்கிறானோ) அந்த நித்தியயோகிக்கு நாம் எளிதில் கிடைக்கிறோம். [அதாவது - எளிதில் அடையக்கூடிய நம் பாவமான ஐசுவரியாதிகளையல்ல நாம் கொடுப்பது; மற்றப்படி கேவலம் அருமைப் பெரும்பேறான நாமேஎளிதில் கிடைக்கிறோம். என்றால் அவன் பிரிவை ஸஹிக்கமாட்டாமல் நாமே அவனை வரித்து நம்மையடைவதற்கேற்ற பக்குவமான உபாஸநஞாநத்தையுமளித்து அதன் விரோதியையுமொழித்து நம்மிடத்தில் இனிமையான புத்தியையும் உண்டுபண்ணுகிறோமென்றபடி. యమేవైషవృణుతేతేనలభ్యః என்று சுருதியில் சொல்லுகிற தன்றோ? తేషాంసతతయుక్తానాం భజతాం ప్రీతిపూర్వకమ్। దదామిబుద్ధియోగం తంయేనమాముపయాన్తితే ॥ என்றும், తేషామేవానుకమ్పార్థ మహమజ్ఞానజన్తమః। నాశయామ్యాత్మభావస్థో జ్ఞానదీపేనభాస్వతా என்றும் மேலும்சொல்லப்போகிறார்.]

(அ-கை.) இதற்குமேல் அத்தியாயத்தின் மீதியாலே ஞாநிக்கும் கைவல்யார்த்திக்கும் திரும்புதலில்லையென்றும் ஐசுவரியார்த்திக்குத் திரும்புதலுண்டென்றும் அருளிச்செய்கிறார்.

మాముపేత్యపునర్జన్మ దుఃఖాలయమశాశ్వతమ్।
నాప్నువన్తిమహాత్మానస్సంసిద్ధింపరమాంగతాః॥౧౫॥

(கரு) நம்மைக் கிட்டியவர்கள் மறுபடியும் எல்லாத் துயரங்களுக்கு மிருப்பிடமான இந்த அசாசுவதமாயிருக்கிற ஜந்மத்தை யடைவதில்லை. ஏனென்றால்-இவர்கள் பெரியமனதோடு நம்ஸ்வரூபத்தை உள்ளபடியே யறிந்து (மிகுதியும் நம்மையே விரும்பியிருக்கையாலே நம்மைப்பிரிந்தால் தரிக்கமாட்டாதவர்களாய் நம்மைப்பற்றிக் கிடக்கிற மனதோடு நம்மையே ஆதாரமாக நம்பி) உபாஸ்யனான நம்மையே பெரும்பேறாக வடைகின்றார்கள்.

(அ-கை.) ஐசுவரியத்தை யடைந்தவர், திரும்புவதற்கும் பகவானை யடைந்தவர் திரும்பாமைக்குங் காரணம் இங்கே சொல்லப்படுகிறது.

ఆబ్రహ్మభవనాల్లోకాః పునరావర్తినోఽర్జున।
మాముపేత్యతుకౌన్తేయ పునర్జన్మనవిద్యతే॥౧౬॥

(கசு) பிரம்மாண்டத்தில் பிரம்மலோகபரியந்தமாயுள்ள போகைசுவரிய ஸ்தானமான ஸகல லோகங்களும் திரும்புதலோடு கூடியவைகள். ஆகையால் ஐசுவரிய கதியையடைந்தவருக்குப் பேமுன அந்த ஸ்தாநங்கள் நசிக்கும்போது அவர்களுக்கும் நாசமுண்டாகாமற்போகாது. (ஸர்வக்ஞனாய் ஸத்ய ஸங்கல்பனாய் ஸகல ஜகத்துக்கும் உத்பத்தி ஸ்திதிலயங்களைச் செய்பவனாய் பமகாருணிகனாய் எப்பொழுதும் ஒரே ரூபனாயிருக்கிற) நம்மை யடைந்தவர்களுக்கோ நாசமென்கிற வார்த்தையே யில்லாமையால் மறு ஜந்மங்கிடைக்மாட்டாது.

(அ-கை.) பிரம்மலோக பரியந்தமான லோகங்களுக்கும் அவற்றுக்குட்பட்டவைகளுக்கும் எம்பெருமானால் ஏர்ப்படுத்தப்பட்ட உத்பத்தி விநாசகாலங்களின் ஏர்ப்பாட்டை யருளிச்செய்கிறார்.

సహస్రయుగపర్యన్త మహర్యద్బ్రహ్మణో విదుః|
రాత్రింయుగసహస్రాన్తాం తేఽహోరాత్రవిదో జనాః||౧౭||

అవ్యక్తాద్వ్యక్తయస్సర్వాః ప్రభవన్త్యహరాగమే|
రాత్ర్యాగమే ప్రలీయన్తే తత్రైవావ్యక్తసంజ్ఞకే||౧౮||
భూతగ్రామస్స ఏవాయం భూత్వాభూత్వా ప్రలీయతే|
రాత్ర్యాగమేఽవశః పార్థ ప్రభవత్యహరాగమే||౧౯||

(கஎ-கஅ-ககூ) மானிடர் முதல் பிரமனளவாகவுள்ளப் பிராணிகளுக்கு நம்மாலேர்ப்படுத்தப்பட்ட "பகல் இரவு" என்கிற ஏர்ப்பாட்டையறிந்தவர்கள், ஆயிரம் சதுர்யுகத்தைப் பிரமனுக்கு ஒருபகலென்பர்கள். அப்படியேராத்திரியும். அதில் பிரமனுக்குப் பகல்வரும்போது மூவுலகத்துக்குட்பட்ட (சரீரம் இந்திரியம் மற்றும் போக்கியவஸ்துக்கள் போகஸ்த்தாநங்கள் ஆகிய) இவ் வியக்தங்களெல்லாம் அவ்வியக்தமென்கிற பிரமன் சரீரத்திலிருந்துண்டாகின்றன. இரவாகும்பொழுது அச்சரீரத்தில் தானே லயித்துப்போகின்றன. கர்மத்துக்கு வசப்பட்ட அந்த இந்த பூதக்கூட்டம் பகற்காலத்தி லுண்டாகியுண்டாகி இராக்காலத்தில் லயமடைந்து மறுபடியும் பகல்வந்தால் உண்டாகின்றது. [அப்படி நூறுவருஷமானால் கடைசியான ஆயிரயுகத்தில் பிரம்மலோகத்தளவானலோகங்களும் பிரம்மாவும் పృథివ్యప్సు ప్రలీయతే ఆప స్తేజసి లీయన్తే என்கிறக் கிரமமாய் அவ்யக்தம் அக்ஷரம் தமஸ்ஸு என்கிறவனாயில் நம்மிடத்தில் தானே லயிக்கின்றன. இப்படி நம்மை யொழிந்த வெல்லாவற்றுக்குங் காலவியவஸ்த்தையின்படி நம்மிடத்தில் உற்பத்தியும் நம்மிடத்தில்தானே லயமுமாகையால் உற்பத்திவிநாசங்கள் ஒன்றுலு மொழிக்கப்போகாது. ஆகையால் ஐசுவரியகதியைப் பெற்றவருக்கு மீண்டுந் திரும்புதல் வந்தேதீரும்; நம்மை யடைவோருக்கோ அந்த வார்த்தையே கிடையாது.]

(அ-கை.) இனி கைவல்லிய மடைந்தவருக்கும் திரும்புத லில்லையென்கிறார்.

పరస్తస్మాత్తు భావోఽన్యోఽవ్యక్తోఽవ్యక్తాత్సనాతనః।
యస్స సర్వేషు భూతేషు నశ్యత్సు న వినశ్యతి॥౨౦॥
అవ్యక్తోఽక్షర ఇత్యుక్తస్తమాహుః పరమాం గతిమ్।
యం ప్రాప్య న నివర్తన్తే తత్ § ద్ధామ పరమం మమ॥౨౧॥

(௨௦-௨௧) அவ்யக்தமென்கிற அசேதநப் பிரகிருதியைக் காட்டிலும் (புருஷார்த்தமாயிருக்கையால்) உத்க்ருஷ்டமாயிருக்கிற மற்றொரு ஜீவனென்றும் பாவபதார்த்தமானது, ஞாநமே வடிவாயிருக்கையால் அந்த அசேதநத்தைக் காட்டிலும் வேறு ஜாதியாய் கண்முதலிய பிரமாணங்களாலே கண்டறியக்கூடாமல் தன்னாலேயே தானறியப்பட்டு உற்பத்தி நாசங்களற்று நித்தியமாய், ஆகாசம் முதலிய பூதங்கள் தங்காரியங்களோடுங் காரணங்களோடும் நசித்தாலும் (அவைகளிலிருக்கிற) தான் நசியாமலிருக்கிறது. இது தான் యేత్వక్షరమనిర్దేశ్యమవ్యక్తం పర్యుపాసతే என்றும் కూటస్థోఽక్షర ఉచ్యతే என்றும் இத்யாதிகளில் அவ்யக்தமென்றும் அக்ஷரமென்றும் சொல்லப்பட்டது. இதைத்தான் வேதவித்துக்கள் பரமகதியென்பார்கள். (యః ప్రయాతి త్యజన్ దేహం என்கிற விடத்திலும் பரமகதி சப்தத்தாலே குறிக்கப்பட்ட அக்ஷர மென்பதும் இதுதான்.) இப்படிப்பட்ட ஸ்வருபத்தோடு இருக்கும் இதை அடைந்தவர்கள் மறுபடியுந் திரும்புவதில்லை. (இதுதான் கைவல்யமாவது) இதுதான் நம்முடைய ‡ நியமந ஸ்தாநங்களில் மேலானது [என்றால் அசேதநமான பிரகிருதி ஒரு நியமநஸ்தாநம். அத்தோடு கலந்திருக்கிற ஜீவனென்றும் பிரகிருதியானது இரண்டாவது நியமநஸ்தாநம். அவ்வசேதநத்தை விட்டுப்பிரிந்த முக்தஸ்வருபமான ஜீவன் மேலான நியமஸ்தாந மென்றபடி]

(அ-கை.) ஞாநிக்குக்கிடைக்கும்பேறு அதைகாட்டிலும் வேறுபட்டிருக்குமென்கிறார்.

పురుషస్స పరః పార్థ భక్త్యా లభ్యస్త్వనన్యయా।
యస్యాన్తఃస్థాని భూతాని యేన సర్వమిదం తతమ్॥ ౨౨॥

(௨௨) (మత్తః పరతరం నాన్యత్కించిదస్తి ధనంజయ। మయి సర్వమిదం ప్రోతం సూత్రే మణిగణా ఇవ॥ என்றும் మామేభ్యః పరమవ్యయమ్ என்றும் கீழே சொல்லப்பட்டபடி) எந்தபரமபுருஷனிடத்தில் ஸகலபூதங்களும் இருக்கின்றனவோ, எந்தபகவானாலே இவையாவும் வியாபிக்கப்பட்டுளவோ அந்த பரமபுருஷனை

---

§ ధామ ச. தம் பிரகாசத்தைச் சொல்லுவதானால், பிரகாசமென்றால் இங்கே ஞாநமென்று கொள்ளத்தக்கது; அப்பொழுது పరమం ధామ என்றால் பிரகிருதியோடுகலந்து மிதஞாநமான ஜீவஸ்வருபத்தைக்காட்டிலும் அபார ஞாநமான முக்தஸ்வருபம் அர்த்தமாகிறது.

‡ நியமநஸ்தாநம் - ஆளுகைக்குட்பட்டது.

(அநந்யசேதாஸ்ஸததம் என்று கீழ்ச்சொன்னபடி) மாருதபக்தியுண்டானால்தான் அடையக்கூடும்.

(அ-கை.) அநந்தரம் ஆத்மஞானிக்கும் பிரம்மஞானிக்குமுண்டான ¶ அர்ச்சிராதிமார்க்கத்தை உபதேசிக்கிறார்.

యత్ర కాలేత్వనావృత్తి మావృత్తించైవయోగినః।
ప్రయాతాయాన్తితంకాలం వక్ష్యామిభరతర్షభ॥ ౨౩॥

(உ௩) மோக்ஷார்த்திகளான யோகிகள் எந்த § மார்க்கமாய்ச் சென்று திரும்பாமலிருக்கிறார்களோ; ஐசுவர்யத்தைக்கோரிய புண்ணியவான்கள்

---

¶ மீட்சியில்லாத அர்ச்சிராதிமார்க்கம் இருவருக்கு முண்டென்று வேதம் சொல்லுகிறது. எங்ஙனேயென்னில்:—பஞ்சாக்கினி வித்தையில் తద్య ఇత్థంవిదుర్యేచేమేఽరణ్యే శ్రద్ధాతపఇత్యుపాసతేతే ఽర్చిషమభిసమ్భవన్త్యర్చిషో ఽహః என்று இருவருக்கும் அர்ச்சிராதிமார்க்கமுண்டென்றும், அப்படி அச்சிராதியால் போனவனுக்கு సఏనాన్ బ్రహ్మగమయతి ఏతేన ప్రతిపద్యమానా ఇమమ్మానవమావర్తం నావర్తన్తే என்று பரப்பிரம்மப் பிராப்தியும் மீட்சியில்லாமையும் சொல்லப்படிருக்கிறது. ஆனால் తద్యఇత్థంవిదుః என்கிற ஃருதி யானது பிரஜாபதிவாக்கியத்தில் ஓதப்பட்டுள்ள பரவித்தைக்கு அங்கமான ஆத்மப் பிராப்தியைப்பற்றிச் சொல்லுகிறது என்றால் அது கூடாது: ஏனெனில்-அப்படியாகும்பக்ஷத்தில்యేచేమేఽరణ్యే శ్రద్ధాతపఇత్యుపాసతే என்று பரவித்தையைத் தனியே பிரித்து ஓதியது வியர்த்தமாம்.

பஞ்சாக்நிவித்தையிலோ ఇతితుపఞ్చమ్యామాహుతావాపఃపురుషవచసోభవన్తి என்றும் రమణీయచరణాః కపూయచరణాః என்றும் புண்ணிய பாவங்களாலுண்டாகும் மானிடத்தன்மை முதலியவை பூதங்களோடு சேர்ந்த ஜலத்துக்கேயல்லது ஆத்மாவுக்கல்ல; ஆத்மாவோ இவைகளோடு கலந்து மாத்திரமிருக்கிறது. என்று சித்தையும் அசித்தையும் பிரித்துச்சொல்லி, తద్యఇత్థం విదుః ......తేఽర్చిషమభిసమ్భవన్తి ఇమంమానవమావర్తంనావర్తన్తే என்று (பிரித்துச் சொல்லப்பட்ட) சித்தையும் அசித்தையும் முறையே பற்றவேண்டியதாயும் விடவேண்டியதாயும் எவர்கள் அறிவார்களோ அவர்கள் அர்ச்சிராதியாலே போவார்கள், மறுபடி திரும்புகிறதில்லையென்று சொன்னதாய்க் காணப்படுகிறது. (ஆத்மஞானிக்கும் பிரம்மஞானிக்கும் సఏనాన్ బ్రహ్మగమయతి என்று பிரம்மப் பிராப்தியுண்டாயிருப்பதாகச் சொல்லுகையாலே இங்கே அசித்தினின்று பிரிந்திருக்கும் ஆத்மவஸ்துவானது பிரம்மத்துக்குச் சரீரமாயிருக்கையாலே பிரம்மத்துக்கே சேஷப்பட்டிருக்கிறதென் றெண்ணத்தக்கது. తత్క్రతు நியாயத்தாலும் அப்படியே ஏர்ப்படுகிறது.) பிரம்மத்துக்கே சேஷப்பட்டிருக்குமென்கிற விஷயமோ యఆత్మనితిష్ఠన్ ......యస్యాత్మాశరీరమ్ இத்தியாதி ஸ்ருதியில் பிரஸித்தம்.

§ மார்க்கமானது பகல்தொடங்கி ஸம்வத்ஸரம் வரையிலுள்ள காலாபிமாநி தேவதைகளால் நிறைந்திருக்கையால், மார்க்கத்தை யிங்கே காலசப்தத்தாலே காட்டுகிறதென்றறியவும்.

எந்த மார்க்கமாய்ச்சென்று திரும்பிவிடுகிறார்களோ, அதைச் சொல்லுகிறேன்கேள்.

అగ్నిర్జ్యోతిరహశ్శుక్లః షణ్మాసా ఉత్తరాయణమ్।
తత్రప్రయాతాగచ్ఛన్తి బ్రహ్మబ్రహ్మవిదోజనాః॥౨౪॥

(உச) அக்நிதேஜஸ்ஸூ பகல் சுக்லபக்ஷம் ஷண்மாஸம் உத்தராயணம் ஸம்வத்ஸரம் முதலாகச் சொல்லப்படும் அர்ச்சிராதி மார்க்கமாய்ச்சென்ற பிரம்மஞாநிகள் பரப்ரம்மத்தை யடைகிறார்கள்.

ధూమోరాత్రిస్తథాకృష్ణః షణ్మాసాదక్షిణాయనమ్।
తత్రచాన్ద్రమసంజ్యోతిర్యోగీప్రాప్యనివర్తతే॥౨౫॥

(உரு) தூமம் இரவு கிருஷ்ணபக்ஷம் ஷண்மாஸம் தக்ஷிணாயநம் முதலாகச்சொல்லப்படும் தூமாதிமார்க்கமாய்ச் செல்லுகின்ற புண்ணியகர்மஞ் செய்தவன் சந்திரஸம்பந்தமான காந்தியையடைந்திருந்து மீண்டும் திரும்பிவிடுகிறான்.

శుక్లకృష్ణేగతీహ్యేతే జగతశ్శాశ్వతేమతే।
ఏకయాయాత్యనావృత్తిమన్యయావర్తతేపునః॥౨౬॥

(உசா) சுக்ல கதியென்கிற அர்ச்சிராதிமார்க்கமும் கிருஷ்ணகதியென்கிற தூமாதிமார்க்கமும் உலகத்திற்குச் சாசுவதமாய் ஏற்பட்டவைகள். இவற்றுள் சுக்லகதியாற்சென்றவன் திரும்புகிறதில்லை; கிருஷ்ணகதியாற்செல்லுமவன் திரும்பிவிடுகிறான். [இதனால் இருவகையான ஞாநிகளுக்கும் சுக்லகதியும் புண்ணியகர்மஞ் செய்தவருக்குகிருஷ்ணகதியுமென்று * சுருதியில் சொல்லுகிறதென்றதாயிற்று.]

నైతేసృతీపార్థజానన్ యోగీముహ్యతికశ్చన।
తస్మాత్సర్వేషుకాలేషు యోగయుక్తోభవార్జున॥౨౭॥

(உஎ) இவ்விருவகையான மார்க்கத்தையுமறிந்த யோகியானவன் பிரயாணகாலத்தில் ஒருவனும் மோஹத்தையடையமாட்டான்; மற்றப்படி தனக்கென்று வகுத்த அர்ச்சிராதி மார்க்கத்தாலேயே போவான். ஆகையால் பார்த்த! தினந்தோறும் அர்ச்சிராதி மார்க்கத்தைச் சிந்தித்திருக்கையென்கிற யோகத்தோடுகூடியிரு.

(அ-கை.) இனி இவ்விரண்டு அத்தியாயங்களிலுஞ் சொல்லப்பட்ட சாஸ்திரார்த்தங்களை - யறிந்தவருக்குப் பிரயோஜநம் சொல்லுகிறது.

---

* తద్యఇత్థంవిదుర్యేచేమేఽరణ్యే శ్రద్ధాతపఇత్యుపాసతే తేఽర్చిషమభిసమ్భవన్తి అథయఇమే గ్రామ ఇష్టాపూర్తేదత్తమిత్యుపాసతేతే ధూమమభిసమ్భవన్తి என்று சுருதி.

వేదేషుయజ్ఞేషుతపస్సుచైవ దానేషుయత్పుణ్యఫలంప్రదిష్టమ్।
అత్యేతితత్సర్వమిదంవిదిత్వా యోగీపరంస్థానముపైతిచాద్యమ్॥౨౮॥

(உஅ) வேதம் யாகம் தவம் தாநம் முதலிய புண்ணியங்களுக்கு எந்தப்பிரயோஜநம் சொல்லப்பட்டிருக்கிறதோ அதை, இவ்விரண்டு அத்தியாயங்களிலும் சொல்லப்பட்ட பகவான்மகிமையை யறிந்தவன் உல்லங்கநஞ்செய்வான். [அதாவது-இதிலுண்டான ஆநந்தாதிசயத்தால் அவை யெல்லாவற்றையும் அற்பமாகநினைப்பான்.] மற்றப்படி பிரம்மஞாநியாய் ஞாநிகளுக்கிடமான மேலான முதல்வீட்டைச்சேருவான்.

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,
எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ:
ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# ஒன்பதாவது அத்யாயம்.

## அவதாரிகை.

உபாஸிப்பவர்களின் வேறுபாட்டுக்குக் காரணமான விசேஷங்கள் சொல்லப்பட்டன. இப்பொழுது உபாஸிக்கவேண்டும் பரமபுருஷன் மஹிமையையும் ஞாநிகளுக்குண்டான விசேஷத்தையும் விசாரித்து, பக்திரூபமான உபாஸநத்தின் ஸ்வரூபம் சொல்லப்படுகிறது.

శ్రీభగవానువాచ॥ ఇదన్తుతేగుహ్యతమం ప్రవక్ష్యామ్యనసూయవే।
జ్ఞానంవిజ్ఞానసహితం యత్ జ్ఞాత్వామోక్ష్యసేఽశుభాత్॥౧॥

(க) அர்ச்சுந! § அசூயைகொள்ளாமலிருக்கிற உனக்கு மிகவும் இரஹஸ்யார்த்தமான பக்தியென்னும் உபாஸநஞாநத்தை, அந்தஞாநத்தின் கதிவிசேஷத்தோடுகூட இப்பொழுது சொல்லுகிறோம். இதையறிந்து அநுஷ்ட்டித்தாயாகில் நம்மைச் சேரவொட்டாமல் தடுக்கிற ஸகல பாவங்களினின்றும் விடுபடுவாய்.

రాజవిద్యారాజగుహ్యం పవిత్రమిదముత్తమమ్।
ప్రత్యక్షావగమన్ధర్మ్యం సుసుఖంకర్తుమవ్యయమ్॥౨॥

(உ) அர்ச்சுந! நாம் சொல்லப்போகிறஇந்தபக்தியானது,வித்தைகளுக்கெல்லாம் இராஜாவாகையாலே இதற்கு ராஜவித்தையென்றும், ரஹஸ்ய

---

§ அசூயை=ஸகல பதார்த்தங்களிலும் வேறுபட்டிருக்கிற அபாரமான எம்பெருமான் மஹிமையைக் கேட்டால், இது இப்படியெல்லாமிருக்குமா! என்று அதில் நம்பிக்கை கொள்ளாமை.

ங்களுக்கெல்லாம் மேலாயிருக்கையாலே இராஜரஹஸ்யமென்றும் பெயர். நம்மோடு சேரவொட்டாமற்றடைசெய்கின்ற ஸகல பாபங்களையும் போக்கும்படி மிகவும் பரிசுத்தமானது; அறியவேண்டும் பொருளான நம்மைப் பிரத்யக்ஷமாய்க் காட்டக்கூடியது; அப்படி யிருக்கச்செய்தேயும் தர்மத்தினின்று நீங்காதது. [என்றால் தர்மமாவது மோக்ஷத்தைச் சாதிக்குமது; இந்தபக்தியானதுதானே மிகவும் இனியதாய்க்கொண்டு அப்பொழுதே எம்பெருமானை பிரத்தியக்ஷமாய்க் காட்டுகின்றமையால் தானே மோக்ஷஸாதகத்தைக்கொடுத்தாலும் அதுவேதனக்குப்பயனாய் அத்தோடு நில்லாமல் உத்தமமோக்ஷமான நம்மையு மடைவிக்கு மென்றபடி.] இப்படி இனியதா யிருக்கையாலே செய்வதற்கும் எளிதாயிருக்கும். மற்றஸாதநங்களைப்போலே பலனை யளித்தபோதே யழிந்துபோகாமல் மோக்ஷத்தைக் கொடுத்த பின்பும் அழியாமலிருக்கும். [என்றால் இப்படிப்பட்டபக்திரூபமான உபாஸநத்தைச் செய்பவனுக்கு நம்மைத் தந்தபின்பும் நாம் என்செய்தோமென்று எண்ணும்படியாயிருக்குமென்றபடி.]

అశ్రద్దధానాఃపురుషా ధర్మస్యాస్యపరన్తప|
అప్రాప్యమాంనివర్తన్తే మృత్యుసంసారవర్త్మని||౩||

(௩) இப்படி மிகவும் இனியனான நம்விஷயத்தில் பண்ணும் பக்தியானது இனியதாயும் நம்மையடைவிப்பதாயும் அழிவற்றதாயுமிருக்க, இதைக் கைப்பற்றும்படியான நல்ல நிலையிலிருந்தும் விரைவில் ஆதரத்தோடு கைப்பற்றாதவர்கள் நம்மை யடையாமற்போவதோடு யமனான ஸம்ஸாரத்தில் தானே அழுந்திப்போகிறார்கள். [ஐயோ! இதென்ன ஆச்சரியமென்றபடி]

(அ-கை.) அடையவேண்டும் பயனாயும் சிந்தைக் கெட்டாததாயுமிருக்கிற நம்மஹிமையைச் சொல்லுகிறேன்கேள்.

మయాతతమిదంసర్వం జగదవ్యక్తమూర్తినా|
మత్స్థానిసర్వభూతాని నచాహన్తేష్వవస్థితః||౪||
నచమత్స్థానిభూతాని పశ్యమేయోగమైశ్వరమ్|
భూతభృన్నచభూతస్థో మమాత్మాభూతభావనః||౫||

(௪-௫) சேதனம் அசேதனம் என்றிருவகையாயுள்ள இவ்வுலகங்கள் யாவும் எங்கும் மறைந்துறைகின்ற * அந்தரியாமியான நம்மால் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. [என்றால்-இவைகளைத் தரிப்பதற்காகவும் ஆள்வதற்காகவும் பதியாயிருந்து வியாபித்திருக்கிறோமென்றபடி.] ஆகையால் ஸகல பூத

---

* அந்தரியாமிப் பிராம்மணத்தில் (యఃపృథివ్యాన్తిష్ఠన్ ......యంపృథివీనవేద||యఆత్మనితిష్ఠన్......యమాత్మానవేద என்று ஒன்றாலும் பார்க்கப்படாத அந்தரியமியால் எங்கும் வியாபிக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லப்பட்டுளது.

ங்களும்¶ அந்தரியாமியான நம்மிடத்திலிருக்கின்றன. நாமோ அவைகளிலிருப்பதில்லை. [அதாவது நம்நிலைமையைப்பற்றி அவைகளாற் சிறிதும்உபகாரமில்லையென்றபடி] நாம் (அவைகளைத் தரிக்கும்பொழுது ஜலம்முதலியவற்றைத்தரிக்கிற குடம்முதலியவைகளைப்போல்) ஆதாரமாய்த் தரிக்கிறோமென்பதல்ல; மற்றப்படி கேவலம் நமது ஸங்கற்பமென்கிற இச்சையினாலே தரிக்கிறோம். பார்த்தையோ ஸர்வேசுவரனான நம்முடைய யோகமஹிமையை? நம்மைத்தவிர யாருக்காகிலும் எங்காகிலும் இப்படிப்பட்ட சக்தியுண்டா? ஸகலபூதங்களையும் தரிப்பவனாகிய நாம் அவைகளாற் சிறிதும் ஸஹாயத்தைப்பெறாமல் கேவலம் ஸங்கற்ப மாத்திரத்தால் அவைகளைத் தரித்தும் ஆண்டும் பரிபாலித்தும் வருகிறோமே· இதுதான் நம்முடைய யோகமாவது.

యథాకాశస్థితో నిత్యం వాయుస్సర్వత్రగో మహాన్ |
తథా సర్వాణి భూతాని మత్స్థానీత్యుపధారయ ||౬||

(கூ) நிராதாரமான ஆகாசத்தில் பெருத்த வாயுவானது இருந்துகொண்டு எங்கும் வீசுகிறதைப் பார்த்தால் அந்தவாயுவின் நிலைமை நம்ஆதீனம் என்று அவசியம் ஒப்புக்கொள்ளவேண்டியதா யிருக்கிறதல்லவா? அதுபோல் எல்லாப்பூதங்களும் (அவைகளால் காணப்படாத) நம்மிடத்தில் நிலைபெற்றிருக்கும். இப்படியே * வைதிகர்களுஞ் சொன்னார்கள். $ சுருதியுமிப்படியே சொல்லுகிறது.

(அ-கை.) பூதங்களின் ஸ்திதியும் ப்ரவிருத்தியும் இதர நிரபேக்ஷமான பகவத்ஸங்கல்பாதீநமென்றார் கீழ்; இப்பொழுது அவைகளின் உத்பத்திவிநாசங்களும் அவன் ஸங்கல்பாதீநமென்கிறார்.

సర్వభూతాని కౌన్తేయ ప్రకృతిం యాన్తి మామికామ్ |
కల్పక్షయే పునస్తాని కల్పాదౌ విసృజామ్యహమ్ ||౭||

(எ) தாவரமாயும் ஜங்கமமாயுமுள்ள வெல்லாப்பூதங்களும், நாமரூபங்கள்கொண்டு பிரிக்கப்போகாமல் கேவலம் தமஸ்ஸு என்று சொல்லப்பட்ட (நம்சரீரமான) பிரகிருதியில் நான்முகனுக்கு முடிவுநாளான கல்பக்ஷயத்தில் நம்ஸங்கல்பத்தால் லயிக்கின்றன;மறுபடியும் கல்பாதியில் அவை

---

¶ அந்தரியாமிப் பிராம்மணத்தில், యస్య పృథివీ శరీరం యః పృథివీమన్తరో యమయతి యస్యాత్మా శరీరం య ఆత్మానమన్తరో యమయతి என்று சித்தும் அசித்தும் பகவானுக்கு சரீரமாயிருப்பதாகச் சொல்லுகையால் ஸ்திதியும் பிரவிருத்தியும் பகவானதீநமென்றதாயிற்று.

* మేఘోదయస్సాగరసన్నివృత్తిరిన్దోర్విభాగస్స్ఫురితాని వాయోః | విద్యుద్విభఙ్గో గతిరుష్ణరశ్మేః విష్ణోర్విచిత్రాః ప్రభవన్తి మాయాః ||

$ శ్రుతిః || ఏతస్య వా అక్షరస్య ప్రశాసనే గార్గి సూర్యాచన్ద్రమసౌ విధృతౌ తిష్ఠతః || భీషాస్మాద్వాతః పవతే భీషోదేతి సూర్యః భీషాస్మాదగ్నిశ్చేన్ద్రశ్చ இத்யாதிகள்.

களை நாம்படைக்கிறோம். இப்படியே † மநுசொல்லுகிறார். ‡ சுருதியும் இப்படியே.

ప్రకృతింస్వామవష్టభ్య విసృజామిపునఃపునః।
భూతగ్రామమిమంకృత్స్నమవశంప్రకృతేర్వశాత్॥౮॥

(அ) விசித்திரமாய் விகாரப்படும் நம் பிரகிருதியை எட்டு வகையாக விகாரப்படுத்தி, தேவர் திரியக்கு மனிதர் தாவரம் என்கிற நால்வகைப் பூதங்களையும் குணமயமான அந்தப் பிரகிருதியினின்றும் அந்தந்தகாலத்தில் சிருஷ்டிக்கிறோம்.

(அ-கை.) இப்படியாகில் வித்தியாசமாய்ப் படைப்பதனால் பகவானுக்குக் கருணையில்லையென்றும் மற்றும் தோஷங்களுமுண்டாய் அவனை அக்கர்மங்கள் கட்டுப்படுத்தாவோவென்றால் அருளிச்செய்கிறார்.

నచమాంతానికర్మాణి నిబధ్నంతిధనంజయ।
ఉదాసీనవదాసీన మసక్తంతేషుకర్మసు॥౯॥

(கூ) அர்ச்சுந! வித்தியாஸமாய் ஸ்ருஷ்டிமுதலிய தொழில்களைச் செய்வதனால் நமக்குக் கருணையின்மை முதலிய குற்றங்கள் வரமாட்டா; ஏனென்றால்-தேவனும் மனிதனும் பிராணிகள் வித்தியாஸமா யுண்டாவதற்குக் காரணம் ஜீவர்கள்செய்த பூர்வகர்மம். நாமோ அந்த வித்தியாஸ விஷயத்தில் தட்டாமலிருக்கிறோம். [இப்படியே * ஸூத்திரகாரரும் சொன்னார்.]

మయాధ్యక్షేణప్రకృతి స్సూయతేసచరాచరమ్।
హేతునానేనకౌంతేయ జగద్విపరివర్తతే॥౧౦॥

(கO) ஆகையால் ஜீவர்களின் கர்மத்துக்குத்தக்கபடி நம் பிரகிருதியானது ஸத்திய ஸங்கல்பனாகிய நம்மால் கடாக்ஷிக்கப்பட்டதாய் சராசரமாயுள்ள இஜ்ஜகத்தை யுண்டாக்குகின்றது. இப்படி கர்மாநுகுணமாக நாம்ஸங்கல்பிக்கிறோ மென்கிற இந்த ஹேதுவினால்தான் உலகம் வித்தியாஸமாயிருக்கின்றது. [ஆகவிதனால் நாம் ஸ்வாமியாயும் ஸத்திய ஸங்கல்பனும் கருணையின்மைமுதலிய தோஷமில்லாதவனும் இன்னு மிப்படி பல்படியாயுமிருக்கிறோமென்கிற இந்த நம்முடைய யோகத்தைப்பார் என்றதாயிற்று. இப்ப

---

† మనుః।ఆసీదిదంతమోభూతమ్ என்றும் సోభిధ్యాయశరీరాత్స్వాత్ என்றுஞ்சொன்னார்.

‡ శ్రుతిః ॥ యస్యావ్యక్తం శరీరం என்பது முதல் అవ్యక్తమక్షరేలీయతే అక్షరం తమసిలీయతే என்றும், తమఆసీత్తమసాగూఢమగ్రేప్రకేతమ్ என்றுஞ் சொல்லுகிறது.

* వైషమ్యనైర్ఘృణ్యేనసాపేక్షత్వాత్ என்றும் నకర్మావిభాగాదితిచేన్నానాదిత్వాత్ என்றும் ஸூத்திரகாரர் சொன்னார்.

டியே சுருதியும் అస్మాన్మాయీసృజతే విశ్వమేతత్ తస్మింశ్చాన్యోమాయయా సన్నిరుద్ధః॥ என்றும் మాయాన్తుప్రకృతింవిద్యా న్మాయినన్తుమహేశ్వరమ్ என்றும் சொல்லுகிறது.]

అవజానన్తిమాంమూఢా మానుషీన్తనుమాశ్రితమ్।
పరంభావమజానన్తో మమభూతమహేశ్వరమ్॥౧౧॥

(கக) இப்படிப் பூதங்களுக்கெல்லாம் மஹேசுவரனாய் ஸர்வக்ஞனாய் ஸத்திய ஸங்கல்பனாய் ஸகல ஜகத்துக்கும் முக்கிய காரணனாயிருக்கும் நாம் மிகவும் தயாளுவாகையாலே யாவரும் நம்மைப்பற்றிச் கடைத்தேறட்டுமென்று மனுஷ்யனாய் அவதரித்திருக்கிறோம். இதை (தீவினையால் மதிகெட்ட) இந்தப் பிராணிகள் அறியமாட்டாமல் கேவலம் உலகத்திலுள்ள மனிதரில் இவனுமொருவன் என்று ஸாதாரணமாய் நினைத்து விடுகின்றன. [என்றால்:—பூதங்களுக்கிறைவனாகிய நாம் கருணையாலும் ஔதாரியத்தாலும் அன்பினாலும் இப்படி மனிதனாய்த் தோன்றினோமென்கிற இம்மேன்மையைச் சிறிது மோராமல், கேவலம் மனிதனாய்ப் பிறந்ததினாலேயே நம்மை இகழ்கிறார்கள் என்றபடி.]

మోఘాశామోఘకర్మాణో మోఘజ్ఞానావిచేతసః।
రాక్షసీమాసురీంచైవ ప్రకృతింమోహినీంశ్రితాః॥౧౨॥

(கஉ) தயைமுதலிய நம் மேன்மைக்கீடாக நாம் மனிதனாய் அவதரித்திருக்கிறோ மென்பதை யறிய வொட்டாமல் மறைக்கின்றதாய், அரக்கர் தன்மையும் அசுரர்தன்மையும் பொருந்தியதாயுள்ள இப்பிரகிருதிக்குவசப்பட்ட இந்தப்பிராணிகள், தாங்கோரிய கோரிக்கை யொன்றும் நிறைவேறாமலும், எடுத்தகாரியமெதுவும் தலைக்கட்டாமலும், நினைத்ததெல்லாம் பழுதாய் (சராசரமாயுள்ள பதார்த்தங்களில் ஒன்றையும் உள்ளபடியே அறியமாட்டாமையால்)எல்லாம் வியர்த்தமாயிருப்பதாக நினைத்துக் கெட்டுப்போகிறார்கள். [என்றால்-ஸர்வேசுவரனான நம்மைப் பிறருக்குச் சமமாக வெண்ணுமவன் நம்விஷயத்தில் எந்தகாரியத்தைச் செய்யமுயன்றாலும் பயன்படமாட்டாதென்று திருவுள்ளம்.]

మహాత్మానస్తుమాంపార్థ దైవీంప్రకృతిమాశ్రితాః।
భజన్త్యనన్యమనసో జ్ఞాత్వాభూతాదిమవ్యయమ్॥౧౩॥

(கங) எவர்களானால் தாம் செய்த புண்ணியவசத்தால் நம்மைச் சரணமடைந்து ஸகலபாவங்களையு மொழித்துத் தேய்வீகமான ஸ்வபாவத்தை யடைந்திருக்கிறார்களோ அந்தமஹாத்மாக்கள், (வாக்குக்கும் மனதுக்குமெட்டாத நாமகர்ம ஸ்வரூபங்களோடுகூடிய)நாம் மிகவும் கருணையாலே ஸாதுக்களைக் காப்பதற்காக மனுஷியனாய் அவதரித்திருக்கிறோ மென்பதையறிந்து இடைவிடாத சிந்தையோடு நம்மை ஸேவிக்கிறார்கள். [என்றால் நம்மை விரும்பியவர்களாகையால் நம்மை ஸேவித்தாலல்லது தம்மனமும் ஆத்மாவும் மற்றுங்

கரணங்களும் தாளாமையாலே நம்மை ஸேவிப்பதே பெரும்பயனாகவிருக்கிறார்களென்றபடி.]

సతతం కీర్తయన్తో మాం యతన్తశ్చ దృఢవ్రతాః।
నమస్యన్తశ్చ మాం భక్త్యా నిత్యయుక్తా ఉపాసతే॥౧౪॥

(கச) மிகவும் (நம்மையே விரும்பியவராகையால்) நம்மைக் கீர்த்தனஞ் செய்தல் நம்மை யடைவதற்காக யத்தநஞ்செய்தல் நம்மடிகளில் முடிசாய்த்தல் முதலிய செயல்களைச் செய்யாதபோது ஒருக்ஷணமுந் தரிக்கமாட்டாதவர்களாய், (என்றால் - நங்குணங்களைப் பிரகாசப்படுத்தும் நந்திருநாமங்களை நினைத்துச் சரீரம் புளகித்து, ஸந்தோஷாதிசயத்தால் கத்கதஸ்வரத்தோடு 'நாராயண! கிருஷ்ண! வாஸுதேவ! என்றிப்படி சொல்லிக்கொண்டும், அப்படியே அர்ச்சனை முதலிய நமது ஆராதநத்திலும் அதற்கனுகூலமாகத் திருக்கோயில் திருநந்தநவனம் முதலிய திருப்பணிகள் செய்வதிலும் - திடமான உத்தேசத்தோடு யத்தநஞ் செய்துகொண்டும், பக்தியின் மிகுதியால் * அஷ்டாங்கமும் படியும்படி பூமியில் தும்பு சேறு மணல் என்று ஒன்றையும் பாராமல் நம்மைக்கண்ட உடனே தடிபோல் விழுந்து தண்டன் ஸமர்ப்பிப்பவர்களாய்) எப்போதும் நம் ஸன்னிதியி லிருக்கவேண்டுமென்று அதற்காகத் தாமுள்ள நாளெல்லாம் நமக்கடிமை செய்வதே தொழிலாயிருப்பர்கள்.

జ్ఞానయజ్ఞేన చాప్యన్యే యజన్తో మాముపాసతే।
ఏకత్వేన పృథక్త్వేన బహుధా విశ్వతోముఖమ్॥౧౫॥

(கரு) பின்னும் சில மஹாத்மாக்கள் முன்சொன்ன கீர்த்தநாதிகளோடுகூட ஞானமென்கிற யக்ஞத்தாலும் உபாஸிக்கிறார்கள். எப்படி? அனேகவிதமாகவும் தனித்தனியாகவும் ஜகதாகாரமாகவும் ஸமஸ்தப் பிரகாரமாகவும் நாமிருப்பதாக நம்மை உபாஸிப்பர்கள். [அதாவது - எம்பெருமான் ஸ்ருஷ்டிக்குமுன்பு சூக்ஷ்மமாய் நாமரூபங்களில்லாமலிருந்த சேதநாசேதநங்களைச் சரீரமாய்த் தரித்திருந்து, ஒருகாலவிசேஷத்தில் "அனேகவிதமான நாமரூபங்களோடுகூடிய ஸ்தூலமான சேதநாசேதனங்களைச் சரீரமாய்த் தரிக்கக்கடவேன்" என்று ஸங்கல்பித்து, தானொருவனே தேவர் திர்யக்கு மனிதர் தாவரம் என்றுவிசித்திரமாயுள்ள உலகத்தையெல்லாம் சரீரமாகத்தரித்திருக்கிறானென்று நினைத்தவர்களாய் நம்மை உபாஸிக்கிறார்களென்றுதாத்பரியம்.]

(அ-கை.) மேற்சொல்லியபடி விசுவரூபமாகத் தாமே யிருப்பதாக வருளிச் செய்கிறார்.

అహం క్రతురహం యజ్ఞః స్వధాహమహమౌషధమ్।
మన్త్రోऽహమహమేవాజ్య మహమగ్నిరహం హుతమ్॥౧౬॥

---

* அஷ்டாங்கம் - புத்தி, அபிமானம், கைகளிரண்டு, கால்களிரண்டு சிரஸ்ஸு ஆகிய விவ்வெட்டும்.

(௧௬) அர்ச்சுநா! ஜியோதிஷ்டோமம் முதலிய யக்ஞமும் மஹாயக்ஞமும் நாமே! பித்ருக்களை வளரச்செய்யும் 'ஸ்வதை' என்கிற அன்னமும் நாமே; தேவர்களுக்குப் பிரீதிகரமான ஹவிஸ்ஸும் நாமே; மந்திரமும் நாமே; வேள்விக்குரிய நெய்முதலிய திரவியங்களும் நாமே; ஆஹவநீயம் முதலான அக்கினியும் நாமே; ஹோமமும் நாமே.

పితాహమస్యజగతో మాతాధాతాపితామహః।
వేద్యంపవిత్రమోంకార ఋక్సామయజురేవచ॥౧౭॥

(௧௭) சராசரரூபமான இவ்வுலகுக்கெல்லாம் தாயுந்தந்தையும் மற்றும் $ தாதாவும் பாட்டனும் நாமே. அன்றியு வேதங்களா லறியவேண்டியதான பரிசுத்தவஸ்து எதுவோ அதுவும் நாமே; வேதத்துக்கு முதற்காரணமான ஓங்காரமும் அதினின்றுமுண்டான இருக்கு யஜுஸ்ஸு ஸாமம் என்கிற வேதங்களும் எல்லாம் நாமே.

గతిర్భర్తాప్రభుస్సాక్షీ నివాసశ్శరణంసుహృత్।
ప్రభవఃప్రళయస్థానం నిధానంబీజమవ్యయమ్॥౧౮॥

(௧௮) ஆங்காங்கு அடையப்படும் இடமான ஸ்வர்காதிகளும் நாமே; தரிப்பவனும் ஆள்பவனும் பிரத்யக்ஷமாய்ப் பார்ப்பவனும் உறைவிடமும் இஷ்டத்தைத்தந்து அநிஷ்டத்தை யொழிக்கும்புகலிடமும் இதஞ்செய்யுந் தோழனும் வஸ்துக்களின் உத்பத்தி லயஸ்த்தாநமும் உண்டாவதும் அழிவதும் அழிவற்றமுதற்காரணமும் நாமே?

తపామ్యహమహంవర్షం నిగృహ్ణామ్యుత్సృజామిచ।
అమృతంచైవమృత్యుశ్చ సదసచ్చాహమర్జున॥౧౯॥

(௧௯) அக்கினியென்றும் சூரியனென்றும் நாமே தபிக்கிறோம்; கோடைமுதலிய காலங்களில் நாமே நீரை வரட்டுகிறோம்; அப்படியே மழைகாலத்தில் மழையைப் பொழிகிறோம்; பிராணிகள் எதினால் மறிக்குமோ அதுவும், எதினால் பிழைக்குமோ அதுவும் நாமே; பலபேச்சென்ன? ¶ ஸத்தும் நாமே * அஸத்தும் நாமே. [என்றால் முக்காலத்திலுமுள்ள சேதநாசேதநங்களைச் சரீரமாயுடையனாய் அவ்வோ ரூபங்களாயிருப்பவன் நானேயென்றபடி.]

(அ-கை.) இவ்வாறு எம்பெருமானை அநுபவிப்பதே போகமென்றிருக்கும் ஞாநிகளான மஹாத்மாக்களின் செயல்களைச் சொல்லி, அவர்கள் பெருமையையே பின்னும் பெருக்குவதற்காக இங்கே அக்ஞாநிகளான காமியார்த்திகளின் செயலை யருளிச்செய்கிறார்.

---

$ தாதாவென்றால் இங்கே தாய்தந்தையரைத்தவிர மற்றப்படி உத்பத்திக்கு ஒத்தாசையானவர்களைச் சொல்லுகிறது.

¶ ஸத் - தத்காலத்திலுள்ளது. * அஸத் - இறந்தகாலத்திலிருந்ததும் இனி உண்டாகப்போகிறதும்.

త్రైవిద్యామాంసోమపాః పూతపాపాయజ్ఞైరిష్ట్వాస్వర్గతింప్రార్థయన్తే।
తేపుణ్యమాసాద్యసురేన్ద్రలోకమశ్నన్తిదివ్యాన్దివిదేవభోగాన్॥౨౦॥
తేతంభుక్త్వాస్వర్గలోకంవిశాలం క్షీణేపుణ్యేమర్త్యలోకంవిశన్తి।
ఏవంత్రయీధర్మమనుప్రపన్నా గతాగతంకామకామాలభన్తే॥౨౧॥

(௨௦-௨௧) கீழ்ச்சொன்னவர்களைப்போல வேதாந்தநிஷ்டையில் இல்லாமல் கேவலம் ருக்கு முதலிய மூன்றுவேதங்களில்மாத்திரம் நிஷ்டையுடையோருக்கு திரைவித்தியர்களென்று பெயர். அவர்கள் வேதத்தில் சொல்லப்படும் கேவலம் இந்திராதிகளை நோக்கிச்செய்யும் யாகங்களில் மிச்சமான * ஸோமக்கொடி ரஸத்தைக் குடித்து அதனால் ஸ்வர்க்கத்துக்கு விரோதமான ஸகல பாவங்களையுமொழித்து, கேவலம் இந்திராதிகளைமாத்திரம் உத்தேசித்துச்செய்த யக்ஞங்களைச் செய்துமுடித்து சுவர்க்கத்தைக்கோருகிறார்கள். பிறகு அப்படியே துயர் தீர்ந்த சுகமாயுள்ள அந்த சுவர்க்கலோகத்தையடைந்து, அங்குண்டான திவ்ய போகங்களை நுகர்ந்து, பிறகு அந்த நுகர்ச்சிக்கு ஹேதுவான புண்ணியங்கள் அழிந்தவாறே மறுபடியும் இம்மானிடலோகத்தில்வந்து சேருகிறார்கள். இப்படி இவர்கள் வேதாந்தத்தில் தேறின ஞானத்தையடையாமல் கேவலம் வேதத்தில்மாத்திரஞ் சொன்ன தருமங்களையநுட்டிப்பதனால் சுவர்க்காதிகளான அற்பபலன்களையடைந்து அடிக்கடி போக்கும் வரத்துமாயிருக்கிறார்கள்.

(அ-கை.) மஹாத்மாக்களோ ஒப்பில்லா வின்பமான நம் சிந்தையைச்செய்து ஈறிலின்பக்கடலான நம்மையடைந்து மறுபடி திரும்பாமலிருக்கிறார்களென்று அவர்களுக்கு விசேஷங்காட்டுகிறார்.

అనన్యాశ్చిన్తయన్తోమాం యేజనాః పర్యుపాసతే।
తేషాంనిత్యాభియుక్తానాం యోగక్షేమంవహామ్యహమ్॥౨౨॥

(௨௨) யாதொரு பயனையும் நாடாமல், (நம்மை நினையாமற்போனால் தரிக்கமாட்டாமையால்) எந்தவேளையும் கேவலம் நம்மையே சிந்தித்திருக்கும் மஹாத்மாக்களோ, ஸமஸ்த கல்லியாணகுணஸ்வரூபனாய் ஸகல ஐசுவரிய ஸம்பந்நனுயுள்ள நம்மைப் பல்படியாலும் பரவுகின்றார்கள். அப்படி நம்மோடு நித்தியமான நிலை தங்களுக்கு வேண்டுமென்று கோரின அவர்களுக்கு, நாம் (நம்முடன் சேர்க்கையாகிற) யோகத்தையும் (மீண்டுந் திரும்பாமையாகிற) க்ஷேமத்தையும் தருகிறோம்.

ఏప్యన్యదేవతాభక్తా యజన్తేశ్రద్ధయాన్వితాః।
తేపిమామేవకౌన్తేయ యజన్త్యవిధిపూర్వకమ్॥౨౩॥

(௨௩) இந்திராதிகளான இதரதேவதைகளிடத்தில் பக்திபண்ணி அவர்களை யாராதிப்பவர்களும் (வாஸ்தவத்தில் அத்தேவர்கள் நமக்குச்சரீரமாகை

* ஸோமக்கொடி - ஆட்டாங்கொடி.

யால்) நம்மையே ஆராதிக்கிறார்கள்; ஆனால் முறைதப்பி ஆராதிக்கிறார்கள் [அதாவது-இந்திராதிதேவர்களைக் கர்மத்தாலாராதிக்கவேண்டிய முறை *வேதாந்தத்தில் எப்படி சொல்லப்படுகிறதோ அப்படி யாராதிப்ப தில்லை யென்றபடி.]

(அ-கை.) ஆகையால் திரைவித்யர்கள் "கர்மங்களெல்லாம் இந்திராதிகளுக்கு அந்தராத்மாவான பரமபுருஷனுக்கு ஆராதநரூபங்கள்; ஆராதிக்கத்தக்கவனும் அவனே" என்று அறிகிறதில்லை. அதனால் அவர்கள் மிதமான பயன்களைப்பெற்றவர்களாய் நழுவிப்போகிற ஸ்வபாவமுள்ளவா ளாகிறார்களென்கிறார்.

అహంహిసర్వయజ్ఞానాం భోక్తాచప్రభురేవచ।
నతుమామభిజానన్తి తత్త్వేనాతశ్చ్యవన్తితే॥౨౪॥

(உச) ஸகலமான யக்ஞங்களையும் புஜிப்பவன் நாந்தான்; அதற்குத்தக்கபடி பலன் கொடுப்பவனும் நாமே; நம்மை யிப்படி யறியாமையால் இவர்கள் மறுபடி மறுபடி திரும்புதலை யடைகிறார்கள்.

(அ-கை.) அஹோ! இதென்ன ஆச்சரியம். எல்லாரும் கர்மத்தைச்செய்யாநிற்க, அதில் நினைவு வேறுபாட்டால் சிலர் அற்பபலன்களையடைந்து தவறிப்போவதும், சிலர் நித்தியாநந்தபதமான மோக்ஷத்தைப்பெற்று மீட்சியில்லாமற்போவதுமா யிருக்கிறார்களே என்கிறார்.

యాన్తిదేవవ్రతాదేవాన్పితౄన్యాన్తి పితృవ్రతాః।
భూతానియాన్తిభూతేజ్యాయాన్తి మద్యాజినోపిమామ్॥౨౫॥

(உரு) இந்திராதிகளைக்குறித்துச் செய்கிறோமென்கிற ஸங்கல்பத்தோடு யக்ஞம்முதலிய கர்மங்களைச் செய்யுமவர்கள் இந்திராதிகளை யடைகிறார்கள்; பித்ருக்களைக் கோரிச்செய்யுமவர்கள் பித்ருக்களை யடைகிறார்கள்; யக்ஷராக்ஷஸ பிசாசாதிகளைக் குறித்துச் செய்யுமவர்கள் அந்தப் பூதங்களையே யடைகிறார்கள். எவர்கள் அந்த யக்ஞங்களையே "அந்த தேவபித்ருபூதங்களுக்கு அந்தராத்மாவாயுள்ள பரமாத்மாவை யாராதிக்கக்கடவோம்" என்கிற ஸங்கல்பத்தோடு நம்மை ஆராதிக்கிறார்களோ அவர்கள் நம்மையே யடைகிறார்கள். [என்றால்:—தேவாதிகளைப் பூஜிப்பவர்கள் அவர்களை யடைந்து அவர்களோடு இன்பத்தை யநுபவித்து அவர்கள் அழியும்போது தாமும் அழிகிறார்கள். நம்மைப் பூஜிப்பவரோ ஆதியந்தமில்லாமல் ஸர்வக்ஞனாய் ஸத்திய ஸங்கல்பனாய் எல்லையில் சீரான அநந்தகல்யாணகுணங்களுக்குப் பெ

---

* చతుర్హోతారోయత్ర సమ్పదంగచ్ఛన్తిదేవైః இத்யாதியாக விதிக்கிற வேதாந்த வாக்கியங்களில் அக்நிஹோத்திரம் முதலிய கருமங்கள் இந்திராதிகளுக்கு அந்தராத்மாவான பரமாத்மாவை உத்தேசித்துச் செய்யப்பட்டால்தான் அந்த இந்திராதிகளைக் குரித்துச் செய்ததாகுமென்று சொல்லப்படுகின்றன.

ருங்கடலாயுள்ள ஈறிலின்பமான நம்மை யடைந்து மீண்டுந் திரும்பாமலிரு க்கிறார்க ளென்றபடி.]

పత్రంపుష్పంఫలన్తోయం యోమేభక్త్యాప్రయచ్ఛతి।
తదహంభక్త్యుపహృత మశ్నామిప్రయతాత్మనః॥౨౬॥

(உசு) எளிதில் ஸம்பாதிக்கக்கூடிய திருத்துழாய் முதலிய பத்திர த்தையோ புஷ்பத்தையோ பழத்தையோ தண்ணீரையோ எதையாகிலும் எவனாகிலும் பக்தியோடு நமக்கு ஸமர்ப்பித்தானாகில், (அப்படி ஸமர்ப்பிக்கி றதே புருஷார்த்தமென்கிற பரிசுத்தநினைவோடும் பக்தியோடுங்கூடி ஸமர்ப் பித்த) அதை, நாம் (ஸர்வேசுவரனாய் ஸகலலோகத்தையும் படைத்துக்காத் து அழித்துக் விளையாடுமவனாய் ஆசைப்பட்டதெல்லாம் அடைந்தவனாய் நி னைத்ததைச்செய்து முடிக்கவல்லனாய் எல்லையில்லாத பெருமையும் எண்ணி க்கையுமற்ற கல்யாணகுணங்களுடையனாய் தனக்குத்தானே ஈறிலின்ப மான ஸ்வஸ்வரூபத்தில் இன்புற்றவனாயிருந்தோமாகிலும்) கிடையாதது கி டைத்தாற்போல் மிகவும் ஆதரவோடு அங்கீகரிக்கிறோம். [இப்படியே மோ க்ஷதர்மத்தில் యాఃక్రియాస్సంప్రయుక్తాస్స్యురేకాన్తగతబుద్ధిభిః। తాస్సర్వాశ్శిర సాదేవఃప్రతిగృహ్ణాతివైస్వయమ్॥ என்று சொல்லப்பட்டது.]

(அ-கை.) ஞானிகளான மஹாத்மாக்களின் பெருமை இவ்வண்ண மிரு க்கையாலே அர்ச்சுந! நீயும் ஞானியாய் முன்சொன்னபக்தியின் மிகுதியாலே மிகவும் வணக்கத்தையடைந்து நம்மைப்பார்துதல் நமக்குப் பணிசெய்தல் நம் மை அர்ச்சித்தல் நம்மை வணங்குதல் முதலியவைகளை யெப்போதுஞ் செய் துவந்து லௌகிகமாயும் வைதிகமாயுமுள்ள நித்திய நைமித்திகமான ஸகல கர்மங்களையும் இந்தவிதஞ் செய்யென்கிறார்.

యత్కరోషియదశ్నాసి యజ్జుహోషిదదాసియత్।
యత్తపస్యసికౌన్తేయతత్కురుష్వమదర్పణమ్॥౨౭॥

(உஎ) சரீரஸ்திதிக்காகச் செய்யும் லௌகிக கர்மமென்ன புசிக்கும் புசி ப்பென்ன இவைகளையும், ஹோமம் தாநம் தவம் முதலிய (நித்திய நைமித்தி க) வைதிககர்மங்களையும் இவையெல்லாவற்றையும் நம்மிடத்தில் ஸமர்ப்பித் துவிடு. [என்றால்:—யாகம் தாநம் முதலியவைகளால் ஆராதிக்கப்படுந் தேவ ர்களும் அந்த ஆராதநத்தைச்செய்து அதின் பலத்தைப் புசிக்கும் நீயும் நம க்கு ஆதீனமாயிருக்கையாலே யாவருக்கும் மேலான பதியாய் முதல் சர்த் தாவாயுள்ள நம்மிடத்தில் (ஆராதித்துப்பயன் பெருகின்ற) உன்னையும் (நீ யாராதிக்குந்) தேவர்களையும் ஸமர்ப்பித்துவிடு; [நீயும் அத்தேவர்களும் நமக்க டிமைசெய்யத் தக்கவர்க ளென்பதை மிகவும் பிரீதியோடு நினைத்திருவெ ன்றபடி.]

శుభాశుభఫలైరేవం మోక్ష్యసేకర్మబంధనైః।
సన్న్యాసయోగయుక్తాత్మావిముక్తోమాముపైష్యసి॥౨౮॥

(உஅ) இப்படி ஸந்நியாஸ யோகத்தோடுகூடி (அதாவது-உன்னை நம க்காளாகவும் கர்மத்தை நமக்கு ஆராதநமாகவும் நினைத்து, லௌகிகவைதிக கர்மங்களைச் செய்துவந்தாயாகில் நல்வினைப்பயனும் தீவினைப்பயனுமான பழைய கர்மமென்னுங் சட்டினின்று விடுபட்டு நம்மையே யடைந்து வாழ்வாய்.

(அ-கை.) நமக்கு லோகோத்திரமாய் இன்னமொரு ஸ்வபாவமுண்டு; அதைக் கேளென்கிறார்.

సమోహంసర్వభూతేషు నమేద్వేష్యోస్తినప్రియః।
యేభజన్తితుమాంభక్త్యా మయితేతేషుచాప్యహమ్॥౨౯॥

(உகூ) தேவர் திரியக்கு மனிதர் தாவரம் என்று (சாதியாலும் உருவத் தாலும் ஸ்வபாவத்தாலும் அறிவினாலும்) மிகவும் ஈனமாயும் ஏற்றமாயுமுள்ள ஸகல பூதங்களிலும் யாரேயாகிலுமாம், நம்மை ஆஸ்ரயிக்கும் விஷயத்தில் "இன்னான் உயர்ந்தவ னின்னான் தாழ்ந்தவன்" என்று நமக்கில்லை; எல்லோ ருக்கும் நாம்ஸமமாயிருக்கிறோம். ஜாதிமுதலான காரணத்தைக்கொண்டு ஒரு வனைப் பகைக்கவும் மாட்டோம்; ஒருவனை விரும்பவும்மாட்டோம். மற்றப்ப டி நம்பிரிவில் தரிக்கமாட்டாமல் நாமே கதியென்று எவர் நம்மைச் சேவிக்கி றார்களோ அவர்களை ஜாதி ஒழுக்கம் முதலியவைகளால் உயர்ந்தாலுந் தாழ்ந் தாலும் நமக்கு ஸமமான குணமுள்ளவர்போல நம்மிடத்திலேயே யிருத்துகி றோம். நாமும் அப்படியே நமக்கு மேற்பட்டவர்கள்போல் அவர்களிடத்தில் தானே யிருக்கிறோம்.

అపిచేత్సుదురాచారో భజతేమామనన్యభాక్।
సాధురేవసమన్తవ్య స్సమ్యగ్వ్యవసితోహిసః॥30॥

(௩0) அதிலும் அந்தந்த ஜாதியில் பிறந்தவர்களுக்கு எதைச்செய்யும்ப டியாயும் எதை நீக்கும்படியாயும் சொல்லப்பட்டிருக்கிறதோ அதைக் கடந்தா லும், யாவனொருவன் முன்சொன்னபடி நம்மைச் சேவிப்பதே பயனாயிருக்கி றானோ அவன், ஸ்ரீவைஷ்ணவசிகாமணியாக நினைத்து வெகுமதிக்கத்தக்க வனே. [என்றால் முன்சொன்னவர்களுக்குச் சமமானவனென்றபடி.] அதெ ப்படியென்றால் - அவன் செய்யும் வியவசாய மப்படிப்பட்டது. [அதாவது- "ஸகல ஜகத்துக்குங் காரணமாய் பரப்பிரம்மமான ஸ்ரீமந்நாராயணனே சராசரங்களுக்கு மிறைவன், எனக்குத் தெய்வம், என்னுசான், என்தோழன், எனக்கினியன்" என்றிப்படி ஒருவராலும் அடையப்படாத விவசாயத்தை யடைந்து அதற்கேற்றபடி யாதொரு பயனையும் விரும்பாமல் நம்மையே கதி யாய் அடைந்திருக்கிறான்.] [ஆகையால் இப்படிப்பட்ட விவசாயமும் அதற் கேற்ற செயலுமாயிருக்குமவன், அற்ப ஆசாரத்தைக் கைவிட்டானென்று அதற்காக அவனை ஆதரிக்காமலிருக்கப்போகாது; மற்றப்படி வெகுமதிக்க த்தக்கதென்று திருவுள்ளம்.]

(அ-கை.) நல்லது, నావిరతో దుశ్చరితాన్నాశాన్తో నాసమాహితః । నాశాన్తమానసో వాపి ప్రజ్ఞానేనైనమాప్నుయాత్॥ என்று சுருதி சொல்லுகிறபடி ஆசாரத்தில்தவறிறுல் மென்மேலும் இவன் எம்பெருமானைச் சேவிப்பதற்குத் தடையாகுமே யென்றுல் அருளிச்செய்கிருர்.

క్షిప్రం భవతి ధర్మాత్మా శశ్వచ్ఛాన్తిం నిగచ్ఛతి।
కౌన్తేయ ప్రతిజానీహి న మే భక్తః ప్రణశ్యతి॥ ౩౧॥

(௩க) நம்மிடத்தில் பிரீதியால் நம்மை யடைந்தவன் பாவத்தை யொழிக்கின்றமையால் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் வேரோடுகளைந்து *தர்மாத்மாவாய் விடுகிருன். [என்றுல் யாதொருவிரோதமுமின்றி நம்மை யடையவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு அதனுல் நம்மை யடைவதற்கு விரோதமான துராசாரத்தினின்று நீங்குகிருன்.] ஓ! குந்திபுத்திர! இவ்விஷயத்தில் நீயே பிரதிக்ஞை செய்யலாம். நம்பக்தியிலிழிந்தவன் விரோதமான நடவடிக்கையைச்செய்துவந்த போதிலும் கெடுதியடையமாட்டான். மற்றப்படி பக்தியின் மஹிமையால் ஸகலமான விரோதிகளையும் போக்கடித்து எந்நாளும் துராசாரத்தினின்று விலகினவனுய் விரைவில் பரிபூர்ணபக்தியை யடைவான்.

మాం హి పార్థ వ్యపాశ్రిత్య యేఽపి స్యుః పాపయోనయః।
స్త్రియో వైశ్యాస్తథా శూద్రాస్తేఽపి యాన్తి పరాం గతిమ్॥ ౩౨॥

కిం పునర్బ్రాహ్మణాః పుణ్యా భక్తా రాజర్షయస్తథా।
అనిత్యమసుఖం లోకమిమం ప్రాప్య భజస్వ మామ్॥ ౩౩॥

(௩உ-௩௩) ஸ்திரீகள் வைசியர் சூத்திரர் இன்னுமிப்படி பாவஜந்மமெடுத்தவர் யாரேயாகிலும் நம்மை ஆச்ரயித்தாராகில் உத்தமமானகதியை யடைவார்கள். அப்படியிருக்க பிராம்மணரும் ராஜரிஷிகளுமான புண்ணிய ஜந்மாக்கள் பக்திபண்ணுர்களாகில் கேட்கவேண்டுமோ? ஆகையால் ராஜரிஷியான நீ, அர்ச்சுந ! அசாசுவதமாய் தாபத்திரயத்தால் மூடப்பட்டுச் சிறிதும் இன்பமற்றதாயிருக்கு மிவ்வுலகத்தி லிருந்தபடியே நம்மை ஸேவிக்கப்பார்.

(அ-கை.) பக்தியின் ஸ்வரூபத்தை யருளிச்செய்கிருர்.

మన్మనా భవ మద్భక్తో మద్యాజీ మాం నమస్కురు।
మామేవైష్యసి యుక్త్వైవమాత్మానం మత్పరాయణః॥ ౩౪॥

(௩ச) அர்ச்சுந ! எப்பொழுதும் நம்மிடத்தில் தானே மனதைவை. அதாவது:—ஸர்வேசுவரனுய், ஸகல தோஷங்களுக்கு மெதிரான கல்யாணமே ஸ்வரூபமாய், ஸர்வக்ஞனுய், ஸத்தியஸங்கல்பனுய் ஸகலஜகத்துக்கும்

---

* இதைத்தான் ధర్మస్యాస్య పరన్తప என்று ஆரம்பத்தில் தர்மசப்தத்தாலருளிச் செய்தார்.

முக்கியகாரணனாய், பரப்பிரம்மமாய், புருஷோத்தமனாய், தாமரையிதழ் போல் அமலங்களான திருக்கண்களுடையனாய், தெளிந்த நீருண்டமேகம் போன்றவனாய், ஆயிரம் சூரியர்கள் ஒரேதடவையாய்த் தோன்றினாற்போல் ஒளிர்கின்றவனாய்,லாவண்ணிய மென்னும் அமுதவெள்ளத்துக்குக் கடலாய் நீண்டு பருத்துள்ள நான்கு திருத்தோள்களுடையனாய்,மிக்வும் பிரகாசமான பீதாம்பரமுடுத்தவனாய்,அதி நிர்மலமான கிரீடம், மகரகுண்டலம், ஹாரம், தோள்வளை, கடகம் முதலிய ஆபரணங்களா லலங்கரிக்கப்பட்டுள்ளவனாய், அபாரமான கருணை,தண்ணளி,அழகு,இனிமை, அடக்கம், வண்மை முதலிய குணங்களுக்குப்பெருங்கடலாய்,பிராணிகளிடத்தில் யாதொருவிசேஷமுமில் லாமலிருக்கச்செய்தேஅவை யாவைக்கும் புகலிடமாய்,ஸர்வஸ்வாமியாய்இரு க்கும் நம்மிடத்தில் தைலத்தாரைபோல்இடைவிடாதசிந்தையைச்செய். அச் சிந்தையும் நம்மிடத்தில் மிகுந்தபிரீதியுடன் கூடியிருக்கட்டும்;அப்படி நம்மை யநுபவித்து, ஈறிலின்பமான அவ்வநுபவத்தால் நம்மை * ஆராதிப்பதே தொழிலாயிரு. [இதனால் நம்மை யநுபவிப்பதிலுண்டான பிரீதிக்குப்போக் குவீடாக நமது கைங்கரியமே தொழிலாகும்படி நம்மிடத்தில் மனம்வையெ ன்றதாயிற்று.] இப்படி நமக்கு எல்லாவடிமைகளும் செய்வதோடு அந்தரா த்மாவான நம்மிடத்தில் மிகுதியும் வணக்கத்தோடு கூடியிரு; அதுவுமின்றி நம்மைப்பிரிந்தால் தரிக்கமாட்டாதபடி நாமே கதியாயிரு; இப்படி எல்லையி லின்பப் பெருக்கான நம் அநுபவத்திற்கு யோக்கியமாம்படி மனதைத்திருத் தினையாகில் பிறகு நம்மையேயடைவாய். [என்றால்-இப்படிப்பட்ட மனதைக் கொண்டு நம்மைத்தியாநஞ்செய்து நம்மை அநுபவித்து நம்மை யாராதித்து வணங்கி நாமே கதியா யிருந்தாயாகில் நம்மையே யடைவாயென்று தாத்ப ரியம்.]

[ஆகவிப்படி (சரீரத்தைக் காப்பதற்காகச்செய்யும்) லௌகிகக் கரும ங்களும், (நித்திய நைமித்திகங்களான) வைதிககர்மங்களும் நம்பிரீதிக்காக (நமக்கடிமையாயிருக்கிற) உன்னைக்கொண்டுநம்மால்செய்விக்கப்பட்டனவெ ன்று நினைத்துச் செய்தவனாய், எப்போதும் நம்விஷத்தில் கீர்த்தநம்முதலிய வைகளைச் செய்துகொண்டு, நம்மாலாளப்படு மிவ்வுலகுக்கெல்லாம் நமக்கா ட்பட்டிருக்கையே ஸ்வரூபமென்று நினைப்பதோடு மிகவும் இனியவைகளா னநங்குணங்களையும் சிந்தித்துக்கொண்டு நாடோறும் கீழ்ச்சொன்னபடி இவ் வுபாஸநத்தைச்செய்து வந்தாயாகில் நம்மையே யடைவாய் என்றருளிச் செ ய்தாராயிற்று.]

ஸ்ரீபகவத்ராமநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,
ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

* ஆராதநமாவது - பரிபூர்ணமான அடிமைத்தொழில். அதாவது ஔபசாரிகம், (அர்க்கியம், பாத்தியம்) ஸாம்ஸ்பர்சிகம், (திருமாலை முதலிய ன) ஆப்யவஹாரிகம், (அன்னம் தண்ணீர்முதலியன)இவைமுதலிய வெல்லா ப்போகங்களையுங் கொடுத்தல்.

ஸ்ரீ:.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# பத்தாவது அத்யாயம்.

அவதாரிகை.

பக்தியோகம் ஸாங்கமாக விதிக்கப்பட்டது. இப்பொழுது பக்தியுண்டாவதற்காகவும், அது வளருவதற்காகவும், எம்பெருமானுடைய நிகரற்ற ஐசுவரியம்முதலிய கல்யாண குணத்தொகையின் முடிவின்மையும், ஜகமெல்லாம் அவனுக்குச் சரீரமாயிருக்கையாலே அவனுருவாய் அவன் ஏவச்செல்லும்படியா யிருக்கின்றமையும் விஸ்தரித்துச் சொல்லப்படுகின்றன.

శ్రీభగవానువాచ॥ భూయఏవమహాబాహో శృణుమేపరమంవచః।
యత్తేహంప్రియమాణాయ వక్ష్యామిహితకామ్యయా॥౧॥

(க) பார்த்த! நம் மஹிமையைக்கேட்டு ஸந்தோஷிக்கின்ற உனக்கு நம்விஷயத்தில் பக்திபிறந்து வளரும்படி உனக்கு இதஞ்செய்யவேண்டி மறுபடியும் நம்மஹிமையையே விளக்குவதான சிறந்ததொரு வார்த்தை சொல்லுகிறோம். இதைக் கவலையில்லாத மனதோடு கேள்.

నమేవిదుస్సురగణాః ప్రభవంనమహర్షయః।
అహమాదిర్హిదేవానాం మహర్షీణాంచసర్వశః॥ ౨॥

(உ) தேவகணங்களும் மஹரிஷிகளும் புலன்களுக்கெட்டாத விஷயங்களைப் பார்க்கக் கூடியவராய் மிகுந்த அறிவுடையரா யிருந்தாராகிலும் நம்முடைய நாமம் கருமம் ஸ்வரூபம் ஸ்வபாவம் முதலியவைகளை அறியமாட்டார்கள். ஏனென்றால்:—அத்தேவாதிகளுக்கெல்லாம் நாம் ஸகலவிதத்திலும் ஆதியாயிருக்கிறோம் [என்றால்:—நாம் ஆதியாகையால் அவாளுடைய தேவத்தன்மைக்கும் ரிஷித்தன்மைக்குங் காரணமான புண்ணியத்துக்குத் தக்கபடி அவாளுக்கு நாம் கொடுத்திருக்கு மறிவு கொஞ்சம்; அதைக்கொண்டு அவர்கள் நமது அளவற்ற ஸ்வரூபாதிகளை யுள்ளபடியே யெப்படி யறியக்கூடும்? என்றபடி]

(அ-கை.) இப்படி தேவாதிகளாலு மறியப்போகாத தம்மைஉள்ளபடியறிந்தால் அது பக்தியுண்டாவதற்கு விரோதியான பாவத்தைபோக்குமென்கிறார்.

యోమామజమనాదించ వేత్తిలోకమహేశ్వరమ్।
అసమ్మూఢస్సమర్త్యేషు సర్వపాపైఃప్రముచ్యతే॥3॥

(ங) நாம் பிறப்பிலியென்றும் (அதாவது:—விகாரப்படுகின்றஅசேதநமென்ன, அத்தோடு கலந்திருக்கையாகிற பிறப்புடன்கூடிய ஸம்ஸாரி சேதநர்களென்னஇவர்களைக்காட்டிலும்வேறுபட்டவனென்றும்) அநாதியென்றும் (அதாவது:—ஹேயமானப் பிரகிருதியோடு முற்காலத்தில் கலந்திருந்த முக்

நாத்மாக்களைக் காட்டிலும் * வேறுபட்டவனென்றும்) லோகேசுவரர்களா னப் பிரம்மாதிகளுக்குமீசுவரனென்றும் இப்படி $மூடத்தன்மையற்றுமனித ருக்குள் எவனொருவன் அறிகிருனே அவன் நம் பக்திக்கு விரோதமான ஸகலபாவங்களினின்றும் விடுபடுவான்.

[என்றால்:—'உலகத்தில் அரசன் மற்றமனிதர்களிலொருவனு யிருக்க ச்செய்தே சில கர்மவிசேஷத்தால் அம்மனிதருக்கிறைவனுகிருன்; அப்படி தான் தேவேந்திரனும், அண்டாதிபதியும், அணிமைமுதலிய ஐசுவரியத்தை யடைந்த மற்றவரும். ஆனால் இந்த லோகமஹேசுவரனே! காரியம் காரண மென்றிரண்டு நிலைபொருந்திய அசேதநமென்ன, ஸம்ஸாரிகள் முக்தர்களெ ன்கிற சேதநர்களென்ன, இவர்களெல்லாரையுங்காட்டில் அளவிறந்த கல்லி யாண குணங்களுக்கு இருப்பிடமாய் ஆள்வதே ஸ்வபாவனுய்வேறுபட்டிரு க்கிருன்' என்றிப்படிஎவன் நம்மை யறிகிருனே அவன் ஸகல பாவங்களினி ன்றும் விடுபடுகிருனு னென்றபடி.]

(அ-கை.) இப்படி தம் ஸ்வபாவத்தைச் சிந்தை செய்வதனுல் (பக்தி யுண்டாகாமலிருக்கும்படி விரோதிக்கின்ற) பாவங்கள் நசிக்குமென்றும், விரோதமொழிந்ததாகில் தன்னடையே பக்தியுண்டாமென்றும் அருளிச்செ ய்து, தமது ஐசுவரியத்தையும் கல்லியாண குணங்களின் விஸ்தாரத்தையும் சிந்திப்பதால் அந்தபக்தி விருத்தியடையுமென்பதை யருளுகிருர்.

బుద్ధిర్జ్ఞానమసమ్మోహః క్షమాసత్యన్దమశ్శమః।
సుఖందుఃఖంభవోభావో భయంచాభయ మేవచ॥౪॥

అహింసాసమతాతుష్టి స్తపోదానంయశోఽయశః।
భవన్తిభావాభూతానాం మత్తఏవపృథగ్విధాః॥౫॥

(ச-ரு) புத்தி (நிரூபிக்கும்படி மனதுக்குண்டான திறமை) ஞாநம் (சித் து அசித்துவிஷயமாய் உண்டாகும் நிச்சயம்)அஸம்மோஹம் (சிப்பியைக்கண் டு இது வெள்ளியைச் சேர்ந்ததென்று பிரமித்தவன், பிறகுஇது வெள்ளியை ச் சேர்ந்ததல்லவென்று அந்நினைவையொழிக்கை) பொறுமை (மனதிற்கு வி காரமுண்டாகும்படியான தருணத்தில் விகாரமடையாமலிருக்கை) ஸத்தியம் (தான்கண்டது கண்டபடியே பிராணிகளுக்கு * இதமாகப் பேசுதல்) தமம் புறக்கரணங்களை அநர்த்தங்களிற் செல்லவொட்டாமல்தகைவது) சமம் (அந்த ஃகரணத்தை யப்படிதகைவது) சுகம் (தனக்கு இஷ்டமாய் அநுபவிப்பது)

---

* నిరవద్యం என்று ஓதுகிறபடியே ஈசுவரனுக்கு ஒருக்காலும் ஹேய ஸம்பந்தமில்லாமையாலே முக்தஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறுபாடுசொல் லுகிறது.

$ மூடத்தன்மை-எம்பெருமானை மற்றவர்களிலொருவனுக நினைக்கை.

* இங்கே மனதின் செயலைச்சொல்லுகிற விடமாகையால் ஹிதவச நத்துக்குத் தகுந்த நினைவைச் சொல்லுகிறது.

துக்கம் (தனக்கு அநிஷ்டமாய் அநுபவிப்பது,) பவம் (விருத்தி; அதாவது:— இஷ்டத்தை அநுபவிப்பதால் மனதுக்குண்டாகும் கிளர்ச்சி) அபாவம் (அநிஷ்டத்தை யநுபவிப்பதால் மனதுக்குண்டாகும் இரக்கம்) பயம் (துக்கமுண்டாவதற்குக் காரணத்தைக் காண்பதால் வரும் துக்கம்) அபயம் (அந்த பயமில்லாமை) அஹிம்ஸை (பிறனுடைய துயரத்துக்கு ஆளாகாமை) ஸமதை (தான், தனது இஷ்டன், தன் விரோதி, யாவரிடத்திலும் நன்மைதீமைகளில் ஒரு மனதாயிருக்கை) துஷ்டி (ஆத்மாக்களையெல்லாங்கண்டு ஸந்தோஷித்தல்) தவம் சாஸ்திரத்தில் சொன்னபடி போகத்தைச் சுருக்குகையாகிற காயக்லேசம்) தாநம் (தான் புசிப்பதைப் பிறருக்களித்தல்) கீர்த்தி (குணமுடையவனென்கிற பிரஸித்தி) அபகீர்த்தி (குணஹீநனென்கிற சொல்) இவைமுதலிய பிராணிகளின் மநோவியாபாரங்களெல்லாம் நம் ஸங்கல்பத்தாலேயே உண்டாகின்றன.

(அ-கை.) பிராணிகளின் ஸிருஷ்டி ஸ்திதிகளுக்குப்பிரவர்த்தகர்களாயிருப்பவர்களின் பிரவர்த்தியும் நமது ஸங்கல்பா தீனந்தானென்கிறார்.

మహర్షయస్సప్తపూర్వే చత్వారో మనవస్తథా।
మద్భావా మానసా జాతా యేషాం లోక ఇమాః ప్రజాః॥௬॥

(ஸு) அர்ச்சுந! சென்ற மனுவந்தரத்தில் பிருகுமுதலான ஸப்தரிஷிகள் நித்திய சிருஷ்டிக்காகப் பிரமனுடைய மனதிலுண்டானார்களே அவர்களும், நித்திய ஸ்த்தியைப் பிரவிருத்திப் பிக்கைக்காக ஏர்ப்பட்டஸாவர்ணிகரென்கிற நான்குமநுக்களும், நம்முடைய நினைவின்படி யிருப்பவர்கள். அப்படிப்பட்ட அவர்களுடைய ஸந்தாநமயமாயுள்ள இவ்வுலகத்திலிருக்கும் பிரஜைகள்யாவும் பிரளயம் உண்டாகிறவரையில் க்ஷணந்தோறும் ஸந்தாநத்தையுண்டுபண்ணி வளர்த்து வருகின்றன.

ఏతాం విభూతిం యోగం చ మమ యో వేత్తి తత్త్వతః।
సోఽవికంపేన యోగేన యుజ్యతే నాత్ర సంశయః॥௭॥

(எ) இப்படி யெல்லாருடைய உத்பத்தியும் ஸ்திதியும் பிரவர்த்தியும் நமது ஸங்கல்பாதீந மென்கிற இந்த நம் ஐசுவரியத்தையும் நம்முடையகல்லியாணகுணங்களுடைமையையும் எவன் உள்ளபடியறிகிறானோ அவன் சலியாத பக்தியையடைந்து வாழ்வான். இதில்ஸம்சயமில்லை. [என்றால் - நமது ஐசுவரியத்தையும் கல்லியாண குணத்தையும் அறிந்தால் அது பக்தியோகத்தை வளர்க்குமென்கிற விஷயத்தை நீயே பார்க்கப்போகிறாயென்று திருவுள்ளம்.]

(அ-கை.) ஐசுவரியத்தை யறிந்தபின் பக்தியானது, பக்குவமாகும் படியை யருளிச்செய்கிறார்.

అహం సర్వస్య ప్రభవో మత్తస్సర్వం ప్రవర్తతే।
ఇతి మత్వా భజన్తే మాం బుధా భావసమన్వితాః॥௮॥

(அ) சித்தும் அசித்துமாய் விசித்திரமாயுள்ள இவ்வுலகத்துக்கெல்லாம் நானே உத்பத்தி காரணமென்றும் இவை நாம்மாலேயே பிரவர்த்திக்கின்றனவென்று மானபின்பு நிகரற்ற ஐசுவரியமும், ஸௌந்தரியம் முதலிய கல்யாண குணத்தொகையும், நமக்கு ஸஹஜந்தானென்று நினைத்து ஞானிகளாயிருப்பார் நலமான தாத்பரியத்தோடுகூடி ஸகல கல்யாண குணநிதியான வென்னை ஸேவிக்கிறார்கள்.

(அ-கை.) ஸேவிக்கும்படியை யருளிச்செய்கிறார்.

మచ్చిత్తామద్గతప్రాణా బోధయన్తఃపరస్పరమ్।
కథయన్తశ్చమాంనిత్యం తుష్యన్తిచరమన్తిచ॥౯॥

(௯) சித்தத்தை நமக்கென்றே பறிகொடுத்து, அப்படியே நம்மைப் பிரிந்தால் தரிக்கமாட்டாமல் பிராணனையும் நம்மாதீநம்செய்து, தாந்தாம் அநுபவித்த நம்முடைய குணங்களை யெடுத்து ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு அப்படியே நாம் செய்த திவ்விய சேஷ்டிதங்களையு மெடுத்துப் பேசிக்கொண்டு ஸந்தோஷித்து ஆநந்திக்கிறார்கள். [சொல்லும்போது இனியதாய் அதுவே ப்ரயோஜநமாயிருக்கையாலே சொல்லுமவர்களும், கேட்டபோது செவிக்கினியதாயிருக்கையாலே கேட்பவர்களும், ஸந்தோஷிக்கிறார்களென்றபடி.]

తేషాంసతతయుక్తానాం భజతాంప్రీతిపూర్వకమ్।
దదామిబుద్ధియోగన్తం యేనమాముపయాన్తితే॥౧౦॥

(௧௦) அப்படிப்பட்ட அவர்கள் நம்மோடு எப்போதுஞ் சேர்ந்திருக்கவேண்டுமென்று நம்மைச் சேவிக்கிறபடியால் அவர்களுக்கு அப்படிப்பட்ட புத்தி விசேஷத்தை (அதாவது பக்திரூபமாய் பக்குவமான ஞாந விசேஷத்தை) நாம் பிரீதியுடன் கொடுக்கிறோம். அதைக்கொண்டு அவர்கள் நம்மையடைகிறார்கள்.

తేషామేవానుకమ్పార్థ మహమజ్ఞానజన్తమః।
నాశయామ్యాత్మభావస్థో జ్ఞానదీపేనభాస్వతా॥౧౧॥

(௧௧) மேலும் அவர்களை அநுக்கிரஹிப்பதற்காகவே நாம் அவர்களுள்ளத்திலிருந்து நம்முடைய கல்யாணகுணங்களைப் பிரகாசப்படுத்திக்கொண்டு, அவர்கள் நம்மை யறிவதென்கிற பிரகாசமான தீபத்தாலே (அக்ஞாநத்தாலுண்டானதாய் நம்மை யொழிந்த மற்ற விஷயங்களைக்கண்டால் விடமாட்டாததாய் முன்பழகியதாயுள்ள) கலக்கத்தைப் போக்கடிக்கிறோம்.]

(அ-கை.) இப்படி ஸகல வஸ்துக்களிலும் வேறுபட்டு எம்பெருமானுக்கே உரியனவாய் கேட்பவர்களின் செவிக்கு மிகவு மினியவையாயுள்ள திருக்கல்யாணகுணங்களையும் அவனுடைய ஐசுவரியச்சிறப்பையுங் கேட்டு அர்ச்சுநன் அதை விஸ்தாரமாய்க் கேட்கவேண்டுமென்கிற அவாவினால் பிரசிநம் பண்ணுகிறான்.

అర్జునఉవాచ॥ పరంబ్రహ్మపరంధామ పవిత్రంపరమంభవాన్॥౧౨॥

(௧௧௨) அஹோ ஸ்வாமி! * పరంబ్రహ్మ என்றும், † పరంధామ என்றும், $ పరమం పవిత్రం என்றும் சுருதிகள் யாரைச் சொல்லுகின்றனவோ அந்த பகவான் தேவரீரன்றோ?

పురుషంశాశ్వతందివ్య మాదిదేవమజంవిభుమ్॥౧౨॥
ఆహుస్త్వామృషయస్సర్వే దేవర్షిర్నారద స్తథా।
అసితోదేవలోవ్యాస స్స్వయంచైవబ్రవీషిమే॥౧౩॥

(௧௨-௧௩) பரமானதத்துவம் இதென்றும் அவரமானதத்துவம் இதென்றும் உள்ளபடியே யறியவல்லரானவெல்லாரிஷிகளும், தேவரீரைத் திவ்ய புருஷனென்றும் ஆதிதேவனென்றும் பிறப்பில்லாதவனென்றும் விபுவாய் எங்கும் பரந்தவனென்றுஞ் சொல்லுகிறார்கள். அப்படியே தேவரிஷியான நாரதரும் அஸிதரும் தேவலரும் வியாஸரும் ¶ சொன்னார்கள். தேவரீரும் அப்படியே § அருளிச்செய்தது.

---

*పరంబ్రహ్మ என்கிற சுருதிகள்:—యతోవాఇమాని భూతానిజాయన్తే యేన జాతాని జీవన్తి యత్ప్రయ న్త్యభిసంవిశన్తి; తద్విజిజ్ఞాసస్వ తద్బ్రహ్మ॥ బ్రహ్మవిదాప్నోతిపరమ్॥ సయోహవైతత్పరంబ్రహ్మవేద బ్రహ్మైవభవతి॥ இத்தியாதிகள்.

† పరంధామ (அதாவது పరఞ్జ్యోతిః) என்கிற சுருதிகளோ! అథయదతః పరోదివోజ్యోతిర్దీప్యతే॥ పరఞ్జ్యోతి రుపసమ్పద్య స్వేనరూపేణాభి నిష్పద్యతే॥ తందేవాజ్యోతిషాం జ్యోతిః॥ இத்தியாதிகள்.

$ పరమం పవిత్రం (அதாவது நினைப்பவர்களின் பாவத்தைக் கிட்டவொட்டாமற் போக்கடிப்பது.) இப்படிசொல்லுகிறசுருதிகளோ! యథాపుష్కరపలాశ ఆపోనశ్లిష్యన్త ఏవమేవంవిది పాపంకర్మనశ్లిష్యతే॥ తద్యథైషీకాతూలమగ్నౌప్రోతం ప్రదూయేతైవం హాస్యసర్వేపాప్మానః ప్రదూయన్తే இத்தியாதிகள். నారాయణపరంబ్రహ్మ తత్వన్నారాయణః పరః.

¶ ఏషనారాయణశ్శ్రీమాన్ క్షీరార్ణవనికేతనః। నాగపర్యఙ్కముత్సృజ్యహ్యాగతోమధురాంపురీమ్॥ పుణ్యాద్వారవతీతత్రయత్రాస్తే మధుసూదనః।సాక్షాద్దేవఃపురాణోసౌసహిధర్మస్సనాతనః॥ యేచవేదవిదోవిప్రా యేచాధ్యాత్మవిదోజనాః। తేవదన్తిమహాత్మానంకృష్ణంధర్మంసనాతనమ్॥ పవిత్రాణాంహిగోవిన్దః పవిత్రంపరముచ్యతే। పుణ్యానామపిపుణ్యోసౌమఙ్గళానాఞ్చమఙ్గళమ్। త్రైలోక్యంపుణ్డరీకాక్షోదేవదేవస్సనాతనః। ఆస్తేహరిరచిన్త్యాత్మాత త్రైవమధుసూదనః। என்றும், அப்படியே యత్రనారాయణోదేవః పరమాత్మాసనాతనః। తత్రకృత్స్నంజగత్పార్థ తీర్థాన్యాయతనానిచ॥ తత్పుణ్యం తత్పరంబ్రహ్మతత్తీర్థంతత్తపోవనమ్। తత్రదేవర్షయస్సిద్ధాస్సర్వేచైవతపోధనాః॥ఆదిదేవోమహాయోగీ యత్రాస్తేమధుసూదనః।పుణ్యానామపితత్పుణ్యం మాభూత్తేసంశయోఽత్రవై॥కృష్ణఏవహిలోకానాముత్పత్తిరపిచావ్యయః। కృష్ణస్యహికృతేభూతమిదంవిశ్వంచరాచరమ్ என்றும் ருஷிகள் சொன்னார்கள்.

§ భూమిరాపోనలోవాయుఃఖమ్మనోబుద్ధిరేవచ।అహఙ్కార ఇతీయమ్మేభిన్నాప్రకృతిరష్టధా। என்று தொடங்கி అహంసర్వస్యప్రభవోమత్తస్సర్వంప్రవర్తతే என்றுமளவாகக் கண்ணனு மருளிச்செய்தார்.

సర్వమేతదృతంమన్యే యన్మాంవదసికేశవ।
నహితేభగవన్ వ్యక్తిం విదుర్దేవానదానవాః॥౧౪॥

(கச) இப்பொழுது அடியேனைக்குறித்து அருளிச்செய்த தேவரீருடைய கல்யாணகுணங்களும் ஐசுவரியங்களும் மற்றுமெல்லாம் வாஸ்தவமே (யல்லது புகழுக்காகச் சொன்னதல்ல)என்றுநினைக்கிறேன்; ஆகையால், ஞாநம் சக்தி பலம் ஐசுவரியம் வீரியம் தேஜஸு இவைகளுக்கெல்லாம் நிதியாகிய ஓ பகவானே! தேவரீருடைய வியக்தியை (அதாவது வைபவப் பிரகாரத்தை) தேவர்களோ ராக்ஷஸர்களோ ஒருவருமறியார்கள்; [எனமுல்-அவர்களுடைய ஞாநம் இவ்வளவென்கிற எல்லைக்குள் அகப்பட்டமையால் அறியார்களென்றபடி.]

స్వయమేవాత్మనాత్మానం వేత్థత్వంపురుషోత్తమ।
భూతభావనభూతేశ దేవదేవజగత్పతే॥౧౫॥

(கரு) ஹே புருஷோத்தம! ஸகலப்ராணிகளையு முண்டுபண்ணுகிற காரணப்பொருளே! ஸகல பூதங்களையும் ஆள்பவனே! தேவர்களுக்கெல்லாம் தேவனே! (அதாவது ஸௌந்தரியம் முதலிய கல்யாணகுணங்களில் தேவர்கள், மனுஷிய மிருக பக்ஷியாதிகளை விஞ்சியிருப்பதுபோல் அத்தேவர்களையெல்லாம் அந்தந்த குணங்களாலே விஞ்சியிருப்பவனே) ஓ ஜகதீச! தேவரீருடைய பெருமையைத் தேவரீர் அறிய வேண்டுமே யல்லது மற்றவராலாகாது.

వక్తుమర్హస్యశేషేణ దివ్యాహ్యాత్మవిభూతయః।
యాభిర్విభూతిభిర్లోకానిమాంస్త్వంవ్యాప్యతిష్ఠసి॥౧౬॥

(கசு) ஆகையால் திவ்யங்களாய் தேவரீருக்கே உரியவைகளாயுள்ள விபூதிகளைத் தேவரீரே யருளிச்செய்யவேண்டும். அதாவது அநந்தமாயுள்ள எவ்வித ஆளுகைகளுடன்கூடி இவ்வுலகங்களை வியாபித்துக்கொண்டு ஆளுகிறீரோ அவைகளை யருளிச்செய்யவேண்டும்.

కథంవిద్యామహంయోగిం స్త్వాంసదాపరిచింతయన్।
కేషుకేషుచభావేషు చింత్యోసిభగవన్మయా॥౧౭॥

(கஎ) ஓ பகவானே! அடியேன் பக்தியோக நிஷ்டனாயிருந்து எப்போதும் சிந்திக்க யத்தனித்தேனாகில் தேவரீரை ஸகல கல்யாணகுண பரிபூர்ணராக எப்படி யறிவேன். முன்சொன்ன புத்தி ஞாநம் முதலிய பாவங்களைக் காட்டிலும் இன்னு மெந்தெந்த பாவங்களிலிருப்பவராகத் தேவரீரை சிந்திக்கலாம்.

విస్తరేణాత్మనోయోగం విభూతించజనార్దన।
భూయఃకథయతృప్తిర్హి శృణ్వతోనాస్తిమేఽమృతమ్॥౧౮॥

(கஅ) అహంసర్వస్య ప్రభవోమత్తస్సర్వం ప్రవర్తతేஎன்று சுருக்கமாயருளிச்செய்த சிருஷ்டிக்குந்திறமை முதலிய யோகத்தையும் ஐசுவரியத்தை

யும் ஆளுகையையும் மறுபடி விஸ்தரித்து அருளிச்செய்யவேண்டும். தேவரீர் அருளிச்செய்கின்ற தேவர் மஹிமையைக் கேட்கின்ற அடியேனுக்குத் திருப்தி யுண்டாகவில்லை யன்றோ! [என்றால் அடியேனுக்குண்டான திருப்தி தேவரீருக்கே தெரியுமென்று அபிப்பிராயம்.]

(அ-கை.) இப்படி சொன்ன அர்ச்சுநன் வார்த்தையைக்கேட்டு பகவானருளிச்செய்கிறார்.

శ్రీభగవానువాచ॥ హన్తతేకథయిష్యామి విభూతీరాత్మనశ్శుభాః।
ప్రాధాన్యతఃకురుశ్రేష్ఠ నాస్త్యన్తోవిస్తరస్యమే॥౧౯॥

(கக) நல்லதப்பா குருசிகாமணியே! அப்படியே சுபமாயுள்ள நம் § விபூதிகளில் சிறப்புற்றவைகளைச் சொல்லுகிறோம். விஸ்தரித்துச் சொல்வதென்றால் அளவில்லாமையாலே சொல்வதுங் கேட்பதும் ஸாத்தியமன்று.

(அ-கை.) அதில் ஸகலப்ராணிகளையும் முன்பு யோகசப்தத்தாலே சொல்லப்பட்ட பகவான் நியமிப்பதாவது பிரவர்த்திப்பிக்கிறது இந்த ஆளுகையை ஈசுவரன் ஆத்மாவாய் நின்று செய்கிறானென்றும் இது படைக்குந்தன்மை காக்குந்தன்மை அழிக்குந்தன்மையென்று மூவகையென்றுந் தெளிவாய் அருளிச்செய்கிறார்.

అహమాత్మాగుడాకేశ సర్వభూతాశయస్థితః।
అహమాదిశ్చమధ్యంచ భూతానామన్తఏవచ॥౨౦॥

(உ0) ஓ அர்ச்சுந! நான் எனக்குச் சரீரமாயுள்ள ஸகலப்பிராணிகளினுள்ளத்திலும் * ஆத்மாவாயிருக்கிறேன். இப்படிப்பட்ட நானே அவைகளுக்கு ஆதியும் மத்தியமும் அந்தமும் - [அஃதாவது உத்பத்தி ஸ்திதி லயங்களுக்கு நானே காரணமென்றபடி.]

---

§ விபூதியாவது ஆளப்படுவது. எப்படியெனில் - பிராணிகளின் புத்தி முதல் தனித்தனியாயுள்ள பாவங்களெல்லாம் தம்மிடத்தி னின்றுமே யுண்டாகின்றனவென்று சொல்லி இந்த என்விபூதியையும் யோகத்தையும் உள்ளபடியே எவன் அறிகிறானோ என்று சொல்லுகையாலே. அப்படியேயங்கு யோகசப்தத்தால் சொன்னது சிருஷ்டிக்குந்தன்மை முதலியனவென்றும் விபூதிசப்தத்தால் சொன்னது அவனால் ஏவப்படுந்தன்மையென்றும் மறுபடி అహంసర్వస్య இத்யாதியாற் சொல்லப்பட்டது.

* ஆத்மாவாவது - சரீரத்தை ஸகல விதத்தாலுந் தரிப்பதாய் ஆளுவதாய் சரீரத்துக்குப் பதியாயிருக்குமது. இப்படியே மேலே సర్వస్యచాహం హృదిసన్నివిష్టః మత్తస్స్మృతిర్జ్ఞానమపోహనంచ என்றும், ఈశ్వరస్సర్వభూతానాం హృద్దేశేఽర్జునతిష్ఠతి। భ్రామయన్ సర్వభూతానియన్త్రారూఢానిమాయయా என்றும் சொல்லப்போகிறார். ச்ருதியிலும் యస్ససర్వేషుభూతేషు తిష్ఠంత్సర్వేభ్యోభూతేభ్యోఽన్తరఃయంసర్వాణిభూతానినవిదుః యస్యసర్వాణిభూతానిశరీరం యస్సర్వాణి భూతాన్యన్తరోయమయతి ఏషతఆత్మాన్తర్యామ్యమృత என்றும் యఆత్మనితిష్ఠన్నాత్మనోన్తరోయమాత్మానవేదయస్య ఆత్మాశరీరం యఆత్మానమన్తరోయమయతి, సతఆత్మాన్తర్యామ్యమృతః என்றுஞ் சொல்லப்படுகின்றது.

(அ-கை.) இப்படி எம்பெருமான் தம்முடைய ஆளுகைக்குட்பட்ட எல்லாவற்றுள்ளுந் தாம் ஆத்மாவா யிருக்கிறதாகச் சொல்லி அதனுல் அந்தந்த வஸ்துக்களின்பெயரான சொற்களாலே தம்மைச் சொல்லலாமென்பதற்கு * காரணங்காட்டி இனி தம்மாலாளப்பட்ட அவ்வவைகளோடு தம்மைக் கூட்டி அந்தந்த சொற்களாலே சொல்லத் தொடங்குகிருர்.

ఆదిత్యానామహం విష్ణుర్జ్యోతిషాంరవిరంశుమాన్।
మరీచిర్మరుతామస్మి నక్షత్రాణామహంశశీ॥౨౧॥

(உக) ஆதித்தியர்கள் பன்னிருவரில் பன்னிரண்டாவதாகச் சொல்லப்பட்ட விஷ்ணுவென்பவர் நான். லோகத்தில் சோதியுள்ளவைகளில் (ஆதித்தியகணத்தைச் சேர்ந்த) இரவி நான். நக்ஷத்திரங்களில் அவைகளை யாள்கின்றசந்திரன் நான்.

వేదానాంసామవేదోస్మి దేవానామస్మి వాసవః।
ఇన్ద్రియాణాంమనశ్చాస్మి భూతానామస్మి చేతనా॥౨౨॥

(உஉ) இருக்கு யஜுஸ் ஸாமம் அதர்வணமென்கிற வேதங்களுள் சிறந்ததான ஸாமவேதம் நான். தேவர்களுக்குள் இந்திரன் நான். பதினொரு இந்திரியங்களுக்குள் சிறந்ததான மனது நான். பூதங்களெல்லாவற்றிற்கும் அறிவு நான்.

రుద్రాణాంశఙ్కరశ్చాస్మి విత్తేశోయక్షరక్షసామ్।
వసూనాంపావకశ్చాస్మి మేరుశ్శిఖరిణామహం॥౨౩॥

(உங) உருத்திரர்கள் பதினொருவரில் சங்கரன் நான். யக்ஷராக்ஷஸருக்குள் குபேரன் நான். அஷ்டவஸுக்களுக்குள் பாவகன் நான். கொடிமுடிகள் கூடிய பர்வதங்களுக்குள் மேருபர்வதம் நான்.

పురోధసాంచముఖ్యంమాం విద్ధిపార్థబృహస్పతిమ్।
సేనానీనామహంస్కన్ద స్సరసామస్మిసాగరః॥౨౪॥

---

* பகவான் ஸர்வபூதங்களுக்கும் ஆத்மாவா யிருந்தால்மாத்திரந்தான் ஸகல சப்தங்களும் அவனையே பொருளாகக்கொண்டு முடியும். எதுபோலெனில்-மனுஷியன் பக்ஷி விருக்ஷம் முதலிய வெல்லாச்சொற்களும் சரீரங்களைச்சொல்லாநிற்கச்செய்தே அந்தந்த ஆத்மாவைக்கொண்டு முடிகின்றனவல்லவா? அதுபோல் ஈசுவரன் ஆத்மாவா யிருக்கையானது எல்லாச்சொல்லுக்கும்பொருளாவதற்குக் காரணமென்றறிக. இவ்விஷயம் నతదస్తివినాయత్స్యాన్మయాభూతంచరాచరమ్ என்று தம்மையின்றி யொன்றுமில்லையென்று மேலே சொல்லுகையாலுந் தெரியவருகிறது. தம்மையின்றி யொன்றுமில்லையென்றுல் எல்லாந் தம்மாலாளப்பட்டிருக்கை. இவ்விஷயம் మత్తస్సర్వంప్రవర్తతే என்று தொடங்கும்போது சொல்லப்பட்டது.

మహర్షీణాంభృగురహం గిరామస్మ్యేకమక్షరమ్।
యజ్ఞానాంజపయజ్ఞోఽస్మి స్థావరాణాంహిమాలయః॥౨౫॥

(௨௪-௨௫) புரோஹிதருக்குள் முக்கியரான பிருஹஸ்பதி நான். ஸேநாபதிகளுக்குள் கந்தன் யான். குளங்களுக்குள் கடல் யான். மரீசிமுதலான மஹாரிஷிகளுக்குள் பிருகுமஹாரிஷி யான். பொருளைக் குறிக்குஞ் சொற்களுள் பிரணவமென்னு மொற்றையெழுத்து நான். யக்ஞங்களுக்குள் சிறந்த ஜபயக்ஞம் நான். பருப்பதமாயுள்ளவைகளில் இமயமலை நான்.

అశ్వత్థస్సర్వవృక్షాణాం దేవర్షీణాంచనారదః।
గన్ధర్వాణాంచిత్రరథ స్సిద్ధానాంకపిలోమునిః॥౨౬॥
ఉచ్చైశ్శ్రవసమశ్వానాం విద్ధిమామమృతోద్భవమ్।
ఐరావతంగజేన్ద్రాణాం నరాణాంచనరాధిపమ్॥౨౭॥

(௨௬-௨௭) விருக்ஷங்களுக்குள் பூஜ்யமான அரசமரம் நான். தேவரிஷிகளுக்குள் நாரதன் நான். கந்தர்வர்களுக்குள் சித்திரரதன் யான். ஸித்தர்களுக்குள் கபிலமுனியான், குதிரைகளுக்குள் பாற்கடலிற்பிறந்த உச்சைச்சிரவமென்னு மிந்திரன் குதிரை நான். திக்கஜங்களுள் ஐராவதம் நான். மனிதருக்குள் அரசன் யான்.

ఆయుధానామహంవజ్రం ధేనూనామస్మికామధుక్।
ప్రజనశ్చాస్మికన్దర్ప స్సర్పాణామస్మివాసుకిః॥౨౮॥
అనన్తశ్చాస్మినాగానాం వరుణోయాదసామహమ్।
పితౄణామర్యమాచాస్మి యమస్సంయమతామహమ్॥౨౯॥

(௨௮-௨௯) ஸாதாரணமான ஆயுதங்களுக்குள் யான் வஜ்ராயுதம். சுறக்கும் பசுக்களுக்குள் காமதேநுவென்னும் பசு யான். பிறப்புக்குக் காரணனான மன்மதனும் நான். ஒருதலைப்பாம்புகளுக்குள் வாசுகி நான். பலதலைப்பாம்புகளுள் யான் ஆதிசேஷன். ஜலசரங்களில் நான் வருணன். பித்ருக்களுக்குள் அரியமாவென்பவர் நான். தண்டிப்பவருள் வைவஸ்வதனென்னும் யமன் நான்.

ప్రహ్లాదశ్చాస్మిదైత్యానాం కాలఃకలయతామహమ్।
మృగాణాంచమృగేన్ద్రోఽహం వైనతేయశ్చపక్షిణామ్॥౩౦॥
పవనఃపవతామస్మి రామశ్శస్త్రభృతామహమ్।
ఝషాణాంమకరశ్చాస్మి స్రోతసామస్మిజాహ్నవీ॥౩౧॥

(௩௦-௩௧) தைத்தியருக்குள் யான் பிரஹ்லாதன். அளர்த்தங்தேடுமவர்களுள் மிருத்தியுநான், மிருகங்களுக்குள் யான் ஸிம்மம்; பக்ஷிகளுக்குள் யான் கருடன்; செல்கையே ஸ்வபாவமானவைகளுக்குள் யான் வாயு. அஸ்திரசஸ்திரங்களில் தேர்ந்தவர்களுக்குள் யான் இராமன். மத்ஸ்யங்களுக்குள் யான் முதலை. நதிகளுக்குள் யான் கங்கை.

సర్గాణామాదిరన్తశ్చ మధ్యంచైవాహమర్జున।
అధ్యాత్మవిద్యావిద్యానాంవాదః ప్రవదతామహమ్॥౩౨॥
అక్షరాణామకారోఽస్మి ద్వన్ద్వస్సామాసికస్యచ।
అహమేవాక్షయఃకాలః ధాతాహంవిశ్వతోముఖః॥౩౩॥

(௩௨-௩௩) அர்ச்சுந! சிருஷ்டிக்கப்படும் பதார்த்தங்களின் ஆதியும் மத்தியமும் அந்தமும் யானே. (அதாவது ஸகலப்பிராணிகளையும் ஆங்காங்கு சிருஷ்டிக்குமவர்களும் அப்படியே ஆங்காங்கு பரிபாலிக்குமவர்களும் நாசம் செய்யுமவர்களும் யானே என்றபடி.) வித்தைகளுக்குள் யான் வேதாந்தவித்தை; ஜல்பம் விதண்டை முதலிய வாதம் செய்வோர்களில் தத்வநிர்ணயம் செய்யத்தொடங்கிய வாதம் நான்; அக்ஷரங்களின் நடுவே అకారోవై సర్వావాక్ என்று சுருதியிற் சொன்னபடி எல்லா வெழுத்துகளுக்கும் முதற்காரணமான அகாரம் யான். ஸமாஸங்களுக்குள் யான் துவந்த்வ ஸமாஸம். கலைமுகூர்த்தம் முதலாயுள்ள அழிவற்ற காலமும் யானே. ஸகலப்பிராணிகளையும் சிருஷ்டிக்கும் நான்முகனும் யானே.

మృత్యుస్సర్వహరశ్చాహం ఉద్భవశ్చభవిష్యతామ్।
కీర్తిః శ్రీర్వాక్చనారీణాం స్మృతిర్మేధాధృతిఃక్షమా॥౩౪॥
బృహత్సామతథాసామ్నాం గాయత్రీఛందసామహం।
మాసానాంమార్గశీర్షోఽహం ఋతూనాంకుసుమాకరః॥౩౫॥

(௩௪-௩௫) ஸகலப்பிராணிகளையும் ஸம்ஹரிக்கின்ற இயமனும் யானே. இனி உண்டாகும் பதார்த்தங்களுக்கெல்லாம் உற்பத்தியும் யானே; பெண்களுக்குள் இலக்குமியும் கீர்த்தியும் வாக்கும் ஸ்மிருதியும் புத்தியும் திருதியு (தைரியமும்) க்ஷமையும் யானே. [இவைகளெல்லாம் எம்பெருமானுக்கே அஸாதாரணமான சக்திகள் என்றறிக.] ஸாமங்களுக்குள் யான் பெரிய ஸாமம்; சந்தஸுக்களுக்குள் யான் காயத்திரி; மாசங்களுக்குள் யான் மார்கழி; ருதுக்களுக்குள் பூக்குங் காலமான வஸந்தருது யான்.

ద్యూతంఛలయతామస్మి తేజస్తేజస్వినామహమ్।
జయోఽస్మివ్యవసాయోఽస్మి సత్త్వంసత్త్వవతామహమ్॥౩౬॥
వృష్ణీనాంవాసుదేవోఽస్మి పాండవానాంధనంజయః।
మునీనామప్యహంవ్యాసః కవీనాముశనాకవిః॥౩౭॥
దండోదమయతామస్మి నీతిరస్మిజిగీషతామ్।
మౌనంచైవాస్మిగుహ్యానాం జ్ఞానంజ్ఞానవతామహమ్॥౩౮॥

(௩௬-௩௭-௩௮) வஞ்சனையாக ஆடும் விளையாட்டுகளில்யான் சொக்கட்டான் முதலிய லக்ஷணங்கள் பொருந்திய சூதாக இருக்கிறேன். பலமுள்ளவைகளுக்குப் பலமாயும், ஜயிப்பவர்களுக்கு ஜயமாயும் உழைப்பவர்களுக்கு உழைப்பாயும் ஸாத்விகர்களுக்குப் பெரியமனதாயும் இருக்கிறேன்; விருஷ்ணி வம்சத்தாருக்குள் யான் வசுதேவன் மைந்தன்; பாண்டவர்களுக்குள் யா

ன் அர்ச்சுனன்; சிந்தைசெய்வதினாலே விஷயங்களை உள்ளபடி அறியவல்ல ரான ருஷிகளுக்குள் யான் வியாஸர். வித்வான்களுக்குள் யான் சுக்கிரன்; கட்டளையைத் தவிர்ந்தபேர்களைத் தண்டிக்கும் விஷயத்தில் யான் தண்டனை. ஜயம் கோருமவர்களுக்குள் ஜயிப்பதற்கு உபாயமான நீதியாகிறேன். மறைக்கவேண்டிய விஷயங்களில் யான் மௌனமா யிருக்கிறேன். அப்படியே ஞானவான்களுக்கு ஞானமாகவும் இருக்கிறேன்.

యచ్చాపిసర్వభూతానాం బీజంతదహమర్జున।
నతదస్తివినాయత్స్యాన్మయాభూతంచరాచరమ్॥౩౯॥

(௩௯) சகல பூதங்களுக்கும் எது பீஜமோ அதாவது காணப்படுவதும் காணப்படாததுமான இரண்டுவிதமாயுள்ள உற்பத்திகாரணம் எதுவோ அது யான்; பூதங்களுக்குள் ஒன்றாகிலும் அந்தராத்மாவாகிய என்னையொழியத் தரித்திருப்பது கிடையாது. எல்லாவஸ்துக்களும் எல்லாநிலைகளிலும் அந்தராத்மாவாயுள்ள நம்மோடுகூடியேயிருக்கும் [இதனால் எல்லாப்பொருள்களும் பகவத்ஸ்வரூபங்கள் என்று சொன்னதற்குக் காரணம், அவன் ஆத்மாவாயிருக்கைதானென்று வெளியிடப்பட்டது.]

నాన్తోఽస్తిమమదివ్యానాం విభూతీనాంపరన్తప।
ఏషతూద్దేశతఃప్రోక్తో విభూతేర్విస్తరోమయా॥౪౦॥

(௪0) எனது திவ்யங்களான இந்த விபூதிகளுக்கு முடிவுகிடையாது; அப்படி யிருக்க இப்பொழுது விவரித்ததோ வென்றால் சில உத்தேசங்களைக் கொண்டு சிறிது மாத்திரம் சுருக்கிச் சொல்லப்பட்டது.

యద్యద్విభూతిమత్సత్త్వం శ్రీమదూర్జితమేవవా।
తత్తదేవావగచ్ఛత్వం మమతేజోంశసమ్భవమ్॥౪౧॥

(௪௧) ஆளப்படும் தன்மையோடு கூடியதும் செல்வத்தோடுகூடியதும் நன்மைக்கிடமானதுமாய் எதெதுஉண்டோ அந்தப் பூதங்கள்யாவும் நமது ஆளுகை என்கிற சக்திவிசேஷத்தின் அற்பபாகத்தால் உண்டானவைகளென்றறி.

అథవాబహునైతేన కింజ్ఞాతేనతవార్జున।
విష్టభ్యాహమిదంకృత్స్న మేకాంశేనస్థితోజగత్॥౪౨॥

(௪௨) வாராய் அர்ச்சுனா! இவ்வளவுதூரம் சொல்வதென்ன! ஒருசொல்லாய்ச் சொல்லுகிறோம் இவ்வுலகெல்லாம் காரணமான நிலையிலும் காரியமானநிலையிலும் ஸ்தூலமாயும் ஸூக்ஷ்மமாயும் இருப்பதிலும் தரிப்பதிலும் பிரவிர்த்திப்பதிலும் எப்படியானால் நமது இச்சையைக் கடக்கமாட்டாதோ அப்படி, நமது மகிமையின் லக்ஷத்தி லொருபங்கினால் இதைத் தரித்துக்கொண்டிருக்கிறோம் [இப்படியே பராசரபகவானும் యస్యాయుతాయుతాంశాంశే విశ్వశక్తిరియంస్థితా என்று அருளிச்செய்தார்.]

ஸ்ரீ பகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,

பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ:

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# பதினோராவது அத்யாயம்.

## அவதாரிகை.

இப்படி பக்தியோகம் நிலைப்பதற்காகவும் அதுவளருவதற்காகவும் ஸகல வஸ்துக்களிலும் வேறுபட்டபகவான் தன்னுடைய அஸாதாரணமான கல்யாணகுணங்களோடுகூட ஸர்வவஸ்துக்களுக்கும் ஆத்மாவாயிருக்குந் தன்மையும், ஆனதுபற்றியே அவனைத்தவிர மற்றவையெல்லாம் அவனுக்குச் சரீரமாய் அவனிட்ட வழக்காயிருக்குந்தன்மையும் சொல்லப்பட்டன. இவற்றை எல்லாம் நேரே எம்பெருமானிடத்தில்கேட்டு இப்படிதானென்று நிச்சயித்து இப்படிப்பட்ட விலக்ஷண ஸ்வபாவத்தோடுகூடிய வெம்பெருமானைப் பிரத்தியக்ஷமாய்க் கண்டு அநுபவிக்க வேண்டுமென்கிற வாசையோடு அர்ச்சுனன் கேட்கிறான்.

అర్జునఉవాచ॥ మదనుగ్రహాయపరమం గుహ్యమధ్యాత్మసంజ్ఞితమ్।
యత్త్వయోక్తంవచస్తేన మోహోఽయంవిగతోమమ॥౧॥

(க) தேஹமே ஆத்மாவென்று பிரமித்திருக்கிற அடியேன்விஷயத்தில் கிருபைசெய்வதற்காகவே ஆத்மஸ்வரூபத்தைப்பற்றி யறியவேண்டும் பரமரஹஸ்யார்த்தத்தையு மருளிச்செய்தது; அதைக்கேட்டதினால் அடியேனுக்கு ஆத்மாவின்விஷயத்தில் உண்டாயிருந்த கலக்கங்களெல்லாமொழிந்தன.

భవాప్యయౌహిభూతానాం శ్రుతౌవిస్తరశోమయా।
త్వత్తఃకమలపత్రాక్ష మాహాత్మ్యమపిచావ్యయమ్॥౨॥

(உ) அஹோ கமலபத்திராக்ஷ! ஏழாவது அத்தியாயந்தொடங்கி பத்தாவதுஅத்தியாயம் வரையில் தேவரீரைத்தவிர மற்றப்பிராணிகளெல்லாம் பரமாத்துமாவான தேவரீரிடத்து நின்றுமே உண்டாய் லயிக்கின்றன வென்கிறவிஷயம் விஸ்தாரமாய்க் கேட்டேனன்றோ? தேவரீர் எந்நாளும் சேதநாசேதநரூபமான ஸகலவஸ்துக்களுக்கும் ஆதாரமாயிருக்குந்தன்மையையும் ஞானம் பலம் முதலிய ஸகல கல்யாணகுணங்களாலும் தேவரீரே மேலாயிருக்குந்தன்மையையும் ஸகலவஸ்துக்களுக்கும் ஆதாரமாயிருக்குந்தன்மையையும் இமைகொட்டுகிற தென்கிற அற்பப்பிரயத்தநமும் தேவரீருடைய ஆதீனம்என்கிற தேவரீருடைய மஹாத்மியத்தின்றன்மையையும் அப்படியே கேட்டேன்.

ఏవమేతద్యథాత్థత్వ మాత్మానంపరమేశ్వర।
ద్రష్టుమిచ్ఛామితేరూప మైశ్వరంపురుషోత్తమ॥3॥

(ங) ஹேபரமேசுவர! தேவரீரைப்பற்றி அருளிச்செய்ததெல்லாம் அறிந்துகொண்டேன். ஆஸ்ரிதாளிடத்தில்உண்டான வன்புக்குக்கடலாய் விளங்குகின்ற ஹேபுருஷோத்தம! யாவரையும் ஆளுந்தன்மையிலும் பரிபாலிக்

குந்தன்மையிலும் படைக்குந்தன்மையிலும் அழிக்குந்தன்மையிலும் தரிக்குந்தன்மையிலும் கல்யாணகுணங்களுக்கு இருப்பிடமாயிருக்குந் தன்மையிலும் மேன்மையிலும் எல்லாவற்றிலும் வேறுபட்டிருக்குந்தன்மையிலும் தேவரீர் எழுந்தருளியிருக்கும்படியைக் கண்ணாற்காணவேண்டுமென்று ஆசைப்படுகிறேன்.

మన్యసేయదితచ్ఛక్యంమయాద్రష్టుమితిప్రభో।
యోగేశ్వరతతోమేత్వందర్శయాత్మానమవ్యయమ్॥౪॥

(ச) இப்படி எல்லாவற்றையும் படைத்தும் ஆண்டும் தரித்துமிருக்கின்ற தேவரீருடைய ரூபத்தை ஸேவிக்கும்படி அடியேனால் கூடுமென்று தேவரீருக்குத் திருவுள்ளமானால் ஓ யோகேசுவர! மற்றொருவருக்குங் கிடைக்கமாட்டாத ஞாநம் பலம் ஐசுவரியம் வீரியம் சக்தி தேஜஸு இவைகளுக்கு நிதியானவரே! தேவரீரை முழுதும் அடியேன் கண்டனுபவிக்கும்படி ஸேவை ஸாதித்தருளவேண்டும்.

(அ-ஞை-) இப்படி குதூஹலத்தோடுகூடினவனாய் ஸந்தோஷத்தால் தொண்டையில் வார்த்தை யெழாமற்றடரும்படி அர்ச்சுநனால் பிரார்த்திக்கப்பட்ட பகவான் அருளிச்செய்கிறார்.

శ్రీభగవానువాచ। పశ్యమేపార్థరూపాణి శతశోథసహస్రశః।
నానావిధానిదివ్యాని నానావర్ణాకృతీనిచ॥౫॥

(ரு) அஹோபார்த்த! எல்லாவற்றிற்கும் ஆதாரமான என்ரூபங்களைக் காட்டுகிறேன்பார்; நூறு ஆயிரங்கணக்காய் பலவிதவர்ணங்களோடும் பலவித உருவங்களோடுமிருக்கிற திவ்யங்களான என்ரூபங்களை நன்றாய்ப்பார்.

పశ్యాదిత్యాన్వసూన్ రుద్రానశ్వినౌమరుతస్తథా।
బహూన్యదృష్టపూర్వాణి పశ్యాశ్చర్యాణిభారత॥౬॥

(சு) என்னுடைய ஒருரூபத்தில் பனிரண்டு ஆதித்தியர்களையும் அஷ்டவசுக்களையும் பதினொரு உருத்திரர்களையும் இரண்டு அசுவனீ தேவர்களையும் வாயுக்களையும் இப்படியே லோகத்தில் பிரத்தியக்ஷமாய்க் காணக்கூடியவைகளையும் சாஸ்திரத்தால் அறியக் கூடியவைகளையும் எங்கெங்கு லோகத்தில் எங்கெந்த ஆச்சரியமுண்டோ அவையெல்லாவற்றையும் பார்.

ఇహైకస్థంజగత్కృత్స్నం పశ్యాద్యసచరాచరమ్।
మమదేహేగుడాకేశయచ్చాన్యద్ద్రష్టుమిచ్ఛసి॥౭॥

(எ) இந்த என்னுடைய ஒருசரீரத்தில் அதிலும் ஓரிடத்தில், சேதநாசேதந ரூபமான உலகத்தையெல்லாம் நன்றாய்ப்பார். இன்னும் ஏதாகிலும் பார்க்க வேண்டுமானால் அதையும் இந்தசரீரத்தின் ஏகதேசத்தில்தானேபார்.

నతుమాంశక్యసేద్రష్టు మనేనైవస్వచక్షుషా।
దివ్యందదామితేచక్షుః పశ్యమేయోగమైశ్వరమ్॥౮॥

(௮) நான் என்னுடைய சரீரத்தில் ஓரிடத்தில் உலகத்தையெல்லாங் காட்டுகிறேன். நீயோ, சிறியதாய் அளவுள்ள வஸ்துக்களைக் காணவல்ல இந்த மாம்ஸ நேத்திரங்களைக்கொண்டு ஸகல வஸ்துக்களிலும் வேறுபட்டு அளவில்லாமலிருக்கும் விஷயத்தைக் காணமாட்டாய். ஆகையால் உனக்குத் திவ்யமான கண்களைக் கொடுக்கிறேன். என்னுடைய அளவற்ற ஞானம் விபூதி தொடக்கமானவைகளெல்லாவற்றையும் பார்.

సఞ్జయ ఉవాచ॥ ఏవముక్త్వా తతో రాజన్ మహాయోగేశ్వరో హరిః।
దర్శయామాస పార్థాయ పరమం రూపమైశ్వరమ్॥౯॥

(௯) இவ்வாறு சொல்லி, தேரோட்டுவதிலிருந்த அர்ச்சுநனுக்கு மாமன் மகனான அந்தக்கண்ணன், மஹாயோகங்களுக்கெல்லாம் ஈசுவரனாய் பரப்ரம்மமான நாராயணனாகையாலே தம்முடைய பரமேசுவரத் தன்மைக் கீடான ரூபத்தை அத்தை மகனான பார்த்தனுக்குக் காண்பித்தருளினார். அதுவோ நாநாவிதமாய் விசித்திரமாய் ஸகல லோகத்துக்கு மிடமாய் எல்லாவற்றையுமாளுமதாயுள்ளது.

అనేకవక్త్రనయనమనేకాద్భుతదర్శనమ్।
అనేకదివ్యాభరణం దివ్యానేకోద్యతాయుధమ్॥౧౦॥

దివ్యమాల్యామ్బరధరం దివ్యగన్ధానులేపనమ్।
సర్వాశ్చర్యమయం దేవమనన్తం విశ్వతోముఖమ్॥౧౧॥

(௧௦-௧௧) அதாவது அனேக முகங்களுங் கண்களுமுடையதும் அனேக அற்புதங்களைக்காட்டுவதும் அனேகம் திவ்யாபரணங்களுடையதும் திவ்யங்களான அனேகம் ஆயுதங்களுடையதும் திவ்யமாலைகளும் வஸ்திரங்களுமணிந்ததும் திவ்யகந்தம் பூசியதும் ஸகல ஆச்சரியமானதும் பிரகாசமானதும் முக்காலத்திலுமுள்ள ஸகலஜகத்துக்கு மிடமாயிருக்கையாலே தேசத்தாலாவது காலத்தாலாவது அளவிடப்போகாததும் எந்தத்திக்கிலும் முகங்களோடு கூடியது மாயிருந்தது.

దివి సూర్యసహస్రస్య భవేద్యుగపదుత్థితా।
యది భాః సదృశీ సా స్యాద్భాసస్తస్య మహాత్మనః॥౧౨॥

(௧௨) ஆகாயத்தில் ஆயிரம் சூரியர்கள் ஏககாலத்தில் உதித்தார்களாகில் அந்தமஹாத்மாவின் திருமேனிக்கு ஒப்புச்சொல்லலாம். [என்றால் அக்ஷயமான தேஜஸ்வரூபமாயிருந்த தென்றபடி.]

తత్రైకస్థం జగత్కృత్స్నం ప్రవిభక్తమనేకధా।
అపశ్యద్దేవదేవస్య శరీరే పాణ్డవస్తదా॥౧౩॥

(௧௩) (அளவில்லாதஅகலமும் நீளமுமுள்ளதாய் அநந்தமானதிருத்தோள் திருவயிறு திருமுகம் திருக்கண்களையுடையதாய் அளவற்ற ஒளியோடு கூடியதாய் அளவற்ற திவ்யாயுதங்களணிந்ததாய் தனக்குத்தக்கபடி அபரிமி

கள

தமான திவ்யாபரணங்களுடையதாய், திவ்யங்களான திருமாலைகளும் திருப்பீதாம்பரங்களும் அணிந்ததாய் திவ்யமான சந்தனம் பூசியதாய் அநந்த ஆச்சரியமயமாயுள்ள) அத்தேவ தேவனுடைய திவ்யத் திருமேனியில், (நானுவிதங்களாய்ப் பிரிக்கப்பட்டு, பிரமன்தொடங்கி அனேகவிசித்திரங்களான தேவர் திரியக்கு மனுஷியர் தாவரங்களென்கிற புசிப்பவரின் அவைகளாகவும், பூமி ஆகாயம் சுவர்கம் பாதாளம் அதலம் விதலம் ஸுதலம் முதலிய போகஸ்தாநங்களாகவும் புசிக்கும் பண்டங்களாகவும் புசிப்பதற்கு வேண்டுங்கருவிகளாகவும்) பலவாறுகப் பிரிக்கப்பட்டுப் பிரகிருதி புருஷரூபமாயுள்ள ஸகல லோகத்தையும் எங்கேயோ ஓரிடத்திலிருப்பதாக அர்ச்சுநன் பகவத்கடாக்ஷத்தாலடைந்த திவ்யநேத்திரங்களாலே கண்டுஸேவித்தான்.

తతస్సవిస్మయావిష్టో హృష్టరోమాధనఞ్జయః।
ప్రణమ్యశిరసాదేవం కృతాఞ్జలిరభాషత॥౧౪॥

(கச) அநந்தரம் தநஞ்சயனுனவன், (மஹாச்சரியமாயுள்ள ஸகல லோகத்தையும் தம்திருமேனியில் ஓரிடத்தில் வைத்து அவைகளை யேவுகின்றவராய் அதிக ஆச்சரியமான அளவிறந்த ஞாநம் முதலிய கல்லியாணகுணங்களுக்கிடமாயுள்ள பகவானைப்பார்த்து ஆச்சரியத்தோடு கூடியவனுய் தேஹத்தில் மயிர்க்கூச்சறையும்படி தடிபோல் விழுந்து ஸேவித்துக் கைகளைக்கூப்பிக்கொண்டு இந்தவிதம் விண்ணப்பம் செய்கிறுன்.

అర్జున ఉవాచ॥ పశ్యామిదేవాంస్తవదేవదేహే సర్వాంస్తథాభూతవిశేషసఙ్ఘాన్।
బ్రహ్మాణమీశంకమలాసనస్థ మృషీంశ్చసర్వానురగాంశ్చదివ్యాన్॥౧౫॥

(கரு) ஹேஸ்வாமிந்! தேவரீருடைய திருமேனியில் ஸகலமானதேவர்களையும் மற்றுமுண்டானப்பிராணிகளின் கூட்டங்களையும் அண்டாதிபதியான சதுர்முகப் பிரம்மாவையும் அப்படியே அவருடைய இச்சாநுவர்த்தியான சிவனையும் தேவரிஷிகள் தொடக்கமான வெல்லாருஷிகளையும் வாஸுகி தக்ஷகன் முதலான அனேகம் ஸர்ப்பங்களையுங்காண்கிறேன்.

అనేకబాహూదరవక్త్రనేత్రం పశ్యామిత్వాంసర్వతోఽనన్తరూపమ్।
నాన్తంనమధ్యంనపునస్తవాదిం పశ్యామివిశ్వేశ్వరవిశ్వరూప॥౧౬॥

(கசா) அனேகம் கைகால் முதலியகரணங்களுடன் கூடி அநந்த ரூபனுயுள்ள தேவரீரை யெங்கும் பார்க்கிறேன். ஹே விசுவேசுவர! விசுவசரீரனுயிருக்கிற தேவரீருக்கு ஆதி இதுவென்றும் மத்தியமிது வென்றும் அந்தமிது வென்றும் தேவரீரளித்த இந்தத் திவ்யநேத்திரங்களைக்கொண்டும் பார்க்கச் சக்தியற்றவனுயிருக்கிறேன்.

కిరీటినంగదినంచక్రిణంచ తేజోరాశింసర్వతోదీప్తిమన్తమ్।
పశ్యామిత్వాందుర్నిరీక్ష్యంసమన్తా ద్దీప్తానలార్కద్యుతిమప్రమేయమ్॥౧౭॥

(கஎ) தேஜோராஸியாய் எங்கும் ஒளிவிடுகின்றவராய் எந்தப்புறத்திலும் பார்ப்பதற்குக்கூடாதவராய் ஜொலிக்கின்ற சூரியன் அக்கினி இவர்களுடைய காந்தியோடு கூடியவராய் அளவிட்டறியப்போகாதவரா யிருக்கும் தேவரீரை, கிரீடம் கதை சக்கிரம் இவைகளைத்தரித்தவராகச் சேவிக்கிறேன்.

త్వమక్షరంపరమంవేదితవ్యం త్వమస్యవిశ్వస్యపరంనిధానమ్।
త్వమవ్యయశ్శాశ్వతధర్మగోప్తా సనాతనస్త్వంపురుషోమతోమే॥౧౮॥

(கஅ) ద్వేవిద్యేవేదితవ్యే இத்யாதியான உபநிஷத்துக்களில் அறியவேண்டியதாகச் சொல்லப்பட்ட பரமமான அக்ஷரம் தேவரீரே! இஜ்ஜகத்துக்கு முக்கியமான ஆதாரமும் தேவரீரே? தேவரீர் எந்தஸ்வருபத்தோடும் எவ்வித குணங்களோடும் எவ்வித விபவத்தோடும் இருக்கின்றதோ அப்படியே எந்நாளுமிருக்கின்றது. நித்தியமான வைதிகத்தருமங்களை யெல்லாம் தேவரீரே இப்படி அவதாராதிகளைச்செய்து காப்பாற்றுகின்றது. వేదాహమేతంపురుషమ్మహాన్తం என்றும் పరాత్పరంపురుషమ్ என்றும் இப்படி சொல்லப்படும் ஸநாதநபுருஷன் தேவரீரே யென்று அறிந்து கொண்டேன். [என்றால் இதுவரையில் யதுகுலதிலகமாக நினைக்கப்பட்ட தேவரீரை இப்பொழுது தான் இப்படிப்பட்டவரொன் றறிந்துகொண்டேனென்றபடி.]

అనాదిమధ్యాన్తమనన్తవీర్యమనన్తబాహుం శశిసూర్యనేత్రమ్।
పశ్యామిత్వాందీప్తహుతాశవక్త్రం స్వతేజసావిశ్వమిదన్తపన్తమ్॥౧౯॥

(ககூ) ஆதி மத்தியம் அந்தம் அற்றவராய் அளவற்ற ஞாநம் பலம் வீரியம் முதலிய குணங்கள் பொருந்தியவராய் * கணக்கில்லாத கை கால் கண்முதலிய அவயவங்களோடுகூடியவராய் சந்திரனைப்போல் (அடுத்தவரைக்) குளிரநோக்கி சூரியனைப்போல் (கடுத்தவரைக்) கடுக்கின்ற திருக்கண்களுடையவராய் பற்றியெரியும் காலாக்கினிபோல் ஸம்ஹாரத்துக்கேற்ற முகங்களோடு கூடியவராய் தேஜஸ்ஸாலே உலகத்தையெல்லாம் தபிக்கின்ற தேவரீரைப் பார்க்கின்றேன். [என்றால்—இப்படி ஸர்வத்துக்கும் கர்த்தாவாயும் ஸர்வாதாரராயும் ஸர்வத்தையும் ஆள்பவராயும் ஸர்வத்தையும் அழிப்பவராயும் ஞானம் முதலிய அபாரமான குணங்களுக்குக் கடலாயும் ஆதிமத்தியாந்தரஹிதராயுமிருக்கிற தேவரீரை இப்படிப்பட்ட திருமேனியோடு கூடியிருப்பவராகத் தேவரீர் உபதேசித்தபடி ஸாக்ஷாத்கரிக்கிறேன் என்றபடி.]

(அ-கை.) இப்படியிருக்குந் தேவரீரைப்பார்த்து தேவாதிகளும் அடியேனும் மிகவும் பயப்படுகிறோமென்கிறான்.

ద్యావాపృథివ్యోరిదమన్తరంహి వ్యాప్తంత్వయైకేనదిశశ్చసర్వాః।
దృష్ట్వాద్భుతంరూపముగ్రంతవేదం లోకత్రయంప్రవ్యథితంమహాత్మన్॥౨౦॥

---

* ஒரு திருமேனியில் கணக்கில்லாத வயிறு முதலியவை யெப்படி கூடுமென்னில், ஒரு இடுப்பிலிருந்து மேலே அனேகம் வயிறு முதலியவைகளும் கீழே அனேகம் பாதம் முதலியனவைகளும் கூடுமன்றோ?

(௨0) மேலுள்ள ஆகாசம், கீழே பூமி, இதற்கிடையிலுள்ள வெளிகள் இவைகளில், நிலைத்திருக்கின்ற எல்லா உலகங்களையும் தேவரீர் வியாபித்துக் கொண்டிருக்கிறபடியால் இப்படி அதிகவிசாலமும் உயரமும் நிகளமும் பொருந்திப் பயங்கரமாயிருக்கும் தேவரீருடைய திருமேனியைப்பார்த்து, ஓமஹாத்மாவே! பிரம்மா முதலிய தெய்வக்குழாங்கள் பித்ருக்கணங்கள் ஸித்தாள் கந்தர்வாள் யக்ஷாள் ராக்ஷஸாள் இவாளில் பிரதிகூலராயும் அநுகூலராயும் மத்தியஸ்த்தராயுமிருக்கும் இம்மூவுலகத்தவரும் $ நடுநடுங்கிப்போகிருர்கள்.

అమీహిత్వాసురసఙ్ఘా విశన్తి కేచిద్భీతాః ప్రాఞ్జలయోగృణన్తి।
స్వస్తీత్యుక్త్వామహర్షిసిద్ధసంఘాః స్తువన్తిత్వాంస్తుతిభిః పుష్కలాభిః॥౨౧॥

(௨௧) இதோ உத்கிருஷ்டாளாகிய சிலதேவகணங்கள் விசுவரூபனுகிய தேவரீரைக்கண்டு ஸந்தோஷித்து ஸமீபத்தில் நெருங்குகிருர்கள்; பின்னுஞ் சிலர் தேவரீருடைய பயங்கரமான ஆகாரத்தைப்பார்த்துப் பயந்தவர்களாய் அஞ்சலி பண்ணிக்கொண்டு தங்கள் ஞானத்துக்குத் தக்கபடி ஸ்தோத்திரஞ் செய்கிருர்கள்; பின்னுஞ்சில மஹாரிஷிக்கணங்களும் ஸித்தகணங்களும், பரதத்துவத்தையும் அவரதத்துவத்தையு நன்கறிந்தவராதல்பற்றி "ஸ்வஸ்தி" என்று சொல்லி வெகுசாய் ஸ்தோத்திரம் செய்கிருர்கள்.

రుద్రాదిత్యావసవోయేచసాధ్యా విశ్వేశ్వినౌమరుతశ్చోష్మపాశ్చ।
గన్ధర్వయక్షాసురసిద్ధసఙ్ఘా వీక్షన్తేత్వాం విస్మితాశ్చైవసర్వే॥(౨౨)॥

(௨௨) உருத்திரர் ஆதித்தியர் வசுக்கள் ஸாத்தியர் விசுவேதேவர்கள் அச்சுவனீதேவர்கள் மறுத்துக்கள் பித்ருக்கள் கந்தருவர் யக்ஷர் அசுரர் சித்தக்கணங்கள் எல்லாம் பரமாச்சரியத்தோடுகூடி ஸேவிக்கின்ருர்கள்.

రూపంమహత్తేబహువక్త్రనేత్రం మహాబాహో బహుబాహూరుపాదమ్।
బహూదరంబహుదంష్ట్రాకరాళం దృష్ట్వాలోకాః ప్రవ్యథితాస్తథాహమ్॥౨౩॥

(௨௩) அனேகம் கோரமான பற்களோடு கூடிய தேவரீருடைய ஆகாரத்தைக்கண்டு முன்சொன்னவர்களும் அடியேனும் பயந்தது இவ்வளவ்வளவல்ல; மிகவும் பயந்திருக்கிருேம்.

నభస్స్పృశందీప్తమనేకవర్ణం వ్యాత్తాననందీప్తవిశాలనేత్రమ్।
దృష్ట్వాహిత్వాంప్రవ్యథితాన్తరాత్మా ధృతింనవిన్దామిశమంచవిష్ణో॥౨౪॥

(௨௪) తదక్షరేపరమేవ్యోమన్ என்றும், ఆదిత్యవర్ణన్తమసః పరస్తాత్ என்றும் క్షయన్తమస్యరజసః పరాకే என்றும், యో అస్యాధ్యక్షః పరమేవ్యోమన్ என்றும், இப்படி சுருதியில் சொல்லப்பட்டுள்ள பரமபதமென்கிற பரமாகா

---

$ அர்ச்சுநனுக்குத்தான் விசுவரூபத்தைக் காணும்படி திவ்ய நேத்திரங் களைத்தந்தார். பிரும்மாதிகளுங் கண்டபடி யென்னென்ருல் – தனது ஐசுவரியத்தை முழுவதும் அர்ச்சுனனுக்குக் காட்டவேண்டுமென்று, அவர்களுக்குந் தந்தாரென்றறிக.

சம்வரையில் வியாபித்து மஹாப்பிரகாசமாய் அனேகவர்ணங்களுடன் கூடித் திறந்த வாய்களோடும் விசாலமான நேத்திரங்களோடுங்கூடிப் பயங்கரமாயிருக்கிற ஓ விஷ்ணுவே! தேவரீரைப்பார்த்து அடியேன் கொஞ்சமும் தரிக்ககில்லேன்; மனம் பதறுகிறது; புலன்கள் கலங்குகின்றன.

దంష్ట్రాకరాళానిచతేముఖాని దృష్ట్వైవకాలానలసన్నిభాని।
దిశోనజానేనలభేచశర్మ ప్రసీదదేవేశజగన్నివాస॥౨౫॥

(உரு) பிரளயகால அக்கினிபோல் எல்லாவற்றையும் நாசஞ்செய்யும்படி கோரமாயிருக்கின்ற நும் திருமுகங்களைப்பார்த்து அடியேனுக்குத் திக்குத் தெரியவில்லை; சுகம்சிறிதும் அடையகில்லேன்; உலகத்துக்கெல்லாம் இருப்பிடமாய் பிரம்மாதி தேவர்களுக்கெல்லாம் ஈசனாகிய ஓ பகவானே ! அடியேனிடத்தில் கிருபைபண்ணியருளவேண்டும் [என்றால், அடியேன் தரிக்கும்படி கடாக்ஷிக்க வேண்டுமென்றபடி.]

(அ-கை.) பிராணிகளின் இருப்புத்தரிப்புமுதலியவெல்லாம் தம் ஆதீனமென்று காட்டுவதற்காக எம்பெருமான், துரியோதனன் படையில் ராஜவேஷம்பூண்ட அசுரப்படைகளையெல்லாமொழித்துப் பூமியின்பாரத்தைத் தாமே தீர்க்கப்போகிறதென்கிற தம்முடைய திருவுள்ளத்தை யர்ச்சுநனுக்குக் காட்டியருளினார்; அவனும் எம்பெருமானுடைய படைக்குந்தன்மை முதலிய ஈசுவரத்தன்மையெல்லாம் பார்த்து (அந்தப் பகவானிடத்தில்தானே இனியழியப்போகிற) துரியோதனாதிகள் மடியும்படியையுங் கண்டவனாய்ச் சொல்லுகிறான்.

అమీచత్వాంధృతరాష్ట్రస్యపుత్రాః సర్వేసహైవావనిపాలసంఘైః।
భీష్మోద్రోణస్సూతపుత్రస్తథాసౌ సహాస్మదీయైరపియోధముఖ్యైః॥౨౬॥
వక్త్రాణితేత్వరమాణావిశన్తి దంష్ట్రాకరాళానిభయానకాని।
కేచిద్విలగ్నాదశనాన్తరేషు సన్దృశ్యన్తేచూర్ణితైరుత్తమాఙ్గైః॥౨౭॥

(உசு-உஎ) இதோ திருதராஷ்டிர குமாரர்களும் பீஷ்மரும் துரோணரும் கர்ணனும், அந்தப் பக்ஷத்தைச்சேர்ந்த ராஜாக்களுடனும் நம்மவர்களைச் சேர்ந்த சிலவீரர்களுடனும் அதிவேகமாய் கோரப்பற்கள் நிறைந்த தேவரீருடைய திருவாயில் அழிவார்களாகப் புகுகிறார்களே, அதிற்சிலர் மண்டைசிதறிப் பல்லிடுக்குகளிலகப்பட்டுத் தொங்குகிறார்கள்.

యథానదీనాంబహవోమ్బువేగాః సముద్రమేవాభిముఖాద్రవన్తి।
తథాతవామీనరలోకవీరా విశన్తివక్త్రాణ్యభివిజ్వలన్తి॥౨౮॥
యథాప్రదీప్తంజ్వలనంపతఙ్గా విశన్తినాశాయసమృద్ధవేగాః।
తథైవనాశాయవిశన్తిలోకా స్తవాపివక్త్రాణిసమృద్ధవేగాః॥౨౯॥

(உஅ-உகூ) இந்தராஜாக்களெல்லாம் ஆற்றுவெள்ளம் கடலிற்புகுவதுபோலும் விட்டில்ப்பூச்சி பெருந்தீயிற் புகுவதுபோலும் தேவரீருடைய வாயில் தாமாய்அழிந்து போவதற்காக வெகுவேகமாய்வந்துவீழ்கிறார்கள்.

లేలిహ్యసే గ్రసమానస్సమన్తా ల్లోకాన్సమగ్రాన్ వదనైర్జ్వలద్భిః।
తేజోభిరాపూర్యజగత్సమగ్రం భాస స్తవోగ్రాః ప్రతపన్తి విష్ణో॥౩౦॥

(௩௰) அப்படிப்பட்ட அவ்வரக்கர்கூட்டங்களையெல்லாம் ஜ்வலிக்கின்ற திருவாயில் விழுங்கும்பொழுது அதிக கோபத்தோடுகூட மேலுதட்டையும் கீழுதட்டையும் அடிக்கடி நக்குகின்றீர். தேவரீருடைய அதிபயங்கரமான கிரணங்கள் தம் பிரகாசங்களாலே உலகங்களெல்லாம் பரவ, அதனால் பிராணிகள் தவிக்கின்றன.

ఆఖ్యాహి మే కో భవానుగ్రరూపో నమోఽస్తు తే దేవవర ప్రసీద।
విజ్ఞాతుమిచ్ఛామి భవన్తమాద్యం న హి ప్రజానామి తవ ప్రవృత్తిమ్॥౩౧॥

(௩௧) ஸ்வாமி! தேவரீருடைய நிரங்குசமான ஈசுவரஸ்வரூபத்தைக் காட்டவேண்டுமென்று அடியேன் வேண்டிக்கொண்டபடி அப்படியே ஸேவைஸாதித்தவர், மறுபடி இந்தக்கோரமான ரூபத்தைத் தரித்தீரே ஈதெதற்காகவோ இதை அடியேனுக்குத் தெரியச்சொல்வதோடு சாந்தமான வடிவத்தையும் அங்கீகரித்தருளவேண்டும்.

(அ-கை) அடியேனிடத்தில் பிரீதியாலே விசுவைசுவரியத்தைக் காட்டினவர் கோரரூபத்தையெடுப்பதற்கு என்ன காரணமென்றுகேட்டதற்குப் பகவான் அர்ச்சுனனைப்பார்த்துத் தம் * திருவுள்ளத்தை யருளிச்செய்கிறார்.

శ్రీభగవానువాచ॥ కాలోఽస్మి లోకక్షయకృత్ప్రవృద్ధో లోకాన్ సమాహర్తుమిహ ప్రవృత్తః
ఋతేఽపి త్వాం న భవిష్యన్తి సర్వే యేఽవస్థితాః ప్రత్యనీకేషు యోధాః॥౩౨॥
తస్మాత్త్వముత్తిష్ఠ యశో లభస్వ జిత్వా శత్రూన్ భుఙ్క్ష్వ రాజ్యం సమృద్ధమ్।
మయైవైతే నిహతాః పూర్వమేవ నిమిత్తమాత్రం భవ సవ్యసాచిన్॥౩౩॥

(௩௨-௩௩) அர்ச்சுன! துரியோதனன் முதலிய ஸகல ராஜாக்களுடையவும் வாழ்நாளின் இறுதியை நாம் கண்டிருக்கையாலே அவர்களையெல்லாம் நாசஞ்செய்வதற்காகக் கோரமான உருவத்தோடுவளர்ந்து அவர்களை அழிப்பதேபயனாக இப்பொழுது ஆரம்பித்திருக்கிறோம். உன்னுடைய முயர்ச்சியில்லாமலே இந்தத் துரியோதனாதிகளும் மற்றும் உனக்கு எதிரிகளாய் நின்ற இவ்வீரர்கள் யாவரும் நம்முடைய ஸங்கல்பமாத்திரத்தால் நாசமடையப் போகிறார்கள். ஆகையால் அவர்களை யெதிர்ப்பதற்காக நீ எழுந்திரு; சத்துருக்களான அவர்களைஜயித்து கீர்த்தியைப்பெற்று தர்மமாய்க்கிடைத்த விராஜ்யத்தை அனுபவிக்கப்பார். இந்த துஷ்டர்கள் முன்னமே நம்மால் கொல்லப்பட்டபடியால், இரண்டுகைகளாலும் போர்புரியவல்ல நீ அதற்குக்கொஞ்சம் நிமித்தமாய்மாத்திரம் ஆகவேண்டும். [அதாவது நம்மால் போடப்பட்ட ஆயுதம்போலவிருந்து யுத்தம் புரியவேண்டும் என்றபடி]

* அர்ச்சுனனில்லாமலும் இந்தத்துஷ்டர்களை நாம் அழிக்கவே போகிறோமென்கிற தம் திருவுள்ளத்தை அர்ச்சுனனுக்குக்காட்டினால் அவன் யுத்தஞ்செய்யத் துணிவனென்பது எம்பெருமானுக்குத் திருவுள்ளம்.

ద్రోణంచ భీష్మంచ జయద్రథంచ కర్ణం తథాన్యానపి యోధవీరాన్।
మయాహతాంస్త్వంజహి మావ్యథిష్ఠా యుధ్యస్వ జేతాసి రణే సపత్నాన్॥౩౪॥

(௩௪) துரோணர், பீஷ்மர், கர்ணன் முதலானோர்களும் அபராதிகளாகையாலே நம்மாலேயே கொல்லப்படுவார்கள்; ஆகையால் அவர்களைப் பந்துக்களென்றும், ஆசிரியர்களென்றும், போகத்தில் பற்றுடையவர்களென்றும்நினைத்து இவர்களை நான் எப்படி வதைப்பேனென்று மனதிற்சிறிதும் வருத்தமின்றி ஜயிக்கப்பார். இவர்களைக் கொல்வதில் உனக்குச் சிறிதும் தயையென்பதேவேண்டாம். மேலும் யுத்தத்தில் ஜயமும் உனக்கே கிடைக்கும் என்றிவ்வாறருளிச்செய்தார்.

సంజయ ఉవాచ॥ ఏతచ్ఛ్రుత్వా వచనం కేశవస్య కృతాంజలిర్వేపమానః కిరీటీ।
నమస్కృత్వా భూయ ఏవాహ కృష్ణం సగద్గదం భీతభీతః ప్రణమ్య॥౩౫॥

(௩௫) ஆஶ்ரிதவாத்ஸல்ய ஸாகரமான வெம்பெருமானிப்படியருளிச்செய்யக்கேட்டு அர்ச்சுனன் அவனைத்தெண்டன் ஸமர்ப்பித்து மிகவும் பயத்தாலே நடுநடுங்கி மறுபடியும் தெண்டன் ஸமர்ப்பித்து விழுந்தெழுவதாய்க் கைகளைக் கூப்பிக்கொண்டு எடுத்த சொல்லை முடிக்கமாட்டாதபடி இந்தவிதம் விண்ணப்பம் செய்தான்.

స్థానే హృషీకేశ తవ ప్రకీర్త్యా జగత్ప్రహృష్యత్యనురజ్యతే చ।
రక్షాంసి భీతాని దిశో ద్రవన్తి సర్వే నమస్యన్తి చ సిద్ధసంఘాః॥౩౬॥

(௩௬) வாரீர் இருடீகேச! இந்த யுத்தத்தைக் காண்பதற்காகவந்த தேவர், கெந்தருவர், சித்தர், இயக்கர், வித்தியாதரர், கின்னரர், கிம்புருடர் முதலானருள்ளிட்ட ஸகலலோகமும் தேவரீருடைய அனுக்கிரஹத்தாலே ஸர்வேசுவரனான தேவரீரைச்சேவித்துத் தேவரீருடைய கீர்த்தியைக்கண்டுஸந்தோஷிக்கின்றது. தேவரீரைக்கண்டு பயந்தவைகளான இவ்வரக்கர்குழாங்களும் மூலைக்குமூலைப் பத்துத் திக்குகளிலும் பயந்தோடுகின்றன. ஆனால் தேவரீருடைய பெருமைக்கு இவையெல்லாந் தகுந்தவைகளே.

కస్మాచ్చ తే న నమేరన్ మహాత్మన్ గరీయసే బ్రహ్మణోఽప్యాదికర్త్రే।

(௩௭ ௨) பிரமன் முதலானோருக்கும் பெரியனாய் ஆதிகர்த்தாவாயிருக்கும் தேவரீரை அந்தப்பிரம்மாதிகள் ஏன் வணங்கமாட்டார்கள்?

అనన్త దేవేశ జగన్నివాస త్వమక్షరం సదసత్తత్పరం యత్॥౩౭॥
త్వమాదిదేవః పురుషః పురాణస్త్వమస్య విశ్వస్య పరం నిధానమ్।

(௩௭-௩௭ ௨) ஹே அநந்த! தேவேச! ஜகந்நிவாஸ! నజాయతే మ్రియతే వావిపశ్చిత్ இத்தியாதியாகச் சுருதியிற் சொன்னபடி அழிவற்ற ஜீவஸ்வரூபமும் தேவரீரே; ஸத்தும் அஸத்தும் தேவரீரே; அதாவது நாமரூபங்களாலே பிரித்தறியப்படுகையாலே காரியமான நிலையில் ‘ஸத்’ என்றும் அப்படி நாமரூபங்களாலே பிரித்தறியப்போகாமையாலே காரணமான நிலையில் ‘அஸத்’ என்றுஞ்சொல்லப்படுகிறப் பிரகிருதியும் தேவரீரே. இப்படிப்பட்டப் பிரகி

ருதி தத்துவமென்ன இந்தப்பிரகிருதியோடுகலந்த ஜீவதத்துவமென்ன இவ்விரண்டையுங்கடந்த முக்தஸ்வரூபமான தத்துவமெதுவோ அதுவுந்தேவரீரோ. ஆகையால் தேவரீரோ ஆதிதேவனும், புருஷனும், புராணனும், இவ்வுலகுக்கெல்லாம் ஆத்மாவாய்நின்று தரிக்கின்ற ஆதாரப்பொருளும்.

వేత్తాసివేద్యంచపరంచధామ త్వయాతతంవిశ్వమనన్తరూప॥౩౮॥

(ரூஅ) உலகத்தில் அறியுமவைகளாயும் அறியப்படுமவைகளாயுமிருக்கின்றவெல்லாம்தேவரீரோ. இப்படி ஸர்வஸ்வரூபனு யிருக்கையாலே யாவராலும் அடையப்படும் ஸ்தாநமும் தேவரீரோ. சேதநாசேதநரூபமான இவ்வுலகெல்லாம் ஆத்மாவான தேவராலே வியாபிக்கப்பட்டிருக்கின்றன.

(அ-கை.) ஆகையால் வாயுமுதலிய சொற்களுக்குப் பொருளுந் தேவரீரோ யென்கிறான்.

వాయుర్యమోఽగ్నిర్వరుణశ్శశాఙ్కః ప్రజాపతిస్త్వంప్రపితామహశ్చ।

(ரூஅஉ) வாயு, அக்கினி, வருணன், சந்திரன் எல்லாம் தேவரீரோ. (ஸகலமானப் பிரஜைகளுக்கும் பிதாக்களான பிரஜாபதிகளுக்கும் பிரமனூர் பிதாவாகையாலே அவர் ஸகலப் பிரஜைகளுக்கும் பிதாமஹன்;) அத்தகைத்த அவருக்கும் தேவரீர் பிதாவாகையாலே எல்லாருக்குந் தேவரீர் பிரபிதாமகன்.

నమోనమస్తేస్తుసహస్రకృత్వః పునశ్చభూయోఽపినమోనమస్తే॥౩౯॥
నమః పురస్తాదథపృష్ఠతస్తే నమోఽస్తుతేసర్వతఏవసర్వ।

(ரூகூ-ரூகூஉ) தேவரீரை ஆயிரந்தடவையாய்த் தண்டன் ஸமர்ப்பிக்கிறேன். மறுபடியும் பலதடவையாய் தேவரீரை நமஸ்கரிக்கிறேன். ஹேஸர்வஸ்வரூப ! தேவரீருக்கு முன்னும் பின்னும் பக்கங்களிலும் எங்கும் எல்லாப்படிகளாலும் நமஸ்காரம் உண்டாகுக.

అనన్తవీర్యామితవిక్రమస్త్వం సర్వంసమాప్నోషితతోఽసిసర్వః॥౪౦॥

(ச0) ஓ அளவற்ற வீரியமுள்ளவனே ! உமது விக்கிரமத்தை யிவ்வளவென்றுஒருவரால் வரையறுக்கப்போமோ? ஸகல வஸ்துக்களையும் (ஆத்மாவாய்) வியாபித்திருக்கிறீராகையால் ஸர்வமும் நீரோ.

సఖేతిమత్వాప్రసభంయదుక్తం హేకృష్ణహేయాదవహేసఖేతి।
అజానతామహిమానంతవేమం మయాప్రమాదాత్ప్రణయేనవాపి॥౪౧॥
యచ్చాపహాసార్థమసత్కృతోఽసి విహారశయ్యాసనభోజనేషు।
ఏకోఽథవాప్యచ్యుతతత్సమక్షం తత్క్షామయేత్వామహమప్రమేయమ్॥౪౨॥

(சக-சஉ) ஓ அச்சுத! அளவற்ற வீரியமும் அப்படிப்பட்ட பராக்கிரமமும் ஸகலப்பிராணிகளுக்கும் ஆத்மாவாயிருப்பதும் இன்னுமிப்படிப் பல்படியாகவுமிருக்கின்ற தேவரீருடைய மஹிமைதெரியாமல் அடியேன் அக்ஞானத்தாலும் அதிகபரிசயத்தாலும் தேவரீரைத் தோழனென்று நினைத்து, அடா கிருஷ்ணா ! அடாதோழா ! அடா யாதவா! என்று சிறிதும் விநயமில்லாமல் அழைத்து வந்தேனே! என்னையனே! ஸர்வவிதத்திலும் ஸத்கரிக்கவேண்டிய தேவரீரை இப்படி யிழித்துப்பேசினேனே ! இன்னும் படுக்கும்பொழுதும்

கூடியிருக்கும்பொழுதும் ஸஞ்சரிக்கும்பொழுதும் போஜநஞ் செய்யும்பொழுதும் அடியேன் செய்தபிழை கணக்கில்லை; ஆகையால் அவைகளையெல்லாம் கிருபையாய்ப்பொறுத்தருளவேண்டும் என்னப்பனே!

పితాసిలోకస్యచరాచరస్య త్వమస్యపూజ్యశ్చగురుర్గరీయాన్।
నత్వత్సమోస్త్యభ్యధికఃకుతోన్యో లోకత్రయేప్యప్రతిమప్రభావ॥౪౩॥

(சரு) ஒப்பில்லாதப் பிரபாவந்தங்கிய ஓபகவானே! சராசரரூபமான ஸகல லோகத்துக்கும் தேவரீரே பிதாவாயும் குருவாயும் இருக்கையால் எல்லாராலும் பூஜிக்கத்தகுந்திருக்கிறது. ஆகையால் இம்மூவுலகத்திலும் கருணை முதலிய எவ்விதக்குணங்களாலும்தேவரீருக்குஸமானமானவாள்கிடையாது; அப்படியிருக்க அதிகனாய் ஒருவனிருப்பனேவென்கிற ஸந்தேஹத்துக்கு இடந்தானுண்டோ?

తస్మాత్ప్రణమ్యప్రణిధాయకాయం ప్రసాదయేత్వామహమీశమీడ్యమ్।
పితేవపుత్రస్యసఖేవసఖ్యుః ప్రియఃప్రియాయార్హసిదేవసోఢుమ్॥౪౪॥

(சச) யாவர்க்கும் பிதாவாய் யாவராலும் பூஜிக்கப்படும் குருவாய் கருணைமுதலிய குணங்களால் ஸர்வாதிகனாயிருக்கையாலே ஸர்வேசுவரனை தேவரீரைத் தண்டன்ஸமர்ப்பித்துக் கெஞ்சுகின்றேன். குற்றஞ்செய்தவனாயினும்,புத்திரன் பிதாவைவணங்கினானாகில் அந்தப்பிதாவும்,அப்படியே இஷ்டமானவன் அவன்தோழனைத் தண்டனிட்டு வேண்டிக்கொண்டானாகில் அந்தத் தோழனும், இரங்குவதுபோல அடியேனிடத்தில் விசேஷகடாக்ஷமுள்ளவரானதேவரீர் பிரியனான அடியேனுக்காக வெல்லாவற்றையும் பொறுத்தருளவேண்டும்.

అదృష్టపూర్వంహృషితోస్మిదృష్ట్వా భయేనచప్రవ్యథితంమనోమే।
తదేవమేదర్శయదేవరూపం ప్రసీదదేవేశజగన్నివాస॥౪౫॥

(சரு) ஒருநாளுங்கண்டிராத தேவரீருடைய உக்கிரமான விசுவரூபத்தைக்கண்டு அடியேனுள்ளங் களிகூர்ந்தது. மறுபடியும் பயத்தால் நடுங்கிப்போகிறது. ஆகையால் ஸகலலோகத்துக்கு மிருப்பிடமாய் பிரம்மாதிகளான ஸகலதேவர்களுக்கும் ஈசனான எனதாண்டவனே! அடியேனுக்கு முன்போலவே தேவரீர் ஸுப்பிரஸந்நமான திருமேனியோடு ஸேவைஸாதித்தருளவேண்டும்.

కిరీటినంగదినంచక్రహస్త మిచ్ఛామిత్వాంద్రష్టుమహంతథైవ।
తేనైవరూపేణచతుర్భుజేన సహస్రబాహోభవవిశ్వమూర్తే॥౪౬॥

(சசு) ஓஸ்வாமி! முன்போலவே கிரீடமும் கதையும் திருச்சக்கரமுமாகத்தேவரீரை ஸேவிக்க விரும்புகிறேனாகையால் ஆயிரந்திருக்கைகளுள்

ளஇந்த விசுவரூபத்தைமாற்றிச் சதுர்ப்புஜனுயிருந்த †முன் ஸேவையையே ஸாதித்தருளவேண்டும்.

శ్రీభగవానువాచ॥ మయాప్రసన్నేనతవార్జునేదం రూపంపరందర్శితమాత్మయోగాత్।
తేజోమయంవిశ్వమనన్తమాద్యం యన్మేత్వదన్యేననదృష్టపూర్వమ్॥౪౭॥

(சஎ) அதற்கு எம்பெருமானருளிச்செய்வது:—அர்ச்சுந! தேஜோமயமாய் விசுவரூபமாய் ஆதிமத்தியாந்தரஹிதமாய் ஸகலபதார்த்தங்களுக்குமாதியாயிருக்கிற இந்த நம்முடையரூபத்தை உன்னைத்தவிர மற்றொருவருக்கும் நாம் காட்டினதில்லை; கேவலம்நம்மிடத்தில் பக்தியுள்ளவனுயிருக்கிருயென்று நமது ஸத்திய ஸங்கல்பயோகத்தாலே உனக்கு நாம் இந்த துர்லபமான ஸேவையைத்தந்தோம்.

(அ-கை.) பக்தியைத்தவிர மற்றொன்றுலும் தம்மை உள்ளபடி யறிவதரிதென்கிருர்.

నవేదయజ్ఞాధ్యయనైర్నదానైర్నచక్రియాభిర్నతపోభిరుగ్రైః।
ఏవంరూపశ్శక్యఅహంనృలోకే ద్రష్టుంత్వదన్యేనకురుప్రవీర॥౪౮॥

(சஅ) அர்ச்சுந! இப்படிப்பட்ட நம்முடைய உண்மையானநிலையை நம்மிடத்தில் பக்திமானுன உன்னைத்தவிர மற்றவர்களால் நிரதிசயமான பக்தியுண்டானுல் மாத்திரம் அறியலாமேயல்லது மற்றப்படி யக்ஞத்தாலாவது தானத்தாலாவது மற்றுங் கிரியைகளாலாவது உக்கிரமான தவத்தாலாவது எத்தாலும் அறியப்போகாது.

మాతేవ్యథామాచవిమూఢభావో దృష్ట్వారూపంఘోరమీదృఙ్మమేదమ్।
వ్యపేతభీః ప్రీతమనాః పునస్త్వం తదేవమేరూపమిదంప్రపశ్య॥౪౯॥

(சகூ) இப்படிப்பட்ட கோரரூபத்தைக் காண்பதனுல் நீ தொந்திரவுபட்டு மயங்கிப்போகாதே; உனக்குப் பழக்கமான முந்திய ஸௌம்மியரூபத்தையே காட்டுகிறேன் அதையேகண்டு ஸேவி.

(அ-கை.) ஸஞ்சயன்சொல்வது.

సంజయఉవాచ॥ ఇత్యర్జునంవాసుదేవస్తథోక్త్వా స్వకంరూపందర్శయామాసభూయః।
ఆశ్వాసయామాసచభీతమేనం భూత్వాపునస్సౌమ్యవపుర్మహాత్మా॥౫౦॥

---

† ஸர்வேசுவரனுன இந்த பரமபுருஷன் லோகோபகாரார்த்தமாகப்பூமியில் மனுஷ்யனுயவதரித்தபோது சதுர்ப்புஜனுகவே அவதரித்தார்; உடனே தேவகீ வஸுதேவர்களிருவரும் வேண்டிக்கொண்டதின்பேரில் கம்ஸனைக் கொல்லுகிறவனாயில் இரண்டுதிருத்தோள்களுடனிருந்து பின்னிட்டு நான்கு திருத்தோள்களுடனே யெழுந்தருளியிருந்தார். சத்துருவான சிசுபாலனும் ఉదారపీవరచతుర్బాహుంశంఖచక్రగదాధరమ్ என்று சதுர்ப்புஜனுகவே எந்தவேளையும் நினைத்திருந்தான்; ஆகையினுல் அர்ச்சுநன் சதுர்ப்புஜனுகவே முன்பு ஸேவித்ததாகச் சொல்லப்படுகிறது.

(௫0) இப்படி பாண்டுகுமாரனைப்பார்த்து பகவான் அருளிச்செய்து மறுபடியும் தம்முடைய சதுர்ப்புஜமான திருமேனியோடுகூடி ஸேவைஸாதித்தார்; அதுவுமின்றி பழக்கமில்லாத ஸ்வரூபத்தைக்கண்டுபயந்த இவனைப் பழக்கமான திருமேனியோடு கூடியவராயிருந்து ஸமாதாநமுஞ்செய்தார்.

అర్జునఉవాచ॥ దృష్ట్వేదంమానుషంరూపం తవసౌమ్యంజనార్దన।
ఇదానీమస్మి సంవృత్తః సచేతాః ప్రకృతింగతః॥౫౧॥

(௫௧) அர்ச்சுநன் சொல்லுகிறான் - ஓ ஜநார்த்தந! அளவில்லாத அதிசயம்பொருந்திய லாவண்யம் ஸௌந்தரியம் ஸௌகுமாரியம் முதலானவைகளோடு கூடியதாய் தேவரீருக்கே உரியதாய் மிகவும் ஸௌம்யமாயுள்ள மனுஷ்யாகாரமான இத்திருமேனியை ஸேவித்தபின்புதான் அடியேனுக்குப் பிராணனும் நிலைத்துப் பிரக்ஞையும் வந்தது.

శ్రీభగవానువాచ॥ సుదుర్దర్శమిదంరూపం దృష్టవానసియన్మమ।
దేవాఅప్యస్యరూపస్య నిత్యందర్శనకాంక్షిణః॥౫౨॥

(௫௨) அதற்கு எம்பெருமானருளிச்செய்வது. அர்ச்சுந! இப்பொழுது உனக்குக்காட்டின இந்த நம்முடைய (யாவரையுமாளும்படியான) ரூபத்தைக்காண்பதற்கு ஒருவராலும் முடியாது. இதை ஸேவிக்கவேண்டுமென்று தேவர்களெல்லாம் எத்தனையோகாலமாய் எதிர்பார்த்திருக்கிறார்களே யல்லது ஒருவராவது ஸேவித்ததில்லை.

(அ-கை.) அதெதினாலென்றால்:—

నాహంవేదైర్నతపసా నదానేననచేజ్యయా।
శక్యఏవంవిధోద్రష్టుం దృష్టవానసిమాంయథా॥౫౩॥

భక్త్యాత్వనన్యయాశక్య అహమేవంవిధోఽర్జున।
జ్ఞాతుంద్రష్టుంచతత్త్వేన ప్రవేష్టుంచపరన్తప॥౫౪॥

(௫௩-௫௪) வேதங்களை ஓதுவது ஓதுவிப்பது முதலியவைகளாலாவது யாகத்தாலாவது ஹோமத்தாலாவது தவத்தாலாவது,பக்தியில்லாமல் மற்றெவ்விதத்தாலும் நம்மை உள்ளபடியே காண்பதரிது; மற்றப்படி நம்மையே நாடியபக்தியுண்டானால் மாத்திரந்தான் சாஸ்திரத்தைக்கொண்டு நம்மை உள்ளபடியறியவாவது பிரத்தியக்ஷமாய் ஸேவிக்கவாவது கூடும். இப்படியே சுருதியும் నాయమాత్మాప్రవచనేనలభ్యో నమేధయానబహునాశ్రుతేన యమేవైషవృణుతే తేనలభ్యస్తస్యైషఆత్మా వివృణుతేతనూంస్వామ్॥ என்று சொல்லுகிறது.

మత్కర్మకృన్మత్పరమో మద్భక్తస్సఙ్గవర్జితః।
నిర్వైరస్సర్వభూతేషు యస్సమామేతిపాణ్డవ॥౫౫॥

(௫௫) வேதமோதல் முதலான ஸகலகர்மங்களும் நம்முடைய ஆராதநரூபமென்று செய்பவனும், எந்தத்தொழிலைச்செய்தாலும் எல்லாம் கிருஷ்

ணனுக்கென்று செய்பவனும், நம்மிடத்தில் மிகுந்தபக்தியாலே நம்மைப்பா டியும் சிந்தித்தும் அர்ச்சித்தும் பணிந்தும் பொழுதுபோக்குமவனும், இன்னு மிப்படி நம்விஷயமாகவே காலத்தைக்கழிக்காவிடில் தரிக்கமாட்டாமலிருப் பவனும், நம்மையேபற்றியிருக்கையாலே மற்றவைகளிற் பொருந்தாதவனும் ஒருப்பிராணியையும் பகைக்காதவனும் (அதாவது:—நம்மைப்பிரிந்தால் துய ரமும் நம்மைக் கூடினால்கொண்டாட்டமுமா யிருப்பவனாகையால் தனக்கு ஏதேனும் துயரம் நேரிட்டால் அது தான்செய்தபிழையின் பயனென்று நி னைப்பதனாலும் ஸகலபூதங்களும் பகவானாகிய நமக்கு ஆட்பட்டதென்று நி னைப்பதனாலும் ஒரு பூதத்தையும் பகைப்பதற்குக் காரணமில்லாமையாலே பகைக்காதவனும்) எவனோ, அவன் தோஷங்கள் யாவையுமொழித்து எப் போதும் நம்மையே அநுபவிப்பவனாவான்.

ஸ்ரீ பகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,

பதினோராவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ:

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# பனிரண்டாவது அத்யாயம்.

## அவதாரிகை.

பக்தியோக நிஷ்டர்களுக்குப்பயனாய் பரப்பிரம்மமாய் பரமபுருஷனா யிருக்கிற ஸ்ரீமந்நாராயணனுடைய தடையற்ற ஐசுவரியத்தைக் காணவா சைப்பட்டவர்ச்சுநனுக்கு, அளவில்லா வதிசயம் பொருந்திய கருணை, தண் ணளி,வண்மைமுதலிய கல்யாண குணங்களுக்குக் கடலாய் விளங்குகின்ற ஸத்தியஸங்கல்பனான ஸ்ரீகிருஷ்ணபகவானால், தம்முடைய ஈசுவரத்தன்மை யானது உள்ளபடியே காண்பிக்கப்பட்டதென்றும், அப்படியே எம்பெருமா னை உள்ளபடியே சாஸ்திரமுகத்தாலறிவதும் பிரத்தியக்ஷமாய்க் காண்பதும் மற்றப்படி எப்போதும் அவன் ஸந்நிதியிலிருப்பதும் எல்லாம் அவனைவிட்டு நீங்காத பக்தியுண்டாகில்தான் கிடைக்குமென்றுஞ் சொல்லப்பட்டது. இப் பொழுதுஆத்மப்பிராப்திக்குச் சாதநமான ஆத்மோபாஸநத்தைக்காட்டிலும் பக்திரூபமான பகவத் உபாஸநம் (பலனைவருத்தமின்றி விரைவில்அளிக்குமா கையால்) $ சிறந்ததென்றும், எம்பெருமானை உபாஸிக்கவேண்டுமுபாயமின் னவிதமென்றும், அதைச்செய்யச் சக்தியற்றவன் அக்ஷரமென்கிறமுக்தஸ்வ ரூபநிஷ்டையி லிருக்கவேண்டுமென்றும் மற்றும்அவனுக்கு வேண்டும் விஷய ங்களிவையென்றுஞ் சொல்லப்படுகின்றது.

---

$ சிறந்த தென்கிற விஷயம் [Telugu-script verse, illegible] என்கிற விடத்தில் சொல்லப் பட்டது.

అర్జున ఉవాచ॥ ఏవం సతతయుక్తా యే భక్తాస్త్వాం పర్యుపాసతే।
యే చాప్యక్షరమవ్యక్తం తేషాం కే యోగవిత్తమాః॥౧॥

(க) அர்ச்சுநன் சொல்வது:—ஓபகவானே! தேவரீர் கீழே அருளிச்செய்தபடி தேவரீரையே யெப்பொழுதும் பெரும்பயனாக நினைத்த பக்தர்களாய், தேவரீரை (ஸகல ஐசுவரியத்தோடு கூடியிருப்பவராகவும், அளவிலாவதிசயம் பொருந்திய ஸௌந்தரியம் ஸௌசீல்யம் ஸர்வஜ்ஞத்வம் ஸத்யஸங்கல்பத்வம் முதலிய வெண்ணிறந்த குணங்களுக்குக்கடலாயிருப்பதாகவும்) எவர்கள்உபாஸிக்கிறார்களோ அவர்களும், எவர்களானால்அக்ஷரமென்கிற பிரத்யக்ஆத்ம ஸ்வரூபத்தை (அதாவது முக்தஸ்வரூபமானஜீவனை) கண்முதலிய புலன்களாலறியப்படாதென்பதாக உபாஸிக்கிறார்களோ அவர்களுமான இவ்விருதிறத்தாரில் தாங்கோரிய பயனை விரைவில் கிடைக்கப்பெறுவார் யாவர்? அதை யருளிச்செய்யவேண்டும்.

శ్రీభగవానువాచ॥ మయ్యావేశ్య మనో యే మాం నిత్యయుక్తా ఉపాసతే।
శ్రద్ధయా పరయోపేతాస్తే మే యుక్తతమా మతాః॥౨॥

(உ) எம்பெருமானருளிச்செய்வது:—மிகவும் நம்மிடத்தில் பிரீதியாலே மனதை நம்மிடத்தில் வைத்து மிகுந்த சிரத்தையோடு கூடி நித்தியமாய் நம் ஸன்னிதியிலிருப்பையாசைப்பட்டு யாவர்கள் நம்மை உபாஸிக்கிறார்களோ அவர்கள்தான் மிகவும் யுக்தாள்; [அதாவது தாங்கோரிய பயனாயிருக்கிற நம்மை விரைவில் வருத்தமின்றி யடையுமவர்களென்றபடி.]

యే త్వక్షరమనిర్దేశ్యమవ్యక్తం పర్యుపాసతే।
సర్వత్రగమచిన్త్యం చ కూటస్థమచలం ధ్రువమ్॥3॥

సంనియమ్యేన్ద్రియగ్రామం సర్వత్ర సమబుద్ధయః।
తే ప్రాప్నువన్తి మామేవ సర్వభూతహితే రతాః॥౪॥

క్లేశోఽధికతరస్తేషామవ్యక్తాసక్తచేతసామ్।
అవ్యక్తా హి గతిర్దుఃఖం దేహవద్భిరవాప్యతే॥౫॥

(ங-ச-ரு) எவர்கள் பிரத்யகாத்மஸ்வரூபத்தை (அதாவது ஜீவனை) தேவனென்றாவது மனிதனென்றாவது மற்றும் எந்தவிதமாகவாவது குறிக்கத்தகாததாகவும், ஆனதுபற்றியே கண்முதலிய புலன்களுக்குப் புலப்படாததாகவும்,தேவர்முதலிய சரீரங்களிலெல்லாமிருக்கச்செய்தே அவ்வவ்விதமாக நினைக்கத்தகாததாகவும், ஆனதினாலே அந்தந்த தேவாதிகளுக்கடுத்த உருவங்களில் கட்டுப்படாததாகவும், விகாரமற்றதாகையாலே தன்வடிவத்தினின்று மாறுபடாததாகவும், ஆனதுபற்றியே நித்தியமானதாகவு மிப்படியெல்லாமிருப்பதாக உபாஸிக்கிறார்களோ, அதுவுமின்றி உபாஸிக்கும்போது கண்முதலிய புலன்களையெல்லாம் தந்தம் வியாபாரங்களினின்றுமடக்கி ஸம்புத்திகளாய், (அதாவது ஆத்மாவானது ஞானமேவடிவமாய் எங்கும் ஒரே ரீதியாயி

ருக்கிறதென்று நினைத்தவர்களாய்) அதனால் ஸகல பூதங்களிடத்தும் பிரீதியை யொழித்தவரா யிருக்கிறார்களோ; அவர்கள் ஸம்ஸாரத்தினின்றும் விடுபட்டு நமக்கு ஸமமாய் விளங்குகின்ற * முக்தஸ்வரூபத்தை யடைகின்றார்கள்.

(அ-கை.) எம்பெருமானை உபாஸிப்பவர்கள்தான் யுக்ததமரென்கிற விஷயத்தைத் தெளிவாயருளிச்செய்கிறார்.

యేతుసర్వాణికర్మాణి మయిసన్న్యస్యమత్పరాః।
అనన్యేనైవయోగేన మాంధ్యాయన్తఉపాసతే॥౬॥
తేషామహంసముద్ధర్తా మృత్యుసంసారసాగరాత్।
భవామినచిరాత్పార్థ మయ్యావేశితచేతసామ్॥౭॥

(௬-௭) எவர்களானால் தேஹத்தைத் தரிப்பதற்காகச் செய்யவேண்டுஞ் சில (லௌகிக) கர்மங்களையும், யாகம், தாநம், தவம், ஹோமம் முதலிய வைதிககர்மங்களையும், அவற்றின் காரணங்களோடும் உத்தேசத்தோடும் நம்மிடத்தில் ஸமர்ப்பித்து நம்மையே பெரும்பயனெண்ணி வேறுயாதொன்றையும் விரும்பாமல் நம்மைத்தியாநஞ்செய்து உபாஸிக்கிறார்களோ (அதாவது-தியாநம் அர்ச்சநம் பிரணாமம் ஸ்துதி கீர்த்தநம் முதலியவைகளை ஸ்வயம் போக்கியமாயும் பரமப்பிராப்பியத்துக்கு ஸமமாயுஞ் செய்து வருகிறார்களோ) அவர்களை, நம்மோடு சேரவொட்டாமல் விரோதிக்கின்ற யமனை ஸம்ஸாரத்தினின்றும் வெகு சீக்கிரத்தில் விடுவிக்கிறோம்.

మయ్యేవమనఆధత్స్వ మయిబుద్ధింనివేశయ।
నివసిష్యసిమయ్యేవ అతఊర్ధ్వంనసంశయః॥౮॥

(௮) ஆகையால் எளிதில் விரைவில் கிடைக்கின்ற ஈடில்லாத பெரும்பயனாயிருக்கிற நம்மிடத்தில்தானே மனதைவைத்து நாமேதான் அடையவேண்டும் பேறென்கிற வெண்ணங்கொள். இப்படியானால்தான் அதற்குமேல் நம்மிடத்தில் தானே நித்தியமா யிருந்துவாழ்வாய். இதில் சிறிதும் ஸந்தேஹமில்லை.

అథచిత్తంసమాధాతుం నశక్నోషిమయిస్థిరమ్।
అభ్యాసయోగేనతతో మామిచ్ఛాప్తుంధనఞ్జయ॥౯॥

(௯) அர்ச்சுந! விரைவில் நம்மிடத்தில் சலியாமல் மனம் வைக்க உன்னால் ஆகாதபக்ஷத்தில் அப்பியாஸயோகத்தாலே நம்மை யடையவிரும்பு; [அதாவது - ஸ்வபாவமாகவே எல்லையில்லாத வதிசயம்பொருந்திய ஸௌ

---

* முக்தஸ்வரூபம் எம்பெருமானுக்கு ஸமமாய் விளங்குகிறதென்கிற விஷயம், మమసాధర్మ్యమాగతాః என்று மேலே அருளிச்செய்யப்போகிறாரன்றோ? சுருதியும் నిరఞ్జనః పరమంసామ్యముపైతి என்று சொல்லுகிறது. அப்படியே அக்ஷரசப்தத்தால்சொன்ன முக்தஸ்வரூபத்தைக்காட்டிலும்பரப்பிரம்மம் வேறுபட்டிருக்கிறதென்கிற விஷயமும் కూటస్థోక్షరఉచ్యతే ఉత్తమఃపురుషస్త్వన్యః పరమాత్మేత్యుదాహృతః என்று மேலே சொல்லப்படுகிறது.

ந்தரியம் ஸௌகுமாரியம் ஸௌஹார்த்தம் வாத்ஸல்யம் காருண்ணியம் மாதுரியம் காம்பீரியம் ஔதாரியம் சௌரியம் வீரியம் பராக்கிரமம் ஸர்வக்ஞத்வம் † ஸத்யகாமத்வம் $ ஸத்யஸங்கல்பத்வம் ஸர்வேசுவரத்வம் ஸகலகாரணத்வம் முதலிய கல்லியாண குணங்களுக்கெல்லாம் ஸாகரமாய், ஸகலஹேயங்களுக்குமெதிர்த்தட்டாயிருக்கும் நம்மிடத்தில் எல்லையில்லாதப் பிரீதியையுட்கொண்ட ஸ்மிருதி ரூபமான அப்பியாஸயோகத்தாலே மனதை ஸ்திரமாகநிறுத்தி நம்மை யடையப்பாரென்றபடி.]

అభ్యాసేప్యసమర్థోసి మత్కర్మపరమో భవ।
మదర్థమపి కర్మాణి కుర్వన్ సిద్ధిమవాప్స్యసి॥౧౦॥

(க0) இனி யிப்படிப்பட்ட அப்பியாஸஞ்செய்வதிலும் உனக்கு ஸாமர்த்தியமில்லாத பக்ஷத்தில் நம்முடைய கைங்கரியங்களைச்செய்; [அதாவது-திருக்கோயில் சமைப்பது, திருநந்தநவனம் வளர்ப்பது, திருவிளக்கு ஸமர்ப்பிப்பது, திருவிலகு சேர்ப்பது, திருநீர்தெளிப்பது, திருமாலைதொடுப்பது, திருவாராதநஞ் செய்வது, திருநாமஸங்கீர்த்தனம் செய்வது, திருப்பிரதக்ஷிணஞ்செய்வது, திருப்பல்லாண்டு பாடுவது, தண்டன்ஸமர்ப்பிப்பது முதலான நம் கைங்கரியங்களை மிகவும் பிரீதியோடு செய்] மிகவும் பிரீதியோடு நம் கைங்கரியங்களைச் செய்துவந்தால் வெகு சீக்கிரத்தில் அப்பியாஸயோகத்தை யடைந்து அதனால் நம்மிடத்தில் நிலைபெற்ற மனதுடன்கூடிப் பிறகு (நம்மை யடைவதென்கிற) ஸித்தியைப்பெறுவாய்.

అథైతదప్యశక్తోసి కర్తుం మద్యోగమాశ్రితః।
సర్వకర్మఫలత్యాగం తతః కురు యతాత్మవాన్॥౧౧॥

(கக) அப்படி நங்குணங்களைச் சிந்தித்தபடியேயிருந்து நமக்கே பிரியமான பக்தியோகத்தையடைந்து அந்த பக்தியின் ஆரம்பதசையான கீழ்ச்சொன்ன நங்கைங்கரியத்தைச் செய்வதற்கும் உன்னாலாகாத பக்ஷத்தில், பரபக்திக்கு ஹேதுவாய் முதல் ஆறு அத்தியாயங்களில் சொல்லப்பட்ட (ஆத்மஸ்வபாவ அநுஸந்தாநரூபமான) அக்ஷரயோகத்தைக் கைப்பற்றி அதற்கு உபாயமாக ஸகலகர்மபலங்களிலும் பற்றை விட்டிரு.

[அப்படி பலாபேக்ஷயின்றி நம்முடைய ஆராதநரூபமாய் அநுஷ்டிக்கப்பட்ட கர்மத்தால் ஸித்தித்த ஆத்மத்தியாநத்தாலே அவித்தைமுதலியவெல்லாமறைவுகளும் நீங்கி, பிறகு நமக்கு ஆளாயிருக்கையேஸ்வரூபமான ஜீவாத்மஸாக்ஷாத்காரம்பிறந்து பிறகு தன்னடையே நம்மிடத்தில் சிறந்தபக்தியுண்டாகுமென்று திருவுள்ளம். [இப்படியே § மேலேஅருளிச்செய்யப்போகிறார்.]

† ஆசைப்பட்டதை யடையுந்திறமை
$ நினைத்ததைச்செய்து முடிக்குந்திறமை.

§ స్వకర్మణా తమభ్యర్చ్య సిద్ధిం విన్దతి మానవః என்று தொடங்கி విముచ్య నిర్మమశ్శాన్తో బ్రహ్మభూయాయ కల్పతే। బ్రహ్మభూతః ప్రసన్నాత్మా న శోచతి న కాంక్షతి। సమస్సర్వేషు భూతేషు మద్భక్తిం లభతే పరామ్ என்றுமளவாக வருளிச்செய்யப் போகிறார்.

శ్రేయోహిజ్ఞానమభ్యాసాత్ జ్ఞానాద్ధ్యానంవిశిష్యతే।
ధ్యానాత్కర్మఫలత్యాగస్త్యాగాచ్ఛాన్తిరనన్తరమ్॥౧౨॥

(கஉ) கனத்தபக்தியில்லாமல் (எம்பெருமானை ஸ்மரிப்பதென்கிற) அப்பியாஸயோகம் செய்வது கடினமாகையால் அதைக்காட்டிலும் (ஆத்மாவின் உண்மையைச் சிந்தித்திருந்து அதனால்) அக்ஷரமென்னும் ஆத்மஸ்வரூப ஸாக்ஷாத்காரஞ் செய்வதே (ஆத்மாவுக்கு இதஞ்செய்வதில்) சிறந்தது. (ஸித்தியாகாத) ஆத்மஸ்வரூப ஸாக்ஷாத்கார ஞானத்தைப்பார்க்க (அதற்கு உபாயமான) ஆத்மஸ்வரூபத்தியானமே (ஆத்மாவுக்கு நன்மை செய்வதில்) சிறந்தது. (ஸித்தியாகாத) அந்த ஆத்மஸ்வரூபத்தியானத்தைக் காட்டிலும் (அதற்குபாயமான) பலாபேக்ஷையற்ற கர்மாநுஷ்டானமே சிறந்தது. இப்படி பலாபேக்ஷயின்றிக் கர்மத்தை யநுஷ்டித்தால் உடனே பாவம் நசிக்கையாலே மனதுக்கு சாந்தி பிறக்கும். [அப்படி மனது சாந்தியடைந்தால் ஆத்மத்தியானம் கைபுகுதும். அந்தத் தியானத்தால் ஆத்மப்பிரத்தியக்ஷம் பிறக்கும்; ஆத்மப்பிரத்தியக்ஷ ஞானத்தால் பரபக்தியுண்டாகுமென்று திருவுள்ளம்.]

[இதனால் பக்தியோகஞ்செய்யச் சக்தியற்றவனுக்கு ஆத்மநிஷ்டையே சிறந்தது; அந்த ஆத்மநிஷ்டையும் மனது சாந்தமாகாத பக்ஷத்தில் நிலைக்கமாட்டாதாகையால் அதைக்காட்டிலும் அது நிலைப்பதற்காக ஆத்மஞானத்தையுட்கொண்டு பலாபேக்ஷையின்றிச் செய்யும் கர்மநிஷ்டையே மேலானது என்றதாயிற்று.]

(அ-கை.) பலாபேக்ஷயின்றிக் கர்மயோகஞ் செய்பவனுக்கு வேண்டுங்குணங்கள் சொல்லப்படுகின்றன.

అద్వేష్టా సర్వభూతానాం మైత్రః కరుణ ఏవ చ।
నిర్మమో నిరహఙ్కారః సమదుఃఖసుఖః క్షమీ॥౧౩॥
సన్తుష్టస్సతతంయోగీ యతాత్మా దృఢనిశ్చయః।
మయ్యర్పితమనోబుద్ధిర్యోమద్భక్తస్స మే ప్రియః॥౧౪॥

(கங-கச) (தன்னைப்பகைத்தாலும் தன் விஷயத்தில் உபகாரஞ்செய்தாலும்) ஒருப்பிராணியையும் பகைக்காமல் "என்னுடைய பிழைக்குத்தக்கபடி எம்பெருமானலேவப்பட்ட விவைகள் விரோதிக்கின்றன" வென்றும், அப்படியே "இவைகள் உபகாரஞ்செய்கின்றன" என்றும் நினைத்தவனாய், (தன்னைப் பகைப்பதோ தனக்கு உபகாரஞ்செய்வதோ) எந்தப்பிராணியிடத்திலும் ஸ்நேஹபுத்தியைச்செய்து வந்து, (அவைகளுக்குத் துயர் நேரிட்டால் அவை கஷ்டத்தில்) கருணைபுரியுமவனாய், (சரீரம் இந்திரியம் மற்றும் அவைகளைச்சேர்ந்தவை இவையெல்லாவற்றிலும்) என்தென்கிற அபிமானமில்லாமல் (தேஹமே ஆத்மாவென்கிறப்) பிராந்தியற்றவனாய், இன்பதுன்பங்களை (முறையே விரும்பாமலும் வெறுக்காமலும்) ஸமமாகவெண்ணியவனாய், (அப்படி யிவனெண்ணினாலும் இவனை லொழிக்கப்போகாமல் வருகின்ற சீதோஷ்ணாதி

களைப்)பொறுத்தவனும், தன்னடையே கிடைத்ததைக்கொண்டு ஸந்தோஷித்தவனும், எப்போதும் (பிரகிருதிக்குப்புறம்பான ஆத்மஸ்வரூபத்தையே) சிந்தித்திருப்பவனும், மனதைக்(கண்டபடியோடவொட்டாமல்) அடக்கி,(அத்தியாத்மசாஸ்திரத்தில் சொன்னவர்த்தங்களில்) திடமானநிச்சயத்தோடு, "பகவானான வாசுதேவனே பலாபேக்ஷயின்றி யநுஷ்டிக்கப்படுங் கர்மத்தால் ஆராதிக்கப்பட்டவனாய் எனக்கு ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை யுண்டுபண்ணிக் கொடுக்கப்போகிறானென்று" மனதையும் புத்தியையும் நம்மிடதில் வைத்தவனுமெவனிருக்கிறானோ அந்த பக்தன் நமக்கு இஷ்டன்.

యస్మాన్నోద్విజతే లోకో లోకాన్నోద్విజతే చ యః।
హర్షామర్షభయోద్వేగైర్ముక్తో యస్స చ మే ప్రియః॥౧౫॥

(கரு) கர்மநிஷ்டனான யாவனொருவன் லோகத்திற்குப் பிரதிகூலமாயிருக்கும்படிசிறிதுஞ் செய்யமாட்டானோ,எவனைக்குறித்து ஒருப்பிராணியும் விரோதஞ்செய்யமாட்டாதோ,[என்றால் இவன்ஒன்றையும் விரோதமாகநினைப்பவனல்ல னென்றபடி] (இப்படியிருக்கையாலே ஒருவஸ்துவினிடத்திலும் ஸந்தோஷமாவது கோபமாவது பயமாவது பயங்கரமான செயலாவது செய்யாதவனுமிருக்கின்ற அப்படிப்பட்ட) இவனும் நமக்கு இஷ்டன்.

అనపేక్షశ్శుచిర్దక్ష ఉదాసీనో గతవ్యథః।
సర్వారమ్భపరిత్యాగీ యో మద్భక్తస్స మే ప్రియః॥౧౬॥

(கசு) ஆத்மாவைத்தவிர மற்றொன்றிலும் அபேக்ஷயில்லாமல் சாஸ்திரத்தில் சொல்லிய திரவியங்களைக்கொண்டு சரீரத்தை வளர்த்தவனாய், சாஸ்திரோக்த வியாபாரங்களைத் தேர்ந்தநுஷ்டிப்பதில் ஸமர்த்தனாய், மற்றவைகளில் தட்டாதவனாய்,சாஸ்திரோக்தமான காரியங்களைச் செய்யும்பொழுது இவனால் ஒழிக்கப்போகாதபடி வருகின்ற சீதம் உஷ்ணம் முதலிவைகளில் துயரப்படாதவனாய் சாஸ்திரத்தில் சொன்னதைத்தவிர மற்றெந்தகருமத்தையுங் கைவிட்டவனாய், இப்படி யெவனிருக்கிறானோ அந்த பக்தன் எனக்கிஷ்டன்.

యో న హృష్యతి న ద్వేష్టి న శోచతి న కాఙ్క్షతి।
శుభాశుభపరిత్యాగీ భక్తిమాన్ యస్స మే ప్రియః॥౧౭॥

(கஎ) யாவனொருவன் லோகத்திலுள்ள மனுஷியாளுக்கு ஸந்தோஷஹேதுவாயிருப்பதைக்கொண்டு தான் ஸந்தோஷியாமலும், துவேஷஹேதுவாயிருப்பதைக்கொண்டு துவேஷப்படாமலும்,துயரத்துக்குக்காரணமான பெண்டுபிள்ளை வகைறாக்களின் நாசத்தைக்கண்டு துயரப்படாமலும், அப்படி ஒன்றும் நேராதபக்ஷத்தில் அதை வரட்டுமென்று கோராமலும், பாவம்போல் புண்ணியமும் ஸம்ஸாரஹேதுவாகையால் இரண்டையும் விட்டவனாய் எவன் என்னிடத்தில்மாத்திரம் பக்தியோடிருக்கிறானோ அவன் எனக்கு இஷ்டன்.

సమశ్శత్రౌచమిత్రేచ తథామానావమానయోః।
శీతోష్ణసుఖదుఃఖేషు సమస్సఙ్గవివర్జితః॥౧౮॥
తుల్యనిన్దాస్తుతిర్మౌనీ సన్తుష్టోయేనకేనచిత్।
అనికేతఃస్థిరమతి ర్భక్తిమాన్మే ప్రియోనరః॥౧౯॥

(கஅ-ககூ) * சத்துரு மித்திரான் மானம் அவமானம் சீதம் உஷ்ணம் சுகம் துக்கம் இவைகளில் ஸமனாய், ஒன்றிலும் பற்றின்றி ஆத்மாவிடத்தில் சலியாத மனம்பொருந்தியிருக்கையாலே வீடு முதலியவைகளிற் பொருந்தாமல் என்னிடத்தில் பக்தியோடு கூடியவன் எனக்கு இஷ்டன்.

(அ-கை) ஆகையால் ஆத்மநிஷ்டனைப்பார்க்க பக்திநிஷ்டன்சிறந்தவனென்பதையருளிச்செய்யா நின்றுகொண்டு, தொடங்கின விஷயத்தைத் தலைக்கட்டுகிறார்.

యేతుధర్మ్యామృతమిదం యథోక్తంపర్యుపాసతే।
శ్రద్దధానామత్పరమా భక్తాస్తేఽతీవమేప్రియాః॥౨౦॥

(உ0) தர்மத்தைவிட்டு நீங்காமல் அமிருதமயமாயிருக்கின்ற (அதாவது பலனுக்கேற்ற உபாயமாயிருக்கின்ற) இந்த பக்தியோகத்தை எவர்களானால் சொன்னபடி உபாஸிக்கிறார்களோ அவர்கள் நமக்கு மிகுதியும் இஷ்டர்கள்.

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,
பனிரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ:.
ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# பதின்மூன்றாவது அத்யாயம்.

:o:

## அவதாரிகை.

முதல் ஆறு அத்தியாயங்களில், பரம பலமாய் பரப்பிரம்மமாய் பகவானாகிய வாஸுதேவனை யடைவிக்கும் உபாயமான பக்தியென்கிற பகவத் உபாஸநத்துக் கங்கமாயிருக்கிற ஆத்மவிஷயமான வாஸ்தவக்ஞாநமானது, ஞாநயோக கர்மயோகங்களென்கிற இரண்டு நிஷ்டைகளாலும் ஸாதிக்கப்படுமென்று சொல்லப்பட்டது. நடுவில் ஆறு அத்தியாயங்களிலோ பரமபலமா

---

* 13 - முதலிய சுலோகங்களில் சத்துருமித்திராதிகளிடத்தில் பகைமை முதலியவைகளைப் பாராட்டாமை சொல்லப்பட்டது. இங்கே அந்த சத்துரு முதலியவர்கள் நெருங்கி வந்தாலும் மனந்தாழாமை சொல்லப்படுகிறதென்று விசேஷங் கண்டுகொள்க.

னவெம்பெருமானுடைய உண்மையான தன்மையையும் அவன் மஹிமைக ளையும் அறிந்து அவனுக்கே அற்றுத்தீருவதென்கிற பக்தியோகத்தின்நிலை சொல்லப்பட்டது. மிகுந்த ஐசுவரியத்தைக் கோரியவர்களுக்கும், கைவல்லி யத்தைமாத்திரம் கோரியவர்களுக்கும் பக்தியோகமானது அவர்கள் கோரிக் கையைச் சாதிக்குமென்றுங் கூறப்பட்டது. இப்பொழுது இந்த மேல் ஆறு அ த்தியாயங்களிலும் முன்னீராறு அத்தியாயங்களிற் சொல்லப்பட்டவைகளா ளப் பிரகிருதி புருஷர்களின் சேர்க்கையான பிரபஞ்சத்தினுடையவும் ஈசு வரனுடையவும் உண்மையும், கர்மம் ஞானம் பக்தி இவைகளின் ஸ்வரூபமும், இவைகளை யநுட்டிக்கும்படியும், இவையெல்லாமே சோதிக்கப்படுகின்றன. அதில் இந்த பதின்மூன்றுவது அத்தியாயத்தில் தேஹாத்மாக்களின் ஸ்வ ரூபமும், தேஹத்தின் உண்மையை விசாரிப்பதும், தேஹத்தைக் காட்டிலும் வேறான ஆத்மாவையடையு முபாயமும், (பிரித்தறியப்பட்ட)அவ்வாத்மஸ்வ ரூபசோதநமும், அப்படிப்பட்ட ஆத்மாவுக்கு அசேதநத்தோடு சேர்க்கையுண் டாவதற்குக் காரணமும் அதைப் பிரித்தறியும்படியும் சொல்லப்படுகிறது.

శ్రీభగవానువాచ॥ ఇదంశరీరంకౌన్తేయ క్షేత్రమిత్యభిధీయతే।
ఏతద్యోవేత్తితంప్రాహుః క్షేత్రజ్ఞ ఇతితద్విదః॥౧॥

(க) எம்பெருமானருளிச்செய்கிறார். அர்ச்சுந! இந்த சரீரம் (அதா வது:—நான் தேவன், நான் மனிதன், நான் பருத்தவன், நான் இளைத்தவன் என்று போக்தாவான ஆத்மாவோடுகூட ஒன்று பட்டுத் தோற்றுகிற இந்த சரீரம்) 'இதைக்காட்டிலும் வேறுபட்டு போக்தாவாயிருக்கிற ஆத்மாவின் போகத்துக்காக ஏர்ப்பட்ட க்ஷேத்திரம்' என்று சரீரத்தின் உண்மை யறிந்த வரால் சொல்லப்படுகிறது. இதைப் பிரித்துப்பிரித்தும் மொத்தமொத்தமாயு ம் 'இதை நான் அறிகிறேன்,'என்று எது அறிகிறதோ அது (அறியப்படுகின்ற) இந்த சரீரத்தைக்காட்டிலும் (அறிவதான) * வேறு பொருளென்று ஆத்மா வின் உண்மையறிந்தபேர்கள் சொல்லுகிறார்கள். [ஆனால் அறிகிறவஸ்துவான இதின் ஸ்வரூபத்தை யோகத்தால் திருந்தியிருக்கிற மனதினாலறியலாமேயல் லது கண் முதலியவைகளா லறியப்போகாமையாலே மூடர்கள் (பிரகிருதி வி

---

* குடம் முதலியவைகளை யறியும்போது 'தேவனாகிய நான் அல்லது மனிதனாகிய நான் குடத்தையறிகிறேன்' என்று தேஹத்தையும் ஆத்மாவை யும் ஒன்றுபடுத்தி நினைத்தாலும், தேகத்தையறியும்போது இதை நான் அறிகி றேனென்று அறியப்படுவதாய் பிரித்தறிகையாலே, சரீரங்கூட குடம்முதலி யவைகளைப்போல் ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதே. ஆனால் தேஹ மும் அதுவும ஒன்றாய்த் தோன்றுவானேனென்றால் உண்மையில் பசுவும் ப சுத்தன்மையும்போல் ஆத்மாவைவிட்டுப் பிரிந்தால் நிலைக்கமாட்டாமல் சரீ ரம் சேர்ந்திருக்கையாலே ஒன்றெனத் தோன்றக்கூடும்.

காரமான) சரீரத்தையே ஆத்மாவென்று நினைத்துவிடுகிறார்கள். இப்படியே மேலே $ அருளிச்செய்கிறார்.

క్షేత్రజ్ఞం చాపి మాం విద్ధి సర్వక్షేత్రేషు భారత।
క్షేత్రక్షేత్రజ్ఞయోర్జ్ఞానం యత్తజ్జ్ఞానం మతం మమ॥౨॥

(௨) அர்ச்சுந! தேவர் மனிதர் முதலான வெல்லாச்சரீரங்களிலும் அறிவதே வடிவாயுள்ள அந்த வஸ்துவும் (அதாவது ¶ க்ஷேத்திரக்ஞனென்கிற ஜீவனும்) நாந்தானென்றறி, [என்றால்-சரீரமானது ஆத்மாவோடு சேர்ந்திருப்பதே ஸ்வபாவமாய் தனித்து நில்லாமைகொண்டு அதை ஆத்மாவோடு ஒன்றுபடுத்தியே குறிப்பிடுவதுபோல், ஆத்மாவும் பகவானோடு சேர்ந்திருப்பதே ஸ்வபாவமாய் தனித்திராமையாலே பகவானோடு ஒன்றுபடுத்தியே குறிக்கத்தக்கது என்றபடி.]

[மண்முதலியவைகளின் தொகையான சரீரமும் அதற்குப் புறம்பான ஆத்மாவும், (பகவானுக்கு சரீரமாயிருப்பதே ஸ்வரூபமாயும் ஸ்வபாவமாயுமிருக்கிறபடியால்) பகவத்ரூபங்களென்று சுருதிகள் சொல்லுகின்றன. எங்ஙனே யென்னில்:—యః పృథివ్యాం తిష్ఠన్ పృథివ్యా అన్తరో యం పృథివీ న వేద యస్య పృథివీ శరీరమ్ యః పృథివీమన్తరో యమయతి స త ఆత్మాన్తర్యామ్యమృతః என்று தொடங்கி య ఆత్మని తిష్ఠన్నాత్మనోఽన్తరో యమాత్మా న వేద యస్యాత్మా శరీరం య ఆత్మానమన్తరో యమయతి స త ఆత్మాన్తర్యామ్యమృతః இத்தியாதிகள். இப்படி எம்பெருமான் ஆத்மாக்களுக்கு அந்தரியாமியாயிருக்கைதான் அவனை அவைகளோடொன்றுபடுத்திச் சொல்லுவதற்குக்காரணம் என்று అహమాత్మా గుడాకేశ సర్వభూతాశయస్థితః என்றும் న తదస్తి వినా యత్స్యాన్మయా భూతం చరాచరమ్ என்றும் విష్టభ్యాహమిదం కృత్స్నమేకాంశేన స్థితో జగత్ என்றும் மேலுங்கீழும் அருளிச்செய்து, நடுவில் ఆదిత్యానామహం విష్ణుః இத்தியாதியில் ஒன்று படுத்தி யருளிச்செய்தார்.]

తత్క్షేత్రం యచ్చ యాదృక్చ యద్వికారి యతశ్చ యత్।

(௩) இப்படி சரீரத்தையும் ஆத்மாவையும் பிரித்தறிவதோடு அவையிரண்டும் நமக்குச் சரீரமாயிருக்கையாலே நமது ஸ்வரூபங்கள் என்று அறிவதுதான் ஞானமென்று நம்முடைய ஸித்தாந்தம்.

இங்கே சிலர் சொல்லுவது:—'க்ஷேத்திரக்ஞனும் நானே யென்றறி' என்கையாலே ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் ஐக்கியம் (அதாவது ஒருமை) தோன்றுகிறது; ஆகையால் ஈசுவரனாயிருக்கச்செய்தே பரப்பிரம்மத்துக்கு ஜீவ

---

$ ఉత్క్రామన్తం స్థితం వాపి భుఞ్జానం వా గుణాన్వితమ్। విమూఢా నానుపశ్యన్తి పశ్యన్తి జ్ఞానచక్షుషః॥ என்று மேலே அருளிச்செய்கிறார்.

¶ 'க்ஷேத்திரக்ஞனென்கிற ஜீவனும்' என்கிற உம்மையாலே க்ஷேத்திரமென்கிற சரீரமும் நாந்தானென்று சொன்னதாய்த் தெரிகிறது.

த்தன்மையும் வருகிறதென்று ஒப்புக்கொள்ளவேண்டும்: அந்த ஜீவத்தன்மை யொழிவதற்காகத்தான் இப்படி ஒன்று படுத்தி உபதேசிக்கிறார்; இப்படி ஆப்தரான பகவானுடைய உபதேசத்தாலே, (இதுபாம்பல்ல பழுதை என்கிற ஆப்தனுடைய உபதேசத்தால் பாம்பென்கிறப்பிராந்தியொழிவதுபோல) ஜீவனென்கிறப் பிராந்தியொழிந்துபோம் என்று சொல்லுகிறார்கள்.

அவர்களைக் கேட்கிறோம். இங்கே உபதேசிக்கின்ற பகவானாகிய பரமேசுவரனுக்கு ஆத்மஸ்வரூபஞானம் பிறந்து அதனால் அக்ஞானம் ஒழிந்ததா? இல்லையா? ஒழிந்தபக்ஷத்தில் - யாதொரு விசேஷமுமில்லாமல் ஞானமாத்திரமாய் தனியே விளங்குகிற ஆத்மாவில் அதற்குவிரோதமான நினைவுபிறக்க இடமில்லாமையாலே குந்திபுத்திரனை வேறாகப்பார்ப்பதும் உபதேசிப்பதும் மற்றுங்கூடாது. இனி ஆத்மஸாக்ஷாத்கார மில்லாமையாலே அக்ஞானம் ஒழியவில்லையென்னும்பக்ஷத்தில் அக்ஞானியாயிருந்து உபதேசிப்பதென்பது சிறிதுங்கூடாது; மேலும் பகவானே "அர்ச்சுந! உனக்கு தத்துவந் தெரிந்தவர்கள் ஞானத்தை யுபதேசிப்பர்கள்" என்று அருளிச்செய்திருக்கிறார். ஆகையால் இப்படிப்பட்ட வாதங்களெல்லாம், ஸ்ருதி, ஸ்மிருதி, இதிஹாஸம்,புராணம், நியாயம் இவைகளுக்கும் தங்கள் வார்த்தைக்கும் விரோதமாய் லோகத்தை மருளச்செய்வதற்காகச்செய்யும் அக்ஞானிகளின் வாதங்களாகையால் இவைகளை ஆதரிக்கலாகாது.

ஆனால் உண்மையேதென்றால் சொல்லுகிறோம்:—அசித்தும், சித்தும், பிரம்மமும் முறையே போக்கியமும் போக்தாவும் ஈசனுமென்று அவைகளின் ஸ்வரூபத்தைப்பிரித்து சிலச் சுருதிகள் சொல்லுகின்றன. அவையாவன:— అస్మాన్మాయీసృజతే విశ్వమేతత్తస్మింశ్చాన్యో మాయయాసన్నిరుద్ధః॥ మాయాంతుప్రకృతింవిద్యాన్మాయినంతుమహేశ్వరమ్॥ క్షరంప్రధానమమృతాక్షరంహరః క్షరాత్మానావీశతేదేవఏకః॥ సకారణంకరణాధిపాధిపో నచాస్యకశ్చిజ్జనితా నచాధిపః, ప్రధానక్షేత్రజ్ఞపతిర్గుణేశః॥ పతింవిశ్వస్యాత్మేశ్వరం శాశ్వతం శివమచ్యుతమ్॥ జ్ఞాజ్ఞౌద్వావజా వీశనీశౌ॥ నిత్యోనిత్యానాంచేతనశ్చేతనానాం ఏకోబహూనాం యోవిదధాతికామాన్॥ భోక్తాభోగ్యం ప్రేరితారఞ్చమత్వా॥ పృథగాత్మానం ప్రేరితారంచమత్వా జుష్టస్తతస్తేనామృతత్వమేతి॥ తయోరన్యఃపిప్పలంస్వాద్వత్తి అనశ్నన్నన్యోఽభిచాకశీతి॥ అజామేకాంలోహితశుక్లకృష్ణాంబహ్వీః ప్రజాంజనయన్తీం సరూపామ్। అజోహ్యేకోజుషమాణోఽనుశేతే జహాత్యేనాం భుక్తభోగామజోఽన్యః॥ గౌరనాద్యన్తవతీసాజనిత్రీ భూతభావినీ॥ సమానేవృక్షేపురుషోనిమగ్నోఽనీశయాముహ్యతి శోచమానః। జుష్టంయదా పశ్యత్యన్యమీశమస్యమహిమానమితివీతశోకః இத்யாதிகள்.

அப்படியே இங்கும் అహఙ్కార ఇతీయమ్మే భిన్నా ప్రకృతిరష్టధా। అపరే యమితస్త్వన్యాం ప్రకృతింవిద్ధిమేపరామ్। జీవభూతామ్॥ సర్వభూతానికౌన్తేయ ప్రకృతింయాన్తిమామికామ్॥ కల్పక్షయేపునస్తాని కల్పాదౌవిసృజామ్యహమ్॥ ప్రకృతింస్వామవష్టభ్య విసృజామిపునఃపునః। భూతగ్రామమిమం కృత్స్న మవశం ప్రకృతేర్వశాత్। మయాధ్యక్షేణప్రకృతి స్సూయతేసచరాచరమ్। హేతునానేన కౌన్తేయ జగద్విపరివర్తతే॥ ప్రకృతిం పురుషఞ్చైవవిద్ధ్యనాదీ ఉభావపి॥ మమయోనిర్మహద్బ్రహ్మ తస్మిన్గర్భం దధామ్యహమ్। సమ్భవస్సర్వభూతానాం తతోభవతిభారత என்று சொல்லப்படுகின்றது.

இப்படி போக்தாவாகவும் போக்கியமாகவுமிருக்கிற சித்தும் அசித்தும் எந்த நிலையிலும் பரமபுருஷனுக்குச்சரீரமாய் அவனால் ஏவப்படுமதாயிருக்கையாலே அவனை விட்டுப்பிரிந்து நிலைக்கமாட்டாதென்றும், பரமபுருஷன் அவைகளுக்கு ஆத்மாவாயிருக்கிறானென்றும் சில சுருதிகள் சொல்லுகின்றன. எங்ஙனேயென்னில்:— యఃపృథివ్యాన్తిష్ఠన్ పృథివ్యా అన్తరోయంపృథివీనవేద యస్యపృథివీశరీరమ్ యఃపృథివీమన్తరోయమయతి என்று தொடங்கி య ఆత్మనితిష్ఠన్నాత్మనోన్తరోయమాత్మానవేద యస్యఆత్మాశరీరం యఆత్మానమన్తరోయమయతి సతఆత్మాన్తర్యామ్యమృతః என்றும்: அப்படியே యఃపృథివీమన్తరే సఞ్చరన్ యస్యపృథివీశరీరం యంపృథివీనవేద என்று தொடங்கி యో౽క్షరమన్తరేసఞ్చరన్ యస్యాక్షరంశరీరం యమక్షరంనవేద యోమృత్యుమన్తరే సఞ్చరన్ యస్యమృత్యుశ్శరీరం యంమృత్యుర్నవేద ఏషసర్వభూతాన్తరాత్మా౽పహతపాప్మాదివ్యోదేవ ఏకోనారాయణః என்றும் అన్తఃప్రవిష్టశ్శాస్తా జనానాం సర్వాత్మా என்றும் சொல்லுகின்றன.

இப்படி எந்த நிலையிலும் சேதநாசேதநங்களைச் சரீரமாயுடையனாய் அவைகளைப்பிரகாரமாகக்கொண்ட பரமபுருஷனே, காரியமான நிலையிலும் காரணமான நிலையிலும் ஜகத்ரூபமாயிருக்கிறானென்று இவ்வர்த்தத்தை யறிவிப்பதற்காகச்சில சுருதிகள் (காரியநிலையிலும்காரணநிலையிலுமுள்ள ஜகமானது அந்த பகவானே என்று) சொல்லுகின்றன. எங்ஙனே யென்னில்:— సదేవసోమ్యేదమగ్ర ఆసీదేకమేవాద్వితీయమ్। తదైక్షతబహుస్యాం ప్రజాయేయేతి తత్తేజో౽సృజత என்று தொடங்கி సన్మూలాస్సోమ్యేమాస్సర్వాః ప్రజాస్సదాయతనాస్సత్ప్రతిష్ఠాఐతదాత్మ్యమిదంసర్వం తత్సత్యంస ఆత్మా తత్త్వమసి శ్వేతకేతో என்றும் அப்படியே సో౽కామయతబహుస్యాం ప్రజాయేయేతి సతపో౽తప్యతసతపస్తప్త్వా ఇదం

సర్వమసృజత என்று தொடங்கி సత్యఞ్చానృతఞ్చసత్యమభవత్ என்றும் హన్తా హమిమా స్తిస్రో దేవతా అనేనజీవేనాత్మనానుప్రవిశ్య నామరూపే వ్యాకరవాణి ॥ తత్సృ ష్ట్వా తదేవాను ప్రావిశత్ తదనుప్రవిశ్యసచ్చత్యచ్చాభవత్ ...... విజ్ఞానఞ్చావిజ్ఞానఞ్చ సత్యఞ్చానృతఞ్చ సత్యమభవత్ என்றும் சொல்லுகின்றன.

ஆகையால் காரியமான நிலையுடன் கூடியவனும் காரணமான நிலையுடன் கூடியவனும், ஸ்தூலமாயும் சூக்ஷமமாயுமுள்ள சேதநாசேதனங்களைச் சரீரமாகவுடைய பரமபுருஷனே. ஆகையால் காரணத்தைக்காட்டிலும் காரியம் வேறல்லாமையாலே, காரணத்தை அறிந்தமாத்திரத்தில் காரியத்தையும் அறிந்ததாகக்கூடுமாகையால், ஒன்றை (அதாவது பிரம்மத்தை) அறிவதால் ஸர்வத்தையும் (அதாவது பிரபஞ்சத்தை) அறிவதாகுமென்கிற சுருதிப்பொருள் மிகவுஞ்சேரும்.

హన్తాహమిమా స్తిస్రో దేవతా నేనజీవేనాత్మనా నుప్రవిశ్య నామరూపేవ్యాకరవాణి என்கிற விடத்தில் తిస్రో దేవతాః என்று ஸகலமான அசித்துவஸ்துக்களையுஞ் சொல்லி அவற்றுள் பரமாத்ம சரீரமான ஜீவனுடைய உட்பிரவேசத்தாலே நாமரூபங்களை யேர்ப்படுத்துவதாகச் சொல்லுகையாலே ஸகலமான வாசகங்களும் அசித்துசித்துக்களுடன் கூடிய பரமாத்மாவையே குறிக்கின்றன. ஆகையால் காரணாவஸ்தையிலுள்ள பரமாத்மவாசகமான சப்தத்தைக் கொண்டு காரியவாசக சப்தத்தோடு ஒன்றுபடுத்தி முக்கியமாய்ச் சொல்லக் கூடும்.

ஆகையால் ஸ்தூலமும் ஸூக்ஷமமுமான சித்து அசித்துக்களைப் பிரகாரமாயுடைய பிரம்மமே காரியமும் காரணமுமாகையால் ஜகத்துக்குப்பிரம்மந்தான் *உபாதாநகாரணம். ஸூக்ஷமமான சித்தையும் அசித்தையுஞ் சரீரமாகக்கொண்டே பிரம்மம் காரணமாகின்றமையால் ஜகத்துக்குப் பிரம்மம் உபாதாந காரணமானாலும் மொத்தமாய்க்கொண்டு காரணமாகின்றமையால் சித்து அசித்துக்களுக்கும் பிரம்மத்துக்கும் ஸ்வபாவத்தில் கலப்பில்லாமை மிகுதியுஞ் சேரும்.

சித்திர வஸ்திரமானது, வெளுப்பு கறுப்பு செகப்பு நூல்களின் சேர்க்கையிலிருந்துண்டான போதிலும், வெண்மைமுதலிய நிறங்கள் அந்தந்த நூலுள்ள விடங்களில் மாத்திரம் ஸம்பந்தித்திருக்குமேயல்லது காரியமான நிலையிலும் வஸ்திரமுழுதும் ஒருவருணத்துக்குங் கலப்புக்கிடையாதன்றோ? அதுபோல் ஜகமானது சித்து அசித்துக்களின் சேர்க்கையிலுண்டானதேயாகிலும், காரியமான நிலையிலும் புசிக்குந்தன்மை புசிக்கப்படுந்தன்மை ஆளுந்தன்மை முதலியவைகளுக்குக் கலப்பில்லை.

ஆனால் அங்கே தனியேயிருக்கும்படியான சக்தியோடுகூடிய நூல்களே ஒருகால விசேஷத்தில் புருஷஇச்சையால் ஒன்று சேர்க்கப்பட்டு காரியமாயுங் காரணமாயுமிருக்கின்றது, இங்கோ! சித்தும் அசித்தும் எந்தநிலையிலும்

---

* பானைக்கு மண்ணையும், துணிக்கு நூலையும் உபாதாநகாரணமென்றறிக.

பரமபுருஷனுக்குச்சரீரமாய்க்கொண்டே அவனுக்குப்பிரகாரமாய் ஒரேபதார்த்தமாயிருக்கையாலே அவைகளைப் பிரகாரமாகக்கொண்ட பரமபுருஷந் தான்காரியமுங் காரணமுமாய் ஸகலசப்தத்துக்கும் பொருளாகிறான். இது தான் விசேஷம். ஸ்வபாவபேதமும் அதின் கலப்பின்மையும் அங்கு மிங்கும் ஸமமே.

இப்படியானபின்பு பரப்பிரம்மம் காரியத்திற் பிரவேசித்தபோதிலும் ஸ்வரூபத்தில் மாறுபாடு இல்லாமையாலே விகாரமில்லாமை மிகவும் சேரும். ஸ்தூலமாய்க்கொண்டு நாமரூபங்களாலே பிரிக்கப்பட்டுள்ள சித்துக்கும் அசித்துக்கும் ஆத்மாவாயிருக்கையாலே காரியத்தன்மையுங் கூடும். காரியத்தன்மை யாவதென்ன? ஒரு நிலையிலிருந்தது மற்றொரு நிலைக்கு வருவது தானே?

குணமில்லையென்கிற வாதமோ பரப்பிரம்மத்துக்கு ஹேயகுண ஸம்பந்த மில்லாமையாலே கூடும். அதெப்படியெனில் అపహతపాప్మా విజరో విమృత్యు ర్విశోకో విజిఘత్సో౽పిపాసః என்று ஹேயகுணங்களை விலக்கி సత్యకామస్స త్యసఙ్కల్పః என்று கல்யாணகுணங்களை விதிக்கின்ற சுருதியே, மற்றொருவிடத்தில் ஸாமான்னியமாய் குணமில்லையென்கிற நிஷேதம் ஹேயகுணவிஷயம் என்று வியவஸ்த்தை பண்ணிக்கொடுக்கிறது.

ஞானஸ்வரூபம் பிரம்மம் என்கிறவார்த்தையோ! ஸர்வஜ்ஞனாய் ஸர்வ சக்தியாய் நிகிலஹேயங்களுக்கு மெதிரான கல்யாணகுணங்களுக்கிடமாயிருக்கும் பிரம்மஸ்வரூபம் ஞானத்தைக்கொண்டே நிரூபிக்கத்தக்கதென்றும் தனக்குத்தானே பிரகாசிக்கையாலே ஞானஸ்வரூபமென்றும் ஒப்புக்கொண்டமையாலே சேரும். యస్సర్వజ్ఞస్సర్వవిత్ పరాస్యశక్తి ర్వివిధైవశ్రూయతే స్వాభావికీజ్ఞానబలక్రియాచ ॥ విజ్ఞాతారమరే కేనవిజానీయాత్ இத்தியாதிகளோ ஞாதாவென்பதைக் காட்டுகின்றன. సత్యంజ్ఞానమ్ இத்யாதிகளோ ஞானத்தைக் கொண்டே நிரூபிக்கவேண்டியதாயும் தனக்குத்தானேபிரகாசிப்பதாயுமிருக்கும் ஞானஸ்வரூபத்தன்மையைக் காட்டுகின்றன.

సో౽కామయత బహుస్యాం తదైక్షత బహుస్యామ్ ॥ తన్నామరూపాభ్యాం వ్యాక్రియత ॥ ఆత్మనివాఅరే దృష్టే శ్రుతే మతే విజ్ఞాతే ఇదం సర్వంవిదితంభవతి ॥ సర్వం తంపరాదాద్యో౽న్యత్రాత్మనస్సర్వంవేద తస్యహవా ఏతస్యమహతో భూతస్య నిశ్వసితమేతద్యదృగ్వేదః என்று பிரம்மமே தன்ஸங்கல்பத்தால் விசித்திரஸ்திரசர ரூப பதார்த்தஸ்வரூபமாயும் நாநாவிதமாயுமிருக்கிறபடியால் அதற்கெதிராகப்பிரம்மத்தை யொழிந்த வேறொருவஸ்து நாநாவிதமாயிருப்பதென்பது தத்துவமல்லவென்று நிஷேதிக்கப்படுகிறது;எங்ஙனே! మృత్యోస్స మృత్యుమాప్నోతియ

ఇహనానా నైవపశ్యతి || నేహనానాస్తికించన|| యత్రహిద్వైతమివభవతి|| తదితరఇతరం పశ్యతి యత్రత్వస్య సర్వమాత్మైవాభూత్ తత్కేనకం పశ్యేత్ இத்யாதியாலே நிஷே திக்கப்படுகிறது.

அதுவேயல்லது బహుస్యాంప్రజాయేయ இத்தியாதி சுருதியில் ஸித்த மாய் தன்ஸங்கல்பத்தால் பண்ணப்பட்டதாய் நாமரூபங்களை யடைவதால்வ ரும் பிரம்மத்தின் பலவாறு யிருக்குந்தன்மையை நிஷேதிக்கவில்லை. యత్రత్వ స్యసర్వమాత్మైవాభూత్ என்றுநிஷேதிப்பதற்குஆரம்பிக்கும்பொழுதே இவ்விஷ யம் సర్వంతంపరాదాద్యోన్యత్రాత్మనస్సర్వంవేద|| తస్యహవాఏతస్య మహతోభూత స్యనిశ్వసితమేతద్యదృగ్వేదః இத்தியாதியாலே ஸ்தாபிக்கப்பட்டது.

இப்படி சித்துக்கும் அசித்துக்கும் ஈசுவரனுக்கும் ஸ்வரூபபேதத் தையும் ஸ்வபாவபேதத்தையுங் கூறுகின்றனவும், காரியகாரண பாவத்தை யும் காரியத்தைக்காட்டிலும் காரணம் வேறென்பதையும் கூறுகின்றனவுமா ன ஸகல ஸ்ருதிகளுக்கும் விரோதமில்லையென்று சுருதிகளாலேயே அறி யப்படுகிறபடியால், பிரம்ம அக்ஞானவாதமும் ஔபாதிகப்பிரம்ம பேதவா தமும் மற்றும் வாதங்களும் அந்நியாய மூலங்களாயும் ஸகல ஸ்ருதிவிருத் தங்களாயு மிருக்கையாலே அவைகளுக்குச் சிறிதும் இடங்கிடைக்கமாட்டா தாகையால் அவ்விஷயத்தில் அதிகமாய் விரித்துரைத்ததுபோதும்.

సచయోయత్ప్రభావశ్చ తత్సమాసేన మేశృణు||3||

(ங) அந்த க்ஷேத்திரமென்பது என்னத் திரவியமோ எவைகளுக்கு ஆதாரமானதோ அதற்கு விகார மெப்படிப்பட்டதோ எந்தப்பிரயோஜனத் துக்காக அது உண்டாயிற்றோ அது எதின் ஸ்வரூபமோ அதையும்; அந்த க்ஷேத்திரக்ஞன் எப்படிப்பட்டவனோ எப்படிப்பட்டப் பிரபாவத்தோடு கூடியவனோ அவைகளையும் அர்ச்சுந! சுருக்கமாய்ச் சொல்லுகிறோம் கேள்.

ఋషిభిర్బహుధాగీతం ఛన్దోభిర్వివిధైఃపృథక్ ।
బ్రహ్మసూత్రపదైశ్చైవ హేతుమద్భిర్వినిశ్చితైః||4||

(ச) இந்த க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களுடைய உண்மையானது பரா சரர் முதலான ருஷிகளாலே அனேகவிதமாய்ச் * சொல்லப்பட்டது. இருக்

*అహంత్వంచతథాన్యేచ భూతైరూహ్యామపార్థివ| గుణప్రవాహపతితో భూతవర్గోపియాంత్యయమ్|కర్మవశ్యాగుణాహ్యేతే సత్త్వాద్యాఃపృథివీపతే। అవిద్యాసఞ్చితంకర్మ తచ్చాశేషేషుజన్తుషు| ఆత్మాశుద్ధోక్షరశ్శాన్తో నిర్గుణఃప్రకృతేఃపరః। என்றும் పిణ్డఃపృథగ్యతః పుంసశ్శిరఃపాణ్యాదిలక్షణః| తతోహమితికుత్రైతాం సంజ్ఞాంరాజన్ కరోమ్యహమ్ என்றும் కింత్వమేతచ్ఛిరఃకిన్ను ఊరస్తవతథోదరమ్ । కిముపాదాదికంత్వంవైతవైతత్కిమ్మహీపతే।సమస్తావయవేభ్యస్త్వం పృథగ్భూపవ్యవస్థితః।కోహమిత్యేవనిపుణో భూత్వాచిన్తయపార్థివ என்று சொல்லப்பட்டது இப்படி பிரிக்கப்பட்ட சரீ ரமும் ஆத்மாவும் ఇన్ద్రియాణిమనోబుద్ధిస్సత్త్వం తేజోబలంధృతిః వాసుదేవాత్మకాన్యాహుః క్షేత్రంక్షేత్రజ్ఞఏవచ என்று வாசுதேவரூபங்களென்றும் சொல்லப்பட்டது.

கு யஜுஸ்ஸு ஸாமம் அதர்வமென்கிற ‡ வேதங்களாலே தேகத்தினுடைய வும் ஆத்மாவினுடையவும் ஸ்வரூபமும் பிரித்தோதப்பட்டது. பிரம்மத் தைப் பிரதிபாதிக்கும் $ ஸூத்திரமென்னும் பதங்களாலும் தக்கஹேதுக்க ளைக்கொண்டு நிர்ணயிக்கப்பட்டது. [இப்படி வெகுவாய்ச் சொல்லப்பட்ட க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞருடைய உண்மையை நான் சுருக்கமாயுந்தெளி வாயுஞ் சொல்லுகிறேன் கேள் என்று தாத்பரியம்.]

మహాభూతాన్యహఙ్కారో బుద్ధిరవ్యక్తమేవచ।
ఇన్ద్రియాణిదశైకంచ పఞ్చచేన్ద్రియగోచరాః॥౫॥
ఇచ్ఛాద్వేషస్సుఖందుఃఖం సఙ్ఘాతశ్చేతనాధృతిః।
ఏతత్క్షేత్రంసమాసేన సవికారముదాహృతమ్॥౬॥

(ரு-சு) க்ஷேத்திரத்தையுண்டாக்குந் திரவியங்களான பிருதிவி அப்பு தே யு வாயு ஆகாயம் என்கிற மஹாபூதங்களும், பூதங்களுக்கு ஆதியான அஹங் காரமும், புத்தியென்கிற மஹானும், அவ்வியக்தமென்கிற பிரகிருதியும், இவை யெல்லாம் க்ஷேத்திரமென்கிற சரீரத்தைப்பற்றிக்கிடக்கும். (வாய் கை கால் ஆஸநம் உபஸ்த்தம் என்னும் ஐந்துகர்மேந்திரியங்கள்; செவி உடல் கண் நா வு மூக்கு என்னும் ஐந்து ஞானேந்திரியங்கள்; மனம் ஒன்று; ஆக) பதினொரு இந்திரியங்களும், இந்திரிய விஷயங்களான சத்தம் பரிசம் உருவம் ரஸம் கந் தம் இவைகளும், இச்சை த்வேஷம் சுகம் துக்கம் என்கிற *க்ஷேத்திரவி

‡ తస్మాద్వాఏతస్మాదాత్మన ఆకాశస్సమ్భూతః ఆకాశాద్వాయుః వాయోరగ్నిః అగ్నేరాపః అద్భ్యఃపృథివీ పృథివ్యాఓషధయః ఓషధీభ్యోఽన్నం అన్నాత్పురుషః సవా ఏషపురుషోఽన్నరసమయః என்று சரீரஸ்வரூபத்தைச் சொல்லி அதற்குள்ளாகப் பிராணமயத்தையும் அதற்குள்ளாக மனோமயத்தையும் சொல்லி, తస్మాద్వా ఏత స్మాన్మనోమయాదన్యోఽన్తర ఆత్మావిజ్ఞానమయః என்று க்ஷேத்திரக்ஞனென்கிற ஜீ வஸ்வரூபத்தைச்சொல்லி తస్మాద్వాఏతస్మాద్విజ్ఞానమయా దన్యోఽన్తరఆత్మానన్దమయః என்று க்ஷேத்திரக்ஞனுக்குக்கூட அந்தராத்மாவாக ஆநந்தமயனான பரமாத் மா இருக்கிறானென்று வேதங்கள் அறைகின்றன.

$ பிரம்மஸூத்திரங்களாலும் నవియదశ్రుతేః என்று தொடங்கி க்ஷேத் திரத்தின்படிசொல்லி, నాత్మాశ్రుతేర్నిత్యత్వాచ్చతాభ్యః என்றுதொடங்கி జ్ఞోత ఏవ இத்யாதிகளாலே க்ஷேத்திரக்ஞனுடைய உண்மையான நிலை நிச்சயிக்கப் பட்டு அது: పరాత్తుతచ్ఛ్రుతేః என்று பகவானால் பிரவர்த்திக்கப்படுமதாகை யாலே பகவத்ஸ்வரூபமென்றுமிடமுஞ் சொல்லப்பட்டது.

*இச்சை முதலியவைகள் ஆத்மாவின் தர்மமாயினும் ஆத்மாவுக்கு க்ஷேத்திரத்தோடு ஸம்பந்தப்படுவதாலுண்டாகின்றமையால் க்ஷேத்திரகாரி யமென்று அதின் விகாரமாகச்சொல்லுகிறது. அவை ஆத்மதர்மமென்று மிடமோ పురుషస్సుఖదుఃఖానాంభోక్తృత్వేహేతురుచ్యతే என்று மேலே சொ ல்லப்போகிறார்.

காரங்களும் கூடி, சுகதுக்கங்களைப் புசித்து போகமோக்ஷங்களைச் சாதிக்கும் ஜீவனுக்கு ஆதாரமாய் ஏற்பட்டிருக்கின்றன. [என்றால்:—பிரகிருதிமுதல் பிருதிவி வரையிலுள்ள திரவியங்களாலுண்டாய், இந்திரியங்களுக்கு ஆதாரமாய், இச்சை துவேஷம் சுகம் துக்கம் என்று விகாரப்பட்டு பூதங்களின் தொகையாய்,சேதனனுடைய சுகதுக்க போகத்துக்கு ஆதாரமாயிருக்கையே பயனுயுள்ளதுதான் க்ஷேத்திரமென்னப்படுமென்றபடி.] இப்படி க்ஷேத்திர ஸ்வரூபத்தை அதின் காரியத்துடன்சேர்த்துச் சுருக்கமாய்ச்சொன்னோம்.

(அ-கை.) இனி க்ஷேத்திரத்தின் காரியங்களில் ஆத்மஞானத்துக்கு வேண்டிய குணங்கள் விளம்பப்படும்.

అమానిత్వమదమ్భిత్వ మహింసాక్షాన్తిరార్జవమ్।
ఆచార్యోపాసనంశౌచం స్థైర్యమాత్మవినిగ్రహః॥౭॥
ఇన్ద్రియార్థేషువైరాగ్య మనహఙ్కార ఏవచ।
జన్మమృత్యుజరావ్యాధి దుఃఖదోషానుదర్శనమ్॥౮॥

(எ-அ) உயர்ந்த ஜநங்களைத்திரஸ்காரஞ் செய்யாமை, தார்மிகனென்னும் கீர்த்தியடையவேண்டுமென்கிற எண்ணத்தோடு தர்மாநுஷ்டாநம் பண்ணுமை, மநோவாக்காயங்களால் பிறருக்குப்பீடை செய்யாமை, பிறரால் தான் பீடிக்கப்பட்டாலும் சித்தவிகாரமடையாமை, பிறர் விஷயத்தில் முக்கரணங்களும் ஸரியாய் நடக்கை,ஆத்மக்ஞாநத்தையுபதேசித்த ஆசாரியனிடத்தில் பணிந்து பிரசிநம்பண்ணி ஸேவித்தல் முதலியவை, ஆத்மச்ஞாநத்துக்கும் தத்ஸாதநத்துக்கும் வேண்டியதாய் சாஸ்திரத்தில் சொன்னபடி மனோவாக்காயங்களுக்குண்டான யோக்கியதை, அத்தியாத்மசாஸ்திரத்தில் சொன்ன வர்த்தத்தில் திடனுடைமை, ஆத்மஸ்வரூபத்தை யொழிந்த மற்ற விஷயங்களினின்று மனதை நிவர்த்திசெய்கை, ஆத்மாவை யொழிந்த மற்றவைகளில் தோஷபுத்தியாலே வெறுப்புடைமை, தேஹமே ஆத்மாவென்கிற அபிமானமில்லாமை, அப்படியே தனதல்லாத ஸகலபதார்த்தங்களிலும் தனதென்கிற அபிமானமில்லாமை சரீரம் உள்ளவரையில் பிறப்புஇறப்பு கிழத்தனம் நோய் துயரம் என்கிற தோஷங்கள் ஒழிக்கப்போகாதென்கிற நினைவு.—

అసక్తిరనభిష్వఙ్గః పుత్రదారగృహాదిషు।
నిత్యంచసమచిత్తత్వ మిష్టానిష్టోపపత్తిషు॥౯॥
మయిచానన్యయోగేన భక్తిరవ్యభిచారిణీ।
వివిక్తదేశసేవిత్వ మరతిర్జనసంసది॥౧౦॥
అధ్యాత్మజ్ఞాననిత్యత్వం తత్త్వజ్ఞానార్థదర్శనమ్।
ఏతజ్జ్ఞానమితిప్రోక్త మజ్ఞానంయదతోఽన్యథా॥౧౧॥

(அ-க-கo-கக) ஆத்மாவை யொழிந்தவைகளிற் பற்றின்மை, பிள்ளை பெண்டீர் வீடுமுதலியவைகளில் சாஸ்திரோக்தமாய் வேண்டுமவ்வளவு தவிர அதிகப்பிடிப்பில்லாமை, ஸங்கல்பத்தால் வரும் இஷ்டா நிஷ்டங்களில் ஸங

தோஷமும் வெறுப்புமில்லாமை,ஸர்வேசுவரனிடத்தில் சலியாதபத்தியுடைமை,ஜநமில்லாத தேசத்தில் வாஸம்பண்ணுகை, ஜநங்களுள்ளவிடத்தில் விருப்புமின்மை,ஆத்மக்ஞாநத்தில் நிஷ்டை,தத்துவக்ஞாநத்தைத்தரும்படி சிந்திக்கை,இவைகள்தான் ஞாநம். இவையொழிந்த மற்றவையெல்லாம்அக்ஞாநம். [என்றால் க்ஷேத்திரத்தோடு ஸம்பந்தப்பட்ட புருஷனுக்கு இவைகள்தான் ஆத்மக்ஞாந ஸாதநங்கள். மற்றவைகளெல்லாம் ஆத்மக்ஞாநத்துக்கு விரோதியாகையாலே அக்ஞாநகரங்களென்றபடி.]

(அ-கை.) இனி ఏతద్యోవేత్తి என்று அறிபவனாகக் கூறப்படும் க்ஷேத்திரக்ஞனுடைய ஸ்வரூபம் சோதிக்கப்படுகின்றது.

జ్ఞేయంయత్తత్ప్రవక్ష్యామి యజ్ఞాత్వామృతమశ్నుతే।
అనాదిమత్పరంబ్రహ్మ నసత్తన్నాసదుచ్యతే॥౧౨॥

(கஉ) அமாநித்வந் தொடக்கமான ஸாதநங்களால் அடையவேண்டுமதானப் பிரத்தியக்ஆத்மாவின் ஸ்வரூபத்தை (அதாவது ஜீவஸ்வரூபத்தைச்) சொல்லுகிறேன்கேள். அதையறிந்தால் பிறப்பு இறப்பு மூப்பு முதலியப் பிரகிருதி தருமத்தைக்கடந்த அமிருதமென்கிற ஆத்மாவையடையலாகும். இந்தப் பிரத்தியக் ஆத்மாவுக்கோ* ஆதியுமில்லை அந்தமுமில்லை ¶ இது எனக்கு பட்டது. பெரிதென்கிற குணத்தோடுகூடியது; அதாவது சரீரத்தைகாட்டிலும் வேறுபட்டதாய் † சரீராதிகளால் அளவிடப்போகாததாயிருக்குமது. காரி

---

* இவ்வர்த்தம்,నజాయతేమ్రియతేవావిపశ్చిత్ என்று சுருதியிலுமோதப்படும். ¶ ఇతస్త్వన్యాం ప్రకృతింవిద్ధిమేపరామ్ జీవభూతామ్ என்றன்றோ இங்கும் சொல்லப்பட்டது? ஆகையால் எம்பெருமானுக்குச் சரீரமாயிருக்கையாலே ஆத்மஸ்வரூபம் எம்பெருமானுக்கு சேஷப்பட்டது. இப்படியேசுருதியும் சொல்லுகிறது எங்ஙனே! యఆత్మనితిష్ఠన్నాత్మనోన్తరోయమాత్మానవేద యస్యాత్మాశరీరం యఆత్మానమన్తరోయమయతి என்றும் அப்படியே సకారణంకరణాధిపాధిపో సచాస్యకశ్చిజ్జనితానచాధిపః ప్రధానక్షేత్రజ్ఞపతిర్గుణేశః என்றுமிவைதொடக்கமாக.

† சரீராதிகளால் அளவிடப்போகாததென்று எப்படி சொல்லக்கூடுமெனின்: సచానన్త్యాయకల్పతే என்று அவன் அளவிலியாகிறானென்றன்றோ சுருதியில் ஓதுகிறது? ஆனால் சரீரத்தால் அளவிடப்பட்டிருப்பதேனென்றால்:—இதுகருமத்தால்வந்தது. கருமப்பிணியினின்று விடுபட்டவனுக்குத்தான் அளவின்மை கூறப்படுகிறது.

மூலத்தில் బ్రహ్మ சப்தத்தாலே ஆத்மாவைக்குறிக்கக்கூடுமோவெனில் கூடும். அப்படி ஆத்மாவினிடத்தில் பிரம்மசப்தப்பிரயோகம் பண்ணவிடமுண்டோ வெனின் உண்டு. எங்ஙனே సగుణాః సమతీత్యైతాన్ బ్రహ్మభూయాయకల్పతే। బ్రహ్మణోహిప్రతిష్ఠాహమమృతస్యావ్యయస్యచ బ్రహ్మభూతః ప్రసన్నాత్మానశోచతినకాఙ్క్షతి సమస్సర్వేషుభూతేషుమద్భక్తింలభతేపరామ్ என்று பலவிடங்களில் பிரயோகிக்கப்பட்டுளது.

யம் காரணம் என்கிற இரண்டு நிலையுமில்லாமையாலே இதின் ஸ்வரூபத்தை ஸத் என்றுவது அஸத் என்றுவது சொல்லப்போகாது. [காரியமான நிலையில் தேவன்முதலிய நாமமும் ரூபமுமுடைத்தாயிருக்கையாலே ஸத்என்று சொல்லப்படுகிறது: அதற்கு யோக்கியதையில்லாமையாலே காரணமான நிலையில் அஸத்என்றும்சொல்லப்படுகிறது: ஆகையால்ஸத்என்றுவது அஸத்என்றுவது சொல்லப்போகாது.இப்படியே சுருதி‡అసద్వా ఇదమగ్ర ఆసీత్ తతో వై సదజాయత॥ என்றும் తద్ధేదం తర్హ్యవ్యాకృతమాసీత్ తన్నామరూపాభ్యాం వ్యాక్రియత என்றுஞ் சொல்லுகிறது. காரியம் காரணம் என்கிற இவ்விரண்டு நிலையும் ஆத்மாவுக்குக் கருமத்தால்வந்ததே யல்லது ஸ்வரூபத்தால் வந்ததல்லாமை யாலே ஸத்என்றுவதுஅஸத் என்றுவது சொல்லப்போகாதென்றபடி.]

సర్వతః పాణిపాదం తత్ సర్వతోఽక్షిశిరోముఖమ్।
సర్వతశ్శ్రుతిమల్లోకే సర్వమావృత్య తిష్ఠతి॥౧౩॥

(கங) பரிசுத்த ஆத்மஸ்வரூபமானது எப்புறத்திலும் கைகால்களுடையது (அதாவது; கைகால்களால் செய்யும் வியாபாரத்தைச் செய்யுமது) அப்படியே எப்புறத்திலும் கண் தலை முகம் செவி இவைகளுடையது.[అపాణిపాదో జవనో గ్రహీతా పశ్యత్యచక్షుః స శృణోత్యకర్ణః என்று பரப்பிரம்மம் கைகால்களில்லாததா யிருந்தாலும் எந்தப்பக்கத்தாலும் கைகால்களின் வியாபாரங்களைச் செய்யுமென்று சுருதியில் ஓதப்படுகையாலே பரிசுத்தஸ்வபாவமான பிரத்தியக் - ஆத்மாவும் பரப்பிரம்மத்துக்கு ♁ ஸமமாகையாலே இதுவும் கைகால்களின் வியாபாரங்களை யெப்புறத்தாலும் செய்யுமென்பதும் ஸுஸித்தம்.] மேலுமிது லோகத்திலுள்ள ஸகலபதார்த்தங்களையும் வியாபித்துக்கொண்டிருக்கிறது.

సర్వేన్ద్రియగుణాభాసం సర్వేన్ద్రియవివర్జితమ్।
అసక్తం సర్వభృచ్చైవ నిర్గుణం గుణభోక్తృ చ॥౧౪॥

---

‡ అసద్వా இத்தியாதி வாக்கியம் காரண நிலையிலுள்ள பரப்பிரம்மத்தைச்சொல்வதேயானாலும், காரணநிலையிலுள்ள பிரம்மம், நாமரூபங்கள்கொண்டுபிரிக்கப்போகாதபடி ஸூக்ஷ்மமாயிருக்கிற சித்தையும் அசித்தையும் சரீரமாயுடைத்தாயிருக்கையால்,காரணாவஸ்த்தையில் க்ஷேத்திரமும் க்ஷேத்திரக்ஞனும் அஸத்சப்தத்தால் கூறப்படும். அப்படிப்பட்ட அவஸ்த்தை க்ஷேத்திரக்ஞனுக்குக் கருமத்தால் வந்ததாகையால் அதில்லாத பரிசுத்த ஸ்பாவமானது ஸத் என்றுவது அஸத் என்றுவது சொல்லத்தக்கதன்று.

♁ பிரத்யக் ஆத்மா பிரம்மத்துக்கு ஸமமாகிறதென்கிற விஷயம், తదా విద్వాన్ పుణ్యపాపే విధూయ నిరంజనః పరమం సామ్యముపైతి என்கிற சுருதி சொல்லுகிறது. ఇదం జ్ఞానముపాశ్రిత్య మమ సాధర్మ్యమాగతాః என்று மேலும் சொல்லப்போகிறார்.

(கச) பின்னும் எப்படிப்பட்டதென்றால்:—இந்திரியவிருத்திகளாலே விஷயங்களை யறியவல்லது. ஸ்வபாவத்தாலோஇந்திரியவியாபாரமில்லாமலே அறியவல்லது. ஸ்வபாவத்தில் தேவாதி சரீரங்களில் ஒட்டாதது. அப்படியிருக்கச்செய்தே தேவாதி ✤ ஸகல சரீரங்களையும் தரிக்குமது. அப்படியே ஸ்வபாவத்தில் ஸத்துவம் முதலிய குணஹீநமாயிருந்ததேயாகிலும் ஸத்துவாதி குணங்களைப் புசிப்பதில் திறமையுடையது.

బహిరన్తశ్చభూతానా మచరంచరమేవచ।
సూక్ష్మత్వాత్తదవిజ్ఞేయం దూరస్థంచాన్తికేచతత్॥౧౫॥

(கரு) பிருதிவி முதலிய பூதங்களை விட்டு சரீரமற்றதாய் வெளியிலிருக்கிறது. அவைகளுக்குள்ளுமிருக்கிறது. జక్షత్ క్రీడన్ రమమాణః స్త్రీభిర్వా యానైర్వా இத்யாதிப்படியே யதேச்சாவிஹாரங்களில் ஸஞ்சாரமற்றதாயும் ஸஞ்சாரத்தோடு கூடியதாயுமிருக்கிறது. இப்படி ஸர்வசக்தியாய் ஸர்வஜ்ஞமாயிருக்கும் ஆத்மதத்துவம் இந்த சரீரத்தில் இருந்ததேயாகிலும், அதிஸூக்ஷ்மமாகையால் சரீரத்தைக்காட்டிலும் வேறுபட்டதென்று ஸம்ஸாரிகளால் அறியப்போகாததாயிருக்கும். அமாநித்வம்முதலிய குணங்களில்லாமல் விபரீதகுணங்களுள்ளவருக்குத் தந்தேகத்திலிருக்கச்செய்தே வெகு தூரத்திலிருக்கும். அந்த நற்குணங்களுடையவருக்கோ ஸமீபத்திலிருக்கும்.

అవిభక్తంచభూతేషు విభక్తమివచస్థితమ్॥౧౬।

(கரு௬) தேவர் மனிதர் முதலிய வெல்லாப்பூதங்களிலுமிருக்கும் ஆத்மவஸ்துவானது,அறிவதே ஸ்வரூபமாயிருக்கையாலே பிரிக்கப்படாததாயிருக்கும். அறியாதவருக்கோ இவன் தேவன் இவன் மனிதன் என்று தேவாதி ரூபமாய்ப் பிரிக்கப்பட்டதுபோல் தோற்றும்.

(அ-கை.) அறிவதென்கிற ஸ்வபாவவிசேஷத்தைக் கொண்டு ஆத்மாவை தேகத்தைக்காட்டிலும் வேறாக அறியலாகும் என்று ஆதியில்சொல்லப்பட்டது; இப்பொழுது வேறுவிதங்களாலும் அறியலாகுமென்கிறார்.

భూతభర్తృచతజ్జ్ఞేయం గ్రసిష్ణుప్రభవిష్ణుచ॥౧౬॥

(கசு) சரீரமாய்ச் சேர்ந்திருக்கும் பிருதிவி முதலிய பூதங்களைப் பரிக்கின்ற இதை,அப்பூதங்களைக்காட்டிலும் வேறாயிருப்பதாக அறியத்தக்கது. அப்படியே பூதஸம்பந்தமானவைகளைக்கிரஹிப்பதாயும் இதை அறியத்தக்கது. அப்படிஇதனால் கிரஹிக்கப்பட்டு வேறுஉருவமாய் விகாரப்படுகின்ற அன்னம் முதலியவைகளுக்கும் இதுஉற்பத்திகாரண மென்றும் அறியத்தக்கது.[இறந்த சரீரம்கிரஹிக்கவாவது உண்டுபண்ணவாவது செய்யக்காணாமையாலே பூதங்களின்சேர்க்கையான க்ஷேத்திரமானது கிரஹிக்கவாவது உண்டுபண்ணவாவது பரிக்கவாவது செய்யுந்திறத்ததன்றென்று நிச்சயிக்கப்படுகிறது.]

జ్యోతిషామపితజ్జ్యోతి స్తమసఃపరముచ్యతే।
జ్ఞానంజ్ఞేయంజ్ఞానగమ్యం హృదిసర్వస్యవిష్ఠితమ్॥౧౭॥

---

✤ இவ்வர்த்தம் సఏకధాభవతి త్రిధాభవతి இயாதி ஶ்ருதிஸித்தம்.

(௧௭) தீபம், சூரியன், இரத்திநம் முதலியவைகளுக்கும் இதுதான் ஒளியைத்தருகின்றது. [என்றால் தீபாதிகளில் கூட ஆத்மாவின் காந்தியான ஞானந்தான் பிரகாசிக்கின்றது; தீபாதிகளோ குடம் முதலிய விஷயத்துக்கும் இந்திரியத்துக்கும் உண்டான ஸம்பந்தத்துக்கு விரோதியாய் வரும் இருளைப்போக்குதல்மாத்திரஞ் செய்கிறது. அவ்வளவு மாத்திரத்தாலே அவைகளைப் பிரகாசகமென்கிறோம்.] மேலும் ஆத்மவஸ்துவானது, தமஸ்ஸு என்னும் சூக்ஷ்மப் பிரகிருதியைக்காட்டிலும் புறம்பானதென்று சொல்லப்படும். அதுவுமின்றி ஞாநமே வடிவானதென்றும் அறியத்தக்கது. இது அமாநித்துவம் முதலிய ஞாநஸாதநங்களாலே அறியப்படும். இது மனிதர் முதலானோருடைய இருதயத்தில் விசேஷமாய் நிலைபெற்றிருக்கும்.

ఇతి క్షేత్రం తథా జ్ఞానం జ్ఞేయం చోక్తం సమాసతః।
మద్భక్త ఏతద్విజ్ఞాయ మద్భావాయోపపద్యతే॥౧౮॥

(௧௮) இப்படி మహాభూతాన్యహంకారః என்று தொடங்கி సంఘాతశ్చేతనాధృతిః என்று மளவாக க்ஷேத்திரதத்துவஞ் சுருக்கமாய்ச் சொல்லப்பட்டது. అమానిత్వం தொடங்கி తత్త్వజ్ఞానార్థదర్శనమ్ என்றுமளவாக அறியவேண்டும்ஆத்மதத்துவத்தின் ஞாநஸாதநம் சொல்லப்பட்டது. అనాదిమత్పరమ్ என்று தொடங்கி హృది సర్వస్య విష్ఠితమ్ என்றுமளவாக அறியவேண்டும் க்ஷேத்திரக்ஞனுடைய உண்மையானது சுருக்கமாய்ச்சொல்லப்பட்டது. அர்ச்சுந! இப்படி என்னிடத்தில் பக்தியோடுகூடி இந்தக்ஷேத்திரத்தின் உண்மையையும் க்ஷேத்திரத்தைக்காட்டிலும் வேறான ஆத்மஸ்வரூபத்தையடையும் உபாயத்தின் உண்மையையும் க்ஷேத்திரஜ்ஞனுடைய உண்மையையும் அறிந்தவன் என்னுடைய ஸ்வபாவத்தை(அதாவதுஸம்ஸாரத்துக்குட்படாமையை) அடையும்படியான நிலைக்கு வருவான்.

(அ-கை.) இனி மிகவும் வேறுபட்ட ஸ்வபாவங்களானப்பிரகிருதியும் ஆத்மாவும் அநாதிகாலமாய்க்கலந்திருக்கின்றமையும், கலந்திருக்கு மிவைகளின் காரியபேதமும், கலப்பதற்குக்காரணமுங் கூறப்படுகின்றன.

ప్రకృతిం పురుషం చైవ విద్ధ్యనాదీ ఉభావపి।
వికారాంశ్చ గుణాంశ్చైవ విద్ధి ప్రకృతిసంభవాన్॥౧౯॥

(௧௯) அர்ச்சுந! பிரகிருதியும் புருஷனும்அநாதிகாலமாய் கலந்துக்கொண்டிருக்கின்றன வென்றறி. அப்படியே இச்சை துவேஷம் முதலிய ஸம்ஸார ஹேதுவான விகாரங்களும், மோக்ஷஹேதுவான அமாநித்துவம் முதலியகுணங்களும் பிரகிருதியினின்று முண்டானவைகளென்றறி. [புருஷனோடு அநாதிகாலமாய்க்கலந்து சரீரரூபமாய் வருகின்ற பிரகிருதியானது தன் விகாரங்களான இச்சை துவேஷம் முதலியவைகளால் புருஷனைக்கட்டுப்படுத்துகின்றது; அதுவே அமாநித்துவம் முதலிய விகாரங்களாலே புருஷனுக்கு மோக்ஷத்தை யுண்டுபண்ணுகிறது என்று தாத்பரியம்.]

కార్యకారణకర్తృత్వే హేతుః ప్రకృతిరుచ్యతే।
పురుషః సుఖదుఃఖానాం భోక్తృత్వే హేతురుచ్యతే॥౨౦॥

(௨௦) காரியமான சரீரமென்ன, காரணமான ஞானேந்திரியகர்மேந்திரிய மனஸ்ஸுக்களென்ன இவைகள், வியாபாரம் செய்யும் விஷயத்தில் பிரகிருதிதான் காரணம். * [என்றால்:—போகத்துக்குச் சாதநங்களான கிரியைகளெல்லாம் புருஷனுலிருக்கப்பெற்ற சரீராகாரமாய் விகாரப்பட்டிருக்கிறப்பிரகிருதியைப் பற்றிக்கிடக்கின்றன வென்றபடி] பிரகிருதியுடன் கலந்த புருஷன் இன்பதுன்பங்களை யநுபவிப்பதில் ஹேதுவாகிறான். [என்றால் சுகதுக்காநுபவத்துக்கு இடமாயிருக்கிறானென்றபடி.]

(அ-கை.) இப்படி ஒன்றோடொன்று கலந்த பிரகிருதியுடையவும் புருஷனுடையவும் காரியபேதங்கள் சொல்லப்பட்டன. இப்பொழுது தன்னைத் தான் அநுபவிப்பதே சுகமாயிருந்தாலுகிலும் புருஷன், சப்தாதி விஷயங்களால் வரும் சுகதுக்கங்களை யநுபவிப்பதற்குக் காரணமாகிறானென்கிறார்.

పురుషః ప్రకృతిస్థో హి భుఙ్క్తే ప్రకృతిజాన్గుణాన్ ॥ ౨౦ ॥

(௨௦ஐ) தன்னைத்தான் அனுபவிப்பதேசுகமாயிருக்கும் புருஷன், பிரகிருதியோடு கலந்தவனாய் அத்தால் வரும் ஸத்துவாதி குணகாரியங்களான சுகதுக்காதிகளை யநுபவிக்கிறான்.

(அ-கை.) பிரகிருதியுடன் கலப்பதற்குக் காரணங்கூறுகின்றார்.

కారణం గుణసఙ్గోऽస్య సదసద్యోనిజన్మసు ॥ ౨౧ ॥

(௨௧) பூர்வபூர்வமான பிரகிருதியின் விகாரங்களான தேவமனுஷியாதி யோநிவிசேஷங்களில் இருந்த விப்புருஷன், அந்தந்த யோனிகளால் வரும் ஸத்துவாதி குணமயமான இன்பமுதலியவற்றில் பற்றியவனாய், அதற்குச் சாதகங்களான புண்ணிய பாபரூப கர்மங்களில் பிரவர்த்திக்கிறான். அநந்தரம் அந்த புண்ணியபாபங்களின் பயனைப் புசிப்பதற்காக நல்லதுங் கெட்டதுமான யோனிகளில் பிறக்கிறான். அநந்தரம் மறுபடி கர்மத்தைச் செய்யத்தொடங்கி யதனுல் பின்னும் பலவித யோனிகளில் பிறக்கிறான். [இப்படி அமாநித்துவம் முதலிய ஆத்மப்பிராப்திக் குறுப்பான குணங்களை யடைகிறவரையில் பிறந்தும் இறந்தும் ஸம்ஸரித்துப்போருகிறான்.]

ఉపద్రష్టానుమన్తా చ భర్తా భోక్తా మహేశ్వరః ।
పరమాత్మేతి చాప్యుక్తో దేహేऽస్మిన్ పురుషః పరః ॥ ౨౨ ॥

(௨௨) இந்த தேஹத்திலிருக்கு மிப்புருஷன் தேஹத்தின் பிரவர்த்திக்கேற்றவைகளான கோரிக்கைகளைக் கொண்டு தேஹத்துக்கு ○ உபத்திருஷ்

---

* புருஷனே அச்சரீரத்தை அதிஷ்டித்து மாத்திரமிருக்கிறான். அதைப்பற்றிதான் కర్తా శాస్త్రార్థవత్త్వాత్ இத்தியாதியாகச் சொல்லப்பட்டது. புருஷனைக்கர்த்தாவென்பதெல்லாம் சரீரத்தை அதிஷ்டிப்பதற்கு வேண்டும் பிரயத்தினத்துக்கு ஹேதுவாதல்பற்றி.

○ உபத்திரஷ்டா - கூடிப்பார்ப்பவன்.

டாவாகவும் § அநுமந்தாவாகவுமிருக்கிருன். அப்படியே தேஹத்தைப் பரிக்கவும் பரிக்கிருன். அப்படியே தேஹப்பிரவர்த்தியாலுண்டாகு மின்பதுன்பங்களை யனுபவிப்பவனுமாகிருன். இப்படி தேஹத்தைத் தரித்தும் ஆண்டும் அதற்குப் பதியாயிருந்தும் போருகையாலே, தேகம் இந்திரியம் மனம் இவைகளைக்குறித்து ¶ மஹேசுவரனென்றுஞ் சொல்லப்படுகிருன். அதுவுமின்றி இத்தேஹத்தில் தேஹம் இந்திரியம் மனம் இவைகளைக்குரித்து பர்மாத்துமாவென்றும் சொல்லப்படுகிருன். $

[అనాదిమత్పరం இத்தியாதியால் சொல்லப்பட்ட அளவற்ற ஞாநசக்திகளுடன்கூடிய விப்புருஷன், பிரகிருதி ஸம்பந்தத்தால் வரும் குணஸம்பந்தத்தால் இந்த தேஹத்திற்குமாத்திரம் மஹேசுவரனுயும் பரமாத்மாவாயுமாகிருனென்றபடி.]

యఏవంవేత్తిపురుషం ప్రకృతించగుణైస్సహ।
సర్వథావర్తమానోఽపి నసభూయోఽభిజాయతే॥౨౩॥

(உங) இப்படி கீழ்ச்சொன்ன ஸ்வபாவத்தோடு கூடிய புருஷனையும் கீழ்ச்சொன்ன ஸ்வபாவத்துடன் கூடிய பிரகிருதியையும் இனி சொல்லப்போகிற ஸ்வபாவத்தோடு கூடிய ஸத்துவம் தொடக்கமான குணங்களையும் எவன் உள்ளபடியேபிரித்து அறிகிருனே அவன் தேவமனுஷ்யாதி தேஹங்களையடைந்து அதிகவருத்தப்பட்டுக்கொண்டிருந்த போதிலும் மறுபடி பிரகிருதியால் கட்டுப்படான்.

[என்றுல்:—அளவில்லாத ஞாநமே வடிவமாய் பாவத்தை யொழித்திருக்கிற ஆத்மாவை அந்த தேஹம் கழிந்தவுடனே யடைகிருனென்று தாத்பரியம்.]

ధ్యానేనాత్మనిపశ్యన్తి కేచిదాత్మానమాత్మనా।
అన్యేసాంఖ్యేనయోగేన కర్మయోగేనచాపరే॥౨౪॥

(உச) யோகம் ஸித்தித்தவர்களான சிலர், தம் சரீரத்தில் ஆத்மாவைத் தியாநயோக யுக்தமான மனதைச்கொண்டு பார்க்கிருர்கள். யோகஸித்தியாகாத சிலர், ஸாங்கியயோகத்தாலே மனதை யோகத்துக்கு யோக்கியமாம்படி பண்ணி ஆத்மாவைக் காண்கிருர்கள். பின்னும் சிலர் ஞாநயோகஞ் செய்யத்தகுந்தவர்களானுலும் தகாதவர்களானுலும் தாம் சுலபமான உபாயத்தைக்கைப்பற்றிப் பெயர் பெற்றவர்களாய், ஞாநத்தையுட்கொண்ட கர்மாநுஷ்டாநத்தைப்பண்ணி மனதைக்கொண்டு யொகத்துக்கு வேண்டும் யோக்கியதையைச் சம்பாதித்து பிறகு ஆத்மாவைப்பார்க்கிருர்கள்.

---

§ அநுமந்தா - செய்யச்சம்மதிப்பவன்.

¶ ஆத்மாவை மஹேசுவரனென்று శరీరం యదవాప్నోతి యచ్చాప్యుత్క్రామతీశ్వరః। గృహీత్వైతానిసంయాతి వాయుర్గన్ధానివాశయాత్ என்பதனுல் சொல்லப்போகிருர்.

§ இப்படியே ஆத்மசப்தமும், தேஹத்திலும் மனதிலும் அநந்தரம் பிரயோகிக்கப்படுகிறது, ధ్యానేనాత్మనిపశ్యన్తికేచిదాత్మానమాత్మనా என்று.

உக

అన్యేత్వేవమజానన్తః శ్రుత్వాన్యేభ్య ఉపాసతే।
తేపిచాతితరన్త్యేవ మృత్యుం శ్రుతిపరాయణాః॥౨౫॥

(௨௫) ஆத்மஸாக்ஷாத்காரத்துக்கு ஸாதநங்களான கர்மயோகாதிகளை அநுஷ்டிக்க அதிகாரமில்லாத பின்னுஞ் சிலர், தத்துவந்தெரிந்த ஞானிகளிடத்தில் கர்மயோகாதிகளைக்கேட்டு அநுஷ்டித்து ஆத்மாவையுபாஸிக்கிறார்கள். அவர்களும் ஆத்மாவையடைந்து மரணத்தை யொழிக்கிறார்கள். எவர்களால் கேட்பதே காரியமாயிருக்கிறார்களோ அவர்களும் மெள்ளமெள்ள கர்மயோகாதிகளைச்செய்யத் தொடங்கி மரணாதிகளை யொழிக்கிறார்கள்.

(அ-கை.) அநந்தரம் பிரகிருதியோடு கலந்த ஆத்மாவைப் பிரித்தறியும் வகை சொல்லவேண்டி, தாவரமும் ஜங்கமமுமான ஸகலப் பிராணியும் சேதநாசேதநங்களின் சேர்க்கையால் உண்டாகிறதென்கிறார்.

యావత్సఞ్జాయతే కిఞ్చిత్ సత్త్వం స్థావరజఙ్గమమ్।
క్షేత్రక్షేత్రజ్ఞసంయోగాత్తద్విద్ధి భరతర్షభ॥౨౬॥

(௨௬) ஓ பரதகுலமன்னா! தாவரமோ ஜங்கமமோ, எந்தப்பிராணியும் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களின் சேர்க்கையினால் உண்டாகிறது. [சேர்ந்தால்மாத்திரம் உண்டாகுமேயல்லது பிரிந்திருந்தால் உண்டாகமாட்டாதென்று தாத்பரியம்.]

సమం సర్వేషు భూతేషు తిష్ఠన్తం పరమేశ్వరమ్।
వినశ్యత్స్వవినశ్యన్తం యః పశ్యతి స పశ్యతి॥౨౭॥

(௨௭) இப்படி ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற ஸகலப்பிராணிகளிலும், தேவாதிவிகாரங்களடையாமல் தனித்து ஆங்காங்கு அந்தந்த தேஹம் இந்திரியம் மனம் இவைகளைக்குறித்து பரமேசுவரனாய் விளங்கும் ஆத்மாவானது, (ஞாதாவாய்க்கொண்டு) எங்கும் ஸமமாய் அந்த சரீராதிகள் நாசமடைந்தாலும் தான் நாசமடையாததாயிருக்கிறதென்று எவன் அறிகிறானோ, அவன் ஆத்மாவை உள்ளபடியே யறிவான்.

[எவனாலல் தேவாதிகளைப்போல் ஆத்மாவும் விகாரப்பட்டிருக்குமென்றும் பிறப்பிறப்போடு கூடியதென்றும் நினைக்கிறானோ அவன் நித்தியஸம்ஸாரியாவானென்று திருவுள்ளம்.]

సమం పశ్యన్హి సర్వత్ర సమవస్థితమీశ్వరమ్।
న హినస్త్యాత్మనాత్మానం తతో యాతి పరాం గతిమ్॥౨౮॥

(௨௮) தேவர்முதலிய ஸகல சரீரங்களிலும் அததற்குப்பதியாயும் ஆதாரமாயும் ஆள்பவனுமாயிருக்கும் சரீரேசுவரனான ஆத்மாவை, தேவாதிகள் போல் விகாரப்படாமல் ஞானமேவடிவாய் ஒரேமாதிரியாயிருப்பதாக எவன் அறிகிறானோஅவன், அப்படிப்பட்ட தன்மனதைக்கொண்டே தன் ஆத்மாவை ஸம்ஸாரத்தினின்றுங் கடைத்தேற்றுகிறான். இப்படி எங்கும் ஞாதாவாய் ஏக

ரூபனாயிருக்கிறதாகப் பார்ப்பதனால் பரமகதியை யடைகிறான். [அதாவது உண்மையான ஆத்மஸ்வரூபத்தை யடைகிறானென்றபடி.]

[தேவர் முதலான ஆகாரங்களோடு கூடி எங்கும் ஆத்மா வித்தியாஸ ரூபனாகவே யிருக்கிறானென்று அறியுமவன் ஸம்ஸாரஸாகரத்தின் நடுவில் தன் ஆத்மாவைத் தள்ளிவிடுவானென்பது திருவுள்ளம்.]

ప్రకృత్యైవచకర్మాణి క్రియమాణానిసర్వశః।
యఃపశ్యతితథాత్మాన మకర్తారంసపశ్యతి॥౨౯॥

(உகூ) ஸர்வகர்மங்களும் (முன்சொன்ன நியாயமாய்) பிரகிருதியாலே செய்யப்படுகின்றனவென்றும், அப்படியே ஆத்மாவானது ஞானாகாரமாய் அகர்த்தாவாயிருக்கிறதென்றும், அப்படியே இந்த ஆத்மாவுக்குப்பிரகிருதி யோடு சேர்க்கையும், சரீரத்தை அதிஷ்டித்திருக்கையும், அத்தால் சுகதுக்கானுபவமும், கர்மரூபமான அக்ஞானகாரியமென்றும் எவன் அறிகிறானோ அவன் ஆத்மாவை உள்ளபடியே பார்க்கிறான்.

యదాభూతపృథగ్భావ మేకస్థమనుపశ్యతి।
తతఏవచవిస్తారం బ్రహ్మసమ్పద్యతేతదా॥౩౦॥

(௩0) பிரகிருதியென்றும் புருஷனென்றும் இரண்டு தத்துவங்களாயுள்ள தேவர் முதலான ஸகல பூதங்களிலும் தேவத்தன்மை, மானிடத்தன்மை, குறுகியிருத்தல், நீண்டிருத்தல் முதலிய வேறுபாடானது, அந்தப்பிரகிருதி புருஷர்களில் பிரகிருதியென்னும் ஒருதத்துவத்தில்மாத்திரம் இருக்கிறதென்றும், அப்படியே அந்தப் பிரகிருதியினின்றுமே புத்திரன் பவுத்திரன் முதலிய விஸ்தாரமும் உண்டாகிறதென்றும் எப்பொழுது பார்க்கிறானோ அப்பொழுதுதான் (அளவற்ற ஞானமே வடிவமான) ஆத்மாவை யடைவான்.

అనాదిత్వాన్నిర్గుణత్వా త్పరమాత్మాయమవ్యయః।
శరీరస్థోపికౌన్తేయ నకరోతినలిప్యతే॥౩౧॥

(௩௧) சரீரத்தைக்காட்டிலும் வேறான ஸ்வபாவமான இந்த ஆத்மாவென்னும் * பரமாத்மா, சரீரத்திலிருந்தபோதிலும் ஆதியற்றதாகையாலே நாசமற்றது. ஸத்துவம் முதலிய குணங்களற்றதாகையால் செய்யுந்திறத்ததும் தேஹஸ்வபாவத்தால் கட்டுண்பதுமன்று.

(அ-கை.) நல்லது! குணமில்லாததாகையாலே செய்யுந்திறத்ததன்றென்பது யுக்தம். சரீரத்தோடு நித்தியமாய்க் கூடியிருக்கச்செய்தே சரீரஸ்வபாவங்களால் கட்டுப்படாதென்பதெப்படி? என்றால் அருளிச்செய்கிறான்.

యథాసర్వగతం సౌక్ష్మ్యదాకాశనోపలిప్యతే।
సర్వత్రావస్థితోదేహే తథాత్మానోపలిప్యతే॥౩౨॥

---

* பரமாத்மசப்தம் ஆத்மாவினிடத்திலும் பிரயோகிப்பதுண்டென்று முன்பு அருளிச்செய்திருப்பதை இங்கே அநுஸந்திப்பது.

(௩உ) ஆகாசமானது எங்கும் பரந்து எல்லாவஸ்துக்களோடுங் கூடியிருக்கச்செய்தேயும் சூக்ஷ்மமாகையாலே எந்த வஸ்துவின் ஸ்வபாவத்தோடுஞ் சேராமலிருப்பதுபோல், ஆத்மாவானது சூக்ஷ்மமாகையால் தேவர்முதலிய ஸகலசரீரங்களிலும் இருந்தபோதிலும் அவைகளின் ஸ்வபாவத்தோடு ஒட்டமாட்டாது.

యథాప్రకాశయత్యేకః కృత్స్నం లోకమిమం రవిః।
క్షేత్రం క్షేత్రీతథాకృత్స్నం ప్రకాశయతిభారత॥33॥

(௩௩) ஒரே சூரியன் தன் காந்தியால் இவ்வுலகங்களெல்லாவற்றையும் பிரகாசப்படுத்துவதுபோல் க்ஷேத்திரியான ஜீவனும் க்ஷேத்திரத்தை "இது என்க்ஷேத்திரம் இது இப்படிப்பட்டது" என்று உள்ளும் புறம்பும் எங்கும் கால்முதல் தலைவரையில் தன் ஞாநத்தாலே பிரகாசிப்பிக்கிறான். [ஆகையால் பிரகாசிக்கின்ற ஸகல லோகங்களையுங்காட்டில் பிரகாசிப்பிக்கும் ஆதித்தன் மிகவும் விலக்ஷணனாயிருத்தல்போல, அறியப்படும் க்ஷேத்திரத்தைக்காட்டிலும் அறிகின்ற ஆத்மா மிகவும் விலக்ஷணனென்று தாத்பரியம்.]

క్షేత్రక్షేత్రజ్ఞయోరేవ మన్తరంజ్ఞానచక్షుషా।
భూతప్రకృతిమోక్షంచ యేవిదుర్యాన్తితేపరమ్॥34॥

(௩௪) கீழ்ச் சொன்னபடி க்ஷேத்திரத்தினுடையவும் க்ஷேத்திரஜ்ஞனுடையவும் விசேஷத்தையும், க்ஷேத்திரக்ஞன் பிரகிருதியினின்றும் விடுபடுகையையும், விவேகக்ஞாநமென்னுங் கண்ணினால் எவர்கள் அறிவார்களோ அவர்கள் கட்டினின்றும் விடுபட்ட ஆத்மஸ்வரூபத்தை யடைவார்கள்.

[என்றால்—க்ஷேத்திரத்தையும் க்ஷேத்திரக்ஞனையும் பகுத்தறியும் ஞாநத்தால் அவைகளைப் பகுத்தறிந்து, தேவமனுஷ்யாதிரூபமாய் விகாரப்பட்டிருக்கும் பிரகிருதியினின்றும் விடுபடுமுபாயமான அமாநித்வாதிகளையும் அறிந்து நடப்பவர்கள், கட்டினின்று விடுபட்டவர்களாய் தானான தன்மையிலிருந்து ஞாநமே வடிவாயிருக்கும் ஆத்மாவை யடைவார்கள் என்று தாத்பரியம்.]

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,

பதிமூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ:.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# பதிநான்காவது அத்யாயம்.

———:0:———

## அவதாரிகை.

பதின்மூன்றும் அத்தியாயத்தில் - ஒன்றோடொன்று கலந்த பிரகிருதியினுடையவும் புருஷனுடையவும் ஸ்வரூபத்தின் உண்மையை யறிந்து, எம்

பெருமானிடத்தில் பக்தியுடன்கூடி அமானித்வாதிகளாலே பந்தத்தினின்று விடுபடுகிறானென்று சொல்லப்பட்டது. அதில் பந்தத்துக்குக் காரணம், பூர்விகமான ஸத்துவமுதலிய குணவிகாரமான சுகதுக்காதிகளிலுண்டான பற்றென்று சொல்லப்பட்டது. இப்பொழுது குணங்கள் பந்தத்துக்குறுப்பாகுந் தன்மையும், அக்குணங்களை நிவர்த்திபண்ணும் பிரகாரமும் கூறப்படுகின்றன.

శ్రీభగవానువాచ॥ పరంభూయఃప్రవక్ష్యామి జ్ఞానానాంజ్ఞానముత్తమమ్।
యద్జ్ఞాత్వామునయస్సర్వే పరాంసిద్ధిమితోగతాః॥౧॥

(க) பகவானருளிச்செய்கிறார் - அர்ச்சுந! பிரகிருதிக்கும் புருஷனுக்கும் உட்பட்டதாய் ஸத்துவம்முதலிய குணவிஷயமாயுள்ளதாய் முன்சொன்னதைக் காட்டிலும் வேறாயிருக்கிற மற்றொரு ஞானத்தை உனக்கு மறுபடியும் சொல்லுகிறோம்! இந்த ஞானமோ பிரகிருதி புருஷவிஷயமாய் அறிந்த வெல்லா ஞானத்துக்கும் மேலானது. இந்த ஞானத்தையறிந்த வெல்லா முனிகளும் இந்த ஸம்ஸாரமண்டலத்திற்குப் புறம்பான ஸித்தியை யடைந்தார்கள்.

(அ-கை) மறுபடியும் அந்த ஞானத்தைப் பலனோடுகொண்டு கூட்டுகிறார்.

ఇదంజ్ఞానముపాశ్రిత్య మమసాధర్మ్యమాగతాః।
సర్గేపినోపజాయన్తే ప్రళయేనవ్యథన్తిచ॥౨॥

(உ) இப்பொழுது நாம் சொல்லப்போகிற இந்த ஞானத்தை யடைந்து என்னோடு ஸமமானவர்கள், ஸிருஷ்டியிலும் ஸம்ஹாரத்திலும் அகப்படமாட்டார்கள்.

(அ-கை.) அநந்தரம் பிரகிருதியின் குணங்கள் பந்தத்துக்குக் காரணமாகும்படியையருளிச்செய்வாராய் ஸகலமான பூதங்களும் பிரகிருதிபுருஷாளின் சேர்க்கையா லுண்டாகின்றமையும் பகவானான தம்மாலேயே செய்யப்பட்டது என்கிறார்.

మమయోనిర్మహద్బ్రహ్మ తస్మిన్గర్భందధామ్యహమ్।
సమ్భవస్సర్వభూతానాం తతోభవతిభారత॥3॥

(ங) ஸகல ஜகத்துக்கும் பிறப்பிடமாய் § மஹத்பிரம்மமென்று சொல்லப்பட்ட எனது பிரகிருதியினிடத்து ஜீவனென்னும் * கர்ப்பத்தைத் தரிப்பி

---

§ భూమిరాపోనలోవాయుః ఖమ్మనో బుద్ధిరేవచ । అహఙ్కారఇతీయమ్మే భిన్నా ప్రకృతిరష్టధా ॥ அபரேயம் என்று சொல்லப்பட்ட அசேதநப் பிரகிருதியானது, மஹத் அஹங்காரம் முதலிய விகாரங்களுக்கெல்லாம் காரணமாயிருக்கையாலே మహద్బ్రహ్మ என்னப்படும். சுருதியிலும் சிலவிடத்துப் பிரகிருதியைப் பிரம்மசப்தத்தாலே சொல்லுகிறது. எங்கே? యస్సర్వజ్ఞస్సర్వవిద్యస్యజ్ఞానమయన్తపః తస్మాదేతద్బ్రహ్మ నామరూపమన్నఞ్చజాయతే என்று சொல்லுகிறதன்றோ?

* ఇతస్త్వన్యాంప్రకృతిం విద్ధిమేపరామ్, జీవభూతామ్ என்று குறிக்கப்பட்ட சேதநத்தொகையென்னும் மேலானப் பிரகிருதியானது, ஸகலப்பிராணிகளுக்கும் வினைமுதலாயிருக்கையாலே கர்ப்பமென்று சொல்லப்படுகிறது.

க்கிறேன். [என்றால்:—போகஸ்தாநமான அசேதநப் பிரகிருதியோடு போக்தாக்களின் தொகையான சேதநப்பிரகிருதியைக் கூட்டுகிறேனென்றபடி.] இப்படி என் ஸங்கல்பத்தால் ஒன்றோடொன்று சேர்ந்த விரண்டுப் பிரகிருதிகளினின்றும் பிரமன் முதல் புல்லளவாயுள்ள ஸகல பூதங்களு முண்டாகின்றன.

(அ-கை.) காரியமான நிலையிலுள்ள சேதநாசேதநங்களின் சேர்க்கையும் தம்மாலேயே செய்யப்பட்டதென்கிறார்.

సర్వయోనిషు కౌన్తేయ మూర్తయస్సమ్భవన్తియాః।
తాసాం బ్రహ్మమహద్యోని రహం బీజప్రదః పితా॥౪॥

(ச) தேவர், கந்தருவர், யக்ஷர், இராக்ஷஸர், மனிதர், பசு, மிருகம், பக்ஷி, பாம்பு முதலிய யோனிகளில் உண்டாகின்ற அந்தந்த சரீரங்களுக்கும் பிரம்மமென்கிற பிரகிருதிதான் காரணம். [என்றால்:—என்றால் சேர்க்கப்பட்ட சேதநவர்க்கங்களோடுகூடி மஹத்துமுதல் விசேஷத்தளவான நிலையிலுள்ள பிரகிருதிதான் காரணமென்றபடி.] மேலும் அவைகளுக்கு வித்திடும் பிதாவும் நானே. [என்றால்:—ஆங்காங்கும் அந்தந்த கருமத்துக்குத்தக்கப்படி சேதநவர்க்கங்களைச் சேர்ப்பவனும் நானே யென்றபடி.]

(அ-கை.) இப்படி சிருஷ்டியின் ஆரம்பத்தில் பழைய கர்மமடியாக அசேதநத்தோடு கலந்து தேவர்முதலிய யோநிகளில் உண்டாகின்றப் பிராணிகளுக்கு, மறுபடியும் மறுபடியும் தேவாதிருபமாய் பிறப்புண்டாவதற்குக் காரணஞ் சொல்லுகிறது.

సత్త్వం రజస్తమ ఇతి గుణాః ప్రకృతిసమ్భవాః।
నిబధ్నన్తి మహాబాహో దేహే దేహినమవ్యయమ్॥౫॥

(ரு) ஸத்துவம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு என்கிற முக்குணங்களும் பிரகிருதியை விட்டுப்பிரியாத ஸ்வபாவ விசேஷங்கள். (பிரகிருதியான நிலையில் தோன்றாமலும், பிரகிருதியின் விகாரமான நிலையில் (அதாவது மஹத்து முதலிய நிலையில்) தோன்றியுமிருக்கின்ற இக்குணங்கள் (மஹத்துமுதல் விசேஷத்தளவாயுள்ள விகாரங்களா லுண்டுபண்ணப்பட்ட தேவர்முதலிய) சரீரங்களில் ஸம்பந்தப்பட்டிருக்கு மிந்தஅழிவற்ற ஆன்மாவைச் சரீரத்தில்தானே நிலைக்கும்படி செய்கின்றன. [என்றால்:—சரீரத்தில் ஸம்பந்தப்பட்டதே பற்றாசாகக் கட்டுப்படுத்துகின்றனவென்றபடி.]

(அ-கை.) ஸத்துவம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு இவைகளின் ஆகாரமும், அவை கட்டுப்படுத்தும்படியும் சொல்லப்படுகின்றன.

తత్ర సత్త్వం నిర్మలత్వాత్ ప్రకాశకమనామయమ్।
సుఖసఙ్గేన బధ్నాతి జ్ఞానసఙ్గేన చానఘ॥౬॥

(சு) ஸத்துவம் ரஜஸ்ஸு தமஸ்ஸு இவற்றுள் ஸத்துவத்தின் ஸ்வருபம் * நிர்மலமாயிருக்கையால் பிரகாசிப்பிக்குமது. [என்றால்—ஸுகத்தை

* நிர்மலம்-பிரகாசத்தையும் சுகத்தையும் மறைக்குந்தன்மையற்றது.

யும் † பிரகாசத்தையும் உண்டுபண்ணுவதே ஸ்வபாவமாயிருப்பதென்றபடி.] நோவென்னுங் காரியத்தை யுண்டுபண்ணாதது; இந்த ஸத்துவகுணமானது சரீரத்தைப்பற்றிய விவ்வாத்துமாவைச் சுகத்திலும் ஞானத்திலும் பற்றையுண்டாக்கிக் கட்டுப்படுத்துகிறது. [என்றால்:—ஞானத்திலும் சுகத்திலும் பற்றுண்டானால் அதன் சாதனங்களான லௌகிக வைதிககாரியங்களில் பிரவர்த்திக்கிறான். அதன்பின்பு அதன் பயனை யநுபவிப்பதற்கு ஸாதகமான யோனிகளில் பிறக்கிறான். ஆகையால் ஸத்துவமானது ஸுகத்திலும் ஞானத்திலும் பற்றை யுண்டுபண்ணி அவ்வழியே கட்டுப்படுத்துகிறதென்றபடி.]

[இதனால் ஞானசுகங்களைத்தருவதும் மறுபடி அவற்றோடு சேர்ப்பதும் ஸத்துவமென்றதாயிற்று.]

రజో రాగాత్మకం విద్ధి తృష్ణాసఙ్గసముద్భవమ్।
తన్నిబధ్నాతి కౌన్తేయ కర్మసఙ్గేన దేహినమ్॥ ౭॥

(எ) ரஜோகுணமானது $ ராகத்துக்கும் ¶திருஷ்ணைக்கும் § ஸங்கத்துக்கும் உத்பத்திஸ்தாநமாயிருக்கும். அப்படியே சரீரத்தை யெடுத்திருக்கும்புருஷனைக் கிரியைகளில் ஆசையையுண்டுபண்ணுவித்து அவ்வழியே கட்டுப்படுத்தும். [என்றால்: ஆசையோடுகூடி எந்தெந்த கிரியைகளைச்செய்ய வாரம்பிக்கிறானோ அவைகள், புண்ணியமல்லது பாபரூபமாயிருக்குமாகையாலே அவற்றின் பலனை யநுபவிப்பதற்கென்று ஏர்ப்பட்ட யோனிகளில் பிறப்பதற்குக் காரணமாகின்றன. ஆகையால் ரஜோகுணமானது கர்மத்தில் பற்றை யுண்டுபண்ணி ஆத்மாவைக் கட்டுப்படுத்துமென்றபடி.]

[ஆகவிதனால் ரஜஸ்ஸானது ராகத்துக்கும் திருஷ்ணைக்கும் ஸங்கத்துக்கும் காரணமாவதோடு கர்மத்தில் பற்றையு முண்டாக்குமென்றதாயிற்று.]

తమస్త్వజ్ఞానజం విద్ధి మోహనం సర్వదేహినామ్।
ప్రమాదాలస్యనిద్రాభిస్తన్నిబధ్నాతి భారత॥ ౮॥

(அ) தமோகுணமோ (ஒருபடியாயிருக்கும் வஸ்துவை அதற்கு விரோதமானபடியா யறிவதென்கிற) அக்ஞானத்தாலுண்டானதாகையால் ஸகலப்பிராணிகளுக்கும் வித்தியாஸமான ஞானத்தையுண்டு பண்ணும். இது, ☼ பிரமாதம், ♆ ஆலஸ்யம், ⊕ நித்திரை இவைகளுக்குக் காரணமாய்க்கொண்டு சரீரமெடுத்த ஜீவனைக் கட்டுப்படுத்துகிறது.

---

† பிரகாசம் - வஸ்துவை உள்ளபடியறிகை.

$ ராகம் - ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒன்றுக்கொன்றுண்டான ஆசை.

¶ திருஷ்ணை-சப்தாதிவிஷயங்களெல்லாவற்றிலு முண்டான வாசை.

§ ஸங்கம்-புத்திரமித்திராதிகளைக் கட்டியணைக்கவேண்டுமென்னுமாசை.

☼ பிரமாதம் -செய்யவேண்டியதைத்தவிர மற்றொன்றைச்செய்வது

♆ ஆலஸ்யம் - கர்மத்தை யாரம்பஞ் செய்யாமலிருக்கை.

⊕ நித்திரை - இந்திரியங்களைப் பிரவர்த்திக்கச்செய்கின்ற புருஷன் அடங்கிப்போவதனால் ஸகல இந்திரியங்களும் அடங்கிப்போகை. அதில் புறம்புண்டான இந்திரியங்கள்மாத்திரம் அடங்கினால் அது ஸ்வப்நம். மனதும் அடங்கினால் அது சுழுத்தி. (அதாவது நல்ல தூக்கம்.)

(அ-கை) ஸத்துவாதி குணங்கள் புருஷனைக்கட்டும்பொழுது எவை களைக்கொண்டு கட்டுகின்றனவோ அவைகளில் பிரதாநங்களைச்சொல்லுகிறார்.

సత్వంసుఖేసఞ్జయతి రజఃకర్మణిభారత।
జ్ఞానమావృత్యతుతమః ప్రమాదేసఞ్జయత్యుత॥౯॥

(கூ) ஸத்துவத்துக்குப் பிரதாநம் சுகத்தோடு சேர்ப்பிக்கை. ரஜோகுணத்துக்குப் பிரதாநம் கருமத்தோடு சேர்ப்பிக்கை. தமோகுணத்துக்குப் பிரதாநம் வஸ்துவையுள்ளபடியே யறியவொட்டாமல் தடுத்து விபரீத ஞானத்தை விளைவித்துச் செய்யவேண்டியதைவிட்டு விபரீதத்தோடு சேர்ப்பிக்கை.

(அ-கை.) சரீராகாரமாய் விகாரப்படும் பிரகிருதியைச் சேர்ந்தவைகளான ஸத்துவம் முதலிய குணங்கள் எப்போதும் பிரகிருதியைவிட்டு நீங்காமலிருக்குமவைகளாகையாலே ஒன்றுக்கொன்று விரோதமான காரியத்தையெப்படி உண்டாக்குமென்னில் அருளிச்செய்கிறார்.

రజస్తమశ్చాభిభూయ సత్వంభవతిభారత।
రజస్సత్వంతమశ్చైవ తమస్సత్వంరజస్తథా॥౧౦॥

(கO) [ஸத்துவம் முதலிய குணங்கள் பிரகிருதியோடு கலந்த ஆத்மஸ்வரூபத்தைச் சேர்ந்தவைகளாய் எப்பொழுது மிருந்ததேயாயினும் தொல்லைவினையின்படியும் சரீரத்தை வளர்க்கும் உணவின் வித்தியாஸத்தின்படியும் ஒன்று அடங்கியும் ஒன்று தலையெடுத்தும் இப்படி வித்தியாஸப்படுகின்றன.] ரஜஸ்ஸும் தமஸ்ஸும் ஒருக்கால் அடங்கி ஸத்துவம் தலையெடுத்திருக்கும். அப்படியே தமஸ்ஸும் ஸத்துவமும் அடங்கி ஒருக்கால் ரஜோகுணந் தலையெடுத்திருக்கும். அப்படியே ரஜஸ்ஸும் ஸத்துவமும் அடங்கி ஒருக்கால் தமஸ்ஸு தலையெடுத்திருக்கும்.

(அ-கை.) ஆனால் அதைக் காரியத்தைக்கண்டுதான் ஊஹிக்கவேண்டுமென்கிறார்.

సర్వద్వారేషుదేహేస్మిన్ ప్రకాశఉపజాయతే।
జ్ఞానంయదాతదావిద్యా ద్వివృద్ధంసత్వమిత్యుత॥౧౧॥

(கக) கண்முதலிய ஸகலமான ஞானமார்க்கங்களிலும் வஸ்துவை யுள்ளபடியே பிரகாசிப்பித்துக்கொண்டு எப்பொழுது ஞானமுண்டாகிறதோ அப்பொழுது சரீரத்தில் ஸத்துவம் தலையெடுத் திருக்கிறதென் றறியத் தக்கது.

లోభఃప్రవృత్తిరారమ్భః కర్మణామశమస్స్పృహా।
రజస్యేతానిజాయన్తే వివృద్ధేభరతర్షభ॥౧౨॥

(கஉ) தன் பொருளைக் கொடுப்பதென்றால் கூடாதென்கிற ஸ்வபாவமும், யாதொரு பயனுமில்லாமலே சலிக்கும் ஸ்வபாவமும், பல ஸாதநமான கருமத்தைச் செய்யத்தொடங்குவதும், இந்திரியங்கள் அடங்காமையும்

விஷயத்தில் ஆசையும், இவையெல்லாம் ரஜோகுணந் தலையெடுத்தபோது உண்டாகின்றன. [லோபம் முதலிய ஸ்வபாவங்களிருக்கும்போழுது ரஜோ குணம் விருத்தியாயிருக்கிறதென்று அறியத்தக்கதென்று பொருள்.]

అప్రకాశో ప్రవృత్తిశ్చ ప్రమాదో మోహఏవచ|
తమస్యేతాని జాయన్తే వివృద్ధే కురునన్దన||౧౩||

(கங) ஞானம் உண்டாகாமையும், பிரவ்ருத்தியுண்டாகாமையும் (காரிய மில்லாத காரியத்தில் பிரவ்ருத்திப்பதென்கிற) அநவதாநமும், விபரீதக்ஞா நமும் இவை யாவும் தமோகுணம் விருத்தியாகும்பொழுது உண்டாகின்றன. [இவைகளைக்கொண்டு தமஸ்ஸு விருத்தியாயிற்றென்றறிக.]

యదా సత్త్వే ప్రవృద్ధే తు ప్రళయం యాతి దేహభృత్|
తదోత్తమవిదాం లోకా నమలాన్ ప్రతిపద్యతే||౧౪||

(கச) ஸத்துவகுணம் விருத்தியானகாலத்தில் மரணமடையுமவன், ஆத்மாவின் உண்மையையறிந்து அக்ஞாநங் கழிந்தவர்களின் கூட்டத்திற் போய்ச்சேருகிறான். [என்றால் ஸத்துவம் தலையெடுத்தபொழுது இறந்தவன் ஆத்மக்ஞானிகளின் குலத்தில் பிறந்து, ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத் தை யறியவேண்டும் ஸாதநங்களான புண்ணிய கருமங்களி லிழிகின்றானெ ன்றபடி.]

రజసి ప్రళయం గత్వా కర్మసఙ్గిషు జాయతే|

(கசஉ) ரஜோகுணம் தலையெடுத்தபொழுது மறித்தவன் பலனைக்குறி த்துக் கருமஞ்செய்யுமவர்களின் குலத்தில் பிறக்கிறான். [என்றால் பிறந்து ஸ் வர்க்கம் முதலிய பலன்களைச் சாதிக்குங் கருமங்களைச் செய்கிறானென்றபடி.]

తథా ప్రలీనస్తమసి మూఢయోనిషు జాయతే||౧౫||

(கரு) தமோகுணந் தலையெடுத்தபொழுது இறந்தவன், நாய்பன்றி மு தலிய மூடயோனிகளில் பிறக்கிறான். [என்றால் - ஒருபயனைக்குறித்தும் ஆரம் பிக்கத்தகாதபடியாய்ப் பிறக்கிறானென்றபடி.]

కర్మణస్సుకృతస్యాహుః సాత్త్వికం నిర్మలం ఫలమ్|
రజసస్తు ఫలం దుఃఖ మజ్ఞానం తమసః ఫలం||౧౬||

(கசு) இப்படி ஸத்துவம் விருத்தியாயிருக்கையில் மரணமடைந்து ஆத்மக்ஞானிகளின் குலத்திற்பிறந்தவன், பலனில் அபேக்ஷையின்றி நம்முடை ய ஆராதநரூபமாகக் கர்மஞ்செய்துவந்து மறுபடியும் அதைக்காட்டிலும்அதி கமான ஸத்துவத்தாலுண்டானதாய் நிர்மலமானதாய் துக்கலேசமுமற்றதா யிருக்கும் பலனையடைகிறானென்று ஸத்துவகுணத்தின் பரிணாமத்தையறிந்த வர்கள் சொல்லுவார்கள். அந்திமகாலத்தில்விருத்தியான ரஜோகுணத்துக்கு ப்பலன், பலஸாதநங்களான கர்மத்தில்பற்றுடையவர்களின்குடியிற்பிறப்பும், பலாபேக்ஷையுடன் கூடியகர்மத்தைச் செய்கையும் அதன்பலனை யநுபவிப்

பத்ற்காக மறுபிறப்பும், ரஜோகுணவிருத்தியும், மறுபடி பலாபேக்ஷயுடன் கருமத்தில் பிரவிருத்தியும் என்றிப்படி ஸம்ஸாரதுக்கபரம்பரையா யிருக்குமென்று ரஜோகுணத்தின் உண்மையறிந்தவர் சொல்லுகிறார்கள். இப்படியேதான் அந்திமகாலத்தில் விருத்தியடைந்த தமஸ்ஸிற்குப்பயனும் அதிக அக்ஞானபரம்பரையா யிருக்குமென்பர்கள்.

(அ-கை.) முந்திய தசையைக்காட்டிலும் அதிகப்பட்ட ஸத்துவாதி குணங்களுக்கு நிர்மலத்வம் முதலிய பலன்கள் உண்டாவதாக வருளிச்செய்ததே அவையெவையென்ன வருளிச்செய்கிறார்.

సత్వాత్సఞ్జాయతేజ్ఞానం రజసోలోభఏవచ|
ప్రమాదమోహౌతమసో భవతోఽజ్ఞానమేవచ॥౧౭॥

(கஎ) இப்படி பரம்பரையாய் அதிகமாயுண்டான ஸத்துவகுணத்தால் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபம் பிரத்திபக்ஷமாய் விளங்கும். அப்படி யுண்டாகும் ரஜோகுணத்தால் சுவர்க்காதிபலங்களில் ஆசை உண்டாகும். அப்படியுண்டான தமோகுணத்தால் பிரமாதமும், அதற்கடியான அஸத்வியாபாரத்தில் பிரவ்ருத்தியும், அதனால் விபரீதக்ஞானமும், அதனால் மிகுந்த தமோகுணமும், அதனால் அக்ஞானமுமுண்டாகும்.

ఊర్ధ్వంగచ్ఛన్తిసత్వస్థా మధ్యేతిష్ఠన్తిరాజసాః|
జఘన్యగుణవృత్తిస్థా అధోగచ్ఛన్తితామసాః॥౧౮॥

(கஅ) கீழ்ச்சொன்னபடியே ஸத்துவகுணத்திலிருப்பவர்கள் வரவர மேலே போகிறார்கள். அதாவது ஸம்ஸாரதினின்றும் மோக்ஷத்தை யடைகிறார்கள். (ரஜோகுணம், சுவர்க்கம்முதலிய பலன்களில் ஆசையையுண்டுபண்ணுமதாகையாலே) அக்குணத்திலிருப்பவர்கள் (பலத்துக்குச் சாதநமான கர்மத்தையநுஷ்டித்து அதன்பலனை யநுபவித்து மறுபடியும் பிறந்து அதேகருமத்தை யநுஷ்டிக்கிறார்கள்.) ஆகையால் அவர்கள் மத்தியிலிருக்கிறார்கள். [திரும்புதலோடு கூடியதாகையாலே இது துக்கப்பிராயம்] தாமஸர்களோ மென்மேலும் இழிவான விருத்தியைச்செய்து வந்து கீழேபோகிறார்கள். [அதாவது-சண்டாளனாய்ப்பிறத்தல் அதன்பின் விலங்காய்ப்பிறத்தல் அதன் பிறகு பூச்சிப்புழுகாய்ப்பிறத்தல், தாவரமாயிருத்தல், அதற்குப்பிறகுகொடியும் புதறுமாயிருத்தல், அதற்குப்பின் கல் கட்டை மண்ணுங்கட்டி முதலானவைகளாய்ப்பிறத்தல் முதலிய அதோகதியை யடைகிறார்கள் என்றபடி.]

(அ-கை.) ஆஹாரவிசேஷங்களாலும் பலாபேக்ஷயற்ற சுகிருத விசேஷங்களாலும் பரம்பரையாய் மிகவும் விருத்தியடைந்த ஸத்துவகுண நிஷ்டர்களுக்கு குணத்திரயநாசம் பிறந்து அவ்வழியே ஊர்த்துவகதியுண்டாகும்படி சொல்லுகிறது.

నాన్యంగుణేభ్యఃకర్తారం యదాద్రష్టానుపశ్యతి।
గుణేభ్యశ్చపరంవేత్తి మద్భావంసోఽధిగచ్ఛతి॥౧౯॥

(கக) இப்படி ஸாத்விகமான ஆஹாரத்தை ஸேவிப்பதாலும் பலாபேக்ஷையற்று எம்பெருமானுடைய ஆராதநரூபமாகக் கர்மாநுஷ்டாநம் பண்ணுவதாலும் ரஜஸ்ஸையும் தமஸ்ஸையும் சுத்தமாய் அடக்கி உத்க்ருஷ்டமான ஸத்துவத்திலிருந்து ஆத்மஸ்வரூபத்தைப்பார்க்கின்றஇவன், குணங்கள்தான் அவற்றுக்கு அநுகுணமானப்பிரவ்ருத்திகளைச்செய்கின்றனவென்றும் அப்படியே குணங்களுக்குப்பரனான ஆத்மா கர்த்தாவல்லனென்றும் எப்பொழுது பார்க்கிறானோ அப்பொழுது அவன் நம்முடைய ஸ்வபாவத்தை யடைவான்.

[என்றால்:—ஸ்வபாவத்தில் பரிசுத்தமான ஆத்மா கர்த்தாவாயிருப்பதெல்லாம் பூர்வகர்மமடியாகவரும் குணஸங்கத்தால் வந்தது; ஆத்மாவோ ஸ்வபாவத்தில் கர்த்தாவல்லன்; அளவற்ற ஞானமே வடிவாயிருப்பவன்; என்று எப்பொழுது அறிகிறானோ அப்பொழுது அவன் நமக்கு ஸமமாகிறானென்றபடி.]

(அ-கை) கர்த்தாவான குணங்களைக்காட்டிலும் வேறாய் கர்த்தாவல்லாத ஆத்மாவைக்கண்டவன் ஈசுவரத்தன்மையை யடைகிறானென்றுசொல்லப்பட்டதே, அந்தஈசுவரத்தன்மையாவது எப்படிப்பட்டது? என்னில் அருளிச்செய்கிறார்.

గుణానేతానతీత్య త్రీన్ దేహీ దేహసముద్భవాన్।
జన్మమృత్యుజరాదుఃఖైర్విముక్తోఽమృతమశ్నుతే॥౨౦॥

(உ0) சரீரமெடுத்திருக்கும்பொழுதே, சரீராகாரமாய் விகாரப்பட்டிருக்கும் பிரகிருதியினின்று முண்டான இந்தஸத்துவம் முதலிய குணங்கள் மூன்றையும் கடந்து, அவைகளைக்காட்டிலும் வேறாய் ஞானமேவடிவான ஆத்மாவைக்கண்டவன், பிறப்பு இறப்பு மூப்புகளாலுண்டான துயரங்களினின்றுவிடுபட்டவனாய் பிறகு அமிருதமான ஆத்மஸ்வரூபத்தையநுபவிப்பான். [இது தான் ஈசுவரனாகிய தம்ஸ்வபாவத்தையடைகையாவது என்றபடி.]

(அ-கை) இனி குணங்களைக்கடந்த தான் ஆத்மவஸ்துவின் ஸ்வரூபத்தை யறிந்தவனிவனென்று காட்டும்படியான ஆசாரத்தின் தன்மையையும் குணங்கள் அழிவதற்குக் காரணங்களையும் கேளாநின்றுகொண்டு அர்ச்சுநன் பிரச்சினம்பண்ணுகிறான்.

అర్జునఉవాచ॥ కైర్లింగైస్త్రీన్గుణానేతానతీతో భవతి ప్రభో।
కిమాచారః కథం చైతాంస్త్రీన్గుణానతివర్తతే॥౨౧॥

(உக) ஸத்துவம் முதலிய விக்குணங்களைக் கடந்தவன் எவ்வித லக்ஷணங்களுடன் கூடி யிருப்பவன்? எவ்வித ஆசாரத்தோடு கூடியவன்? இந்த ஸத்வம் முதலிய குணங்களை அவன் எவ்வித உபாயத்தாலே கடக்கிறான்?

శ్రీభగవానువాచ॥ ప్రకాశంచ ప్రవృత్తించ మోహమేవచ పాండవ।
నద్వేష్టి సంప్రవృత్తాని ననివృత్తాని కాంక్షతి॥౨౨॥

(௨௨) அதற்குக் கண்ணனருளிச்செய்கிருர். ஆத்மாவையொழிந்த மற்றவைகளுள்அநிஷ்டவஸ்துக்களில் பிரவ்ருத்தியுண்டாகுமாகில் 'இவை பிரகாசம், பிரவ்ருத்தி, மோஹம், என்கிற ஸத்துவாதிகுணகாரியங்கள்,என்று நினைத்து அவன் அவைகளைப் பகைக்கமாட்டான். அப்படியே இஷ்டவஸ்துக்களில் நிவருத்தியுண்டாமாகில் அவைகளே நிவ்ருத்தங்களாய் விட்டனவென்று நினைத்தவனுகையாலே அவைகளைக் கோரவுமாட்டான்.

ఉదాసీనవదాసీనో గుణైర్యోనవిచాల్యతే।
గుణావర్తన్తఇత్యేవ యోవతిష్ఠతినేఙ్గతే॥ ౨౩॥

(௨௩) குணாதீதமான ஆத்மவஸ்துவைக் காண்பதிலுண்டான திருப்தியால் இதரவிஷயங்களில் தட்டாமலிருப்பவனுகையால் குணங்களைக்கண்டு விரும்பவாவது வெறுக்கவாவது மாட்டான். குணங்கள், தங்காரியங்களான பிரகாசம் முதலியவைகளைச் செய்கின்றனவென்று நினைத்தவனுய், எவன் வேறுமனே யிருக்கிருனே அவன், குணங்களின் காரியத்துக்குத் தக்கபடி அவை யிழுத்தவழி செல்லவுமாட்டான்.

సమదుఃఖసుఖస్స్వస్థ స్సమలోష్టాశ్మకాఞ్చనః।
తుల్యప్రియాప్రియోధీర స్తుల్యనిన్దాత్మసంస్తుతిః॥ ౨౪॥
మానావమానయోస్తుల్య స్తుల్యోమిత్రారిపక్షయోః।
సర్వారమ్భపరిత్యాగీ గుణాతీతస్సఉచ్యతే॥ ౨౫॥

(௨௪-௨௫) இன்பதுன்பங்களில் ஸமசித்தனுய், தன்னுள் தானிருப்பவனுய், அதாவது ஆத்மாவே பிரியமாயிருக்கையாலே அதையொழிந்த புத்திராதிகளின் பிறப்பு இறப்பு முதலிய சுகதுக்கங்களில் ஸமசித்தனுய், ஆனது பற்றியே மண்ணுங்கட்டி, கல், பொன் எல்லாம் ஸமமாக நினைத்தவனுய், அதேகாரணத்தாலே பிரியமும் அப்பிரியமும் துல்லியமாயிருப்பவனுய், பிரகிருதியையும் ஆத்மாவையும் பிரித்தறிவதில் நிபுணனுய், தன்னிடத்திலுண்டான மானிடத்தன்மை முதலிய வபிமானத்தால் வருங் குணுகுணங்களைப்பற்றி நிந்தித்தாலும் துதித்தாலும், தனக்கு அக்குணுகுணங்களில் ஸம்பந்தமில்லையென்கிற வெண்ணத்தால் இரண்டையும் ஸமமாக நினைப்பவனுய், அந்த ஸ்துதிநிந்தைகளால்வரும் மாநாவமாநங்களிலும் அவற்ருல்வரும் சத்துருமித்திர பக்ஷங்களிலும் தனக்கு ஸம்பந்தமில்லையென்கிற அந்த வெண்ணத்தைக்கொண்டே அவைகளை ஸமமாய்நினைப்பவனுய், அப்படியே தான் சரீரத்தை யெடுத்திருப்பதால் வரும் எந்தவியாபாரங்களையுஞ் செய்யத்தொடங்காமலிருப்பவனுயிருக்கு மவன் யாவன் அவனே குணங்களைக்கடந்தவனுவான்.

(அ-கை.) அநந்தரம் இப்படிப்பட்ட குணங்கள் நீங்குமிடத்துப் பிரதானகாரண மின்னதென்கிருர்.

మాంచయోఽవ్యభిచారేణ భక్తియోగేనసేవతే।
సగుణాన్సమతీత్యైతాన్ బ్రహ్మభూయాయకల్పతే॥ ౨౬॥

(உசு) నాన్యంగుణేభ్యః కర్తారం இத்தியாதியாகச் சொல்லப்பட்டபடி, பிரகிருதியையும் ஆத்மாவையும் பிரித்தறிவதால்மாத்திரம் குணநாசம் பிறக்கமாட்டாது. ஏனென்றால்-அது அநாதிகாலமாய் தொடர்ந்த விபரீதவாஸனையால் பாதிக்கப்படுமென்றோ? மற்றப்படி ஸத்தியஸங்கல்பனும் பரமகாருணிகனும் ஆஸ்ரிதவாத்ஸல்லிய ஸாகரமாயிருக்கும் நம்மை ஏகாந்தமான பக்தியோகத்தால் எவன் இடைவிடாமல் ஸேவிக்கிறானோ அவன், ஒருவராலும் ஒழிக்கப்போகாத இந்த ஸத்துவாதி குணங்களைக்கடந்து பிரம்மபாவத்தையடையும்படியான நிலைக்கு வருவான். [அதாவது அமிருதமான ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை யடைவானென்றபடி.]

బ్రహ్మణో హి ప్రతిష్ఠాహ మమృతస్యావ్యయస్య చ।
శాశ్వతస్య చ ధర్మస్య సుఖస్యైకాన్తికస్య చ॥ ౨౭॥

(உஎ) ஏனெனில், நம்மைவிட்டு நீங்காத பக்தியோகத்தால் நாம் ஸேவிக்கப்பட்டால் அமிருதமாய் அவ்யயமாயிருக்கும் ஆத்மஸ்வரூபத்தை நிலைப்பிக்கிறோம்; அப்படியே அதிசயமான நித்திய ஐசுவரியத்தையும், వాసుదేవస్సర్వమ్ என்றிருக்குமவன் பேறான ஏகாந்தவின்பத்தையும் அளிக்கிறோம்.

[ஆக இதனால் - దైవీ హ్యేషా గుణమయీ మమ మాయా దురత్యయా। మామేవ యే ప్రపద్యన్తే என்று தொடங்கி, குணநாசம் பிறப்பதற்கும் அதன் மூலமாய் அக்ஷரம் ஐசுவரியம் பகவத்பிராப்தி இவைகள் கிடைப்பதற்கும் அவன் திருவடிகளில் பண்ணும் பரமபக்தியே உபாயமாகக் கடவதென்று சொல்லுகையாலே, குணநாசமும் அதடியாய் வரும் பகவத்பாவமும் ஏகாந்தமானபகவத்பிரபத்தியால்தா னுண்டாகுமென்றதாயிற்று.]

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,

பதிநான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ:.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# பதினைந்தாவது அத்யாயம்.

---

## அவதாரிகை.

க்ஷேத்திர அத்தியாயத்தில் க்ஷேத்திரமென்றும் க்ஷேத்திரக்ஞனென்றுஞ் சொல்லப்பட்ட பிரகிருதிபுருஷர்களின் ஸ்வரூபத்தைச் சோதித்து, பரிசுத்தமாய் அள்வற்ற ஞானமே வடிவாயுள்ள ஆத்மாவுக்கு (குணஸம்பந்தப் பிரவாஹமடியாய் தேவாதிரூபமாய் விகாரப்படுகிற)பிரகிருதிஸம்பந்தமானது, அநாதியென்று சொல்லப்பட்டது. அதற்கடுத்த அத்தியாயத்தில் புருஷனுக்

டுக் காரியம்காரணம் என்கிறஇரண்டுநிலைகளிலும் குணஸங்கத்தால்வரும்பிர கிருதிஸம்பந்தமானது பகவானாலேயே செய்யப்பட்டதென்று சொல்லி, குணஸங்கத்தின்படியை ஸவிஸ்தாரமாகஉபபாதித்து, குணஸம்பந்தமற்று ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை யடைவதும் எம்பெருமான் திருவடிகளில்பண்ணும் பக்தியால் வரத்தக்கதென்றும் அருளப்பட்டது. இப்பொழுது பஜநீயனாகிய பகவானுடைய 'க்ஷரம் அக்ஷரம்' என்கிற(பத்தமுக்தாளாகிற) ஐசுவரியத்தையும், ஐசுவரியபூதர்களான அந்த க்ஷரம்அக்ஷரம் என்கிறஇருவகைப்புருஷர்களைக்காட்டிலும், ஸகல ஹேயங்களுக்கு மெதிராய் கல்லியாணமே ஸ்வரூபமாய் மிகவும் சிறந்ததாய் லோகோததரமாயிருக்கும் தத்துவந்தான்புருஷோத்தமதத்துவமென்பதையும் அருளிச்செய்யத்தொடங்குகிறார்.

அதில் இப்பொழுது அஸங்கமென்னும் வாளைக்கொண்டு பந்தத்தைச் சிதைத்த அக்ஷரமென்னும் ஐசுவரியத்தை யருளிச்செய்வதற்காக, (அறுக்கப்படுமதான பந்தமென்னும்) அசேதநத்தின் விகாரவிசேஷத்தை ஒரு விருக்ஷாகாரமாய்க் கற்பித்துக்கொண்டு கண்ணன் அருளிச்செய்கிறார்.

శ్రీభగవానువాచ॥ ఊర్ధ్వమూలమధశ్శాఖ మశ్వత్థంప్రాహురవ్యయమ్।
ఛన్దాంసియస్యపర్ణాని యస్తంవేదసవేదవిత్॥౧॥

(க) அர்ச்சுந! எந்த ஸம்ஸாரமென்னும் அரசமரத்தைச் * சுருதிகள், மேற்புறத்தில் வேரும் கீழ்ப்புறத்தில் கிளையுமாயிருப்பதாகச் சொல்லுகின்றனவோ, பற்றறுகைக்குக் காரணமான நல்லறிவு உண்டாகிறவளவாயில் எதுவானால் அழியமாட்டாதோ, எதற்கானால் $ சுருதிகளை யிலைகளாகச் சொல்லுகிறார்களோ, அப்படிப்பட்ட இந்த விருக்ஷத்தை எவன் அறிகிறானோ அவன் வேதவித்து என்னப்படுவான். [என்றால் - வேதமோ ஸம்ஸாரமென்னும் விருக்ஷத்தைச் சேதிக்கும் வழி சொல்லுகிறது; சேதிக்கவேண்டும் விருக்ஷத்தின் ஸ்வரூபத்தை யறிவதோ சேதிப்பதற்கு உபயோகமானது; ஆகையால் இந்த விருக்ஷத்தை யறிந்தவனை வேதவித்தென்கிறது என்றபடி.]

ஸப்தலோகத்திற்கும் மேலாயிருக்கும் சதுர்முகனை ஆதியாயுடையதாகையால் இந்த விருக்ஷத்தின் வேர் மேலே யிருக்கிறதென்றும், பூமியில் வஸிக்கும் ஸகலமான மனிதர் பசு மிருகம் பூச்சி புழு பக்ஷி தாவரம் இவைகளை முடிவா யுடைத்தா யிருக்கையாலே கிளை கீழே யிருக்கிறதென்றும் சொல்லுகிறது.

అధశ్చోర్ధ్వంచప్రసృతా స్తస్యశాఖా గుణప్రవృద్ధావిషయప్రవాళాః।

---

* ఊర్ధ్వమూలోஉవాక్శాఖ ఏషోஉశ్వత్థస్సనాతనః । ఊర్ధ్వమూలమవాక్శాఖం వృక్షంయోవేదసంప్రతి இத்தியாதி சுருதிகள் சொல்லுகின்றன.

$ వాయవ్యగ్ శ్వేతమాలభేతభూతికామః । ఐన్ద్రాగ్నమేకాదశకపాలంనిర్వపేత్ప్రజాకామః இத்தியாதி யாகச்சுருதிகளிற் சொல்லப்பட்ட காம்மியகர்மங்களால்விருத்தியடைகின்றமையால்இம்மரத்துக்குச்சுருதிகளை இலையென்கிறது.

(கஉ) இப்படி கீழ்ப்புறத்தில் (மனுஷ்யர்முதலானோைக்) கிளையாகவுடைய அம்மரதிற்கு அவரவர் கர்மமடியாக அனேகம் கீழ்க்கிளைகள்உண்டாய் மீண்டும் மனுஷ்யாதிரூபமாய்ப் பரவுகின்றன. அப்படியே மேலும் கந்தர்வர், யக்ஷர் என்று இப்படி வெகுசாய்ப் பரவுகின்றன. அவைகளோ ஸத்துவம் முதலிய குணங்களால் மென்மேலும் சப்தம் முதலிய விஷயங்களைத் தளிராகக்கொண்டு வளருகின்றன.

(அ-கை.) எப்படியென்றால் அருளிச்செய்கிறார்.

అధశ్చమూలాన్యనుస న్తతాని కర్మానుబన్ధీనిమనుష్యలో కే॥ ౨॥

(உ) பிரம்மலோகத்தில் வேரிட்டு மனிதரை நுனியாயுடைய இம்மரத்திற்கு, இந்த மனுஷியலோகத்திலும் கீழே வேர் ஓடுகின்றன. இவைகளும் கர்மமடியானவைகள். [என்றால் - மனிதராயிருக்கும்பொழுது செய்த கர்மங்களால்தான் கீழே மனுஷ்யாதிகளும் மேலே கெந்தர்வாதிகளும் உண்டாகிறார்களென்றபடி.]

నరూపమస్యేహతథో పలభ్యతే నాన్తోనచాదిర్నచసంప్రతిష్ఠా।

(உ-உ) இதின் ஸ்வரூபமும் ஆதியும் அந்தமும் இதின் இருப்பும் இவ்வுலகத்தில் தெரிகிறதில்லை. [என்றால் - "இந்த விருக்ஷம் நான்முகன் தொடங்கியதாகையால் இதற்கு வேர் மேலுலகத்தில்; அவன் ஸந்தானபரம்பரையான மனிதரை நுனியாயுடையதாகையால் இதன் நுனி கீழுலகத்தில்; மனிதராயிருக்கையில் செய்த கர்மங்களையே வேராகக்கொண்டு மறுபடி கீழும் மேலும் கிளைகளால் பரந்திருக்கிறது" என்றிப்படி இவ்வுலகத்திலுள்ள ஸம்ஸாரிகள் அறிகிறதில்லை. மற்றப்படி "நான் மனுஷியன்; நான் தேவசத்தனுக்குப் புத்திரன்; யக்ஞதத்தனுக்குப் பிதா; எனக்கேற்ற பாரியை முதலானோையுடையவன்" என்று இவ்வளவுமாத்திரம் தெரிந்துக்கொள்ளுகிறார்கள். இந்த விருக்ஷமானது குணமயமான போகங்களில் பற்றையொழித்தால் நசித்துப் போமென்றும் குணஸம்பந்தந்தான் இதற்கு ஹேதுவென்றும் அறிகிறதில்லை. அப்படியே இது நிலைத்திருப்பதும் (சரீரத்தையே ஆத்மாவாக நினைக்கின்ற) அக்ஞானத்தால் தானென்றும் அறிவாரில்லை யென்றபடி.]

అశ్వత్థమేనంసువిరూఢమూల మసఙ్గశస్త్రేణదృఢేనఛిత్వా॥ 3॥
తతఃపదన్తత్పరిమార్గితవ్యం యస్మిన్గతానినవర్తన్తిభూయః।

(ந-நஉ) இந்தப்பிரகாரம் நாலுபக்கமும் நன்றாய் வேர் ஊன்றிய இவ்வரசமரத்தை, நல்லறிவினு லுண்டான பற்றின்மையென்னும் திடமான கத்தியைக்கொண்டு களைந்தெறிந்து, அதனால் எந்த ஸ்தானத்துக்குச் சென்றவர்கள்மீண்டுந் திரும்பார்களோ அந்த ஸ்தானத்தைத் தேடவேண்டும்.

(அ-கை.) அதெப்படி அநாதிகாலமாய்த் தொடர்ந்த குணமய மான போகத்தில் பற்றும், அதடியாகவரும் விபரீதக்ஞாநமும் நிவர்த்திக்குமென்னில் அருளிச்செய்கிறார்.

తమేవచాద్యంపురుషం † ప్రపద్యే యతఃప్రవృత్తిః ప్రసృతా పురాణీ॥౪॥

(ச) அக்ஞாநாதிகள் நிவர்த்திக்கவேண்டுமானல் அந்தஆதிபுருஷனை (அதாவது - మయాధ్యక్షేణప్రకృతిః సూయతేసచరాచరమ్ । అహంసర్వస్యప్రభవో మత్తస్సర్వంప్రవర్తతే । మత్తఃపరతరన్నాన్యత్కించిదస్తిధనంజయ। இத்தியாதிகளிற் சொன்ன ஆதிபுருஷனைச்) சரணமடையவேண்டும். ஏனெனில் - இந்த குண விகாரமான போகத்திலுண்டாகும் பிரவர்த்தியானது ஸர்வ ஸ்ருஷ்டிகர்த் தாவான அவனிடத்தினின்று * முண்டானமையால் அவனைக்கொண்டேதான் நிவர்த்திபண்ணிக்கொள்ளவேண்டும்.

నిర్మానమోహాజితసఙ్గదోషా అధ్యాత్మనిత్యావినివృత్తకామాః।
ద్వన్ద్వైర్విముక్తాస్సుఖదుఃఖసంజ్ఞైర్గచ్ఛన్త్యమూఢాః పదమవ్యయన్తత్॥౫॥

(ரு) இப்படி நம்மைச் சரண்டைந்தவர்கள் தேஹமே ஆத்மாவென் கிற வபிமாநத்தையும் குணமயமான போகத்தில் பற்றையுமொழித்து ஆத் மக்ஞானத்தில் ஊன்றியவர்களாய் ஸமஸ்தகாமங்களேயு மொழித்து இன் பம் துன்பம் என்னு மிரண்டினின்றும் விடுபட்டவர்களாய் அளவற்ற ஞான மே வடிவான ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடியே யடைகின்றூர்கள். [என் ருல் நம்மைச் சரணடைந்தோருக்கு நம்மருளாலேயே இந்த ஸகலப்பிர வ்ருத்திகளும் ஸித்திபரியந்தம் தலைக்கூடுமென்றபடி.]

నతద్భాసయతే సూర్యో నశశాఙ్కో నపావకః।
యద్గత్వా ననివర్తన్తే తద్ధామపరమంమమ॥౬॥

(சு) அந்த ஜோதிரூபமான ஆத்மஸ்வரூபத்தை சூரியன் சந்திரன் அ க்கினி ஒன்றும் பிரகாசப்படுத்துவதில்லை. அதையடைந்தவர்கள் மறுபடியுந் திரும்புவதில்லை. அது நம்முடைய மேலானசோதி. [என்ருல் நம்முடைய அம்சமான நம்மைசுவரியமென்றபடி.]

మమైవాంశో జీవలోకే జీవభూతస్సనాతనః।
మనష్షష్ఠానీన్ద్రియాణి ప్రకృతిస్థాని కర్షతి॥౭॥

(எ) இப்படிப்பட்ட ஸ்வரூபத்தோடுகூடி என்நாளு முள்ளவனுய் நமது அம்சமாய்.விளங்குகிற ஒருவன் அநாதிகர்மமென்னும் அக்ஞாநத்தால்

---

† ప్రపద్యే యతః ప్రవృత్తిః என்னும் பாடம். அப்பொழுது ప్రపద్య ఇయత ఇ என்றுபதச்சேதமாய்,அந்த ஆதிபுருஷனைச்சரணடைந்து இவ்வக்ஞாநநிவ்ரு த்தி தொடக்கமான வெல்லாவற்றையும் சாதிப்பதற்காகப் பிரவர்த்திப்பதெ ன்பது தொன்றுதொட்டது; [அதாவது பூர்வீக முமுக்ஷுக்கள் அநுட்டித்த உபாயம். என்ருல் - பூர்வீகமோக்ஷார்த்திகள் நம்மையே சரணடைந்து பந்த த்தினின்றும் விடுபட்டார்கள் என்றபடி.]

* அவனிடத்தினின்று முண்டாயிற்றென்கிற விஷயம் - దైవీహ్యేషా గుణమయీ మమమాయా దురత్యయా । మామేవయేప్రపద్యన్తే మాయామేతాన్తరన్తితే என்று சொல்லப்பட்டது.

மூடப்பட்டவனாய் ஜீவலோகத்தில் ஜீவனாயிருந்து கொண்டு (தேவர் மனிதர் முதலிய பிரகிருதியின் விகாரமான சரீரங்களிலுள்ள) மனதுடன் சேர்ந்த ஆறு இந்திரியங்களையும் இழுத்துத்திரிகிறான்,

[என்றால்-ஒருவன் முன் சொன்னக் கிரமமாய் அவித்தையினின்று விடுபட்டு ஸ்வஸ்வரூபமாத்திரனாயிருக்கிறான். மற்றொருவன் ஜீவனாய்க் கொண்டு ஞானமும் ஐசுவரியமும் மிகவும் குறைந்து, தர்மத்தால் கிடைத்த சரீரத்திலுள்ள மன்முதலிய ஆறு இந்திரியங்களுக்கும் ஈசுவரனாய் அவைகளை யங்குமிங்கு மிழுத்துத் திரிகிறான் என்றபடி,]

శరీరంయదవాప్నోతి యచ్చాప్యుత్క్రామతీశ్వరః।
గృహీత్వైతానిసంయాతి వాయుర్గన్ధానివాశయాత్॥౮॥

(அ) எந்த சரீரத்தை யிவன் அடைகிறானோ எதினின்றும் மேலே கிளம்புகிறானோ அந்த சரீரத்திலுள்ள இந்திரியங்களுக்கெல்லாம் இவன் ஈசுவரனுகையாலே அவைகளைப் பூதஸூக்ஷ்மங்களோடு கூடக் கிரஹித்துக்கொண்டுபோகிறான். எப்படி? காற்றானது பூமாலை, சந்தனம், கஸ்தூரி முதலியவைகளிலிருந்து அவைகளின் கெந்தங்களைச் சிறிய அவயவங்களாக வெடுத்துக்கொண்டு போவது போல.

(அ-கை) அவ்விந்திரியங்கள் யாவை யெனின் அருளிச்செய்கிறார்.

శ్రోత్రంచక్షుఃస్పర్శనంచ రసనంఘ్రాణమేవచ।
అధిష్ఠాయమనశ్చాయం విషయానుపసేవతే॥౯॥

(கூ) செவி, வாய், கண், மூக்கு, உடல், மனம் என்கிற ஆறு இந்திரியங்களையும் தந்தம் விஷயங்களுக்குத் தக்கபடி செய்து கொண்டு சப்தம் முதலிய விஷயங்களை நுகர்கின்றான்.

ఉత్క్రామన్తంస్థితంవాపి భుఞ్జానంవాగుణాన్వితమ్।
విమూఢానానుపశ్యన్తి పశ్యన్తిజ్ఞానచక్షుషః॥౧౦॥

(க0) ஸத்துவம் முதலிய குணமயமானப் பிரகிருதியினது விகாரமாய் மனுஷ்யாகாரமாயுள்ள பிண்டத்தோடு கலந்திருக்கின்ற இவ்வாத்மாவானது அதினின்றுவெளிப்படும்பொழுதாவது, அப்படிப்பட்ட மற்றொருபிண்டத்திலிருக்கும் பொழுதாவது, குணமயமானவிஷயங்களைப் புசிக்கும்பொழுதாவது, ஒரு காலத்திலும் இம் * மூடர்கள், 'இது ஞானமே வடிவாயுள்ளது; தேவத்வமநுஷ்யத்வாதிகளெல்லாம் சரீரத்தைச் சேர்ந்தது' என்று அறிகிறதில்லை. † ஞானிகளோ இவ்வாத்மவஸ்துவை எந்த நிலையிலும் சரீரத்தினைக்காட்டிலும்வேறாயிருப்பதாகப் பிரித்தறிகின்றார்கள்.

---

* மூடர்கள்-தேஹமே ஆத்மாவென்று பிரமித்தவர்கள்.

† ஞானிகள்-சரீரத்தையும் ஆத்மாவையும் நன்கறிந்தவர்கள்.

యతన్తో యోగినశ్చైనం పశ్యన్త్యాత్మన్యవస్థితమ్।
యతన్తోऽప్యకృతాత్మానో నైనం పశ్యన్త్యచేతసః॥౧౧॥

(கக) நம்மிடத்தில் பிரபத்திபண்ணி கர்மயோகம் முதலானவைகளில் யத்தநஞ் செய்யுமவர்கள், அவைகளால் உள்ளத்தின் மாசையறுத்து யோகமென்னுங் கண்ணினுல் ஆத்மா சரீரத்திலிருக்கும்பொழுதே அதைச் சரீரத்தைக்காட்டிலும் வேருயிருப்பதாகப்பிரித்துப் பார்ப்பர்கள். அப்படி கர்மயோகாதிகளில் யத்தநஞ் செய்யுமவர்களோநம்மிடத்தில் பிரபத்தி பண்ணுதபக்ஷத்தில் மனந்தெளியாமல் ஆத்மாவைக் காணும்படியான ஞானமில்லாதவர்களாய் அதைக் காணமாட்டாமற்போகிருர்கள்.

(அ-கை) இப்படி இந்திரிய ஸம்பந்தத்துக்கு விரோதியான விருளைப் போக்குகின்ற சூரிய சந்திர அக்கினிகளுக்குக் கூடப் பிரகாசத்தைத் தருகின்ற ஞானச்சோதியான ஆத்மாவானது, முக்தனென்றும் ஜீவனென்றும் சொல்லப்படுகிற இரண்டு நிலையிலும் பகவானுடைய ஐசுவரியமாயிருக்கிறதென்றுசொல்லப்பட்டது. இப்பொழுது அசித்தின் விகாரமாயிருக்கச் செய்தே சோதியோடுகூடிவிளங்கும் சூரியன் முதலானவர்களின் சோதியும் பகவானுடைய ஐசுவரியந்தா னென்கிருர்.

యదాదిత్యగతం తేజో జగద్భాసయతేऽఖిలమ్।
యచ్చన్ద్రమసి యచ్చాగ్నౌ తత్తేజో విద్ధి మామకమ్॥౧౨॥

(கஉ) ஸகல லோகத்தையும் பிரகாசப்படுத்துகின்ற சூரியன் சந்திரன் அக்கினி இவர்களின் தேஜஸ்ஸூம் நம்முடையதுதான். [என்ருல் அவர்களால் ஆராதிக்கப்பட்ட நாம் அவர்களுக்குத் தந்தோமென்றபடி.]

(அகை) பிராணிகளைத் தரிக்கும் பூமியினது தரிக்கும் படியான சக்தியும் நம்முடையதுதானென்கிருர்.

గామావిశ్య చ భూతాని ధారయామ్యహమోజసా।

(கஉ௲) நாம் பூமியில் ஆவேசித்து ஸகலப் பிராணிகளையும் தடையற்ற நம்ஸாமர்த்தியத்தாலே தரிக்கிறோம்.

పుష్ణామి చౌషధీస్సర్వాస్సోమో భూత్వా రసాత్మకః॥౧౩॥

(கங) அப்படியே அமிருதரஸமயனுன சந்திரனுய்க்கொண்டு ஸகலமான ஓஷதிகளையும் வளர்க்கிறோம்.

అహం వైశ్వానరో భూత్వా ప్రాణినాం దేహమాశ్రితః।
ప్రాణాపానసమాయుక్తః పచామ్యన్నం చతుర్విధమ్॥౧౪॥

(கச) நாமே வைச்சுவாநரமென்னும் ஜாடராக்கினியாய்க்கொண்டு ஸகலப்பிராணி சரீரங்களையும் அடைந்து அவர்கள் புசித்த நால்வகை யன்னத்தையும் பிராணம் அபாநம் என்னு மிரண்டு விருத்திகளுடன் கூடிப் பக்குவஞ் செய்கிறோம்.

(ஆகை) இங்கே பரம புருஷன் தம்முடைய ஐசுவரிய பூதரான சந்தி ராக்கினிகளை ("நான் சூரியனுயைக் கொண்டு நான் சந்திரனுயைக்கொண்டு" என்று) தம்மோடு ஒன்றுபடுத்தியருளிச்செய்தார். இப்பொழுது, அவர்களு ட்பட ஸகல பூதங்களையும் தம்மோடொன்று படுத்திச் சொல்வதற்குக்காரண மருளிச்செய்கின்றார்.

సర్వస్యచాహంహృదిసన్నివిష్టో మత్తస్స్మృతిర్జ్ఞానమపోహనఞ్చ।
వేదైశ్చసర్వైరహమేవవేద్యో వేదాన్తకృద్వేదవిదేవచాహమ్॥౧౫॥

(கரு) அர்ச்சுந! அந்த சந்திராக்கினிகளுக்கும் மற்றப் பிராணிகள் யாவர்க்கும் இருதய கமலத்தில் (அதாவது ஸகலமான பிரவ்ருத்தி நிவ்ருத்தி களுக்குங் காரணமான ஞானமுண்டாவதற் கிடமான இருதயத்தில்) எல்லா வற்றையும் நம்ஸங்கல்பத்தாலேநியமித்துக்கொண்டு நாம் ஆத்மாவாயிருக்கி றோம். இப்படியே § சுருதிகளும் ஸ்மிருதிகளும்சொல்லுகின்றன. ஆகையா ல்யாவர்க்கும் நம்மிடத்திலிருந்து தான் ¶ ஸ்மிருதியும், ஞாநமும், அபோஹ நமும்உண்டாகின்றன. ஆகவிப்படிஅக்கினி சூரியன் வாயு சந்திரன் இந்திர ன் முதலானோருக்கும் நாம் அந்தரியாமியாயிருப்பதுபற்றி அவர்கள் நம் ஸ்வரூபமாகையால் அவர்கள் விஷயமாய்ச்சொல்லும்வேதங்களுக்கும்நாமேவி ஷயம்.[என்றால்-தேவன் மனிதன் என்னுஞ் சொற்கள் அந்த தேவாதி சரீரங் களிலுள்ள ஜீவாத்மாவைச் சொல்வதுபோல இதரதேவதா விஷயமான வே தங்களும் நம்மையே சொல்லுகின்றன வென்றபடி.]மேலும்வேதத்தில் சொல் லும்பலன்களைக்கொடுப்பவனும் † நாமே; அப்படியே நம்மைச் சொல்லும்வே தத்தையும்நாமேயறிவோம். [என்றால்-இப்படி தாம் அருளிச்செய்தபடிசொ

§ சுருதிகள்-అన్తఃప్రవిష్టశ్శాస్తాజనానాం సర్వాత్మా ॥ యఃపృథివ్యాంతిష్ఠన్ ......యఆత్మనితిష్ఠన్నాత్మనో న్తరో యమయతి॥ పద్మకోశప్రతీకాశం హృదయఞ్చాప్యధోముఖమ్ ॥ అథయదిదమస్మిన్ బ్రహ్మపురేదహరంపుణ్డరీకంవేశ్మ இத்தியாதிகள். ஸ்மிருதிகள். శాస్తావిష్ణురశేషస్య జగతోయోజగన్మయః । ప్రశాసితారంసర్వేషామణీయాంసమణీయసామ్ ॥ యమోవైవస్వతోరాజాయస్తవైషహృదిస్థితః இத்தியாதிகள்.

¶ ஸ்மிருதியாவது - முன் அநுபவித்த வஸ்து விஷயமாய் அநுபவ ஜந்யமான ஸம்ஸ்காரத்தினால் மாத்திரம் பிறப்பதொன்று. ஞாநமாவது-இந்தி ரியம் லிங்கம் ஆகமம் யோகம் இவைகளால் உண்டாகும் வஸ்துநிச்சயம். அ போஹநமாவது-ஞாநநிவ்ருத்தி; அல்லது ஊஹம். ஊஹமாவதுஇந்தப் பிரமா ணம் இப்படிப் பிரவர்த்திக்கத்தக்கதென்று பிரமாணப்பிரவர்த்தி யோக்கிய தையின் விஷயமாய் ஸாமக்கிரீ முதலானவைகளை நிரூபிப்பதினாலுண்டான பிரமாண ஸஹகாரிக்ஞாநம்.

† యోయోయాంయాంతనుంభక్తశ్శ్రద్ధయార్చితుమిచ్ఛతిஎன்று தொடங்கி లభతేచతతఃకామాన్మయైవవిహితాన్హితాన్ என்றும் అహంహిసర్వయజ్ఞానాంభోక్తాచప్రభురేవచ என்றும் முன்னமே இவ்விஷயஞ் சொல்லப்பட்டது.

ல்லாமல் எவன் வேதார்த்தத்தை வேறுவிதமாகச் சொல்லுகிருனே அவன் வேதத்தை யறிந்தவனாகமாட்டானென்று திருவுள்ளம்.]

(அகை) ஆகையால் ஸகல வேதங்களுக்கும் ஸாரமான வர்த்தம் சொல்லுகிறேம் அதை நம்மிடத்தில் தானே கேள் என்கிருர்.

ద్వావిమౌపురుషౌలోకే క్షరశ్చాక్షరఏవచ।
క్షరస్సర్వాణిభూతాని కూటస్థోక్షరఉచ్యతే॥౧౬॥

(கசு) க்ஷரனென்றும் அக்ஷரனென்றும் சொல்லப்படும் இவ்விரண்டு புருஷர்களும்உலகத்தில் பிரசித்தமானவர்கள். அதில் க்ஷர சப்தத்தால் சொல்லப்பட்ட புருஷன் * யாரெனில் - ஜீவசப்தத்தாலே சொல்லப்படுமவைகளாய் பிரமன்முதல் புல்லளவாய் விகாரப்படுவதே ஸ்வபாவமாயுள்ள அசித்தோடுகலந்திருக்கின்ற பிராணிஸமுதாயம். அக்ஷர சப்தத்தால் சொல்லப்பட்ட புருஷன்யாரெனில் - அசித்தின் ஸம்பந்தத்தை விட்டு நீங்கி தானான தன்மையாயிருக்கும் † முக்தஸ்வரூபன்.

ఉత్తమఃపురుషస్త్వన్యః పరమాత్మేత్యుదాహృతః।
యోలోకత్రయమావిశ్య బిభర్త్యవ్యయఈశ్వరః॥౧౭॥

(கஎ) உத்தம புருஷனே முன் சொன்ன பத்தர் முக்தர் என்கிறக்ஷர அக்ஷர புருஷர்களைக் காட்டிலும் வேறுபட்டவன். ஸகலமானஶ்ருதிகளிலும் அவன் பரமாத்மாவென்று சொல்லப்படுவான். இப்படி பரமாத்மாவென்று சொல்லப்படுகையாலன்றோ உத்தம புருஷன் பத்த முக்தபுருஷர்களைக் காட்டிலும் வேறு பட்டவனென்றறியப்படுகிறது? எப்படியெனில்- அசேதநம், அத்தோடு கலந்தஜீவன், அதினின்று விடுபட்ட முக்தன் என்று பிரமாணங்களாலறியப்படும் மூன்று லோகத்தையும் ஆத்மாவாய் பிரவேசித்துத் தரிக்கின்ருன் எவன், அவன் தரிக்கப்படுமவைகளைக் காட்டிலும் வேறுபட்டவன். [இதுதான் பரமாத்மாவென்பதற்குப் பொருள்] அதுவுமின்றி அவன் வேறென்பதற்கு இதுவுமொரு காரணம். எது? அவன் அவ்யயனாய்ஈசுவரனாயிருக்கை. அவ்யயனா யிருக்கையாவது-அழிவதே ஸ்வபாவமான அசேதநமென்ன, அதன் ஸம்பந்தத்தாலே அத்தைப் பின்ருடருகின்ற சேதநமென்ன அப்படியே முன்பு அதன் ஸம்பந்தத்துக்குயோக்கியமாயிருந்த முக்தஸ்வரூபமென்ன இம்மூன்றையுங் காட்டிலும்வேறுப்பட்டிருக்கை. ஈசுவரனாயிருக்கையாவது - தன்னாலாளப்படுமவைகளைக் காட்டிலும் தான்வேறுபட்டிருக்கை.

---

* இங்கே அசித்ஸம்பந்தம் என்கிற உபாதி ஒன்ருயிருக்கையாலே புருஷனென்று ஒருமையாயிருக்கிறது.

† இங்கும் அசித்தைவிட்டு நீங்குகையென்கிற உபாதி ஒன்ருயிருக்கையாலேமுக்தஸ்வரூபனென்று ஒருமையாயிருக்கிறது. ஏனெனில் - இதற்குமுன்பு அநாதியானகாலத்தில் முக்தன்ஒருவனன்றே? బహవోజ్ఞానతపసాపూతామద్భావమాగతాః। సర్గేపినోపజాయన్తేప్రళయేనవ్యథన్తిచ என்றன்றோசொல்லப்பட்டது?

యస్మాత్ క్షరమతీతోఽహ మక్షరాదపి చోత్తమః।
అతోఽస్మి లోకే వేదే చ ప్రథితః పురుషోత్తమః॥౧౮॥

(கஅ) கீழ்ச்சொன்ன ஸ்வபாவங்களாலே க்ஷரமென்னும் ஜீவனைக் கடந்திருக்கும் நான், கீழ்ச்சொன்ன ஹேதுக்களாலே முக்தபுருஷனையுங் காட்டில் மிகவும் சிறந்திருக்கிறபடியால் ¶ லோகத்திலும் § வேதத்திலும் நான் புருஷோத்தமனென்று பிரஸித்தனாயிருக்கிறேன்.

యో మామేవమసంమూఢో జానాతి పురుషోత్తమమ్।
స సర్వవిద్భజతి మాం సర్వభావేన భారత॥౧౯॥

(கக) ஓ பாரத ! யாவனொருவன் கீழ்ச்சொன்னப் பிரகாரம் புருஷோத்தமனான வென்னை க்ஷர அக்ஷரபுருஷர்களைக்காட்டிலும்வேறுபட்டவனென்று அறிகிறானோ அவன்,நம்மையடைவதற்காக அறியவேண்டுமெல்லாவற்றையு மறிந்தவன். நம்மையடைவதற்குபாயமாய் நம்மை ஸேவிக்கவேண்டும் பிரகாரங்களெல்லாவற்றாலும் நம்மைஸேவித்தவனாகிறான். [என்றால்-நம்விஷயத்தைமுற்றும் அறிவதாலும் நம்மை எல்லாவிதத்தாலும் ஸேவிப்பதாலும் நமக்கு எவ்விதப்பிரீதியுண்டாகுமோ அவ்விதப்பிரீதியானது நம்மையிப்படியறியுமவன் விஷயத்தில் நமக்குண்டாகுமென்று திருவுள்ளம்.]

(அ-கை.) இப்படி தம்மைப் புருஷோத்தமனென்றறியும் விஷயத்தைப்பூஜிக்கிறார்.

ఇతి గుహ్యతమం శాస్త్రమిదముక్తం మయానఘ।
ఏతద్బుద్ధ్వా బుద్ధిమాన్స్యాత్ కృతకృత్యశ్చ భారత॥౨౦॥

(உ0) இப்படிநம்முடைய புருஷோத்தமத்வத்தைச் சொல்லுமதாய் எல்லாரஹஸ்யங்களுக்கும் தலையான ரஹஸ்யமாயிருக்கின்றஇந்த சாஸ்திரத்தை நீ குற்றமற்று மிகவும் யோக்கியனாயிருக்கிறாயென்று உனக்குச் சொன்னோம்.இதையறிந்தவன்புத்திமானாயும் கிருதகிருத்தியனாயுமாவான். [என்றால் நம்மையடையக்கோரியவனுக்குவேண்டும் புத்தியெல்லாம்அவனுக்குண்டாய் அவன்செய்யவேண்டுங் கிரியைகள் யாவையுஞ் செய்தவனாவானென்றபடி.]

[இந்த சுலோகத்தால், முன்சொன்ன புருஷோத்தமஜ்ஞானம் சாஸ்திரத்தால் உண்டானாலே இவைகளை யெல்லாம் செய்யுமென்று சொல்லப்பட்டதாகிறது.]

ஸ்ரீபகவத்ராமானுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,
பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

¶ லோகமென்றால் இங்கேமநுவாதிஸ்மிருதிகளைச் சொல்லுகிறது. அதில் అంశావతారం పురుషోత్తమస్య హ్యనాదిమధ్యాన్తమజస్య విష్ణోః இத்தியாதியில்பிரஸித்தம்.

§ வேதத்தில் పరంజ్యోతిరుపసంపద్య స్వేన రూపేణాభినిష్పద్యతే స ఉత్తమః పురుషః என்று பிரஸித்தம்.

ஸ்ரீ:.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# பதினாறுவது அத்யாயம்.

## அவதாரிகை.

கீழ்மூன்று அத்தியாயங்களால், சேர்ந்தும் பிரிந்துமிருக்கின்ற பிரகிருதிபுருஷாளின் உண்மையும், அவைகளுக்குச்சேர்க்கையுண்டாவதும் நீங்குவதும் முறையே குணஸம்பந்தத்தாலும் அதனின்மையாலு மூண்டாகுமென்கிற விஷயமும், எந்தநிலையிலிருந்தாலும் பிரகிருதியும் புருஷனும் எம்பெருமானுடைய ஐசுவரியமாயேயிருக்குமென்பதும், அப்படிப்பட்ட ஐசுவரியவானானபகவான்,ஐசுவரியங்களானஅசித்வஸ்துவென்ன பத்தமுக்தரூபமான சேதநவஸ்துவென்ன இவ்விரண்டையுங்காட்டில் (அவ்யயனாய் வியாபகனாய் தரிப்பவனாய் பதியாயிருந்து) வேறுபட்டிருக்கையாலே புருஷோத்தமனாயிருக்கிறானென்கிறயதார்த்தமும் வருணிக்கப்பட்டது.

இப்பொழுது கீழ்ச்சொன்ன அவ்விஷயங்களெல்லாம் திடப்படுவதற்காக, புருஷன் சாஸ்திரத்துக்கு வசப்பட்டவன் என்று சொல்லத்தொடங்கி, சாஸ்திரத்துக்கு வசப்பட்டும் வசப்படாமலு மிருக்கும் தேவாசுரர்களின் சிருஷ்டியை யருளிச்செய்கிறார்.

శ్రీభగవానువాచ॥ అభయంసత్త్వసంశుద్ధి ర్జ్ఞానయోగవ్యవస్థితిః।
దానన్దమశ్చయజ్ఞశ్చ స్వాధ్యాయ స్తపఆర్జవమ్॥౧॥
అహింసాసత్యమక్రోధ స్త్యాగశ్శాన్తిరపైశునమ్।
దయాభూతేష్వలోలత్వం మార్దవంహ్రీరచాపలమ్॥౨॥
తేజఃక్షమాధృతిశ్శౌచ మద్రోహోనాతిమానితా।
భవన్తిసమ్పదం దైవీ మభిజాతస్యభారత॥3॥

(க-ங) இஷ்டந்தவிர்ந்து அநிஷ்டங்கைப்படுவதென்கிற துக்கத்துக்கு ஹேதுவானபயங் கொள்ளாமலிருக்கை, அந்தஃகரணம் ரஜஸ்ஸு-தமஸ்ஸுக்களோடு கலவாமலிருக்கை, பிரகிருதிக்குப்புறம்பான ஆத்மவஸ்துவைப்பகுத்தறிவதில்நிஷ்டை, நியாயமாய் ஸம்பாதித்த தனத்தை யோக்கியாளுக்களிக்கை,மனதைவிஷயங்களினின்றுந் திரும்பும்படிபழக்குகை, பலாபேக்ஷயின்றி பகவதாராதநரூபமாக மஹாயக்ஞாதிகளை யநுட்டிக்கை, வேதமெல்லாம் ஈசுவரனையும் அவன் ஐசுவரியத்தையும் அவன் ஆராதநத்தையும் சொல்லுகிறதென்று நினைத்து வேதாப்பியாஸத்தில் நிஷ்டை, எம்பெருமானுக்குப்பிரீதிகரமான கருமயோக்கியதையையுண்டுபண்ணும்கிருச்சிரம் சாந்திராயணம் ‡ துவாதசி உபவாஸமுதலியவைகளை யநுட்டிக்கை, மனது வாக்கு காயம்இவற்றின் வியாபாரங்கள் ஒரேரீதியாயிருக்கை, பிறருக்குப் பீடைசெய்யாமை, தான்கண்டது கண்டபடியே பூதங்களுக்கு இதமாகப்பேசுகை, பிறருக்குப் பீ

‡ துவாதசிஉபவாஸமாவது - துவாதசி ஸமாராதநார்த்தமான ஏகாதசிஉபவாஸம்.

டைசெய்ய வேண்டுமென்கிற மனோவிகாரமற்றிருக்கை, ஆத்மாவுக்கு ஹிதமல்லாதவைகளைக் கைவிடுகை, இந்திரியங்களை விஷயங்களில் மண்டவொட்டாமல் தடைசெய்வதில் முயலுகை, பிறருக்கு அநர்த்தத்தைத்தரும் வார்த்தையையொருவருக்குச் சொல்லாமை, ஒருபூதமும் துக்கப்படச்சகியாமை, விஷயங்களில் ஆசையற்றிருக்கை, ஸாதுஜநங்கள் கூடும்படி மிருதுவாயிருக்கை, செய்யாததைச்செய்தால் வெட்கம், ஆசைப்படும்படியானவஸ்துநெருங்கியிருக்குமானால் அதில் மனஞ்சலியாமை, துர்ஜ்ஜனாளால் திரஸ்கரிக்கப்படாமை, பிறரால் தான் பீடையனுபவித்தாலும் அதனால் அவர்களிடத்தில் மனங்கன்றாமை,மஹத்தான ஆபத்திலும் செய்யவேண்டியதைச் செய்தேதீரவேண்டுமென்கிற உறுதி,அந்தஃகரண பஹிஃகரணங்களுக்கு சாஸ்திரத்திற் சொன்னபடி செய்யவேண்டியதைச் செய்யத்தக்க யோக்கியதை, பிறனையதேஷ்டமா யிருக்கவொட்டாமல் தடைசெய்கிறகுண மற்றிருக்கை, இடமில்லாதவிடத்தில் கெருவப்படாமை, ஆகிய விக்குணங்களெல்லாம் (எம்பெருமானுடைய ஆக்ஞையைப் பின்செல்லும் ஸ்வபாவர்களான) பெரியோரின் செல்வம்; இவைகளெல்லாம் பகவத் ஆக்ஞையைச் செய்யத்தோன்றிய புருஷனுக்குஉண்டாகின்றன.

దమ్భోదర్పోఽభిమానశ్చ క్రోధః పారుష్యమేవచ।
అజ్ఞానఞ్చాభిజాతస్య పార్థ సమ్పదమాసురీమ్॥౪॥

(ச) தார்மிகனென்று தன்னைச் சொல்லவேண்டுமென்று அதற்காகத் தர்மத்தை யநுட்டிப்பது, விஷயங்களை யநுபவிப்பதால் (கிருத்தியா கிருத்தியங்களில் அவிவேகத்தையுண்டாக்கும்) ஸந்தோஷம், தன்னுடைய வித்தை நற்குடிப்பிறவி இவைகளுக்குத் தகாத அபிமானம், பிறருக்குப் பீடைசெய்யும்படியான மனோவிகாரம், சாதுக்களுக்கு மனவருத்த முண்டாக்குந்தன்மை, பராவரதத்துவங்களென்ன கிருத்தியா கிருத்தியங்களென்ன இவைகளில் அவிவேகம், இந்த ஸ்வபாவங்களெல்லாம் அசுரச்செல்வத்தை யநுபவிக்கத் தோன்றியவர்களுக்கு உண்டாகின்றன. [அசுராளென்றால் - பகவான் ஆக்ஞையைக்கடப்பவர்கள்.]

దైవీసమ్పద్విమోక్షాయ నిబన్ధాయాసురీమతా।

(சஉ) நம் ஆக்ஞையைப் பின்செல்வதென்கிற தெய்வச் செல்வமோ மோக்ஷத்தைத்தரும். [என்றால் கிரமமாய் நம்மை யடைவிக்குமென்று தாத்பரியம்.] நம் ஆக்ஞையைக் கடப்பதென்கிற அசுரச்செல்வமோ அதோகதியையுண்டாக்கும்.

మాశుచస్సమ్పదం దైవీ మభిజాతోఽసిపాణ్డవ॥౫॥

(ரு) அர்ச்சுந! நீ விசனப்படாதே. ஏனெனில்-நீ தெய்வச்செல்வத்துக்காகவே பிறந்திருக்கிறாய். தார்மிகர்தலைவனான பாண்டுவுக்குப் புதல்வனன்றோ நீ?

ద్వౌభూతసర్గౌలోకేఽస్మిన్ దైవఆసురఏవచ।
దైవోవిస్తరశఃప్రోక్త ఆసురంపార్థమేశ్రుణు॥౬॥

(சு) இந்த கர்மலோகத்தில் கர்மஞ்செய்யும் பிராணிகளின் சிருஷ்டியானது, தெய்வஸ்ருஷ்டியென்றும் அசுரஸ்ருஷ்டியென்றும் இரண்டு விதம். [என்றால் பழையபுண்ணிய பாபங்களென்னும் கர்மவசத்தால் பிராணிகள் பகவானுடைய ஆக்ஞையைச்செய்யவும் கடக்கவுமாகப் பிறக்கும்பொழுதே இரண்டுவிதமாய்ப்பிரிந்துண்டாகின்றன வென்றபடி.] அதில் தெய்வஸ்ருஷ்டியானது விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டது. [என்றால்-நமது ஆக்ஞையைப்பின்செல்வதே ஸ்வபாவமானவர்களின் உத்பத்தியானது எவ்வித ஆசாரத்தையனுட்டிப்பதற்காகவோ அவ்வித ஆசாரமானது கர்மயோகமென்றும் ஞாநயோகமென்றும் பக்தியோகமென்றும் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டதென்றபடி.] அசுரர்களின்உத்பத்தி எந்த ஆசாரத்தை யநுட்டிப்பதற்காகவோ அவ்வித ஆசாரத்தைச்சொல்லுகிறோம் அதைக் கேள்.

ప్రవృత్తించనివృత్తించ జనానవిదురాసురాః।
నశౌచంనాపిచాచారో నసత్యంతేషువిద్యతే॥౭॥

(எ) அசுரப்பிறவியாய்ப் பிறந்தவர்களுக்கு * பிரவ்ருத்தி இதுவென்றும் நிவ்ருத்தியிதுவென்றும் தெரியமாட்டாது. சாஸ்திரத்திற்சொன்ன வைதிகக் கருமாநுட்டாநத்துக்கு வேண்டும் யோக்கியதை அவாளிடத்தில் உள்ளுங்கிடையாது புறம்புங்கிடையாது. அந்த யோக்கியதை யுண்டாவதற்குக் காரணமான † ஸந்தியாவந்தநம்முதலிய ஆசாரமுங்கிடையாது. தாம்அறிந்தபடியே பூதங்களுக்கிதமாகப் பேசுவதென்கிற ஸத்தியமுங்கிடையாது.

అసత్యమప్రతిష్ఠంతే జగదాహురనీశ్వరమ్।
అపరస్పరసమ్భూతం కిమన్యత్కామహైతుకమ్॥౮॥

(அ) ஸத்தியமானப் பிரம்மத்திநின்று முண்டாய், பிரம்மஸ்வரூபமாயிருக்கிறவிப்பிரபஞ்சத்தை அஸத்தியமென்பர்கள். பிரம்மமென்கிற ஆதிசேஷனிடத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற இஜ்ஜகத்தை § அப்படிப்பட்டதல்லவென்பர்கள். ஸத்தியஸங்கல்பனாய் ஸர்வேசுவரனாயிருக்கிற பரப்பிரம்மமான நம்மாலாளப்படுகின்றவிதற்கு ஈசுவரனேயில்லையென்பர்கள். மனிதன் பசு ப

---

* பிரவ்ருத்தியாவது-சுவர்க்கம் புத்திரன் பசுமுதலிய அப்பியுதயத்துக்குச்சாதநமான வைதிகத்தருமம். நிவ்ருத்தியாவது- மோக்ஷஸாதநமான வைதிகத்தருமம்.

† இவ்வர்த்தம் సన్ధ్యాహీనోఽశుచిర్నిత్యమనర్హస్సర్వకర్మసు என்றுசொல்லப்பட்டது.

§ பிரம்மமென்கிறஆதிசேஷனால் தரிக்கப்பட்டவெயன்றோ பூமி ஸகலலோகத்தையும் பரிக்கின்றது. இப்படியே తేనేయంనాగవర్యేణశిరసావిధృతామహీ। బిభర్తిమాలాంలోకానాం సదేవాసురమానుషామ్ என்று சொல்லப்பட்டது.

கூடிமுதலியவெல்லாம் ஸ்திரீபுருஷர்கள் ஒருவரோடொருவர் ஸம்பந்தப்படுவதால் உண்டாவதாய்க்காணப்படுகிறதேயல்லது மற்றப்படி ஒன்றுங்காரணமையாலே எல்லாம் காமத்தாலுண்டாகிறதென்பார்கள்.

ఏతాంవృష్టిమవష్టభ్య నష్టాత్మానోల్పబుద్ధయః।
ప్రభవన్త్యుగ్రకర్మాణః క్షయాయజగతోఽహితాః॥౯॥

(௯) இந்த எண்ணத்தைப் பற்றிக்கொண்டு, இவர்கள்தேஹத்தைக் காட்டிலும்வேறாயிருக்கிற ஆத்மாவைக்காணமாட்டாத அல்பபுத்திகளாய்[அதாவது குடம்முதலியவைகளைப்போல் தெம்படுகின்ற சரீரத்தில் தேஹத்தைக்காட்டிலும்வேறாய் ஆத்மாயிருக்கிறதென்று பகுத்தறியத்தக்க சக்தியற்றவர்களாய்] ஸகலப்பிராணிகளுக்கும் ஹிம்ஸையைச் செய்துகொண்டு உலகத்தையழிக்கப்புகுகிறார்கள்.

కామమాశ్రిత్యదుష్పూరం దమ్భమానమదాన్వితాః।
మోహాద్గృహీత్వాఽసద్గ్రాహాన్ ప్రవర్తన్తేఽశుచివ్రతాః॥౧౦॥

(௧௦) எட்டாத விஷயங்களிலும் ஆசைகொண்டு அவைகளைச்சம்பாதிக்கவேண்டி அவிவேகத்தால் அந்நியாயார்ஜிதமான பொருளைக்கொண்டு சாஸ்திரத்திற் சொல்லாத விரதங்களையெல்லா மேறிட்டுக் கொண்டவர்களாய் டம்பம், மாநம், மதம் இவைகளுடன் கூடி அவைகளைச்சாதிக்கயத்தநஞ்செய்கிறார்கள்.

చిన్తామపరిమేయాంచ ప్రళయాన్తాముపాశ్రితాః।
కామోపభోగపరమా ఏతావదితినిశ్చితాః॥౧౧॥

(௧௧) இன்றைக்கோ நாளைக்கோ யிறக்கப்போகிற இவர்கள் பிராகிருதப்பிரளயம் வரையில் ஸாதித்தாலும் ஸாதித்துமுடியாத விஷயத்தில் அளவற்றவாசைகொண்டு காமப்போகமே பெரும்பயனென்று நினைத்தவர்களாய் இதற்குமேலும் ஒருபுருஷார்த்தமுண்டோவென்று நிச்சயித்து விடுகிறார்கள்.

ఆశాపాశశతైర్బద్ధాః కామక్రోధపరాయణాః।
ఈహన్తే కామభోగార్థ మన్యాయేనార్థసఞ్చయాన్॥౧౨॥

(௧௨) ஆசையென்னும் அனேகபாசங்களால் கட்டுண்டவிவர்கள் காமக்குரோதங்களுக் கிருப்பிடமாய்க்கொண்டு, காமப்போகத்துக்காக அக்கிரமமாய்ப் பொருள்தேட முயல்கின்றார்கள்.

ఇదమద్యమయాలబ్ధ మిమంప్రాప్స్యే మనోరథమ్।

(௧௨௩) பெண்டுபிள்ளை முதலியவெல்லாம் என்திறமையால் ஸம்பாதிக்கப்பட்டதே யல்லது அதுவிஷயத்தில் அதிருஷ்டம் முதலிய யாதொருகாரணமுங்கிடையாது; இப்படியே நான் இன்னம் கோரியிருக்கிற விஷயத்தையும் நானேஸம்பாதிக்கப்போகிறேனேயல்லது மற்றப்படி அதிருஷ்டாதிகளுடன்கூடி அடையப்போகிறேனென்பதில்லையென்று நினைத்து விடுகிறார்கள்.

ఇదమస్తీదమపి మే భవిష్యతి పునర్ధనమ్॥౧౩॥

(கங) என் திறமையால் ஸம்பாதித்த திரவியம் இதோ யிருக்கின்றது; இன்னுமிப்படியே என் ஸாமர்த்தியத்தால் இதைச் சம்பாதிக்கப் போகிறேன்.

అసౌ మయా హతశ్శత్రుర్హనిష్యే చాపరానపి।

(கங உ) இந்த சத்துருவை மஹாபலசாலியான நான் கொன்றேன்; இன்னுமிப்படி வெகுபேரை நானேகொல்லப் போகிறேன்; அதுவேயல்லது அதிருஷ்டமென்றும் அதென்றும் இதென்றும் சொல்லுவதெல்லாம் அசட்டுத்தனம் என்கிறார்கள்.

ఈశ్వరోఽహమహం భోగీ సిద్ధోఽహం బలవాన్సుఖీ॥౧౪॥

(கச) நான்ஈசுவரன், அதாவது-ஒருவனுக்கு ஆட்பட்டவனல்லன்; பின்னும் யான்பலபெயர்களை யாளுமவன்; போகங்களும் அப்படியே என்னால் மாத்திர மடையப் படுகின்றனவேயல்லது மற்றப்படி அதிருஷ்டம் முதலியவைகளா லுண்டாகின்றன வென்பதில்லை; யான் ஸ்வதஸ்ஸித்தமாயிருப்பவன்; அப்படியே ஸ்வயம் பெலவானாயும் சுகியாயுமிருப்பவன் என்கிறார்கள்.

ఆఢ్యోఽభిజనవానస్మి కోఽన్యోఽస్తి సదృశో మయా।

(கசஉ) நான் ஸ்வயம் பரிபூர்ணன்; உத்தமமான வம்சத்தில் பிறந்தவன்; இவ்வுலகத்தில் எனக்கு ஸமமாய் தன் ஸாமர்த்தியத்தால் எல்லாப்பெருமைகளையும் படைத்தவன் வேறொருவனு மில்லையென்கிறார்கள்.

యక్ష్యే దాస్యామి మోదిష్య ఇత్యజ్ఞానవిమోహితాః॥౧౫॥

(கரு) நான் தானாகவே யாகஞ்செய்ய மாட்டுவேன், தானமுமளிப்பேன், அத்தால் ஸந்தோஷிப்பேன் என்று இப்படிக்கெல்லாம் அக்ஞானத்தால் மயங்கி ஈசுவரானுக்கிரஹமின்றி எல்லாந் தங்களாலேயே யாய்விடுவதாக நினைக்கின்றார்கள்.

అనేకచిత్తవిభ్రాన్తా మోహజాలసమావృతాః।
ప్రసక్తాః కామభోగేషు పతన్తి నరకేఽశుచౌ॥౧౬॥

(கசு) அதிருஷ்டம் ஈசுவரன் முதலிய ஸஹகாரமில்லாமல் தம்மாலேயே எல்லாஞ்செய்யக்கூடுமென்று நினைத்து 'இப்படிச்செய்வேன் இதையுஞ்செய்வேன் அதையுஞ்செய்வேன்' என்று அனேகவிதமாய் மனக்கவலை கொண்டவர்களாய் இந்த மோஹமென்னும் வலையுளகப்பட்டு காமப்போகத்தில் மிகவும் பற்றுடையராயிருந்து இடையில்மறித்து அசுத்தமான நரகத்தில் விழுகின்றார்கள்.

ఆత్మసమ్భావితాః స్తబ్ధా ధనమానమదాన్వితాః।

(கசுஉ) தங்களைத் தாங்களே புகழ்ந்துகொண்டு செல்வம் கல்வி குடிப்பிறப்பு இவைகளால் தம்மைக் குறைவற்றவராக நினைத்து யாதொருவியாபாரமுஞ் செய்யாமலிருந்து விடுகிறார்கள்.

యజన్తే నామయజ్ఞైస్తే దమ్భేనావిధిపూర్వకమ్॥౧౭॥

(கஎ) யக்ஞம் செய்தோமென்கிற பெயர் வரவேண்டுமென்று டம்பத்துக்காசைப்பட்டு சாஸ்திரத்தில் சொன்னதொன்றும் தாம்செய்வதொன்றுமாகயக்ஞஞ்செய்கிறார்கள்.

(அ-கை.) இவர்கள் யாகஞ்செய்யும்பொழுது இருக்குமிருப்பு சொல்லுகிறது.

అహఙ్కారంబలందర్పం కామంక్రోధఞ్చసంశ్రితాః।
మామాత్మపరదేహేషు ప్రద్విషన్తోభ్యసూయకాః॥౧౮॥

(கஅ) ஒருவருடைய அபேகை்ஷயில்லாமல் நானே ஸர்வமும் செய்கிறேனென்றிப்படி அஹங்காரப் பட்டுக்கொண்டும், எதையுஞ் செய்யவல்லேனென்று தன் பலத்தைத்தானே புகழ்ந்துகொண்டும், இப்படி யெல்லாமிருக்கிற எனக்குச் சமமாய் ஒருவனுமில்லை யென்று கொழுப்படைந்தும், எனக்கு எல்லாம் நினைத்தமாத்திரத்தில் கிடைக்குமென்று மகிழ்ந்தும், எனக்குயாராகிலும் திங்கு நினைப்பார்களாகில் அவர்களை அதஞ்செய்வேனென்றுகோபித்தும், இப்படி தம்தேகத்திலும் பிறருடைய தேகத்திலு மிருந்துகொண்டு ஸகலமுஞ்செய்விக்கின்ற ஈசனாகிய நம்மைப் பகைத்தும், குயுக்திகளைக்கொண்டு நாமிருக்கிறோமென்கிற விஷயத்தில் தோஷத்தை யேறிட்டும் இப்படிக்கெல்லாம் அஹங்கரித்துக்கொண்டு யாகஞ்செய்கிறார்கள்.

తానహన్ద్విషతఃక్రూరాన్ సంసారేషునరాధమాన్।
క్షిపామ్యజస్రమశుభా నాసురీష్వేవయోనిషు॥౧౯॥

(கசு) இப்படி நம்மைப் பகைப்பவர்களாய் குரூரர்களாய் அசுபர்களான அந்த நராதமர்களை நாம் (பிறப்பு இறப்பு மூப்பு என்று பிரண்டுகொண்டேயிருக்கிற) ஸம்ஸாரத்தில், நம்மை விரோதிக்கின்ற அசுரயோநிகளில்தானே எப்பொழுதும் பிறக்கும்படி தள்ளிவிக்கிறோம். [என்றால் அந்தந்த பிறப்புகிடைக்கும்படியான காரியத்தைச் செய்யும்படி அவர்களுக்கு நாமே புத்தியைத்தருகிறோ மென்றபடி.]

ఆసురీంయోనిమాపన్నా మూఢాజన్మనిజన్మని।
మామప్రాప్యైవకౌన్తేయ తతోయాన్త్యధమాంగతిమ్॥౨౦॥

(உ0) நமக்கு அநுகூலமல்லாத பிறவியில்தோன்றிய அசுரப்பிரகிருதிகள், ஜன்மந்தோறும் மென்மேலும்அக்ஞாநம் விருத்தியடைந்து விபரீதமாய் வாசுதேவனென்கிறபகவான் ஒருவனிருக்கிறானென்கிற நினைவேயில்லாமல் அதோ கதியாய்ப்போவார்கள்.

(அ-கை.) ஆத்ம நாசத்தையுண்டுபண்ணும் இந்த அசுரஸ்வபாவமுண்டாவதற்குக் காரணங்கூறுகின்றார்.

త్రివిధంనరకస్యైతద్ద్వారంనాశనమాత్మనః|
కామఃక్రోధస్తథాలోభ స్తస్మాదేతత్త్రయన్త్యజ॥౨౧॥

(உக) அசுரஸ்வபாவமென்னுமிந்நரகத்துக்கு இம்மூன்றும்வழி. அதாவது:—காமமும் குரோதமும் லோபமும். இவை ஆத்மாவை நாசம்செய்கின்றன. இப்படி கோரமான நரகத்தை விளைவிக்கிறபடியால் அர்ச்சுந! நீ இவைகளைத் தூரமாய்விட்டுவிடு.

ఏతైర్విముక్తఃకౌన్తేయ తమోద్వారైస్త్రిభిర్నరః|
ఆచరత్యాత్మనశ్శ్రేయ స్తతోయాతిపరాఙ్గతిమ్॥౨౨॥

(உஉ) குந்தீபுத்திர ! காமக்குரோதலோபங்களென்கிற இந்த விபரீதஜ்ஞாநமார்க்கத்தினின்றும் விடுபட்ட புருஷன், ஆத்மாவுக்கு நன்மையைச் செய்கிறான். [என்றால்-நம்மையறிந்து நமக்கனுகூலமான யத்தினங்களைச்செய்து பிறகு நம்மையே பரமகதியாக வடைகிறான் என்றபடி.]

(அ - ஙக.) சாஸ்திரத்தை உபேக்ஷிப்பது இந்நரகத்திற்குப் பிரதான காரணம் என்கிறார்.

యశ్శాస్త్రవిధిముత్సృజ్య వర్తతేకామకారతః|
నససిద్ధిమవాప్నోతి నసుఖంనపరాఙ్గతిమ్॥౨౩॥

(உங) வேதமென்னும் நம்மாணையைத்தவிர்ந்து தனக்குத்தோன்றிய வழியில் எவனிருக்கிறானோ அவன் ஒருவிதஸித்தியையும் அடையமாட்டான் அவனுக்கு இஹத்தில் சுகமும் கிடையாது. ஆனபின்பு பரகதியடைகிறவிஷயத்தைக்கேட்கவேண்டுமோ?

తస్మాచ్ఛాస్త్రంప్రమాణన్తే కార్యాకార్యవ్యవస్థితౌ|
జ్ఞాత్వాశాస్త్రవిధానోక్తం కర్మకర్తుమిహార్హసి॥౨౪॥

(உச) ஆகையால் 'இதைச்செய்யத்தகும் இதைச்செய்யத் தகாதென்று' அறியும் விஷயத்தில் உனக்கு வேதந்தான் பிரமாணம். தர்மசாஸ்திரம் இதிஹாஸம் புராணம் முதலியவைகளால் விவரிக்கப்படுகின்ற அவ்வேதமானது எந்தபுருஷோத்தம தத்துவத்தைப் பரமென்று விதிக்கிறதோ அந்த தத்துவத்தையே சிறிதும் ஏத்தக்குறைச்சலின்றியறிந்து,அவனுக்குப்பிரீதிகரமாயும் அவனையடையவேண்டு முபாயமாயு மெந்தகர்மத்தை விதிக்கின்றதோ அக்கருமத்தையே குறைவறச்செய்யக்கடவாய் [என்று அருளிச்செய்தார்.]

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,

பதினாறாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# பதினேழாவது அத்யாயம்.

அவதாரிகை.

தெய்வப்பிறவியையும் அசுரப்பிறவியையும் பிரித்து அருளிச்செய்யாநின்றுகொண்டு உண்மையான பேற்றையும் அதை யடைவிக்கு முபாயத்தையும் வேதத்தைக்கொண்டே யறியவேண்டுமென்று அருளிச்செய்தார்.

இப்பொழுது சாஸ்திரத்தில் சொல்லாதவைகளெல்லாம்அசுரஸம்பந்தமாகையால் பயனாகமாட்டாதென்றும், சாஸ்திரஸித்தமானவைகள் மூன்றுவகையென்றும், அவற்றின் லக்ஷணம் இன்னதென்றும் சொல்லப்படுகின்றது. அதில்சாஸ்திரத்தில் சொல்லாதவைகள் நிஷ்பலங்களென்பதையறியாதுஅர்ச்சுநன், சிரத்தையோடு செய்யப்பட்டால் அவைகளுக்கு ஸத்வம் முதலியகுணங்களுக்குத்தக்கபடி பயனில் வேறுபாடுண்டாவென்பதை யறியவேண்டுமென்று பிரச்சிநம் பண்ணுகிறான்.

అర్జునఉవాచ॥ యేశాస్త్రవిధిముత్సృజ్య యజన్తేశ్రద్ధయాన్వితాః।
తేషాంనిష్ఠాతుకాకృష్ణ సత్త్వమాహోరజస్తమః॥౧॥

(க) ஸ்வாமி! சாஸ்திரத்திற்சொல்லிய முறைதப்பினும் சிரத்தையோடுகூடி எவர்கள் யாகஞ்செய்கிறார்களோ அவர்களின்நிஷ்டையென்ன? ஸத்துவமா ரஜஸ்ஸா தமஸ்ஸா? [என்றால் அவர்களுடைய ஸ்திதியென்ன ஸத்துவத்திலா ரஜஸ்ஸிலா தமஸ்ஸிலா? வென்றபடி]

(அ - கை.) இவ்வாறு கேட்கப்பட்ட பகவான், சாஸ்திரத்தில் சொல்லாத சிரத்தையும் அத்தோடுகூடியயாகமும் நிஷ்ப்பலமென்பதைத் திருவுள்ளத்திற் கொண்டு சாஸ்திரோக்தமான் யாகாதிகர்மமே மூன்றுவிதமென்பதை யறிவிக்கைக்காக முன்னே சாஸ்திரோக்தமான சிரத்தையே மூன்றுவிதமென்கிறார்.

శ్రీభగవానువాచ॥ త్రివిధాభవతిశ్రద్ధా దేహినాంసాస్వభావజా।
సాత్వికీరాజసీచైవ తామసీచేతితాంశృణు॥౨॥

* ஸ்வபாவமாவது தனக்கே அஸாதாரணமான தன்மை. அதாவது பழைய வாஸனையின்படி அந்தந்த வஸ்துக்களிலுண்டான ருசி. எதில் ருசியோ அதில் சிரத்தையுண்டாகின்றது. சிரத்தையாவது இது என் இஷ்டத்தைக்கைப்படுத்துமென்கிற விசுவாஸத்துடன்கூடி ஸாதநத்திலுண்டாகும் தொளை. வாஸனை ருசி சிரத்தை இம்மூன்றும் குணங்களின் ஸம்பந்தத்தாலுண்டாகும் ஆத்மதருமங்கள். அவைகளை யுண்டாக்குமவைகளோ தேஹம் இந்திரியம் மனம் பிராணன் முதலியவைகளின் தருமங்களான குணங்கள். அவைகளால் இந்த ஸாத்விக முதலிய சிரத்தையுண்டாகும்.

(உ) அர்ச்சுந! புருஷர்களுக்கெல்லாம்சிரத்தை * ஸ்வபாவத்தாலுண்டானது. அது ஸாத்விகியென்றும் ராஜஸையென்றும் தாமஸையென்றும் மூன்றுவகை. அதின் ஸ்வபாவத்தைச்சொல்லுகிறேம் கேள்.

సత్త్వానురూపాసర్వస్య శ్రద్ధాభవతిభారత।
శ్రద్ధామయోஉయంపురుషో యోయచ్ఛ్రద్ధస్సఏవసః॥ 3॥

(ங) உலகத்தில் புருஷர்கள் யாவர்க்கும் அவரவர் உள்ளத்துக்குத் தக்கபடி சிரத்தையுண்டாகின்றது. [அதாவது-அந்தஃகரணம் எவ்விதகுணத்தோடுகூடியிருக்குமோ அந்தகுண விஷயமாகவே சிரத்தையுண்டாகுமென்றபடி.] இந்த புருஷன் முழுவதும் சிரத்தையின் விகாரமாக விருக்கிருன். எந்தபுருஷன் எவ்விதமான சிரத்தையுடன் கூடியிருக்கிருனே அவன் அச்சிரத்தையின் விகாரமென்றே சொல்லப்படுவான்.

[புண்ணியகர்மத்தில் சிரத்தைபண்ணினனுகில் அந்த புண்ணிய கர்மப்பயனை அடைவான். ஆகையால் பலனுண்டாவதற்கு சிரத்தையே பிரதானமென்றதாயிற்று.]

(அ - கை.) இதையே விவரிக்கிருர்.

యజన్తేసాత్త్వికాదేవాన్ యక్షరక్షాంసిరాజసాః।
ప్రేతాన్భూతగణాంశ్చాన్యే యజన్తేతామసాజనాః॥ ४॥

(ச) ஸத்துவகுணம் விஞ்சியிருப்பவர்கள் ஸாத்துவிகமான சிரத்தையுடன்கூடித் தேவர்களை ஆராதிப்பர்கள் [இதனுல் துஃகம் கலசாமல் சிறந்த சுகத்திற்குஹேதுவான தேவதாராதனத்தில் பண்ணும் சிரத்தை ஸாத்துவிகம் என்றதாயிற்று.] ராஜஸர்கள் இயக்கரையும் அரக்கரையும் ஆராதிப்பர்கள். தாமஸ ஜனங்கள் பிரேதங்களையும் பூதக்கணங்களையும் பூசிப்பர்கள்]. [இதனுல் துஃகத்தோடுகூடி அற்பசுகத்துக்கு ஹேதுவானது ராஜஸமான சிரத்தை யென்றும்; துஃகமே மிகுதியாய் மிகவும் அற்பமான சுகத்தைத் தருவது, தாமஸச்சிரத்தையென்றும் சொன்னதாயிற்று].

(அ - கை.) இப்படி சாஸ்திரோக்தமான யாகாதிகள் சிரத்தையோடு கூடியிருக்குமாகில் அவற்றின் குணத்துக்குத்தக்கபடி பலவிசேஷங்கள்உண்டென்றும், சாஸ்திரத்திற் சொல்லாததவம் தாநம் முதலியவைகள் ஈசுவராக்ஞைக்கு மாருகையால் அவற்றிற்குச்சிறிதும் சுகமில்லையென்றும் மற்றப்படி அநர்த்தமேவிளையுமென்றும் தமக்குத் திருவுள்ளமென்கிற விஷயத்தை அறிவிப்பாராக அருளிச்செய்கிருர்.

అశాస్త్రవిహితంఘోరం తప్యన్తేయేతపోజనాః।
దమ్భాహఙ్కారసంయుక్తాః కామరాగబలాన్వితాః॥ ౫॥
కర్శయన్తశ్శరీరస్థం భూతగ్రామమచేతసః।
మాంచైవాన్తశ్శరీరస్థం తాన్విద్ధ్యాసురనిశ్చయాన్॥ ६॥

(ரு-சு) சாஸ்திரத்தில்சொல்லாத தவம் யாகம் முதலியவைகள் மிகவும் கோரமாயும் அதிகவருத்தத்தாலே ஸாதிக்கவேண்டியனவைகளாயும் இருந்

ஷமேயாகிலும் அவைகளை டம்பம் அஹங்காரம் காமம் ராகம் பலம் இவைமுத லியவற்றோடுகூடி சரீரத்திலுள்ள பிருதிவிமுதலிய பூதஸமூகத்தையும் என தம்சமான ஜீவனையும் வருத்திக்கொண்டு செய்கின்றவர்கள் அசுரநிச்சயமுள் ளவர்களென்றறி. (அதாவது-நமது ஆ[illegible]ளுயைமீறி நடக்கும் அசுரத்தன்மை பொருந்திய அவர்களுக்குச் சிறிதின்ப[illegible]ங் கிடையாது; மற்றப்படி அநர்த்த மான நரகமேயுண்டாகும் என்று முன்[illegible]மேசொல்லப்பட்டதென்றபடி.]

(அ-கை) அநந்தரம் பிரகிரு[illegible]ஷயம்:—சாஸ்திரீயமான யாகாதிகளு க்குக் குணத்தால்வரும் விசேஷத்[illegible]விஸ்தாரமாயருளிச்செய்கிறார். அதில் ஸத்துவம் முதலியவைகள் விருத்தி[illegible]டைவதற்கு ஆஹாரம் மூலமாகையாலே ஆஹாரத்துக்குண்டான மூன்று வி[illegible]கைகளையுமருளிச்செய்கிறார். అన్నమయం హిసోమ్యమనః॥ఆహారశుద్ధౌసత్త్వశుద్ధిః எ[illegible]றே ஓதப்படுகிறது?

ఆహారస్త్వపిసర్వస్య త్రివిధోభవతిప్రియః।
యజ్ఞస్తపస్తథాదానం తేషాంభేదమిమంశృణు॥ ౭॥

(எ) ஸகலப்பிராணிகளுக்கும் ஸ[illegible]த்துவம் முதலிய முக்குணங்களின்சே ர்க்கைக்குத்தக்கபடி ஆஹாரமும்மூன்[illegible]விதமாய்ப்பிரீதியைச்செய்யும். அப்ப டியேயக்ஞங்களும் மூன்றுவகை. அப்படியேதவமும், தாநமும். இவைகளின் பேதத்தைச்சொல்லுகிறோம் கேள். [ஆஹாரம் யக்ஞம் தவம் தாநம் இவை களுக்கு ஸத்துவமுதலியகுணங்களின்[illegible]ஸம்பந்தத்துக்குத்தக்கபடி யுண்டாகு ம்பேதத்தைச் சொல்லுகிறோம் கே[illegible]ன்றபடி.]

ఆయుస్సత్త్వబలారోగ్యసుఖప్రీతివివర్ధనాః।
రస్యాస్స్నిగ్ధాస్స్థిరాహృద్యా ఆహారాస్సాత్త్వికప్రియాః॥౮॥

(அ) ஆயுஸ்ஸையும் ஞாநத்தை[illegible]ம் பெலத்தையும் ஆரோக்கியத்தையும் சுகத்தையும் பகவத்பிரீதியையும் விருத்[illegible]செய்யுமவைகளாய், மதுரரஸத்தோ டும் எண்ணெயோடும் கூடியவையாய், ஓரோவிகாரமுடையவைகளாய் மனதி ற்கினியவையாயிருக்கும் ஸத்துவமயமான ஆஹாரங்கள் ஸாத்துவிக புருஷ னுக்கு இஷ்டமாகின்றன.

కట్వమ్లలవణాత్యుష్ణ తీక్ష్ణరూక్షవిదాహినః।
ఆహారారాజసస్యేష్టా దుఃఖశోకామయప్రదాః॥౯॥

(கூ) காரமாயும் புளிப்பாயும் உப்பு அதிகமாயும் அதிகஉஷ்ணமாயும் அதிதீக்ஷ்ணமாயும் உபயோகிக்கக்கூடாத சைத்தியாதிகளுடன்கூடியதாயும் சோஷிப்பிக்குமதாயும் தாபத்தையுண்டுபண்ணுமதாயுமிருக்கும் ஆஹாரம் ராஜஸனுக்கு இஷ்டம். இவ்வித ஆஹாரம்[illegible]க்கம் சோகம் வியாதி ரஜோகு ணம் இவைகளை விருத்திபண்ணும்.

యాతయామంగతరసం పూతిపర్యుషితంచయత్।
ఉచ్ఛిష్టమపిచామేధ్యం భోజనంతామసప్రియమ్॥౧౦॥

(கo) காள்ப்பட்டதாய், அதனால்தன்ஸ்வபாவமான ரஸத்தையிழந்து கெட்டநாற்றமுடையதாய், பழகிப்போனதாய், பெரியவரைத்தவிற மற்றவர்களால் புசித்துமீத்தப்பட்டதாய், யாகத்தில் சேஷப்படாததாயிருக்கும் போஜநமானது தாமஸர்களுக்குப்பிரியமாயிருக்கும். இதுவோ! தமோகுணத்தை மென்மேலும் விருத்திபண்ணும்[ஆகையால் ஹிதத்தைக்கோரியவர்கள்ஸாத்துவிகமான ஆஹாரத்தைத்தான்புசிக்கவேண்டுமென்றபடி.]

అఫలాకాంక్షిభిర్యజ్ఞో విధిదృష్టో య ఇజ్యతే।
యష్టవ్యమేవేతిమనః సమాధాయ స సాత్త్వికః॥౧౧॥

(கக) பலாபேக்ஷையற்றவர்களால் சாஸ்திரத்திற் சொன்னபடியே மந்திரம் திரவியம் கிரியைமுதலான அங்கங்களுடன்கூடி, இது எம்பெருமானுடைய ஆராதநரூபம்' என்று ஸ்வயம்ப்ரயோஜனமாய்ச்செய்யப்படும்யாகம் ஸாத்துவிகயாகம்.

అభిసన్ధాయతుఫలం దమ్భార్థమపి చైవయత్।
ఇజ్యతేభరతశ్రేష్ఠ తంయజ్ఞం విద్ధిరాజసమ్॥౧౨॥

(க௨) பலாபேக்ஷையுடன் கூடியவர்களால் டம்பத்தையுட்கொண்டு கீர்த்தியே பயனாய்ச்செய்யப்படும் யாகமானது இராஜஸயாகமென்றறி.

విధిహీనమసృష్టాన్నం మన్త్రహీనమదక్షిణమ్।
శ్రద్ధావిరహితంయజ్ఞం తామసం పరిచక్షతే॥౧౩॥

(கங) ஸதாசாரஸம்பந்நாளாய் வித்துவான்களானப் பிராம்மணாளாலே விதிக்கப்படாததாய் அன்னதானம் முதலியவைசெயப்படாததாய் மந்திரஹீநமாய் தக்ஷிணையற்றதாய் சிரத்தையில்லாததாயிருக்கும் யாகம் தாமஸமென்னப்படும்.

(அ - கை.) இப்பொழுது குணத்துக்குத்தக்கபடி தவமும் மூன்றுவிதமென்பதை யருளிச்செய்வாராய் அது மனோவாக்காயங்களாலுண்டாகவேண்டுகையால் அவற்றால்வரும் ஸ்வரூபபேதத்தை யருளிச்செய்கிறார்.

దేవద్విజగురుప్రాజ్ఞ పూజనంశౌచమార్జవమ్।
బ్రహ్మచర్యమహింసాచ శారీరం తప ఉచ్యతే॥౧౪॥

(கச) தேவர், பிராம்மணர், குருக்கள், பண்டிதாள் இவாளைப்பூசித்தல், தீர்த்தஸ்நாநம் முதலியவைகளைச் செய்தல், உள்ளத்திலுள்ளபடி நடக்கை, ஸ்திரீகளைப்பார்க்கும்பொழுது இவர்கள் அநுபவத்துக்கேற்றவர்களென்கிற புத்தியோடு பாராமை, பிராணிகளுக்குப்பீடை செய்யாமை, இதெல்லாம சரீரத்தவமென்று சொல்லப்படும்.

అనుద్వేగకరంవాక్యం సత్యంప్రియహితంచయత్।
స్వాధ్యాయాభ్యసనంచైవ వాఙ్మయం తప ఉచ్యతే॥౧౫॥

(கரு) பிறருக்கு மனவருத்த முண்டாக்காமல் ஸத்தியமாய் பிரியமா யிருக்கச்செய்தே இதமாய்ப்பேசும் வார்த்தையும், வேதாத்தியயநமும் வாக்குத்தவமென்று சொல்லப்படும்.

మనఃప్రసాదస్సౌమ్యత్వం మౌనమాత్మవినిగ్రహః।
భావసంశుద్ధిరిత్యేత త్తపో మానస ముచ్యతే॥౧౬॥

(கசு) மனதில் சினமுதலியவையற்றிருக்கை, பிறருக்கு க்ஷேமமுண்டாக்குவதில் ஆசைகொண்டிருக்கை, வாக்கைப் பேசவொட்டாமல் அடக்குகை, மனோவியாபாரத்தை தியானிக்கப்படும் விஷயத்தில்தானே நிறுத்துகை, ஆத்மாவையொழிந்தமற்றவைகளில் சிந்தையற்றிருக்கை இதெல்லாம் மனத்தவமென்றறி.

శ్రద్ధయా పరయా తప్తం తపస్తత్త్రివిధం నరైః।
అఫలాకాఙ్క్షిభిర్యుక్తైః సాత్త్వికం పరిచక్షతే॥౧౭॥

(கஎ) பலாபேக்ஷையற்று இது பகவானுக்கு ஆராதநமென்கிற சிந்தையோடு கூடியிருப்பவர்களாலே மிகவும் சிரத்தையுடன் கூடி எந்ததவமானால் செய்யப்படுமோ (முற்கூறியபடி மூன்றுவிதமாயிருக்கிற) அத்தவமானது ஸாத்துவிகமென்று சொல்லப்படும்.

సత్కారమానపూజార్థం తపో దమ్భేన చైవ యత్।
క్రియతే తదిహ ప్రోక్తం రాజసం చలమధ్రువమ్॥౧౮॥

(கஅ) பலத்தில் அபேக்ஷையுடன்கூடி, தன்னைக்கண்டு பிறர் ஸந்தோஷித்துக்கொண்டாடி நமஸ்காராதிகளைப் பண்ணவேண்டுமென்று டம்பத்தைக் கோரியவர்களால் எந்த தவம் செய்யப்படுமோ; அது ராஜஸத்தவம். மேலும் அது அசாசுவதமான சுவர்க்காதிகளை பயனாய்க்கொண்டதாகையால் சாசுவதமல்லாமல் சலிப்புற்று அழிந்துபோகும்.

మూఢగ్రాహేణాత్మనో యత్ పీడయా క్రియతే తపః।
పరస్యోత్సాదనార్థం వా తత్తామసముదాహృతమ్॥౧౯॥

(கக) மூடத்தனமாய் தனது கருத்தமும் தெரியாமல் பிடிவாதமாய் செய்யப்படுவதும் பிறருக்குப்பீடையுண்டாக்குவதுமான தவம் தாமஸத்தவமென்னப்படும்.

దాతవ్యమితి యద్దానం దీయతేఽనుపకారిణే।
దేశే కాలే చ పాత్రే చ తద్దానం సాత్త్వికం స్మృతమ్॥౨౦॥

(உ0) பலனைக்கோராமல் கொடுக்கவேண்டுமென்கிற வெண்ணத்தோடு தகுந்ததேசத்தில் தகுந்தகாலத்தில் தகுந்த பாத்திரத்தில் உபகாரஞ்செய்யச்சக்தியற்றவன் விஷயத்தில் செய்யப்படும் தாநம் ஸாத்துவிகதாநமென்னப்படும்.

యత్తు ప్రత్యుపకారార్థం ఫలముద్దిశ్య వా పునః।
దీయతే చ పరిక్లిష్టం తద్దానం రాజసం స్మృతమ్॥ ౨౧॥

(உக) பிரதியுபகாரத்தையும் பலனையும் உத்தேசித்து கெட்டதிரவியத்தைக்கொண்டு செய்யப்படும் தானம் ராஜஸதானமென்னப்படும்.

అదేశకాలే యద్దానమపాత్రేభ్యశ్చ దీయతే।
అసత్కృతమవజ్ఞాతం తత్తామసముదాహృతమ్॥ ౨౨॥

(உஉ) தகாததேசத்தில் தகாத காலத்தில் தகாதபேர்களிடத்தில் செய்யப்படுமதாய் கால்கழுவுதல் முதலிய கௌரவமானஉபசாரமில்லாமல் அவமரியாதையாய்ச்செய்யப்படுந்தானம் தாமஸதானமென்னப்படும்.

(அ - கை.) இப்படி வைதிகங்களான யக்ஞதபோதானங்கள் ஸத்துவ முதலிய குணங்களுக்குத்தக்கபடி மூன்றுவகையாமென்கிற விஷயஞ் சொல்லப்பட்டது. இப்பொழுது அந்தவைதிகயக்ஞாதிகளே பிரணவத்தோடுகூடிய 'தத்ஸத்' சப்தங்களாலே கூறப்படுமென்று அவற்றின் லக்ஷணஞ்சொல்லப்படுகின்றது.

ఓం తత్సదితి నిర్దేశో బ్రహ్మణస్త్రివిధస్స్మృతః।
బ్రాహ్మణాస్తేన వేదాశ్చ యజ్ఞాశ్చ విహితాః పురా॥ ౨౩॥

(உரு) ஓம் தத் ஸத் என்கிற இம்மூன்று சொற்களும் பிரம்மத்தோடுசேருகின்றன. [பிரம்மமாவது இங்கே வேதம்; வேதசப்தத்தாலே வைதிகக்கருமம் சொல்லப்படுகின்றது; ஆக இதனால் வைதிகமான யக்ஞாதிகருமம் * ஓம் தத் ஸத்என்கிற சொற்களோடுகூடியிருக்குமென்றதாயிற்று] இம்மூன்று சொற்களுடன் கூடியே வேதாதிகாரிகளான திரைவர்ணிகரும் வேதங்களும் யக்ஞங்களும் முன்னே நம்மால் நிருமிக்கப்பட்டன.

(அ-கை.) ஓம் தத் ஸத் என்கிற மூன்றுசொற்களும் அந்வயிக்கும்படி சொல்லத்தொடங்கி முதலில் ஓம் என்னும் சொல் அந்வயிக்கும்படி சொல்லுகிறார்.

తస్మాదోమిత్యుదాహృత్య యజ్ఞదానతపఃక్రియాః।
ప్రవర్తన్తే విధానోక్తాః సతతం బ్రహ్మవాదినామ్॥ ౨౪॥

(உச) ஆகையால் வேதவாதிகளான திரைவர்ணிகர்கள் யக்ஞம் தானம் தவம் இவைகளை வேதத்தில் சொன்னபடிசெய்யும்பொழுது ஆதியில் 'ஓம்' என்று சொல்லி எப்போதும் ஆரம்பிக்கிறார்கள். வேதங்களும் அப்படியே ஓம் என்று சொல்லி ஆரம்பிக்கப்படுகின்றன.

---

* ஓம் என்கிற சப்தம் வைதிககருமத்துக்குஅங்கமாகப்பிரயோகாதிகளில் பிரயோகிக்கப்படுகிறது. தத்ஸத் என்கிற சப்தங்கள் பூஜ்யவாசகமாகப் பிரயோகிக்கப்படுகின்றன.

[இப்படி வேதங்களுக்கும் வை[தி]கங்களான யக்ஞாதிகளுக்கும் ஓம் என்னும் சப்தத்தோடு அன்வயம் சொல்[லப்]பட்டது. இதனால் ஓம் என்கிற சொல்லோடுகூடிய வேதத்தைத்தரிப்பதா[லு]ம் அப்படிப்பட்டயக்ஞாதிகர்மங்களைச் செய்கையாலும் பிராம்மணசப்தத்[தா]ல குறிக்கப்பட்ட திரைவர்ணிகருக்கும் ஓம் என்னும் சொல்லோடு அன்வ[யம்] வருணிக்கப்பட்டதாகிறது.

(அ-கை.) இப்பொழுது இவை[க]ளுக்கெல்லாம் தத் என்னுஞ் சொல்லோடு அன்வயங் கூறப்படுகின்றது.

తదిత్యనభిసన్ధాయ ఫలంయజ్ఞ[తపః]క్రియాః।
దానక్రియాశ్చవివిధాః క్రియ[న్తే మోక్షకా]ఙ్క్షిభిః॥ ౨౫॥

(உரு) பலனைக்கோராமல் மோ[க்ஷத்தை வி]ரும்பியாலும் யக்ஞம் தவம் தானம் முதலிய கிரியைகள் எவைகளானுல் மோக்ஷாபேக்ஷிகளான திரைவர்ணிகர்களாலே செய்யப்படுமோ அவைகள் பிரம்[ம]பிராப்திக்கு உபாயமாகும்படி பிரம்மவாசகமான † தத்சப்தத்தாலே குறி[க்க]த்தக்கவைகள்.

(அ-கை.) இப்படி வேதாத்தி[ய]யநம் யக்ஞம் முதலியவைகள் மோக்ஷத்துக்கு ஸாதநமாகும்பொழுது த[த்] என்னுஞ் சொல்லாலே கூறப்படுமென்று தத் என்னுஞ் சொல்லுக்கு அன்வயம் சொல்லப்பட்டது. திரைவர்ணிகரும் அப்படிப்பட்ட வேதாத்திய[யந]ாதிகளை யநுஷ்டிக்கின்றமையால் அவர்களுக்கும் தத்சப்தத்தோடு அன்[வய]முண்டென்றுஏர்ப்பட்டது. இப்பொழுது இவைகளுக்கெல்லாம் ஸத்சப்த[த்]தோடு அன்வயம் சொல்வதற்காக உலகத்தில் ஸத்என்னுஞ்சொல்லுக்குப்பொ[ரு]ருள்வழங்கும்படி யருளிச்செய்கிறார்.

సద్భావేసాధుభావేచ సదిత్యే[తత్ప్ర]యుజ్యతే।
ప్రశస్తేకర్మణితథా సచ్ఛబ్దఃపా[ర్థ]యుజ్యతే॥ ౨౬॥

(உசு) அஹோபார்த்த! 'ஸத்' என்னும்சொல் லோகத்திலாகட்டும் வேதத்திலாகட்டும் இருக்குந்தன்மையி[லு]ம் ஸாதுத்தன்மையிலும் பிரயோகிக்கப்படுகின்றது. அப்படியே ஒரு புரு[ஷ]னால் அநுஷ்டிக்கப்பட்ட லௌகிகமான நல்லகாரியங்களிலும் 'இது ஸத்க[ர்ம]ம்' என்றுபிரயோகிக்கப்படுகிறது.

యజ్ఞేతపసిదానేచ స్థితిస్సదితిచో[చ]్యతే।
కర్మచైవతదర్థీయం సదిత్యేవాభి[ధీ]యతే॥ ౨౭॥

(உஎ) ஆகையால் வைதிகர்களா[கி]ய திரைவர்ணிகர்கள் யக்ஞதாநதவங்களில் இருப்பார்களில் அவ்விருப்பு நன்[மை]கையாலே ஸத் என்னப்படும்; அப்படிப்பட்ட திரைவர்ணிகர்களுக்காகச் [செய்]யப்படும் யக்ஞாதிகருமங்களும் ஸத் என்றேசொல்லப்படும். [ஆகையால் வே[தங்]களும் வேதிகக்கருமங்களும்

---

† సవికరిశింయ త్త్వదమను త్తమమ్ என்[ற] தத் சப்தம் பிரம்மவாசகமென்றுமிடம் ஸஹஸ்ரநாமாதிகளில் பிரஸித்தம்.

பிராம்மணசப்தத்தாலே குறிக்கப்பட்ட த்ரைவர்ணிகரும், ஓம் தத் ஸத்என்கிற சப்தத்தோடு கூடியிருக்கையென்ற லக்ஷணம் பொருந்தியிருக்கையால் அவைகளும் அவர்களும் அவேதங்களையும் அவைதிகர்களையுங் காட்டில்வேறுபட்டிருப்பவர்க ளென்றறியத்தக்கது.

అశ్రద్ధయాహుతందత్తం తపస్తప్తం కృతంచయత్।
అసదిత్యుచ్యతేపార్థ నచతత్ప్రేత్యనో ఇహ॥౨౮॥

(உஅ) சிரத்தையின்றிச்செய்யப்படும் ஹோமம் முதலிய கருமம் சாஸ்திரோக்தமே யாகிலும் அஸத் என்னப்படும். ஏன்? அது மோக்ஷத்துக்குமாகாது; ஸம்ஸாரத்துக்கு வேண்டும் பலனையுந்தாராது. [ஆகையால் அஸத் என்றபடி.]

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,

பதினேழாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

# பதினெட்டாவது அத்யாயம்.

அவதாரிகை.

கீழிரண்டு அத்தியாயங்களால் $ அப்பியுதயத்தையும் மோக்ஷத்தையும் அளிப்பது வைதிகமான யக்ஞம் தானம் தவம் முதலியவைகளேயல்லது மற்றல்லவென்றும், வைதிகக்கருமத்துக்கு ஸாமான்னியலக்ஷணம் பிரணவத்தோடு ஸம்பந்தமென்றும், அதில் மோக்ஷஸாதநத்துக்கு ஸாம்ஸாரிகக்ஷேமஸாதநத்தைக்காட்டிலும் பேதம் தத் ஸத் என்னுஞ் சொற்களைக்கொண்டுகுறிப்பிடுகையென்றும், மோக்ஷஸாதகமான கர்மம் பலாபேக்ஷையற்ற யக்ஞாதிகளென்றும், அவைகளை யாரம்பிக்கும்படியோ ஸத்துவகுணத்தின் மிகுதியால் வருமென்றும், ஸத்துவகுணத்தின் விருத்தியோ ஸாத்விகமான ஆகாரஸேவையாலுண்டாக வேண்டுமென்றும் சொல்லப்பட்டது. இப்பொழுது மோக்ஷஸாதநமாகச் சொல்லப்பட்ட தியாகத்துக்கும் ஸன்னியாஸத்துக்கும் ஐக்கியமும், தியாகத்தின் ஸ்வரூபமும், எந்தகருமமும் பகவானால் செய்யப்படுகிறதென்று கர்திருத்வத்தை ஸர்வேச்வரனிடத்தில் அநுஸந்திக்கையும், ஸத்துவரஜஸ்தமஸ்ஸுக்களின்காரியத்தை வர்ணித்துஅதனால் ஸத்துவகுணத்தை அவசியம் கைப்பற்றவேண்டுமென்கிற விஷயமும், பகவதாராதநரூபமாகச் செய்யப்படும் தனதுவர்ணத்துக்குரிய கர்மங்கள் பரமபுருஷனையடைவிக்குமென்கிறவிஷயமும், கீதாசாஸ்திரம் முழுதலுக்கும் ஸாரமான அர்த்தம்பக்தியோகமென்கிற விஷயமும், இவையாவும் சொல்லப்படுகின்றன.

$ அப்பியுதயம் மோக்ஷத்தை யொழிந்தமற்ற புருஷார்த்தங்கள்.

அதில் தியாகமென்பதும் ஸந்நியாஸமென்பதும் ஒன்றோ வேறோ! என்று நிச்சயிக்கும் பொருட்டும், அதின் ஸ்வரூபத்தை நிச்சயிக்கும்பொருட்டும் அர்ச்சுநன் கேட்கிறான்:

అర్జునఉవాచ॥ సన్న్యాసస్యమహాబాహో తత్త్వమిచ్ఛామివేదితుమ్।
త్యాగస్యచహృషీకేశ పృథక్కేశినిషూదన॥౧॥

(க) ஓ பகவானே! నకర్మణా నప్రజయా ధనేనత్యాగేనైకేఅమృతత్వమానశుః ...... వేదాన్తవిజ్ఞానసునిశ్చితార్థాః సన్న్యాసయోగాద్యతయశ్శుద్ధసత్వాః । తేబ్రహ్మలోకేతుపరాన్తకాలేపరామృతాత్పరిముచ్యన్తిసర్వే இத்தியாதிகளில் தியாகமும்ஸந்நியாஸமும் மோக்ஷஸாதநங்களென்று ஓதப்படுகின்றனவன்றோ? அந்த ஸந்நியாஸத்தினுடையவும் தியாகத்தினுடையவும் உண்மையைத் தனியே அறிய வாசைப்படுகிறேன். [என்றால் இதற்கு அபிப்பிராயம்:— ஸந்நியாஸம் தியாகம் என்கிறஇரண்டு சொற்களுக்கும் பொருள் தனித்தனியுண்டா! இல்லையென்று ஒரேபொருளா! தனிப்பொருளுண்டானால் அப்பொழுது அவைகளின் ஸ்வரூபத்தைத் தனித்தனியே யறியவிரும்புகிறேன்; இரண்டும் ஒன்றா யிருந்தாலும் அப்படியே யருளிச்செய்யவேண்டுமென்றுஅபிப்பிராயம்.]

(அ-கை.) அநந்தரம் "இவ்விரண்டுக்கும் ஸ்வரூபம்ஒன்றுதான்; அதாவது- இப்படிப்பட்டது" என்று நிச்சயிப்பதற்காக அதுவிஷயத்தில் வாதிகள்செய்யும் ஆக்ஷேபத்தைக் காட்டா நின்றுகொண்டு பகவான் அருளிச்செய்கிறார்

శ్రీభగవానువాచ॥ కామ్యానాంకర్మణాంన్యాసం సన్న్యాసంకవయోవిదుః।
సర్వకర్మఫలత్యాగం ప్రాహుస్త్యాగంవిచక్షణాః॥౨॥

(உ) சில வித்துவான்கள் காமியகருமத்தைச் சுத்தமாய்விட்டுவிடுவது தான் ஸந்நியாஸமென்பார்கள். சிலஸமர்த்தர்கள் நித்தியம் நைமித்திகம் காமியம் என்கிறவெல்லாக் கர்மங்களினும் பலத்தையபேக்ஷிக்காம லிருக்கையே தான் மோக்ஷசாஸ்திரங்களில் சொல்லுகிற * த்யாக சப்தத்துக்குப் பொருள் என்று விளம்புவர்கள்.

* இங்கே சாஸ்திரோக்தமான த்யாகம், காம்ய கர்மங்களைச் சுத்தமாய்விடுகையென்றும் ஸர்வகர்மங்களினும் பலாபேக்ஷையற்றிருக்கையென்றும் விவாதத்தைக்காட்டத் தொடங்கினவர்,ஓரிடத்தில் ஸந்நியாஸசப்தத்தையும் மற்றோரிடத்தில் த்யாகசப்தத்தையும் பிரயோகித்தார். இதனால் த்யாகஸந்நியாஸ சப்தங்களுக்குப் பொருள் ஒன்றேயென்று அங்கீகரிக்கப்பட்டதாகத் தெரிகிறது. அப்படியே నిశ్చయంశృణుమేతత్రత్యాగేభరతసత్తమ என்று த்யாக சப்தத்தைக்கொண்டே நிச்சயஞ்சொல்லுகையாலும் నియతస్యతుసన్న్యాసః కర్మణోనోపపద్యతే। మోహాత్తస్యపరిత్యాగస్తామసః పరికీర్తితః॥ అనిష్టమిష్టంమిశ్రంచత్రివిధంకర్మణఃఫలమ్ భవత్యత్యాగినాంప్రేత్యనతుసన్న్యాసినాంక్వచిత్ என்று ஒருசொல்லுக்கு ஒருசொல்லைப்பதிலாகச் சொல்லக்காண்கையாலே அவ்விரண்டுச்கும்பொருள் ஒன்றெனத் தோற்றுகிறதென்று நிச்சயிக்கப்படுகிறது.

త్యాజ్యన్దోషవదిత్యేకే కర్మ ప్రాహు[illegible]నీషిణః।

(உ௨) கபிலமதஸ்தர்களும் அம்மதத்[illegible]தயநுஸரித்த சில வைதிகர்களும், யக்ஞம் முதலியகருமங்கள் ராகம்முதலி[illegible] தோஷங்களைப்போல் பந்தஹேது வாகையால் அவைகளையெல்லாம் மோ[illegible]தார்த்தியானவன் முதலே விடவே வேண்டுமென்று சொல்வர்கள். [பந்த[illegible]து - கட்டுக்குடல்.]

యజ్ఞదానతపఃకర్మ నత్యాజ్యమి[illegible]పరే॥ 3॥

(ங) இப்படியிருக்க சில பண்டி[illegible]ர் யக்ஞாதிகர்மங்களைவிட லாகா தென்பர்கள்.

నిశ్చయంశృణుమేతత్ర త్యాగేభర[illegible]త్తమ।

(ஙஉ) இப்படி வாதிகளால் [illegible]க்கப்பட்ட தியாகவிஷயத்திலுண் டான நிச்சயத்தைச் சொல்லுகிறோம்[illegible]ள்.

త్యాగోహిపురుషవ్యాఘ్ర త్రివిధ[illegible]ప్రకీర్తితః॥౪॥

(ச) வைதிகக்கர்மங்களைச் செய்[illegible]பொழுது § பலத்தின்விஷயமாயும் கர்மத்தின்விஷயமாயும் கர்த்தாவின் வி[illegible]யமாயும் தியாகம் மூன்றுவிதம் என்று முன்னமே நம்மால் சொல்லப்பட்[illegible]தன்றோ?

యజ్ఞదానతపఃకర్మ నత్యాజ్యం[illegible]మేవతత్।

(சஉ) யக்ஞம் தாநம் தவம்முத[illegible] வைதிகக்கருமத்தை மோக்ஷார்த் தியானவன்ஒருக்காலும் விடக்கடவனல்[illegible]ன்; மற்றப்படி இவன் பிரயாணமா மளவும் நாடோறுஞ் செய்தேதீரவேண்[illegible].

(அ-கை.) ஏனெனில்?

యజ్ఞోదానన్తపశ్చైవ పావనాని[illegible]నీషిణామ్॥ ౫॥

(ரு) யக்ஞம் தாநம் தவம்முதலிய[illegible]வர்ணாச்சிரமத்தைச்சேர்ந்த கர்மங்க ளெல்லாம் மநநசீலருக்குப் பரிசுத்திகர[illegible]கள். [என்றால்:—வாழ்நாளுள்ளள வும் உபாஸநஞ்செய்கின்ற மோக்ஷார்த்[illegible]களுக்கு உபாஸநத்தைக் கைபுகுத வொட்டாமல் விரோதிக்கின்ற பழைய[illegible]மங்களைப் போக்கடிக்குமவைகளெ ன்றபடி.]

ఏతాన్యపితుకర్మాణి సఙ్గన్త్యక్త్వా[illegible]లానిచ।
కర్తవ్యానీతిమేపార్థ నిశ్చితంమత[illegible]త్తమమ్॥ ౬॥

---

§ మయిసర్వాణికర్మాణి సన్న్యస్యాధ్యాత్మచేతసా। నిరాశీర్నిర్మమోభూత్వా యుధ్యస్వవిగతజ్వరః என்று கர்மத்தால்[illegible]ம் சுவர்க்கம் முதலிய பலம் எனக்கு வேண்டாமென்பது பலத்தியாகம்[illegible]பயனுக்காக இந்தகர்மம் என்னால் செய் யப்பட்டது என்கிற அபிமானத்[illegible]யொழிக்கை கர்மத்தியாகம்; ஸர்வேசுவ ரனேகர்த்தாவென்று மதையோர்[illegible]து தான் கர்த்தாவல்லனென்று மதிக்கை கர்த்தாத்தியாகம்; என்று முன்னம் சொல்லப்பட்டதென்றறிக.

(கூ) இப்படி உபாஸகர்களுக்கு யக்ஞாதிகர்மங்கள் பரிசுத்திகரங்களாகையாலே உபாஸநம்போலே இந்த யக்ஞாதிகர்மங்களும் நம்முடைய ஆராதநரூபங்களென்று நினைத்து கர்மத்தில் பற்றையும் அதன் பலனையும்விட்டு நாள்தோறும் பிரயாணமாமளவும் உபாஸநம் தலைக்கட்டுவதற்காக மோக்ஷகாமன் செய்யவே வேண்டுமென்பது நம்முடைய முடிவான ஸித்தாந்தம்.

నియతస్యతుసన్న్యాసః కర్మణో నోపపద్యతే।
మోహాత్తస్యపరిత్యాగ స్తామసః పరికీర్తితః॥ ౭॥

(எ) நித்திய நைமித்திகங்களான மஹாயக்ஞாதிகளை விடுவதென்பது † கூடாது. ஞாநத்தைவிருத்திபண்ணித் தருகின்றகர்மங்களை (இவை கட்டுப்படுத்துமவைகளென்று) அஜ்ஞானத்தால் விட்டுவிடுவது ‡ தாமஸத்தியாகமென்னப்படும்.

దుఃఖమిత్యేవయత్కర్మ కాయక్లేశభయాత్త్యజేత్।
సకృత్వారాజసన్త్యాగం నైవత్యాగఫలంలభేత్॥ ౮॥

(அ) 'கர்மமானது பரம்பரையாக மோக்ஷத்தைச் சாதிக்குமேயானாலும் துக்கரூபமான திரவிய ஸம்பாதநத்தாலே ஸாதிக்கவேண்டிய தாகையாலும், மிகவும் ஆயாஸரூபமான காயக்லேசத்தையுண்டுபண்ணுகையாலும் மன

---

† ஏனெனில்:—శరీరయాత్రాపిచతేనప్రసిద్ధ్యేదకర్మణః என்று சரீரதாரணம் ஸித்திக்கமாட்டாதாகையாலே விடக்கூடாது. சரீரத்தை யக்ஞசேஷத்தாலே வளர்த்துவந்தால் அது நல்ல ஞாநத்தையுண்டாக்கும்; அப்படி யக்ஞசேஷமல்லாதவைகளாலே சரீரத்தை தரித்து மனதை வளர்த்து வந்தால் తేత్వఘంభుఞ్జతేపాపా యేపచన్త్యాత్మకారణాత్ என்று விபரீதக்ஞாநத்தை யுண்டுபண்ணுவிக்கும். అన్నమయంహిసోమ్యమనః என்று மனது அன்னத்தாலன்றோ வளருகிறது? ఆహారశుద్ధౌసత్త్వశుద్ధిః సత్త్వశుద్ధౌధ్రువాస్మృతిః। స్మృతిలమ్భేసర్వగ్రన్థీనాంవిప్రమోక్షః॥ என்று பிரம்மஸாக்ஷாத்காரரூபமான ஞாநம் ஆஹார சுத்தியைப்பொறுத்ததென்று ஓதப்படுகிறது. ஆகையால் மஹாயக்ஞம்முதலிய நித்தியநைமித்திககர்மம் பிரயாணமாமளவும் பிரம்மக்ஞாநத்துக்காக வேண்டியிருக்கின்றபடியால் அதை விடலாகாது.

‡ தமோகுணத்தால்வரும் தியாகத்தைத் தாமஸமென்கிறது. தியாகம் தமஸின்காரியமான அக்ஞாநத்தால் வருமதாகையால் தமோகுணத்தால்வருமதென்கிறது. தமஸ்ஸு அக்ஞாநத்துக்கு மூலம் என்கிறவிஷயம் ప్రమాదమోహౌతమసోభవతోఽజ్ఞానమేవచ என்கிறவிடத்தில் சொல்லப்பட்டது. அக்ஞாநமாவது ஞாநத்துக்கு விரோதியான விபரீதக்ஞாநம். இப்படியே అధర్మంధర్మమితియామన్యతేతమసావృతా। సర్వార్థాన్విపరీతాంశ్చబుద్ధిఃసాపార్థతామసీ என்று மேலே சொல்லப்படுகிறது. ஆகையால் நித்யநைமித்திகாதி கர்மத்தைவிடுவது விபரீதக்ஞாநத்தால்தானென்று தாத்பரியம்.

திற்றுந் வருத்தத்தையுண்டாக்கும்' என்றஞ்சியந்தவனாய்'யோகஸித்திக்காக ஞானாப்பியாஸந்தான் செய்யத்தக்கது'என்று யாவனொருவன் மஹாயக்ஞந்தொடக்கமான ஆச்சிரமகர்மத்தை விட்டுவிடுகிருனே அவன் ரஜோகுணத்தால் வந்தத்தியாகத்தைச் செய்தவனுகிருன்; அந்தத்தியாகம் $ உண்மையான சாஸ்திரார்த்தமல்லாமையாலே அவன் தியாகத்துக்குப் பயனான ஞானோத்பத்தியையடையமாட்டான். [கர்மமானது அநுஷ்டத்துவாரமாய் மனதுக்குத்தெளிவையுண்டாக்குமதன்று; மற்றப்படி எம்பெருமானுடைய முகோல்லாஸத்தைப் பிறப்பித்து அவ்வழியாலே என்றபடி.]

కార్యమిత్యేవయత్కర్మ నియతంక్రియతేర్జున।
సఙ్గంత్యక్త్వాఫలంచైవ సత్యాగస్సాత్త్వికోమతః॥౯॥

(௯) நித்தியநைமித்திகமான மஹாயக்ஞம்முதலிய வருணாச்சிரமகர்மம் எம்பெருமானுடைய ஆராதநரூபமாகையாலே அதைச் செய்வதே பயனென்றுமதித்து கர்மத்தில் எனதென்கிற எண்ணத்தையும் கர்மப்பயனையுங் கைவிட்டு கர்மத்தைச்செய்வது, ஸாத்விகத்தியாக மென்னப்படும். [அதாவது:—¶ ஸத்வமடியாகப்பிறக்கும் உண்மையான சாஸ்திரார்த்த ஞானத்தால் வந்தத்தியாகமென்றபடி.]

నద్వేష్ట్యకుశలంకర్మ కుశలేనానుషజ్జతే।
త్యాగీసత్త్వసమావిష్టో మేధావీఛిన్నసంశయః॥౧౦॥

(௧௦) இப்படி ஸத்துவத்தையடைந்து வஸ்துவை உள்ளபடியே யறிந்து அதனால் ஸகல ஸம்சயங்களுமற்று கர்மத்தில் பற்றையும் கர்மபலத்தையும் தான் கர்த்தாவென்கிற வெண்ணத்தையும் விட்டவன் * தீயகருமத்தை வெறுக்கவும் நல்ல கருமத்தில் பொருந்தவும்மாட்டான்.

---

$ உண்மையான சாஸ்திரார்த்தமல்லவென்கிற விஷயம் ఆయథావత్ప్రజానాతిబుద్ధిస్సాపార్థరాజసీ என்று மேலே அருளிச்செய்யப் போகிருர்.

¶ ஸத்துவந்தான் உண்மையான சாஸ்திரார்த்தஞானத்தைப் பிறப்பிக்குமென்றுமிடம் సత్త్వాత్సఞ్జాయతేజ్ఞానమ్ என்று முன்னம் சொல்லப்பட்டது. ప్రవృత్తిఞ్చనివృత్తిఞ్చకార్యాకార్యేభయాభయే।బన్ధంమోక్షఞ్చయావేత్తిబుద్ధిస్సాపార్థసాత్త్వికీ என்று மேலும்சொல்லப்படும்.

* தீயகர்மமாவது - அநிஷ்ட பலத்தைத்தருங் கர்மம். நல்ல கர்மமாவது இஷ்டமாயிருக்கிற சுவர்க்கம் புத்திரன் பசு அன்னம் முதலிய பலத்தைத்தருமது. எந்த கர்மத்திலும் எனதென்கிற அபிமானமில்லாமையாலும் பிரம்மத்தையொழிந்த மற்ற பலன்களைக் கைவிட்டமையாலும், நான் செய்தேன் என்கிற கர்திருத்வத்தை விட்டமையாலும் அவைகளைச் செய்யுமிடத்தில் பிரீதித்துவேஷங்களிரண்டுஞ் செய்யமாட்டான். இங்கே அநிஷ்டபலத்

(அ-கை.) இதையே அருளிச்செய்கிறார்.

నహి దేహభృతా శక్యం త్యక్తుం కర్మాణ్యశేషతః।
యస్తు కర్మఫలత్యాగీ స త్యాగీత్యభిధీయతే॥౧౧॥

(கக) சரீரத்தைத் தரித்திருக்கிறவனாயில் கர்மங்களை முழுவதும் விடுவதென்றால் ஸாத்தியமான விஷயமன்று. [ஏன்? தேஹத்தைத் தரிப்பதற்காகப் புசித்தல் பானம்செய்தல் முதலிய கர்மங்களும் மற்றும் அதைச்சேர்ந்த கர்மங்களும் ஒழிக்கப்போகாமையால் அதற்காக மஹாயக்ஞம் முதலிய அநுஷ்டானமும் ஒழிக்கப்போகாது.] ஆகையால் எவனாலும் அந்த மஹாயக்ஞம் முதலியவற்றில் பலனைக்கைவிடுகிறானோ அவனே త్యాగేనైకేఅమృతత్వమానశుః இத்தியாதி சாஸ்திரங்களில் தியாகியென்னப்படுவான்.

(அ-கை.) நல்லது, அக்கிஹோத்திரம் தரிசம் பூர்ணமாஸம் ஜியோதிஷ்டோமம் முதலியவைகளும் மஹாயக்ஞாதிகளும் சுவர்க்கம் முதலிய பலன்களோடு ஸம்பந்தித்திருப்பதாக சாஸ்திரங்களால் விதிக்கப்படுகின்றன; நித்திய நைமித்திகங்களுங்கூட ప్రాజాపత్యంగృహస్థానాం இத்தியாதியாகப் பலனோடு ஸம்பந்தப்பட்டிருப்பதாகவே விதிக்கப்படுகின்றன; ஆகையால் அந்த பலனைச் சாதிப்பதே ஸ்வபாவமான கர்மங்களை யநுஷ்டிக்கும்பக்ஷத்தில் இவன் பலத்தைக் கோராமற்போனாலும் (விதைவிதைத்தாற்போல்) அவை இஷ்டாநிஷ்டரூபமான பலன்களைத் தருமல்லது மீளாவன்றோ? ஆகையால்மோக்ஷவிரோதிகளான பலன்களைத் தருகின்ற கருமத்தை மோக்ஷார்த்தி யநுஷ்டிக்கக்கடவனல்லன்; என்றுவரும் சங்கைக்கு உத்தரம் அருளிச்செய்கிறார்.

అనిష్టమిష్టం మిశ్రంచ త్రివిధం కర్మణః ఫలమ్।
భవత్యత్యాగినాం ప్రేత్య నతు సన్న్యాసినాం క్వచిత్॥౧౨॥

(கஉ) அநிஷ்டமான நரகாதிகளென்றும், இஷ்டமான சுவர்க்காதிகளென்றும், அனிஷ்டத்தோடு கலந்த புத்திரன் பசுமுதலியவைகளென்றும் கர்மத்துக்குப் பயன் மூன்றுவிதம். இந்தபயன் கர்திருத்வத்தையும் எனதென்கிற வபிமானத்தையும் கருமப்பயனையும் கைவிடாதவர்களுக்கு,கர்மாநுஷ்டானம் செய்தவுடனே பலிக்கின்றது. கர்திருத்வாதிகளைவிட்டவருக்கோ ஒருக்காலும் மோக்ஷவிரோதியான இப்பயனுண்டாகமாட்டாது.

[இப்படி கர்மங்களைச் செய்துகொண்டு கர்திருத்வாதிகளை விடுவதுதான் சாஸ்திரஸித்தமான ஸந்நியாஸம், இதுதான் தியாகம்என்று சொல்லப்பட்டது.]

---

தைத்தரும் கர்மமாவது, தன்னாலும் அறியாமல் செய்யப்பட்ட பாபகர்மம். அதொழியாதபோது - నావిరతో దుశ్చరితాన్నాశాన్తో నాసమాహితః। నాశాన్తమానసో వాపి ప్రజ్ఞానేనైనమాప్నుయాత్ என்கிறபடி ஞானோத்பத்திக்கு விரோதமுண்டாம். ஆகையால் கர்மத்தில் கர்திருத்வாதித்தியாகம் சாஸ்திரீயத்தியாகமேயல்லது ஸ்வரூபத்தியாகமல்ல.

(அ-கை.) இப்பொழுது புருஷோத்தமனாய் அந்தரியாமியான பகவானே கர்த்தாவென்று நினைத்து தன்னைக் கர்த்தாவல்லனென்று நினைக்கும்படியை யருளிச்செய்கிறார். [இப்படி நினைத்தபோதே பலத்திலும் கர்மத்திலும் எனதென்கிற அபிமானம் ஒழிந்துபோகிறபடியால் பரமபுருஷனே தனது ஜீவனைக்கொண்டு தனது கரணகளேபரப் பிராணங்களாலே தனது லீலையென்னும் பயனுக்காகக் கர்மங்களை ஆரம்பிக்கிறானாகையால் ஜீவனைச்சேர்ந்த (பசிதீருகைமுதலிய) பயனும் அதற்கு ஸாதநமான கர்மமும் பரமபுருஷாதீநமென்பதுதத்வம்.]

పఞ్చైతాని మహాబాహో కారణాని నిబోధ మే।
సాంఖ్యే కృతాన్తే ప్రోక్తాని సిద్ధయే సర్వకర్మణామ్॥౧౩॥

(கங) வஸ்துவை உள்ளபடி அறிவதான வைதிகபுத்தியால் ஏற்பட்ட ஸித்தாந்தத்தில், ஸர்வகர்மங்களும் உண்டுபண்ணுமவைகளாகச் சொல்லப்பட்ட இந்த ஐந்துகாரணங்களும் * நம்மிடத்தினின்றும் வந்ததாக நிர்ணயிக்கப்பட்டனவென்று நினை.

(அ-கை.) அவ்வைந்துமெவை யென்ன அருளிச்செய்கிறார்.

అధిష్ఠానం తథా కర్తా కరణం చ పృథగ్విధమ్।
వివిధాశ్చ పృథక్చేష్టా దైవం చైవాత్ర పఞ్చమమ్॥౧౪॥
శరీరవాఙ్మనోభిర్యత్ కర్మ ప్రారభతే నరః।
న్యాయ్యం వా విపరీతం వా పఞ్చైతే తస్య హేతవః॥౧౫॥

(கச-கரு) சாஸ்திரத்தில் ஸித்தமானதும் நிஷித்தமானதுமாய், சரீரம் வாக்கு மனது என்கிற முக்கரணங்களாலுஞ் செய்யப்படுமதாயுள்ள ஸகல கர்மத்துக்கும் இவ்வைந்தும் ஹேதுக்கள். எவையெனில் - (மஹாபூதங்களின் தொகையான) சரீரம், கர்த்தாவென்கிற § ஜீவாத்மா, பலவித வியாபாரங்களைச்செய்யும் (வாக்கு † முதலிய) கரணம், நாநவிதவிருத்தியையும்செய்கின்ற (பிராணம் அபாநம் வியாநம் உதாநம் ஸமாநம் என்று ஐந்துவிதமான) வாயு ஆகிய விந்நான்கும், அந்தரியாமியான பரமாத்மாவும் ஆக இவ்வை

---

* య ఆత్మని తిష్ఠన్నాత్మనో ऽన్తరో యమాత్మా న వేద యస్యాత్మా శరీరం య ఆత్మానమన్తరో యమయతి స త ఆత్మాన్తర్యామ్యమృతః ॥ అన్తః ప్రవిష్టః శాస్తా జనానాం సర్వాత్మా இத்தியாதி வாக்கியங்களால் பிறக்கும் வைதிகபுத்தியானது, சரீரம் இந்திரியம் பிராணன் ஜீவாத்மா என்னுமிவ்வைகளை உபகரணமாகக்கொண்ட பரமாத்துமாவேதான் கர்த்தாவென்று நிர்ணயிக்கின்றது.

§ ஜீவாத்மா கர்த்தாவென்கிற விஷயம்-జ్ఞోత ఏవ, కర్తా శాస్త్రార్థవత్త్వాత్ என்கிற ஸூத்திரங்களில் உபபாதிக்கப்பட்டுளது.

† வாக்கு கைகள் கால்கள் ஆஸநம் உபஸ்தம் மனது என்று ஆறுவிதமானகரணமுமென்றபடி.

த்தும், கர்மம் ஸித்திக்கும் விஷயத்தில் காரணமாகின்றன. [என்றால் - சரீராதி கரணஸஹிதனைக்கொண்டு பரமாத்மா கர்த்தா § வாகிறானென்றபடி.]

తత్రైవం సతి కర్తారమాత్మానం కేవలన్తు యః।
పశ్యత్యకృతబుద్ధిత్వాన్న స పశ్యతి దుర్మతిః॥౧౬॥

(௧௬) இப்படி ஜீவாத்மாவுக்குக் கர்திருத்வமானது, உண்மையில் பரமாத்மாவின் அநுமதியை முன்னிட்டிருக்கிறதென்று ஏற்பட்டபின்பு, அந்தந்த கர்மத்துக்கும் கேவலம் ஜீவாத்மாவே கர்த்தாவாகிறானென்று எவன் நினைக்கிறானோ அவன் துர்ப்புத்தி. அதினால் அவன் வஸ்துவை உள்ளபடியறிந்தவனல்லன்.

యస్య నాహంకృతో భావో బుద్ధిర్యస్య న లిప్యతే।
హత్వాపి స ఇమాఀల్లోకాన్న హన్తి న నిబధ్యతే॥౧౭॥

(௧௭) பரமபுருஷன் கர்த்தாவென்கிற நினைவினால் யாவனொருவன் "நான் செய்கிறேனென்று" தன்னைக் கர்த்தாவாக நினைக்கமாட்டானோ, எவனுக்கானால் "இந்தகர்மமும் இதின் பலனும் என்னைச்சேர்ந்ததல்ல" என்று கர்மத்திலும் அதின் பலத்திலும் பற்றிருக்கமாட்டாதோ, அவன் போர்க்களத்தில் இந்த பீஷ்மாதிகளைப்போல் எல்லாம்ஸகலமானபெயர்களையுங் கொன்று

---

§ கர்திருத்வம் பரமாத்மாதீனமென்கிற விஷயம் 'సర్వస్య చాహం హృది సన్నివిష్టో మత్తః స్మృతిర్జ్ఞానమపోహనఞ్చ' என்று கீழே சொல்லப்பட்டது. 'ఈశ్వరస్సర్వభూతానాం హృద్దేశేఽర్జున తిష్ఠతి। భ్రామయన్ సర్వభూతాని యన్త్రారూఢాని మాయయా' என்று மேலும் சொல்லப்படும். ஜீவாத்மாவின் கர்திருத்வமும் பரமாத்மாதீனமென்கிற விஷயம் 'పరాత్తు తచ్ఛ్రుతేః' என்கிற ஸூத்திரத்தில் உபபாதிக்கப்பட்டது. ஜீவாத்மாவின் கர்திருத்வம் பரமாத்மாதீனமென்றால்-ஜீவாத்மாவுக்குக் கர்மஞ்செய்வதில் பரமில்லாமையாலே விதியும் விலக்குமானசாஸ்திரம்வியர்த்தமாகாதோவென்றால்-இந்த ஆக்ஷேபத்தை 'కృతప్రయత్నాపేక్షస్తు విహితప్రతిషిద్ధావైయర్థ్యాదిభ్యః' என்றுஸூத்திரகாரரோபரிஹரித்தார். அதனால் என்ன ஏற்பட்டது? பகவானால் அளிக்கப்பட்டு அவனை ஆதாரமாகக்கொண்டு அவனாலளிக்கப்பட்ட சக்தியுடன்கூடிய கரணகளேபராதிகளைக்கொண்டு அவனை ஆதாரமாகக்கொண்ட ஜீவாத்மாவானவன், அவனாலளிக்கப்பட்ட சக்தியுடன்கூடி தன் இச்சையினால் கரணாதிகளையும்அதிஷ்டித்துப் பிரயத்தனத்தையும் செய்கிறான்; அவனுக்குள் இருக்கின்ற பரமாத்மாவோ கேவலம் அநுமதிமாத்திரங் கொடுத்துக்கொண்டு ப்ரவர்த்திப்பிக்கிறான்; ஆகையால் பெரியதொரு கற்பாறை மரம்முதலியவைகளை, பத்துபெயர்கள் சேர்ந்து புரட்டினால் அதில்ஒவ்வொருத்தரும்ஹேதுவாகிக்கொண்டுவிதியையும்விலக்கையும் அடைவதுபோல் ஜீவாத்மாவும் தன் புத்தியைக்கொண்டுப்பிரவ்ருத்திக்கு ஹேதுவாகின்றமையால் அவன்விஷயத்தில் சாஸ்திரம்பயன்படுமென்பதாம்.

லும் அவன் சொல்பவனுமல்ல. அந்தக[ர்]மத்தால் அவன் கட்டுப்படவுமாட்டான். [என்றால் அதன்பயனை யநுபவிக்க[ம]ாட்டானென்றபடி.]

(அ-கை.) இப்படி தனக்குக்கர்த்[ரு]த்வாதிகளில்லையென்கிற நினைவெல்லாம் ஸத்துவகுணம் விருத்தியானால் [மா]த்திரந்தான் பிறக்கும்; ஆகையால் ஸத்துவகுணத்தைப் பற்றவேண்டும் [எ]ன்று அறிவிக்கைக்காகக் கர்மத்தில் ஸத்துவம் முதலிய குணங்களால் வரும் [வை]யவித்தியாஸத்தை விஸ்தரிப்பதாகத் திருவுள்ளம்பற்றி கர்மவிதியின் விதத்[தை] அருளிச்செய்கிறார்.

జ్ఞానం జ్ఞేయం పరిజ్ఞాతా త్రివిధా కర్మచోదనా।
కరణం కర్మ కర్తేతి త్రివిధః కర్మసంగ్రహః॥౧౮॥

(௧௮) செய்யவேண்டுங் கர்மத்தை யறியும் ஞானம், செய்யவேண்டுங் கர்மம், அதை யறியுமவன் என்று கர்மவிதியானது மூன்றுவிதம்; [என்றால் - அறிவு, அறியப்படுமது, அறி[கிற]து என்று இம்மூன்றுடன் கூடியது ஜோதிஷ்டோமம் முதலிய கர்மங்க[ளி]ன் விதி என்றபடி.] அதில் அறியவேண்டுங் கர்மம், * கரணமென்றும் கர்[ம]மென்றும் கர்த்தாவென்றும் மூன்றுவிதமாய் ஸங்கிரஹம் பண்ணப்பட்டிரு[க்]கிறது.

జ్ఞానం కర్మ చ కర్తా చ త్రిధైవ గుణభేదతః।
ప్రోచ్యతే గుణసంఖ్యానే యథావచ్ఛృణు తాన్యపి॥౧౯॥

(௧௯) செய்யவேண்டுங் கர்மத்தையறியும் ஞானம், செய்யப்படுங்கர்மம், அதை அநுஷ்டிப்பவன் ஆக[இ]ம்மூன்றும் ஸத்துவாதிகுணங்களுக்குத்தக்கபடி ஒவ்வொன்றும் மூன்றுப[டி]யாயிருக்கிறதென்று குணகாரியங்களைக்கணக்கிடும் முறையில் சொல்லப்[படு]கிறது; அவைகளையும் உள்ளபடியே சொல்லுகிறோம் கேள்.

సర్వభూతేషు యేనైకం భావమవ్యయమీక్షతే।
అవిభక్తం విభక్తేషు తజ్జ్ఞానం విద్ధి సాత్త్వికమ్॥౨౦॥

(௨0) பிராம்மணனென்றும் க்ஷத்திரியனென்றும், பிரம்மசாரியென்றும் கிரஹஸ்த்தனென்றும் இப்படி [ப]லவிதமாய்ப் பிரிக்கப்பட்டு கர்மாதிகாரிகளாயிருக்கின்ற ஸகலபூதங்களிலும் 'ஆத்மாவென்னும்த்ருவபதார்த்தம், பிராம்மணாதி பேதங்களுக்குத்தக்கப[டி] பிரிக்கப்படாமல் ஞானமே வடிவாயும் அழிவற்றதாயும் பலனைப்பெறுவதற்கு[த்] தகாததாயும் இருக்கிறதென்று, எந்த ஞானமானால் கர்மஞ்செய்யும்பொழுதே [அ]றியுமோ அது ஸாத்துவிகக் ஞானமெனப்படும்.

పృథక్త్వేన తు యజ్జ్ఞానం నానాభావాన్ పృథగ్విధాన్।
వేత్తి సర్వేషు భూతేషు తజ్జ్ఞానం విద్ధి రాజసమ్॥౨౧॥

---

* கரணம் - ஸாதகமான திரவியமுதலியன. கர்மம் - யோக முதலியன: கர்த்தா - அநுஷ்டிப்பவன்.

(௨௧) பிராம்ஹணன் முதலா[ன] ஸகல பூதங்களும் பிராம்மணாதிபேத ங்களாலே பிரிக்கப்பட்டிருப்பதுபோ[ல] அவற்றிலுள்ள ஆத்மாக்களும் வெவ் வேறாகப் பிரிக்கப்பட்டு பலனை ய[னு]பவிப்பதற்கு யோக்கியங்களாக விருப்ப னவாக எந்த ஞாநமானால் கருமாநு[ஷ்]டாநவேளையில் அறியுமோ அந்தஞ்ஞாந ம் ராஜஸஞ்ஞாநமென்னப்படும்.

యత్తుకృత్స్నవదేకస్మిన్ [కార్యే] [స]క్తమహేతుకమ్।
అతత్త్వార్థవదల్పంచ [తత్తా]మసముదాహృతమ్॥౨౨॥

(௨௨) எந்த ஞாநமானால் [அல்ப]வும் அற்பபலன்களைத்தரவல்ல பிரேதம் பூதம் முதலியவைகளை யாராதிப்ப[தற்]காகச் செய்யுங் கருமத்தை நம்பிக்கொ ண்டு இதுவே ஸகல பலன்களையுங் [கொ]டுக்குமென்று பற்றிக்கிடக்குமோ, அ ந்த பொய்யறிவைத் தாமஸஞ்ஞாந[மென்]பர்கள் பெரியோர்.

(அ-கை.) இவ்வாறு செய்ய[வே]ண்டுங் கருமத்தை யறியும் ஞாநமான து கர்மாதிகாரியின் அம்சத்துக்கு[த்த]க்கபடி மூவகையென்று அருளிச்செ ய்து, செய்யப்படுங் கருமமும் கு[ண]த்துக்குத்தக்கபடி மூன்றுவிதமென்ப தை யருளிச்செய்கிறார்.

నియతంసంగరహిత మరా[గద్వే]షతఃకృతమ్।
అఫలప్రేప్సునాకర్మ యత్[తత్సా]త్త్వికముచ్యతే॥౨౩॥

(௨௩) தன் வருணாச்சிரமங்களுக்குத்தக்கபடி நான் செய்தேனென்கிற அபிமானமில்லாமலும், (தனக்குக் [கீர்]த்தியுண்டாகவேண்டுமென்கிற) ஆசை யாலாவது (பிறருக்குண்டான கீர்[த்தி]யில்) துவேஷத்தாலாவது செய்யப்ப டாமலும், இது பலாபேக்ஷையின்றி செய்யவேண்டுவதென்றே செய்யப்ப டுங் கருமம் ஸாத்துவிகமென்னப்ப[டு]ம்.

యత్తుకామేప్సునాకర్మ [సా]హంకారేణవాపునః।
క్రియతేబహులాయాసం [తద్రా]జసముదాహృతమ్॥౨౪॥

(௨௪) எந்த கருமமானால் பல[த்]தை யடையவேண்டுமென்று அஹங் காரத்தோடுகூடி நான் செய்கிறேனென்கிற அபிமானத்தோடு வெகுசாய் சி ரமப்பட்டுச் செய்யப்படுமோ அது [ரா]ஜஸம். [என்றால் வெகு கஷ்டமாயிரு க்கிற இந்த வேலை யென்னால் செய்ய[ப்]படுகிறது என்கிற அபிமானத்தோடு செய்யப்படுங் கர்மம் ராஜஸமென்ன[ப்]படுமென்றபடி.]

అనుబన్ధంక్షయంహింసా మ[నప]ేక్ష్యచపౌరుషమ్।
మోహాదారభ్యతేకర్మ యత్[తత్తామ]సముచ్యతే॥౨౫॥

(௨௫) கர்மஞ்செய்யும்பொழுது[ண்]டாகும் துயரத்தையும் பணச்சி லவையும் பிராணி ஹிம்ஸையையும் கரும[த்]தை முடிக்கும்படியான ஸாமர்த் தியத்தையும் ஒன்றையும் பாராமல், பரமபுருஷன் செய்கிறானென்கிற ஞாந மும் இல்லாமல் எந்த கருமம் ஆரம்பிக்கப்படுமோ அது தாமஸமென்னப்படும்.

ముక్తసఙ్గో౽నహంవాదీ ధృత్యుత్సాహ సమన్వితః।
సిద్ధ్యసిద్ధ్యోర్నిర్వికారః కర్తా సాత్త్విక ఉచ్యతే॥ ౨౬॥

(உசு) பலனில் பற்றற்று, செய்[illegible]றேனென்கிற அபிமானமில்லாமல் * தைரியத்தோடும் † உத்ஸாகத்தோடு[illegible] கூடியவனாய், யுத்தமுதலிய கரும த்திலும் அதற்காகச் செய்யும் பொருள்[illegible]டல்முதலிய கருமத்திலும் ஸித்தியு ண்டானாலும் உண்டாகாவிட்டாலும் சி[illegible]விகாரமடையாமலிருப்பவன் ஸா த்துவிகக்கர்த்தா வென்னப்படுவான்.

రాగీకర్మఫలప్రేప్సు ర్లుబ్ధో హింసాత్మకో౽శుచిః।
హర్షశోకాన్వితః కర్తా రాజసః పరికీర్తితః॥ ౨౭॥

(உஎ) கீர்த்திபெறவேண்டுமெ[illegible]ம்கர்மபலனையடையவேண்டுமெ ன்றும் கோரியவனாய், அக்கருமத்துக்[illegible] சிலவுபண்ணவேண்டிய பொருளை ச் சிலவிடும்படியான ஸ்வபாவமில்லா[illegible]லோபியாய், பிறரை வருத்தி வேலை யை முடிக்குமவனாய், செய்யவேண்டி[illegible]ர்மத்துக்கேற்ற ஆசாரமில்லாதவனா ய், யுத்தமுதலிய கருமங்களாலுண்டா[illegible] ஸித்தியிலும் அஸித்தியிலும் ஸந் தோஷமும் துக்கமும் கொண்டாடுகின்[illegible]வனாய்க் கருமஞ்செய்பவன் ராஜஸ கர்த்தாவென்னப்படுவான்.

అయుక్తః ప్రాకృతః స్తబ్ధః శఠో నైకృతికో౽లసః।
విషాదీ దీర్ఘసూత్రీ చ కర్తా తామస ఉచ్యతే॥ ౨౮॥

(உஅ) சாஸ்திரோக்தமான கரு[illegible]த்தைச் செய்யத்தகுந்த யோக்கிய தையற்றவனாய், வித்தை யென்பதேஅ[illegible]ாதவனாய், வேலைசெய்யமாட்டாத சோம்பனாய்,சூன்னியம்முதலியவேலை[illegible]வதில் ருசியுள்ளவனாய்,வஞ்சனைக் காரனாய்,கருமஞ் செய்யத்தொடங்கினா[illegible]ம் மெதுவாய்ச்செய்பவனாய், வருத் தஞ்சிறிதானாலும் அதை எப்போதும் [illegible]திகமாய்ப் பாராட்டுமவனாய்,சூன்னி யம்முதலியவேலையைச்செய்யநின்று[illegible]ாண்டு பிறருக்குநெடுநாளாய்அநர்த் தந்தேடுமவனாய்க்கர்மஞ்செய்பவன் தா[illegible]மஸகர்த்தாவென்னப்படுவான்.

(அ-கை.) இப்படி செய்யவேண்டுங் கருமத்தை யறிவதிலும் செய்ய வேண்டுங் கருமத்திலும் செய்யுங் கர்த்தாவிலும் குணத்துக்குத்தக்கபடி யு ண்டான வகை மூன்றும் சொல்லப்பட்டது. இப்பொழுது எல்லாத்தத்துவங் களையும் எல்லா புருஷார்த்தங்களையும் நி[illegible]சயிப்பதான புத்திக்குந் தைரியத்தி ற்கும்(குணத்துக்குத்தக்கபடி யுண்டா[illegible])வகைமூன்றும் சொல்லப்படுகிறது.

బుద్ధేర్భేదం ధృతేశ్చైవ గుణతస్త్రివిధం శృణు।
ప్రోచ్యమానమశేషేణ పృథక్త్వేన ధనఞ్జయ॥ ౨౯॥

---

* தைரியமாவது - கரும[illegible] செய்யத்துடங்கியதுமுதல் முடியுமளவும் நேரிடுந் துக்கத்தை யநுபவித்தல்.

† உத்ஸாஹமாவது-பிரயத்நஸஹிதமான மனதுடன் கூடியிருத்தல்.

(உகூ) (பகுத்தறிவோடுகூடி ... நிச்சயஞானமான) புத்திக்கும் (ஆரம்பித்த வேலையை விக்கினம் நேரிட்டாலும் கைவிடாமலிருப்பதென்கிற) தைரியத்துக்கும் (ஸத்துவம் முதலிய குணங்களுக்குத்தக்கபடி) உண்டான மூன்று பேதத்தையும் தனித்தனியே உள்ளபடியே சொல்லுகிறோம் கேள்.

ప్రవృత్తించనివృత్తించ కా ... ర్యాకార్యేభయాభయే।
బన్ధంమోక్షంచయావేత్తి బుద్ధిస్సాపార్థసాత్త్వికీ॥ 30॥

(௩௦) (க்ஷேமத்துக்குஸாதகமான) பிரவ்ருத்தியையும், (மோக்ஷத்துக்குஸாதகமான) நிவ்ருத்தியையும் எந்தப்புத்தியானல் அறியுமோ,(பிரவிருத்தி தர்மமோ நிவ்ருத்திதர்மமோ இவ்விரண்டிலொன்றைக் கைப்பற்றி யநுஷ்டிக்குமவர்களான) ஸர்வவருணத்தாரும் தேசவர்த்தமானங்களுக்குத் தக்கபடி இதைச்செய்யத்தகும் இதைச் செய்யத்தகாது என்று எந்தபுத்தியாலறியுமோ, (சாஸ்திரத்தைக்கடந்தால்) பயமென்பதையும் (சாஸ்திரத்தைப் பின் சென்றல்) அபயமென்பதையும் ஸம்ஸாரத்தின் உண்மையையும் அதை யொழிக்குமதான மோக்ஷத்தின் உண்மையையும் எந்த புத்தியானல் அறியுமோ, அது ஸாத்துவிக புத்தியென்னப்படும்.

యయాధర్మమధర్మంచ కార్యఞ్చాకార్యమేవచ।
అయథావత్ప్రజానాతి బుద్ధిస్సాపార్థరాజసీ॥ 31॥

(௩க) முன் சொன்ன இருவகைத்தருமத்தையும் அதின் விபரீதத்தையும் அதில் நிஷ்டையுடையவர்கள் தேசகாலங்களுக்குத்தக்கபடி செய்யவேண்டுங் காரியத்தையும் ஒழிக்கவேண்டுங் காரியத்தையும் உள்ளபடியே யறியமாட்டாத புத்தியை ராஜஸபுத்தியென்கிறது.

అధర్మంధర్మమితియా మన్యతేతమసావృతా।
సర్వార్థాన్విపరీతాంశ్చ బుద్ధిస్సాపార్థతామసీ॥ 32॥

(௩உ) தாமஸபுத்தியோ தமோகுணத்தால் சூழப்பட்டதாய் எல்லாப் பொருளையும் விபரீதமாய்க் காண்பதாம். [என்றல் தருமத்தை அதருமமாயும், அதருமத்தைத் தருமமாயும், ஸத்தை அஸத்தாயும், அஸத்தை ஸத்தாயும், பரமான தத்துவத்தை அவரமாயும், அவரமான தத்துவத்தைப் பரமாயும் இப்படி எல்லாவற்றையும் வித்தியாஸமாகவே பார்க்குமென்றபடி.]

ధృత్యాయయాధారయతే మనఃప్రాణేన్ద్రియక్రియాః।
యోగేనావ్యభిచారిణ్యా ధృతిస్సాపార్థసాత్త్వికీ॥ 33॥

(௩௩) மோக்ஷோபாயமாத எம்பெருமானை உபாஸிப்பதென்கிற யோகத்தை உத்தேசித்துப் பிரவர்த்தித்த மனம் பிராணன், இந்திரியம் முதலியவைகளின்வியாபாரங்களையெல்லாம் எந்ததைரியமானல் சலிக்காமல் நிலைப்பிக்குமோ அது ஸாத்துவிகத்தைரிய மென்னப்படும்.

యయా తు ధర్మకామార్థాన్ ధృత్యా ధారయతేఽర్జున।
ప్రసఙ్గేన ఫలాకాఙ్క్షీ ధృతిః సా పార్థ రాజసీ॥౩౪॥

(௩௪) தருமம் காமம் அர்த்தம் இவைகளை யபேக்ஷித்துச்செய்யும் மனம் முதலியவைகளின் செயல்களை எந்த தைரியமானால் தரிக்குமோ அது ராஜஸத்தைரியமென்னப்படும்.

యయా స్వప్నం భయం శోకం విషాదం మదమేవ చ।
న విముఞ్చతి దుర్మేధా ధృతిః సా పార్థ తామసీ॥౩౫॥

(௩௫) நித்திரையையும் விஷயங்களை யநுபவிப்பதாலுண்டாகும் மதத்தையும் உத்தேசித்துவரும் பயம், சோகம், துக்கம் இவைகளைத்தரும்படியான மனமுதலியவைகளின் செயல்களைக் கெட்டபுத்தியானவன் எந்தத்தைரியத்தைக்கொண்டு தரிக்கிறானோ அது தாமஸத்தைரியமென்னப்படும்.

సుఖం త్విదానీం త్రివిధం శృణు మే భరతర్షభ।

(௩௬உ) முன்சொன்ன ஞானம், கர்மம், கர்த்தாமுதலியவெல்லாம் எந்தசுகத்துக்கு சேஷப்பட்டிருக்குமோ அந்தசுகமும் குணத்துக்குத்தக்கபடிமூன்றுவிதமென்கிற விஷயத்தை யிப்பொழுது சொல்லுகிறேன்கேள்.

అభ్యాసాద్రమతే యత్ర దుఃఖాన్తం చ నిగచ్ఛతి॥౩౬॥
యత్తదగ్రే విషమివ పరిణామేఽమృతోపమమ్।
తత్సుఖం సాత్త్వికం ప్రోక్తమాత్మబుద్ధిప్రసాదజమ్॥౩౭॥

(௩௬-௩௭) எந்த சுகத்தையானது வெகுகாலம் அப்பியஸித்து வந்து மெள்ளமெள்ள ஈடில்லாதசுகத்தை யநுபவித்து ஸம்ஸாரத்தால் வருந்துயரங்களையெல்லாம் மணமுமில்லாமல் ஒழிக்கிறானோ, எந்தச்சுகமானால் (யோகஞ்செய்யத்துடங்கும்பொழுது மிகவும் வருத்தப்பட்டு ஸாதிக்கவேண்டுகையாலும் தனியான ஆத்மஸ்வரூபம் முன்னேபழகாமையாலும்) முதலில் துக்கம்போலவிருந்து, பிறகு (அப்பியாஸத்தின் வலிமையாலே ஏகாந்தமான ஸ்வரூபத்தையடைவதால்) அமுதத்துக்குச்சமமாயிருக்குமோ, (இதர விஷயங்களை யொழித்து ஏகாந்தமான ஆத்மாவை மாத்திரம் அநுபவிப்பதாலுண்டாகின்ற) அந்த சுகமானது ஸாத்விகச்சுகமென்னப்படும்.

విషయేన్ద్రియసంయోగాద్యత్తదగ్రేఽమృతోపమమ్।
పరిణామే విషమివ తత్సుఖం రాజసం స్మృతమ్॥౩౮॥

(௩௮) எந்தச்சுகமானால் அநுபவிக்கும்பொழுது இந்திரியத்துக்கும் விஷயத்துக்குமுண்டான சேர்க்கையினால் அமுதம்போலவிருந்து, அதற்கு ஹேதுவான பசிமுதலியவை யொழிந்த பிறகு (அதுநரகத்துக்குக் காரணமாகின்றமைகொண்டு) விஷபானம் பண்ணினதுபோலிருக்குமோ அந்தசுகம் ராஜஸமென்னப்படும்.

యదగ్రేచానుబన్ధే చ సుఖం మోహనమాత్మనః।
నిద్రాలస్యప్రమాదోత్థం తత్తామసముదాహృతమ్॥ ౩౯॥

(௩௯) எந்த சுகமானது (* நித்திரை § ஆலஸ்யம் † பிரமாதம் இவைகளாலுண்டாய்) அநுபவிக்கும்பொழுதும் பக்குவமாகும் பொழுதும் ஆத்மஸ்வரூபத்தை யறியவொட்டாமல் மோஹத்தைவிளைவிக்குமோ அந்தசுகம் தாமஸமென்னப்படும்.

[ஆசையால் மோக்ஷகாமன் ரஜஸ்ஸையும் தமஸ்ஸையும் தலையடக்கி ஸத்துவத்தையே கைப்பற்றக்கடவனென்றதாயிற்று.]

న తదస్తి పృథివ్యాం వా దివి దేవేషు వా పునః।
సత్త్వం ప్రకృతిజైర్ముక్తం యదేభిః స్యాత్త్రిభిర్గుణైః॥ ౪౦॥

(௪௦) பூமியில் மநுஷ்யாளிலாவது ஆகாசத்தில் தேவர்களிலாவது (பிரகிருதியுடன்கலந்து பிரமன்முதல் தாவரமீறுயுள்ள) ஸகலப்பிராணிகளிலும் இந்தப்பிரகிருதியினது முக்குணங்களையுங் கடந்தப்பிராணி ஒன்றுகிலுங் கிடையாது.

(அ - கை.) ஆகவிப்படி త్యాగేనైకే అమృతత్వమానశుః இத்தியாதிகளில் மோக்ஷத்துக்கு ஸாதகமாகச்சொல்லப்பட்ட త్యాగ மானது సన్యాస சப்தத்தின் பொருளைக்காட்டிலும் வேறுபட்டதல்லவென்றும், அதுவும் கருமஞ்செய்யும்பொழுது'நான் கர்த்தாவல்லன்'னென்கிற கர்திருத்வத்தியாகாநுஸந்தாநத்தால் வருமதென்றும், பலத்தியாகமும் கருமத்தியாகமும் கர்திருத்வத்தியாகமும் பரமபுருஷனேகர்த்தாவென்கிற நினைவினால் வருமதென்றும் அருளிச்செய்யப்பட்டு, இதெல்லாம் ஸத்துவகுணம் விருத்தியடைவதால் வரத்தக்கதாகையாலே ஸத்துவகுணத்தைக் கைப்பற்ற வேண்டுமென்பதை யறிவிக்கைக்காக ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களின் காரியவித்தியாஸங்கள் இவை யென்று பரக்கவருளிச்செய்யப்பட்டன.

இப்பொழுது மோக்ஷஸாதநமாகச்செய்யப்படுமிக்கருமம் பரமபுருஷனுடைய ஆராதந ரூபமென்கிற விஷயத்தையும், அப்படி யநுஷ்டிக்கப்படுங்கருமத்துக்கு அவனை யடைவதுதான் பலனென்கிற விஷயத்தையும் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, பிராம்மணுதி அதிகாரிகளுக்கு அவரவர் ஸ்வபாவத்தைச்சேர்ந்த ஸத்துவம் முதலிய குணபேதங்களுக்குத்தக்க

---

* நித்திரையானது, அநுபவிக்கிறகாலத்தில்கூட விஷயத்தைத் தெளிவாய் அறியவொட்டாமல் செய்கிறதென்கிற அதின் மோஹநஸாமர்த்தியம் யாவராலும் நன்கு அறியப்படும்.

§ ஆலஸ்யமாவது-இந்திரியங்களின்செயல்தீர்ந்திருக்கை; இந்திரியங்கள் செயல் தீர்ந்தால் ஞாநம் மந்தப்படவேண்டும்.

† பிரமாதமாவது - செய்யவேண்டியதில் கவனமில்லாமை இதற்கும் அப்படி அஜ்ஞாநத்தை யுண்டாக்கும்படியான ஸ்வபாவமுண்டு.

ப்படிபிரிக்கப்பட்டு அவரவர் விருத்தியோ[illegible] சேர்த்துச் செய்யவேண்டியதா யிருக்கிற! கர்மஸ்வரூபத்தை யருளிச்[illegible]ய்கிருர். [விருத்தியாவது ஜீவனத் தொழில்.]

బ్రాహ్మణక్షత్రియవిశాం శూద్రా[illegible] చపరన్తప।
కర్మాణిప్రవిభక్తాని స్వభావప్రభ[illegible]ర్గుణైః॥౪౧॥

(சக) அஹோபரந்தப! பிரம்ம[illegible]க்ஷத்திரிய வைசிய் சூத்திரர்கள் நால் வருக்கும் தங்கள் தங்கள் பழையவினை[illegible]படி ‡ ஸ்வபாவமாயுண்டான ஸத் துவம் முதலிய குணங்களுக்குத்தக்கபடி[illegible]செய்யவேண்டுங் கருமங்களும்விரு த்திகளும் இவை இவையென்று சாஸ்த்[illegible]ரங்கள் பிரித்தோதுகின்றன.

శమోదమస్తపశ్శౌచం క్షాన్తి[illegible]మేవచ।
జ్ఞానంవిజ్ఞానమాస్తిక్యం బ్రాహ్మ[illegible]స్వభావజమ్॥౪౨॥

(சஉ) (புறக்கரணங்களையடக்[illegible]வதென்கிற) சமம், (அந்தஃகரணங் களை யடக்குவதென்கிற) தமம், (போக[illegible]தையடக்கும்படி சாஸ்த்திரத்திலேர் ப்பட்டகாயக்கிலேசமென்னும்) தவம், [illegible]ாஸ்திரோக்தமான கருமத்தைச்செய் யும்படியான யோக்கியதையென்கிற) [illegible]ளசம், (பிறரால் தான் பீடிக்கப்பட் டாலும் சித்தவிகாரமடையாமலிருக்[illegible]யென்கிற)க்ஷாந்தி, (பிறர்விஷயத்தில் மனதில்நினைத்தபடியேவெளியிலும்நட[illegible]கையென்கிற) ஆர்ஜவம், (பரதத்துவ த்தையும் அவரதத்துவத்தையும் பகுத்[illegible]புமறிவான) ஞானம், (பரதத்துவத்தி ற்கே உரியவைகளான விஷயங்களை ய[illegible]வதென்கிற) விக்ஞானம், (வேதத்தில் சொன்ன அர்த்தமெல்லாம் ஸத்தியமெ[illegible]கிற உத்தம நிச்சயமான) * ஆஸ்திக்கி யம், இதெல்லாம் பிராம்மணனுக்கு ஸ்[illegible]பாவமாயுண்டானகருமங்கள்.

---

‡ பிராம்மணனுக்கு ஸ்வபாவத்[illegible]ாலுண்டானது, ரஜஸ்ஸையும் தமஸ் ஸையுமடக்கித் தலையெடுத்திருக்கும் [illegible]த்துவகுணம். க்ஷத்திரியனுக்கு ஸ்வ பாவத்தாலுண்டானது, தமஸ்ஸையும் [illegible]த்துவத்தையுமடக்கித் தலையெடுத்தி ருக்கும் ரஜோகுணம். வைசியனுக்கு[illegible]வபாவத்தாலுண்டானது, ஸத்துவத் தையும் ரஜஸ்ஸையுமடக்கிக்கொஞ்ச[illegible]லையெடுத்திருக்கும் தமோகுணம். சூத் திரனுக்கு ஸ்வபாவத்தாலுண்டானது [illegible]ஜஸ்ஸையும் ஸத்துவத்தையுமடக்கி மிகவும் தலையெடுத்திருக்கும் தமோகு[illegible]ம் என்றறிக.

* ஆஸ்திக்யமாவது-புருஷோத்[illegible]மனுயிருக்கிற பகவானுன வாசுதேவ னே, பரப்பிரம்மமென்னுஞ் சொல்லு[illegible]ப் பொருளாய், ஸகலதோஷங்களும ற்று ஸ்வபாவஸித்தங்களாய் எல்லையி[illegible]ாவதிசயம்பொருந்தியவைகளாயுள்ள ஞாநம் சக்தி முதலிய வெண்ணிற[illegible]ல்லியாணகுணத்தொகையுடையனுய், ஸகலவேதாந்தங்களாலு மறியப்[illegible]வனுயெழுந்தருளியிருக்கிருன்; அவனே ஸகல ஜகத்துக்கும் முக்கியகார[illegible]ம்; ஸகல ஜகத்துக்கும் ஆதாரம்; ஸகலத் தையும் அவனே ஏவுகிருன்; வைதிகமான ஸகலகருமமும் அவனுடைய ஆரா தநம். அவனே அந்த கருமங்களால் ஆராதிக்கப்பட்டவனுய்க்கொண்டு தரு

శౌర్యం తేజో ధృతిర్దాక్ష్యం యుద్ధే చాప్యపలాయనమ్।
దానమీశ్వరభావశ్చ క్షాత్రం కర్మ స్వభావజమ్॥౪౩॥

(சங) யுத்தத்தில் நிர்ப்பயமாய்ப் பிரவேசிக்கும்படியான ஸாமர்த்தியம், சத்துருக்களால் வெல்லப்போகாமை, எடுத்தகாரியத்தை தடைநேரிட்டபோதிலுந்தலைக்கட்டுவிக்கும் திறன், எந்தவேலையானாலும் செய்யும்படியான ஸாமர்த்தியம், யுத்தத்தில் தனக்கு மரணம் நேரிடுமென்கிற நிச்சயமுண்டானாலுந்திரும்பாமை, தன் ஸொத்தைப்பிறர்ஸொத்தாகும்படி கொடுப்பது, தன்னையொழிந்த மற்றஜனங்களையெல்லாம் ஆளும்படியான ஸாமர்த்தியம், இதெல்லாம் க்ஷத்திரியனுக்கு ஸ்வபாவத்தாலுண்டான கருமம்.

కృషిగోరక్ష్యవాణిజ్యం వైశ్యకర్మ స్వభావజమ్।

(சஙஉ) பயிர்த்தொழில், பசுக்களைக்காத்தல், பொருள் சேர்ப்பதற்குக் காரணமான விற்பனைவகையுத்தொழில், இது வைசியனுக்கு ஸ்பாவத்தாலுண்டானகருமம்.

పరిచర్యాత్మకం కర్మ శూద్రస్యాపి స్వభావజమ్॥౪౪॥

(சச) முற்கூறிய மூன்றுவருணத்தாருக்கும் ஊழியஞ்செய்வது சூத்திரனுக்கு ஸ்வபாவமாயுண்டானகருமம்.

[இப்படிச்சொன்னதனால் நாலுவருணத்தாருக்கும் ஜீவனத்தொழிலும் செய்யவேண்டுங்கர்மங்களும் சொல்லப்பட்டனவென்றறியவும் இதில் முதல் மூன்றுவருணத்தாருக்கும் யாகம் முதலியகருமங்கள்பொதுவானவை சமம்முதலிய குணங்களோ மோக்ஷார்த்திகளான மூன்று வருணத்தாருக்கும் ஸாதாரணம். பிராம்மணனுக்கு ஸத்துவம் விஞ்சியிருக்கை ஸ்வபாவமாகையாலே சமதமாதிகுணங்கள் வருத்தமின்றிவரக்கூடுமென்று அவைகளையவனுக்கு ஸ்வபாவத்தாலுண்டான கருமங்களென்றது. க்ஷத்திரியனுக்கும் வைசியனுக்கும் ரஜஸ்ஸும் தமஸ்ஸும் பிரதானமாகையாலே சமதமாதிகள் உண்டாவது வருத்தமென்று அவைகளை அவர்களுக்குக் கருமமாகச்சொல்லவில்லை. பிராம்மணனுக்கு யாகஞ்செய்வித்தல் ஓதுவித்தல்தானம்வாங்கல் ஜீவனத்தொழில். க்ஷத்திரியனுக்கோ ஜனங்களைக்காப்பது. வைசியனுக்கோ முன்

---

மம் அர்த்தம் காமம் மோக்ஷமென்கிற பலன்களை யளிக்கிறான்; என்கிற இவ்விஷயம் ஸத்தியம் என்கிற நிச்சயந்தான்.

వేదైశ్చ సర్వైరహమేవ వేద్య॥ అహం సర్వస్య ప్రభవో మత్తస్సర్వం ప్రవర్తతే। మయి సర్వమిదం ప్రోతమ్ ॥ భోక్తారం యజ్ఞతపసామ్, ... జ్ఞాత్వా మాం శాన్తిమృచ్ఛతి ॥ మత్తః పరతరం నాన్యత్కించిదస్తి ధనఞ్జయ॥ యతః ప్రవృత్తిర్భూతానాం యేన సర్వమిదం తతమ్ । స్వకర్మణా తమభ్యర్చ్య సిద్ధిం విన్దతి మానవః॥ యో మామజమనాదిఞ్చ వేత్తి లోకమహేశ్వరమ్ என்றன்றோ சொல்லப்படுகிறது?

சொன்னபடி பயிர் செய்வது. சூத்திரனுக்கோ செய்யவேண்டுங்கருமமும் ஜீவனத்தொழிலும் இரண்டும் ஊழியஞ்செய்வதுதான்.]

స్వే స్వే కర్మణ్యభిరత స్సంసిద్ధిం లభతే నరః।

స్వకర్మనిరతస్సిద్ధిం యథా విన్దతి తచ్ఛృణు॥౪౫॥

(சரு) புருஷன் தாந்தன்கருமத்தில் விடாமல் ஊன்றியிருக்குமாகில் பரமபதத்தைப்பெறுவான். எப்படியென்ன-சொல்லுகிறோம் கேள்.

యతః ప్రవృత్తిర్భూతానాం యేన సర్వమిదం తతమ్।

స్వకర్మణా తమభ్యర్చ్య సిద్ధిం విన్దతి మానవః॥౪౬॥

(சசு) பிராணிகளின் உத்பத்தி முதலியப்பிரவ்ருத்திகள் யாரிடத்தினின்றுமுண்டாகின்றனவோ, இவை யாவையும் எவனால் வியாபிக்கப்பட்டுளவோ, இந்திராதிதேவதைகளுக்கு அந்தராத்மாவாய் பரம புருஷனாயிருக்குமந்தநம்மை யாராதித்து, மனிதன் நம்முடைய அநுக்கிரஹத்தால் நம்மை யடைவதென்கிற ஸித்தியைப்பெறுவான்.

[நம்மிடத்தினின்றுந்தான் ஸமஸ்தமுமுண்டாகின்றது, நம்மாலே வியாபிக்கப்பட்டிருக்கிறது என்கிற விஷயம் முன்னமே சொல்லப்பட்டது. எங்கே? అహంకృత్స్నస్య జగతః ప్రభవః ప్రళయస్తథా। మత్తః పరతరం నాన్యత్కించిదస్తి ధనఞ్జయ ॥ మయా తతమిదం సర్వం జగదవ్యక్తమూర్తినా । మయాధ్యక్షేణ ప్రకృతిః సూయతే సచరాచరమ్ ॥ అహం సర్వస్య ప్రభవో మత్తస్సర్వం ప్రవర్తతే இத்தியாதிகளில்சொல்லவில்லையா ?]

శ్రేయాన్ స్వధర్మో విగుణః పరధర్మాత్స్వనుష్ఠితాత్।

(சசுஉ) பிரகிருதியோடு கலந்த புருஷனுக்கு இந்திரிய வியாபாரரூபமான கர்மயோகமென்னுந் தருமத்தைச்செய்வது சுலபம்; ஆகையால் தன் தருமமான கருமயோகம் குணமற்றதயானாலும், இந்திரியஜயம் பண்ணவல்ல புருஷனுடைய தருமமான ஞானயோகத்தைத் தானேறிட்டுக் கொண்டு அதை நன்கு அநுட்டிப்பதைக்காட்டிலும் இது சிறந்தது. [ஏனெனில், ஞானயோகத்தை ஒருக்கால் குறைவற அநுஷ்டித்தாலும் ஸகலமான இந்திரியங்களையுமடக்கவேண்டுகையாலே ஒருகாலமில்லாவிடில் ஒருகாலத்தில் அது இவனுக்குப் பிரமாதத்தை விளைவிக்குமென்று திருவுள்ளம்.]

(அ-கை.) அதையே உபபாதிக்கிறார்.

స్వభావనియతం కర్మ కుర్వన్నాప్నోతి కిల్బిషమ్॥౪౭॥

(சஎ) பிரகிருதியைச்சேர்ந்த புருஷனுக்குக் கருமயோகம் இந்திரிய வியாபாரரூபமா யிருக்கையாலே ஸ்வபாவமாயிருக்கிறது. ஆகையால்அதைச்செய்வதா லிவனுக்கு யாதொரு கெடுதியும் நேரிடமாட்டாது, ஞானயோ

கமோ இந்திரியங்களை யடக்கிச் சாதிக்கவேண்டுகையாலே அந்த நிஷ்டையுள்ளவனுக்குப் பிரமாதமாய் பாவம் நேரிடவே நேரிடும்.

(அ - கை.) ஆகையால் கருமநிஷ்டையேசிறந்ததென்று மூன்றும் அத்தியாயத்தில் அருளிச்செய்தவிஷயத்தை இங்கேநினைப்பூட்டுகிறார்.

సహజంకర్మ కౌన్తేయ సదోషమపి నత్యజేత్।
సర్వారంభాహిదోషేణ ధూమేనాగ్నిరివావృతాః॥౪౮॥

(௪௮) ஸஹஜமாய் வருத்தமின்றி செய்யக்கூடியகருமம் துக்கத்தோடுகூடியிருந்ததேயாகிலும் அதைக்கைவிடலாகாது. [என்றால், ஞானயோகத்துக்குத்தக்கவனாயினும் கருமயோகத்தையே செய்யென்றபடி] ஏனெனில்-கருமயோகமோ ஞானயோகமோ எதைச்செய்யத்தொடங்கினாலும் எல்லாம் புகையால் சூழப்பட்ட நெருப்புபோல துக்கத்தோடுகூடியே யிருக்கின்றன. [ஆனால் அவ்விரண்டுக்கும் இதுதான் விசேஷம். எது? கருமயோகம் சுலபமாய் செய்யக்கூடியதாயும் பிரமாதத்தை யுண்டுபண்ணாததாயுமிருக்குமென்பதும் ஞானயோகம் அதற்கெதிராயிருக்குமென்பதுமாம்]

అసక్తబుద్ధిస్సర్వత్ర జితాత్మా విగతస్పృహః।
నైష్కర్మ్యసిద్ధింపరమాం సన్న్యాసేనాధిగచ్ఛతి॥౪౯॥

(௪௯) பலன்முதலியவைகளில் ஆசைவையாமல் மனதை ஜயித்து பரமபுருஷனே கர்த்தாவென்பதைச்சிந்திப்பதால் தான் கர்த்தாவென்கிற நினைவைமாற்றி இப்படிப்பட்ட ஸந்நியாஸத்தோடு கூடியிருப்பவன், கருமத்தையநுஷ்டித்துவந்தேஞானயோகத்தின் பலனான தியாநநிஷ்டையையடைவான்.

[என்றால் ஸகல இந்திரியங்களும் சாந்தமாய்ச்செய்ய வேண்டியதான தியாநயோகத்தை யடைவானென்றபடி.]

సిద్ధింప్రాప్తోయథాబ్రహ్మ తథాప్నోతినిబోధమే।
సమాసేనైవకౌన్తేయ నిష్ఠాజ్ఞానస్యయాపరా॥౫౦॥

(௫௦) பிரயாண மாமளவும் நடந்தேறும் அநுஷ்டிக்கப்படுங்கருமயோகத்தால் ஒத்தாசைபண்ணப்பட்ட ஞானயோகம் ஸித்திக்கப்பெற்றவன், எந்தப்பிரகாரமிருந்து (தியாநயோகத்துப்பலனான) பிரம்மத்தை யடைகிறானோ அதைச்சுருக்கமாய்ச்சொல்லுகிறேன் கேள்.

బుద్ధ్యావిశుద్ధయాయుక్తో ధృత్యాత్మానంనియమ్యచ।
శబ్దాదీన్విషయాంస్త్యక్త్వా రాగద్వేషౌవ్యుదస్యచ॥౫౧॥

వివిక్తసేవీలఘ్వాశీ యతవాక్కాయమానసః।
ధ్యానయోగపరోనిత్యం వైరాగ్యంసముపాశ్రితః॥౫౨॥

అహఙ్కారంబలన్దర్పం కామంక్రోధంపరిగ్రహమ్।
విముచ్యనిర్మమశ్శాన్తో బ్రహ్మభూయాయకల్పతే॥౫౩॥

(ருக-ருஉ-ருந) ஆத்மாவை யுள்[illegible]படியே யறிகின்ற புத்தியுடன்கூடியிருந்து விஷயங்களினின்று மனதைத்[illegible]ருப்பி யோகத்துக்கு யோக்கியமாம்படிபண்ணி, சப்தாதி விஷயங்களைக்கி[illegible]டவொட்டாமல்துறந்து, அவற்றிற்குக்காரணமான ராகத்தையும் த்வே[illegible]த்தையும் போக்கடித்து, தியாநத்துக்கு விரோதமானவைக ளொன்று மில்ல[illegible]த விடத்திலிருந்து, அதிகமாய் புசியாமல், புசியாமலுமிராமல், தியா[illegible]துக்கு வழிப்படும்படி மனோவாக்காயங்களின் செயலைத்திருத்திக்கொண்டு, அ[illegible]ப்படியெல்லாமிருந்து தினந்தோறும் தியாநயோகத்தினின்றவன், தான் தியா[illegible]ம்பண்ணுகிற தத்துவத்தைத்தவிர மற்றவைகளில் தோஷத்தை நிருபித்து [illegible]வைகளில் வைராக்கியத்தை வளர்த்துக்கொண்டு, தேஹமே ஆத்மாவென்கி[illegible] வபிமானத்தையும் அதுவளருவதற்குக்காரணமான வாஸனையின் பெலத்தையும் அதற்கு நிமித்தமான கொழுப்பையும் காமத்தையும் கோபத்தையும் பிடிப்பையும்விட்டு, தனதல்லாத வெல்லாவற்றிலும் தனதென்கிற வெண்ணத்தைமாற்றி, ஆத்மானுபவமே சுகமென்றிருந்தவனாய் ஸகல பந்தத்திலும் விடுபட்டு ஆத்மாவைஉள்ளது உள்ளபடியே அநுபவிப்பான்.

బ్రహ్మభూతః ప్రసన్నాత్మా నశో[illegible]తి న కాఙ్క్షతి।
సమస్తేషు భూతేషు మద్భ[illegible] లభతే పరామ్॥ ౫౪॥

(ருச) அளவற்ற ஞாநமே வடி[illegible]ாய் நமக்காட்பட்டிருப்பதே ஸ்வபாவமாயிருக்கிற ஆத்மாவின் உண்மையா[illegible]ன ஸ்வரூபம் பிரகாசிக்கப்பெற்றவன், கிலேசமான கருமாதிகளால் கலங்கவ[illegible]து நம்மை யொழிந்த மற்றொன்றையும் நினைத்து சோகப்படவாவது அது[illegible]தனக்கு வேண்டுமென்று கோரவாவது மாட்டான்; மற்றப்படி நம்மைத்தவி[illegible] மற்றெல்லாப்பிராணிகளையும் ஒரேமாதிரியாய் திருணம்போலெண்ணி, ஸர்[illegible]சுவரனையும் ஸகல ஜகத்துக்கும் உத்பத்தி ஸ்திதிலயங்களை லீலையாய்ச்செ[illegible]வனையும் யாதொரு தோஷமும்மணமாத்திரமுமில்லாமலிருப்பவனையும் எ[illegible]லையில்லாவதிசயம்பொருந்தி எண்ணிக்கையற்ற கல்யாணகுணங்களுக்கு மு[illegible]கிய ஸத்தாநமாயும், லாவண்ணியமென்னும் அமுதத்துக்குக்கடலாயும் ஸ்ரீமா[illegible]யும் புண்டரீகாக்ஷனையும் தனக்குநாதனையுமிருக்கிற நம்மிடத்தில்தானே மி[illegible]ந்த பக்தியுண்டாகப்பெறுவான்.

(அ - கை.) அதற்குப்பயன் [illegible]நளிச்செய்கிறார்.

భక్త్యా మామభిజానాతి యావా[illegible]యశ్చాస్మి తత్త్వతః।
తతో మాం తత్త్వతో జ్ఞాత్వా విశ[illegible]దనన్తరమ్॥ ౫౫॥

(ருரு) ஸ்வரூபத்தாலும் ஸ்வ[illegible]வத்தாலும் நம்மை இன்னதென்றும், குணத்தாலும் விபூதியாலும் நாம்[illegible]வளவென்றும் கீழ்ச்சொன்ன பக்தியைக்கொண்டுதான் நம்மை உ[illegible]படியே அறியவேண்டும். அப்படி யறிந்தால் பின்பு பக்தி விருத்தியடை[illegible]து அதனால் நம்மையறியக்கூடும் [என்றால்_ భక్త్యా త్వనన్యయా శక్యః என்று கீழ்ச்சொன்னபடி எம்பெருமானை உள்ளபடியே யறிகைக்கு பக்திதான் காரணமென்று திருவுள்ளம்.]

(அ - கை.) இவ்வாறு வருணாச்சிரமங்களுக்கு உசிதமான நித்திய நைமித்திககருமங்களைப் பலாபேக்ஷையின்றி பகவத் ஆராதநரூபமாய்ப் பண்ணுமிடத்து அவைகள் பக்குவமாகும்படி சொல்லிற்று. இப்பொழுது காம்மியகருமங்களும் கீழச்சொல்லியபடி யநுஷ்டிக்கப்படுமாகில் அப்படியே பலிக்குமென்கிறது.

సర్వకర్మాణ్యపిసదా కుర్వాణోమద్వ్యపాశ్రయః।
మత్ప్రసాదాదవాప్నోతి శాశ్వతంపదమవ్యయమ్॥౫౬॥

(ருசு) அர்ச்சுந! நித்திய நைமித்திககருமங்களை மாத்திரமல்ல; காம்மியங்களான மற்ற கருமங்களையும் நமது ஆராதனரூபமாகச் செய்துவந்தானாகில் நமது அநுக்கிரஹத்தாலே சாசுவதமான பதத்தைச் சிறிதுங்குறையின்றி யடைவான். [அதாவது நம்மை யடைவனென்றபடி.]

చేతసాసర్వకర్మాణి మయిసన్న్యస్యమత్పరః।
బుద్ధియోగముపాశ్రిత్య మచ్చిత్తఃసతతంభవ॥౫౭॥

(ருள) ஆகையாலே அர்ச்சுந! நீ என்னை நம்முடையவனென்றும் நம்மாலாளப்படுமவனென்றும் அறிகின்ற ஞானதைக்கொண்டு ஸகல கர்மங்களையும் (அந்தந்த கருமத்தா லாராதிக்கப்படுந் தேவதைகளோடுசேர்த்து) நம்மிடத்தில் ஸமர்ப்பித்து, நம்மையே பேறாக வநுஸந்தித்துக்கருமங்களைச் செய்துகொண்டு, இவ்வித புத்தியோடுகூடி எப்பொழுதும் நம்மையே சிந்தித்திரு.

మచ్చిత్తస్సర్వదుర్గాణి మత్ప్రసాదాత్తరిష్యసి।

(ருஎ உ) இப்படி நம்மைச் சிந்தித்தபடியே ஸகல கருமங்களையுஞ் செய்துவந்தாயாகில் ஸம்ஸாரத்தால் வரும் ஸகல பாபங்களையும் நம்முடைய அநுக்கிரஹத்தாலேயே தாண்டிவிடுவாய்.

అథచేత్త్వమహంకారాన్న శ్రోష్యసివినంక్ష్యసి॥౫౮॥

(ருஅ) அப்படியின்றி நீ அஹங்காரத்தால் நானே கிருத்தியாகிருத்தியங்களெல்லாவற்றையும் அறியவல்லேனென்கிற வெண்ணத்தால் நாம் சொன்னதைக் கேளாயாகில் அழிந்துபோவாய். [ஏனெனில், தம்மைத்தவிர எவனும் பிராணிகளின் கிருத்தியாகிருத்தியங்களை அறிபவனுவதும் அவைகளை ஆள்பவனுவது கிடையாதென்று திருவுள்ளம்.]

యదహంకారమాశ్రిత్య నయోత్స్యఇతిమన్యసే।
మిథ్యైషవ్యవసాయస్తే ప్రకృతిస్త్వాంనియోక్ష్యతి॥౫౯॥

(ருக) அர்ச்சுந! உன்னுடைய நன்மை தீமைகளைப்பற்றி உனக்கே அறிந்து கொள்ளும்படியான ஸாமர்த்தியமிருப்பதாக அஹங்கரித்துக்கொண்டு இறவனாயில் நாம் சொன்ன விஷங்களை யாகைநெகிழவிட்டு 'யுத்தம் செய்யாமலிருப்போ' மென்றிருந்தாயாகில், அப்பொழுது நீ கொண்டிருக்கிற அந்த சுதந்திரநிச்சயம் பொய்யே முடியும், ஏன்? நமது சுதந்திரத்தைப்

பொறுக்கமாட்டாது அக்ஞாநியான உன்னைப் பிரகிருதியானது யுத்தஞ் செய்யும்படி ஏவப்போகிறது?

(அ-கை.) அதையே உபபாதிக்கிறார்.

స్వభావజేన కౌన్తేయ నిబద్ధస్స్వేన కర్మణా।
కర్తుం నేచ్ఛసి యన్మోహాత్ కరిష్యస్యవశోపి తత్॥ ౬౦॥

(௬௦) இப்பொழுது அக்ஞானத்தால் நீசெய்யமாட்டேனென்கிறஇந்த யுத்தத்தையே, உனது க்ஷத்திரியஜாதிக்கேற்ற சௌரியத்தால் கட்டுப்பட்டவனாய்க்கொண்டு பிறர் செய்யும் உபத்திரவத்துக் காற்றாதவனாய் நீயே உன்னையு மறியாமல் செய்யப்போகிறாய்.

(அ-கை.) ஏனெனில், ஸகலப் பிராணிஸமூஹமும் ஸர்வேசுவரனால் நம்மால் பூர்வகருமத்துக்குத்தக்கபடி பிரகிருதியைப் பின் செல்லும்படி நியமிக்கப்பட்டிருக்கிறது; அதைச் சொல்லுகிறேன் கேள்.

ఈశ్వరస్సర్వభూతానాం హృద్దేశేర్జున తిష్ఠతి।
భ్రామయన్ సర్వభూతాని యన్త్రారూఢాని మాయయా॥ ౬౧॥

(௬௧) ஸகலப்பிராணிகளையும் ஆள்வதே ஸ்வபாவனான வாசுதேவன், (பிரவிருத்தி நிவிருத்திகளெல்லாவற்றிற்கும் காரணமான ஞானமுண்டாவதற்கு இடமான) ஹிருதயப்பிரதேசத்தில் இருக்கிறான். எப்படி? என்ன செய்துகொண்டிருக்கிறான்? தன்னால் நியமிக்கப்பட்டு (தேஹமாயும் இந்திரியமாயும் விகாரப்பட்டிருக்கின்ற)ப் பிரகிருதியென்னும் யந்திரத்திலேறியிருக்கின்ற ஸகல பூதங்களையும் குணமயமான தன் மாயையைக்கொண்டு அந்தந்த குணத்துக்குத்தக்கபடிப் பிரவ்ருத்திப்பித்துக்கொண்டிருக்கிறான்.

[இவ்வர்த்தம் సర్వస్య చాహం హృది సన్నివిష్టో మత్తస్స్మృతిర్జ్ఞానమపోహనఞ్చ। என்றும் మత్తస్సర్వం ప్రవర్తతే என்றுஞ் சொல்லப்பட்டது. య ఆత్మని తిష్ఠన్ இத்தியாதி சுருதியுமுண்டு.

(அ-கை.) இந்த மாயை நிவர்த்திப்பதற்குக் காரணங் கூறுகின்றார்.

తమేవ శరణం గచ్ఛ సర్వభావేన భారత।
తత్ప్రసాదాత్పరాం శాన్తిం స్థానం ప్రాప్స్యసి శాశ్వతమ్॥ ౬౨॥

(௬௨) ஆகையாலே பாரத! ஸர்வப்பிராணிகளையும் ஆள்பவனாய் ஆஸ்ரிதனிடத்திலுண்டான வன்பினால் உன்னுடைய தேர்த்தட்டில் ஸாரத்தியம் பண்ணுவானாயிருந்து இப்படி செய்யென்று நியமிக்கின்றான் யாவன், அவனையே ஸர்வவிதத்தாலும் சரணமாகப்பற்று. [என்றால்-அவன் நியமனத்தை நீ மேற்கொள்ளாமற்போனாலும் அவனுடைய மாயையாலேவப்பட்டவனாய்க்கொண்டு நீ யுத்தஞ்செய்யவேபோகிறாய்; அப்பொழுது அழிந்துபோவாய்; ஆகையால் அவன் சொன்னபடியே யுத்தம் முதலியவைகளைச் செய்யென்றப

டி.] அப்படி செய்தாயாகில் அவனுடைய அநுக்கிரகத்தால் ஸர்வகர்மங்களும் நீங்கப்பெற்று உத்தமஸ்தாநமான * பரமபதத்தையடைவாய்.

ఇతితేజ్ఞానమాఖ్యాతం గుహ్యాద్గుహ్యతరంమయా।
విమృశ్యైతదశేషేణ యథేచ్ఛసితథాకురు॥ ౬౩॥

(௬௩) இந்தப்பிரகாரம் மோக்ஷார்த்திகளுக்கு வேண்டுமதாய், கர்மயோகவிஷயமாயும் ஞாநயோகவிஷயமாயும் பக்தியோகவிஷயமாயுமறிய வேண்டியதாய், ரஹஸியார்த்தங்க ளெல்லாவற்றிற்கும் மேலாயிருக்கின்ற வெல்லா ஞாநங்களையும் உனக்கு உபதேசித்தேன். இவை யெல்லாவற்றையும் ஆலோசித்து உன் அதிகாரத்துக்குத்தக்கபடி இவற்றுள் எதை விரும்புகிறாயோ அதைச்செய்.

సర్వగుహ్యతమంభూయః శృణుమేపరమంవచః।
ఇష్టోసిమేదృఢఇతి తతోవక్ష్యామితేహితమ్॥ ౬౪॥

(௬௪) இந்த ரஹஸ்யார்த்தங்களெல்லாவற்றுள்ளும் பக்தியோகம் அத்தியந்தம் சிரேஷ்டமென்று $ முன்பே சொல்லப்பட்டது; மறுபடியும் அவ்விஷயமாகவே சிறந்ததொருவார்த்தை சொல்லுகிறோம் கேள். நீ மிகவும் இஷ்டனுகையாலே உனக்கு இதம் சொல்லுகிறோம்.

మన్మనాభవమద్భక్తో మద్యాజీమాంనమస్కురు।
మామేవైష్యసిసత్యంతే ప్రతిజానేప్రియోసిమే॥ ౬౫॥

(௬௫) நம்மிடத்தில் மிகவும் பிரீதிமானுய்க்கொண்டு, மிகவும்பிரீதிரூபமாயிருக்கிற § ஸ்மிருதி பரம்பரையைச்செய்; அப்படியே மிகவும் பிரியமான நம் † ஆராதநமே பொழுதுபோக்காயிரு; நம்மை மிகவும் பிரீதியோடு வண

---

* తద్విష్ణోః పరమపదం సదాపశ్యన్తిసూరయః తేహనాకంమహిమాన స్సజన్తే యత్రపూర్వేసాధ్యా స్సన్తిదేవాః என்றும், యత్రఋషయః ప్రథమజాయేపురాణాః। என்றும், పరేణనాకంనిహితం గుహాయామ్ என்றும், యోఽస్యాధ్యక్షః పరమేవ్యోమన் என்றும், అథయదతఃపరోదివోజ్యోతిర్దీప్యతే என்றும், సోఽధ్వనః పరమాప్నోతి తద్విష్ణోః పరమంపదమ్ என்றும், இத்தியாதிகளி லோதப்பட்ட பரமபதத்தை யென்றபடி.

$ முன்பே=ఇదన్తుతేగుహ్యతమం ప్రవక్ష్యామ్యనసూయవే என்கிற விடத்தில்

§ వేదాహమేతం పురుషమ్మహాన్తం என்றும் ఆదిత్యవర్ణం తమసఃపరస్తాత్ తమేవంవిద్వానమృత ఇహభవతి నాన్యఃపన్థా విద్యతేఽయనాయ என்றும் இத்தியாதிகளில் சொல்லப்பட்ட வேதநம், தியாநம், உபாஸநம் முதலிய சொற்களுக்குப் பொருளாய், தரிசநத்துக்கு ஸமானமாயிருக்கும் மிகுந்த பிரீதிரூபமாயிருக்கிற ஸ்மிருதிபரம்பரையைச் சொல்லுகிறது.

† ஆராதநமாவது - பரிபூர்ணசேஷவிருத்தி.

ங்குது! இப்படியிருக்கும் நீ நம்மையே அடைவாய்; இவை யெல்லாவிஷயத்தி லும் நாம் உனக்குப் பிரதிக்ஞை பண்ணிக்கொடுக்கிறோம். [ஸாதாரணமாய் ஏதோ உனக்கு இஷ்டமாயிருக்கும்படி சிலவற்றைச்சொல்வதாக நினையாதே கொள்.] ஏனெனில் நீ நமக்குப்பிரியனன்றோ? [எவனுக்கு நம்மிடத்தில் மிகு ந்தப் பிரீதியிருக்குமோ நமக்கும் அவனிடத்தில் மிகுந்தப்பிரீதி யுண்டாகுமா கையால் நாம் அவனைப் பிரியமாட்டாமல் அவனை நம்மோடு சேர்த்துக்கொள் ளுகிறோம்] ஆகையால் நம்மையே யடைவாய் என்கிற பிரதிக்ஞை ஸத்தியம்.

సర్వధర్మాన్ పరిత్యజ్య మామేకంశరణంవ్రజ।
అహంత్వాసర్వపాపేభ్యో మోక్షయిష్యామిమాశుచః॥౬౬॥

(ஸுஸு) கர்மயோகம் ஞாநயோகம் பக்தியோகம் என்கிற மோக்ஷஸாத நங்களான வெல்லாத்தருமங்களையும் நம்முடைய ஆராதநரூபமாக மிகுந்தப் பிரீதியோடு உன் அதிகாரத்துக்குத்தக்கபடி செய்துகொண்டே, கீழ்ச்சொன் னபடி பலனையும் கர்மத்தையும் கர்த்திருத்வத்தையும் * விட்டு ஆராத்ய ஸ்வரூபனான நம்மையே பலனாகவும் உபாயமாகவும் நினைக்கக் கடவாய். இப்படி யிருக்கின்ற உன்னை நம்மையடைதற்கு விரோதிகளாய் அநாதிகால மாய் ஸம்பாதிக்கப்பட்டவைகளாய் (செய்யத்தகாததைச் செய்கையும் செய் யத்தக்கதைச்செய்யாமையுமான) ஸகலபாபங்களினின்றும் விடுவிக்கிறோம். ஆகையால் சோகியாதேகொள்.

## இந்த சுலோகத்துக்கு மற்றொருபடி வியாக்கியாநம்.

[(அ-கை.) ஸகலபாபங்களினின்றும் விடுபட்டு எம்பெருமானுக்கு மிகவுமினியனாயிருக்கிற புருஷனுக்கே பக்தியுண்டாகுமாகையாலே அந்த பக்தியை யாரம்பிக்கவொட்டாமல் விரோதிக்கின்ற பாபம் அளவற்றிருக் கையாலே, அவைகளை யொழிக்கும் பிராயச்சித்தங்களான தருமங்களை யெத் தனைகாலம் அநுஷ்டித்தாலும் ஒழிப்பதரிதாகையாலே, அர்ச்சுநன் தனக்கு பக்தியோகத்தை யாரம்பிக்கும்படியான யோக்கியதை யில்லையென்று நினை த்துச் சோகிக்க, அந்த சோகத்தைப் போக்குவாராக வருளிச்செய்கிறார்.

பக்தியோகத்தை யாரம்பிக்கவொட்டாமல் விரோதிக்குமவைகளாய் அநாதிகாலமாய் ஸம்பாதிக்கப்பட்டவைகளாய் நாநாவிதங்களாய் அநந்தங்க ளாயுள்ள பாபங்களுக்குத் தக்கப்பிராயச்சித்தரூபங்களாயும், கிருச்சிரம்,சாந் திராயணம், கூச்மாண்டம், வைச்சுவாநரம், வ்ராதபவித்திரேஷ்டி, த்ரிவ்ரு

---

* ஸர்வதருமங்களையும் சாஸ்திரோக்தமாய் விடுவதென்பது இது தா னென்று నిశ్చయంశృణుమేతత్రత్యాగేభరతసత్తమ। త్యాగోహిపురుషవ్యాఘ్రత్రివిధ స్సంప్రకీర్తితః என்றுதொடங்கி, [illegible]త్యక్త్వాఫలంచైవసత్యాగస్సాత్వికోమతః।నహి దేహభృతాశక్యంత్యక్తుంకర్మాణ్యశేషతః।యస్తుకర్మఫలత్యాగీసత్యాగీత్యభిధీయతే என்று அத்தியாயத்தின் ஆரம்பத்தில்மிகவும் திடமாய்உபபாதிக்கப்பட்டது.

தக்நிஷ்டோமம் தொடங்கி நானாவிதங்களாயும், அநந்தங்களாயும், ரூத்ரனை காலம் ஜீவித்திருந்து அநுஷ்டித்தாலும் அநுட்டிக்கவரியவைகளாயுமிருக்கின்ற ஸர்வதருமங்களையும் விட்டு, பக்தியோகாரம்பம் ஸித்திப்பதற்காக, பரமகாருணிகனாய் பிராணிகளிடத்தில் ஒருவிசேஷத்தையும் ஆலோசியாமல் அவைகளுக்கெல்லாம்சரணியனாய் ஆச்சிரிதாளிடத்திலுண்டான வாத்ஸல்லியத்துக்குக் கடலாயிருக்கின்ற நம்மையே சரணமாகப்பற்று. நாம் உன்னைக் கீழ்ச்சொன்ன பக்தியோகாரம்பத்துக்குவிரோதிகளான பாபங்களினின்றும் விடுவிக்கிறோம். நீ அதற்காகச்சோகிக்கவேண்டாம்.]

ఇదంతేనాతపస్కాయ నాభక్తాయకదాచన।
నచాశుశ్రూషవేవాచ్యం నచమాంయోఽభ్యసూయతి॥౬౭॥

(௬௭) இப்பொழுது உனக்கு நாம் சொன்ன பரமரஹஸ்யமான இவ்வர்த்தத்தை தவம் புரியாதவனுக்காவது, தவம்புரிந்தாலும் பக்தியில்லாதவனுக்காவது, பக்தியுண்டானாலும் சிச்சுரூஷை பண்ணாதவனுக்காவது நீ சொல்லக்கூடாது. அதிலும் நம் ஸ்வரூபத்தையும் நம் ஐசுவரியத்தையும் நம்குணங்களையும் சொல்லக்கேட்டு யாவனொருவன் அவைகளில் தோஷத்தையேற்றுகிறான் அவனுக்குச்சொல்வதென்பது சிறிதுங்கூடாது.

[மற்றப்படி அவனைக்கிட்டவும் சேரவொட்டாமலிருக்கவேண்டுமென்று திருவுள்ளம்].

యఇదంపరమంగుహ్యం మద్భక్తేష్వభిధాస్యతి।
భక్తింమయిపరాంకృత్వా మామేవైష్యత్యసంశయః॥౬౮॥

(௬௮) மிகவும் ரஹஸ்யமான இவ்வர்த்தத்தை யாவனொருவன் நம் பக்தர்களிடத்தில் வியாக்கியானிக்கிறானோ அவன் நம்மிடத்தில் மிகுந்த பக்தியைச்செய்து நம்மையே யடைவான். இதில் ஸம்சயமில்லை.

నచతస్మాన్మనుష్యేషు కశ్చిన్మేప్రియకృత్తమః।
భవితానచమేతస్మా దన్యఃప్రియతరోభువి॥౬౯॥

(௬௯) மனுஷ்யகோடியில் இதுவரையில் அவனைப்போல் நமக்குப் பிரியஞ் செய்பவ னொருவனுண்டாகவுமில்லை; இனியுண்டாகப்போகிறதுமில்லை.

[அயோக்கியர்களை முந்தி யெடுத்தது, இவ்வர்த்தத்தையோக்கியாளுக்கு சொல்லாமலிருப்பதைப்பார்க்க அவர்களுக்குச் சொல்வது மிகவும் அநிஷ்டமென்னைக்காக.]

అధ్యేష్యతేచయఇమం ధర్మ్యంసంవాదమావయోః।
జ్ఞానయజ్ఞేనతేనాహ మిష్టస్స్యామితిమేమతిః॥౭౦॥

(எ0) யாவனொருவன் நம்மிருவருக்கும் நடந்த பரமதர்மமான இந்த ஸம்வாதத்தை அத்தியயநம்பண்ணுகிறானோ, அவனால் இதில் சொன்ன ஞானயோகத்தின்படி நாம் ஆராதிக்கப்பட்டோமாகிறோம்.

శ్రద్ధావాననసూయశ్చ శృణుయాదపియోనరః।
సోఽపిముక్తశ్శుభాంల్లోకాన్ప్రాప్నుయాత్పుణ్యకర్మణామ్॥ ௭௧॥

(எக) சிரத்தையோடுகூடி அசூயையின்றி யாவனொருவன் கேட்கிறானோ அவனும் அப்படியே கேட்டமாத்திரத்தினாலே பக்திவிரோதிபாபங்களினின்றும் விடுபட்டு புண்ணியகர்மாக்களான நம் பக்தஜநஸமூஹத்தில் வந்து சேருவான்.

కచ్చిదేతచ్ఛ్రుతంపార్థ త్వయైకాగ్రేణచేతసా।
కచ్చిదజ్ఞానసమ్మోహః ప్రణష్టస్తేధనఞ్జయ॥ ௭௨॥

(எஉ) அஹோ பார்த்த! நாம் சொன்னதையெல்லாம்ஸாவதாநமாய்க் கேட்டாயே! இப்பொழுதாகிலும் நான்யுத்தம் செய்யமாட்டேனென்று சொன்ன உனக்கு அந்த அக்ஞானம் ஒழிந்ததா?

అర్జునఉవాచ॥ నష్టోమోహస్స్మృతిర్లబ్ధా త్వత్ప్రసాదాన్మయాచ్యుత।
స్థితోఽస్మిగతసందేహః కరిష్యేవచనం తవ॥ ௭௩॥

(எ௩) அதற்கு அர்ச்சுநன் விண்ணப்பம் செய்கிறான்—ஸ்வாமி! தேவரீருடைய கிருபையால் விபரீதக்ஞானம் ஒழிந்தது. யதார்த்தமான ஞானமும் பிறந்தது. [என்றால்-தேஹாதிகளே ஆத்மாவென்கிறதுரபிமானமும், சேதநாசேதநரூபமான ஸகலப்பிரபஞ்சமும் பரமபுருஷனுக்குச் சரீரமென்கிறவிஷயந்தெரியாமல் மாறுகநினைத்திருந்த துரபிமானமும், நித்தியநைமித்திகமான கர்மம் பரமபுருஷனுடைய ஆராதநரூபமாக வநுட்டிக்கப்படுமாகில் அவனை யடைவதற்கு உபாயமாகுமென்கிற விஷயந்தெரியாமல் அதைக்கட்டுக்குடலாக நினைத்திருந்த வக்ஞானமும் தொலைந்தன. ஆத்மா பிரகிருதிக்கவ்வருகாய் பிரகிருதியின் ஸ்வபாவமின்றி அறிவதேஸ்வபாவமாய் பரமபுருஷனுக்குச் சேஷப்பட்டு அவனாலாளப்படுவதே ஸ்வரூபமாயிருக்கிறதென்கிற ஞானமும், ஸகலஜகத்திற்கும் உத்பத்திஸ்திதி லயங்களை லீலையாய்ச்செய்பவனாய் ஸகலதோஷங்களுக்கு மெதிரான கல்லியாணமேஸ்வரூபமாய் (ஸ்வபாவஸித்தங்களும் அளவற்ற வதிசயம்பொருந்தியவைகளுமான) ஞானம் பலம் ஐசுவரியம் வீரியம் சக்தி தேஜஸ்ஸு முதலிய ஸமஸ்த கல்லியாணகுணங்களுக்கும் பெருங்கடலாய் பரப்பிரம்மமென்னுஞ் சொல்லுக்குப்பொருளாயிருக்கிற பரமபுருஷனுடைய உண்மையை அறியும்படியான ஞானமும், இப்படி பராவரதத்துவங்களை யுள்ளபடியே யறிந்து பிறகு அதை அப்பியஸித்துவந்து பரமபுருஷனுக்கு நாளுக்குநாள் ப்ரீதியை வளர்ப்பதேபயனாக நித்திய நைமித்திககர்மங்களை யநுட்டிப்பதாலும் நிஷித்தங்களை ஒழிப்பதாலும் சமம் தமம் முதலிய ஆத்மகுணங்களாலும், பெறவேண்டியதான (பக்திரூபமாய்ப் பரிண

யித்திருக்கிற) பரமபுருஷோபாஸநத்தால் மாத்திரம் அடையப்படும் பொருளும் வேதாந்த விழுப்பொருளும் பரமபுருஷனுமான வாசுதேவன் தேவரீரே யென்கிற ஞாநமும் அடியேனுக்குண்டாயிற்றென்றபடி.]

அதன்பின்பு பந்துக்களிடத்தில் ஸ்நேகத்தாலும் கருணையாலும் மென்மேலும் விருத்தியடைந்த விபரீதஜ்ஞாநமடியாகவரும் ஸகலதுக்கங்களினின்றும் விடுபட்டவனாய் ஸந்தேஹமற்று ஸ்வஸ்த்தனாயிருக்கிறேன். இனி யுத்தஞ்செய்யும்படியாகத் தேவரீர்அருளிச்செய்த திவ்யஸூக்தியை யப்படியே செய்கிறேன்; என்று விண்ணப்பம் செய்தான்.

(அ-கை.) தன்புத்திரர்களும் பாண்டவர்களும் யுத்தத்தில் என்ன செய்கின்றார்களென்று கேட்ட திருதராஷ்டிரனைப்பார்த்து ஸஞ்சயன்சொல்லுகிறான்.

సఞ్జయఉవాచ॥ ఇత్యహంవాసుదేవస్య పార్థస్యచమహాత్మనః।
సంవాదమిమమశ్రౌష మద్భుతంరోమహర్షణమ్॥ ౭౪॥

(எச) அஹோராஜந்! இந்தப்பிரகாரம் வசுதேவன் மைந்தனான கண்ணனுக்கும் அவர் அத்தைமகனாய் மகாபுத்திசாலியாய் அவர் திருவடிகளை யாச்ரயித்த அர்ச்சுநனுக்கும் நடந்த அற்புதமான ஸம்வாதத்தை மயிர்க்கூச்செறியும்படியாகக் கீழ்ச்சொன்ன வண்ணமெல்லாங் கேட்டேன்.

వ్యాసప్రసాదాచ్ఛ్రుతవా నేతద్గుహ్యమహంపరమ్।
యోగంయోగేశ్వరాత్కృష్ణా త్సాక్షాత్కథయతస్స్వయమ్॥ ౭౫॥

(எரு) வியாஸமஹரிஷியின் அநுக்கிரஹத்தால் திவ்யமான கண்ணும் காதும் பெற்றவனாகையாலே இந்த யோகமென்னும் மேலானரஹஸ்யத்தை ஞாநபலாதிகளுக்கெல்லாம் நிதியான ஸ்ரீ கிருஷ்ணபகவான் தாமே யருளிச்செய்யக்கேட்டேன்.

రాజన్ సంస్మృత్యసంస్మృత్య సంవాదమిమమద్భుతమ్।
కేశవార్జునయోఃపుణ్యం హృష్యామిచముహుర్ముహుః॥ ౭౬॥

(எசு) கேசவனுக்கும் அர்ச்சுநனுக்கும் நடந்த புண்ணியமான இவ்வற்புத ஸம்வாதத்தை நான் நேரே கேட்கவே, அது முதற்கொண்டு எனக்கு நினைக்கநினைக்க ஸந்தோஷமுள்ளடங்காமல்வருகின்றது.

తచ్చసంస్మృత్యసంస్మృత్య రూపమత్యద్భుతంహరేః।
విస్మయోమేమహాన్ రాజన్ హృష్యామిచపునఃపునః॥ ౭౭॥

(எஎ) அதுவுமின்றி அர்ச்சுநனுக்குப் பிரகாசிப்பித்தருளின ஸ்ரீமந்நாராயணனுடைய அத்புதமான ரூபத்தையும் பிரத்தியக்ஷமாய்க்கண்டனுபவித்தேன். அதை அப்படியே நினைத்து நினைத்து ஸந்தோஷிக்கின்ற வெனக்கு மிகவும் ஆச்சரியமுண்டாகின்றது.

(அ-கை.) இவ்விஷயத்தில் ஆயிரம் வார்த்தையென்ன?

యత్రయోగేశ్వరఃకృష్ణో యత్రపార్థోధనుర్ధరః।
తత్రశ్రీర్విజయోభూతి ధ్రువానీతిమతిర్మమ॥౭౮॥

(எஅ) உயர்வும் தாழ்வுமாயிருக்கிற சேதநாசேதநங்களெல்லாவற்றிற்கும் எந்தெந்த ஸ்வபாவங்களுண்டோ அவைகளுக்கெல்லாம் நியாமகனாய், தம்மையொழிந்த வெல்லாவஸ்துக்களுக்கும் ஸ்வரூபம் ஸ்திதி பிரவிருத்தி முதலிய வெல்லாம் தம் ஸங்கல்பாதீனமாயிருக்கும்படி விளங்குகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவான் எழுந்தருளியிருக்கிற விடத்தும், அவன் திருவடிகளையே நம்பியிருக்கின்ற கையும்வில்லுமான அர்ச்சுநன் எங்கே விளங்குகிறானோ அவ்விடத்துந்தான் லக்ஷ்மியும் விஜயமும் செல்வமும் சாசுவதமாயிருக்குமென்பது என்னுடைய ஸித்தாந்தம்.

ఓం తత్సదితి శ్రీమన్మహాభారతే
శతసహస్రికాయాం సంహితాయాం వైయాసిక్యాం
శ్రీభీష్మపర్వణి శ్రీభగవద్గీతాసూపనిషత్సు పరబ్రహ్మవిద్యాయాం యోగశాస్త్రే
శ్రీకృష్ణార్జున సంవాదే సకలశాస్త్రార్థకథన
మోక్షోపదేశ యోగోనామాష్టాదశోధ్యాయః.
శ్రీకృష్ణాయపరమాత్మనేనమః.

జయతిసకలవిద్యావాహినీజన్మశైలో జనిపథపరివృత్తిశ్రాన్తవిశ్రాన్తిశాఖీ।
నిఖిలకుమతిమాయాశర్వరీబాలసూర్యో నిగమజలధివేలాపూర్ణచన్ద్రోయతీన్ద్రః॥

ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசித ஸ்ரீமத்கீதாபாஷ்யத்தில்,
பதினெட்டாவது அத்தியாயம் - முற்றிற்று.
எம்பெருமானார் திருவடிகளேசரணம்.

ஸ்ரீபகவத்கீதாசாஸ்திரம்

